# நன்னூல்
# விருத்தியுரை.



ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுகநாவலர்

சென்னை.

பரமபதி துணை.

# நன்னூல் விருத்தியுரை

திருநெல்வேலிச்

சங்கரநமச்சிவாயப்புலவராற் செய்து

திருவாவடுதுறையாதீனத்துச்

சிவஞானசுவாமிகளால்

திருத்தப்பட்டது.

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

பரிசோதித்தபடி


சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலைத்

தருமபரிபாலகர்

ச. பொன்னுஸ்வாமி அவர்களால்

சென்னை

வித்தியாநுபாலன அச்சகத்தில்

அச்சிடப்பட்டது.

8-ம் பதிப்பு.
ஹேவிளம்பி௵, வைகாசிமீ.
ஜூன், 1957.

வித்தியாநுபாலன அச்சகம்,
300, தங்கசாலைத் தெரு, சென்னை-1.

பரமபதி துணை.

# நன்னூல் விருத்தியுரை.

## சிறப்புப்பாயிரம்.

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவதும்
முனிவற வருளிய மூவறு மொழியுளுங்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை விநோத னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
புன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னு நாமத் திருந்தவத் தோனே.

என்பது பாயிரம்.

மலர்தலை யுலகிற் பலநூ லாய்ந்து
செய்வதுந் தவிர்வதும் பெறுவது முறுவதும்
உய்வது மறியே னொருபொரு ளாக
நன்னெறி பிறழா நற்றவத் தோர்பெறு
தன்னடித் தாமரைத் தந்தெனை யாண்ட
திருவா வடுதுறைத் தேசிக னாகிய
கருணையங் கடலையென் கண்ணைவிட் டகலாச்
சுவாமி நாத குரவனை யனுதினம்
மனமொழி மெய்களிற் றொழுதவ னருளாற்
பொன்மலை யெனவிப் புவிபுகழ் பெருமை
மன்னிய வூற்று மலைமரு தப்பன்
முத்தமிழ்ப் புலமையு முறையர சுரிமையும்
இத்தலத் தெய்திய விறைமக னாதலின்
நன்னூற் குறைநீ நவையறச் செய்து
பன்னூற் புலவர்முன் பகர்தியென் றியம்பலின்
நன்னா வலர்முக நகைநா ணாமே
என்னா லியன்றவை யியற்றுமிந் நூலுள்

இப்பாயிரம் என்னுதலிற்றோவெனின்:—

“வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்பட ரொழுக்கமுந்
திங்க ளன்ன கல்வியுந் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும் யாவதும்
அஃகா வன்பும் வெஃகா வுள்ளமுந்
துலைநா வன்ன சமநிலையுளப்பட
எண்வகை யுறுப்பின ராகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையுந் தாஅ ளாண்மையும்



உலகிய லறிதலு நிலைஇய தோற்றமும்
பொறையு நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவு முருவு மாற்றலும் புகழுஞ்
சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்வன் மையுங்
கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலும்
இன்னோ ரன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பி னல்லா சிரியர்
அறனே பொருட்பய னின்பெனு மூன்றின்
றிறனறி பனுவல் செப்புங் காலை
முன்னர்க் கூறிய வெண்வகை யுறுப்பினுள்
ஏற்பன வுடைய ராகிப் பாற்படச்
சொல்லியபொருண்மைசொல்லியாங்குணர்த்தலுஞ்
சொல்லிய பொருளொடு சூழ்ந்துநன் குணர்த்தலுந்
தன்னோ ரன்னோர்க்குத் தான்பயப் படுதலுஞ்
செய்ந்நன்றி யறிதலுந் தீச்சார் பின்மையும்
மடிதடு மாற்ற மானம்பொச் சாப்புக்
கடுநோய் சீற்றங் களவே காமம்
என்றிவை யின்மையுஞ் சென்றுவழி படுதலும்
அறத்துறை வழாமையுங் குறிப்பறிந் தொழுகலுங்
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்
மீட்டவை வினவலும் விடுத்தலு முரைத்தலும்
உடைய ராகி நடையறிந் தியலுநர்
நன்மா ணாக்க ரென்ப மண்மிசைத்
தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே.”

என ஆத்திரையன் பேராசிரியரின் கூறிய பொதுப் பாயிரத்தானே பன்னருஞ் சிறப்பினல்லாசிரியனையுணர்ந்து வழிபட்டு ஒருநூல் கேட்பான் புகுந்த நன்மாணாக்கர்க்கு, அந்நூலானுவலப்படும் பொருளும், அந்நூல் கேட்டலாற்

பெறப்படும் பயனும், கேட்டற்குரிய அதிகாரிகளாவார்
இவரென்பதூஉம், இன்னது முற்றிய பின்னர் இந்நூல்
கேட்கற்பாற்றென்னும் இவையும் உணர்ந்தன்றி, நூல்
கேட்டற்கண் மனவூக்கஞ் செல்லாமையின், இன்றியமையாச்
சிறப்பினவாய இந்நான்கும் ஒரு தலையாக முன்னருணர்த்தல்
வேண்டும்; இந்நான்கு முணர்ந்தவழியுங் கற்றுவல்ல சான்றோ
ரல்லாராற் செய்யப்பட்ட நூலாயிற் கூறியது கூறன் முதலிய
குற்றமுடைத்தாமன்றே யெனவும், கற்றுவல்ல சான்றோரும்
மற்றோர் கோட்பாடுபற்றிச் செய்யின் முனைவனூலொடு
முரணுமன்றே யெனவும் ஐயுற்று ஊக்கஞ் செல்லாமையின்,
அவ்வையநீக்குதற்பொருட்டு ஆக்கியோன் பெருமையும், நூற்
பெருமையும் அந்நூல் வழங்கு நிலமும், அதன் முதனூலும்
இவை யென்பது தோன்ற ஆக்கியோன் பெயரும் வழியும்
எல்லையும் நூற்பெயரும் உணர்த்தல் வேண்டும். ஆதலின்
இவ்வெட்டும், இவ்வெட்டுடனே காலங்களன் காரணமென்னு
மூன்றுங் கூட்டிப் பதினொன்றுந் தெரிப்பதே சிறப்புப்பாயி
ரத்தினிலக்கணமென மேல் வகுக்கப்படும் ஆக்கியோன்
பெயர் முதலியன உணர்த்துதனுதலிற்று.

**இதன்பொருள்.** மலர் தலை உலகின் - பரந்தவிடத்தை
யுடைய உலகத்தின்கண்ணே, மல்கு இருள் அகல - நிறைந்த
கண்ணிருள் கெட, இலகு ஒளி பரப்பி - விளங்குங் கதிரை
விரித்து, யாவையும் விளக்கும் - கட்பொறிக்கு விடயமாகிய
உருவமனைத்தினையுங் காட்டும், பரிதியின் - சூரியனைப் போல,
ஒரு தான் ஆகி-உலகுக்கெல்லாந் தானொருமுதலேயாகி, முதல்
ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த-தோற்றமும்
ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்புமாகிய
வற்றை இயல்பாகவே நீங்கி நிற்றலாற்றலைவனாகிய, அற்புத
மூர்த்தி - ஞானமேதிருமேனியாகவுடையான், தன் அலர் தரு
தன்மையின் - தனதுவிரிந்த தன்மையாகிய கருணையினாலே,
மன இருள் இரிய - உயிர்களின் மனத்திருளாகிய அவித்தை



கெட, மாண் பொருள் முழுவதும் - மாட்சிமைப்பட்ட அறம்
பொருள் இன்பம் வீடென்னு நான்கு பொருளையும், முனிவு
அற அருளிய - விருப்புடன் அருளிச்செய்த, மூவறுமொழி
களுளும்-பதினெண்ணிலத்துமொழிகளுள்ளும், குணகடல்குமரி
குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின் இருந்தமிழ்க்
கடலுள் - இந்நான்கெல்லையினையுடைய நிலத்து மொழியாகி
இயலிசை நாடகமென்று பெயர் பெற்ற பெரிய தமிழென்னுங்
கடலுள், அரும்பொருள் ஐந்தையும் - அவ்வறமுதற்பொரு
ணன்கையு முணர்தற்குக் கருவியாய் அருமையவாகிய
இயற்றமிழின் பாகுபாடான எழுத்துச் சொற்பொருள்
யாப்பணியென்னும் ஐந்துபொருளையும், யாவரும் உணர-
அவ்வியற்றமிழுணர்தற்குமுன்னரேஉயர்ந்தோர்செய்யுளிடத்
தாராய்ச்சியுடையராய் அவ்வராய்ச்சியான்வலியோரே யன்றி
எளியோருமுணர, தொகை வகை விரியின் தருக என-வழியி
னெறியாகிய நால்வகையுட் டொகுத்தும் வகுத்தும் விரித்து
மாக்கப்படும் யாப்பினாற் பாடித் தருகவென, துன்னார் இகல்
அற நூறி - பகைவரது பகைமை கெட அவரைத் துணித்து,
இருநிலம் முழுவதுந் தனது எனக் கோலி - பெரிய பூமி
யனைத்தினையுந் தன்னுடையதாகப் பற்றிக்கொண்டு, தன்மத
வாரணம் திசைதொறும் நிறுவிய திறல் உறு தொல் சீர் - தன்
மதயானைகளை எட்டுத்திக்கினுந் திசைக்களிறுகள் போல
நிறுத்திய வெற்றி மிகுந்து தன்னளவேயன்றித் தன்றந்தை
மூதாதை முதலியோரைத்தொட்டு வருங் கீர்த்தியினையும்,
கருங்கழல் - பெருமை பொருந்திய வீரக்கழலினையும்,
வெண்குடை - வெண்கொற்றக் குடையினையும், கார்நிகர்
வண்கை - மேகம்போலக் கைம்மாறு கருதாது கொடுக்குங்
கையினையும், திருந்திய செங்கோல் - கோடாத செங்கோ
லினையுமுடைய, சீயகங்கன் - சிங்கம்போன்ற கங்கன், அருங்

பெறப்படும் பயனும், கேட்டற்குரிய அதிகாரிகளாவார் இவரென்பதூஉம், இன்னது முற்றிய பின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்னும் இயையும் உணர்ந்தன்றி, நூல் கேட்டற்கண் மனவூக்கஞ் செல்லாமையின், இன்றியமையாச் சிறப்பினவாய இந்நான்கும் ஒரு தலையாக முன்னருணர்த்தல் வேண்டும்; இந்நான்கு முணர்ந்தவழியுங் கற்றுவல்ல சான்றோ ரல்லாராற் செய்யப்பட்ட நூலாயிற் கூறியது கூறன் முதலிய குற்றமுடைத்தாமன்றே யெனவும், கற்றுவல்ல சான்றோரும் மற்றோர் கோட்பாடுபற்றிச் செய்யின் முனைவனூலொடு முரணுமன்றே யெனவும் ஐயுற்று ஊக்கஞ் செல்லாமையின், அவ்வையநீக்குதற்பொருட்டு ஆக்கியோன் பெருமையும், நூற் பெருமையும் அந்நூல் வழங்கு நிலமும், அதன் முதனூலும் இவை யென்பது தோன்ற ஆக்கியோன் பெயரும் வழியும் எல்லையும் நூற்பெயரும் உணர்த்தல் வேண்டும். ஆதலின் இவ்வெட்டும், இவ்வெட்டுடனே காலங்களன் காரணமென்னு மூன்றுங் கூட்டிப் பதினொன்றுந் தெரிப்பதே சிறப்புப்பாயி ரத்தினிலக்கணமென மேல் வகுக்கப்படும் ஆக்கியோன் பெயர் முதலியன உணர்த்துதனுதலிற்று.

**இதன்பொருள்.** மலர் தலை உலகின் - பரந்தவிடத்தை யுடைய உலகத்தின்கண்ணே, மல்கு இருள் அகல - நிறைந்த கண்ணிருள் கெட, இலகு ஒளி பரப்பி - விளங்குங் கதிரை விரித்து, யாவையும் விளக்கும் - கட்பொறிக்கு விடயமாகிய உருவமனைத்தினையுங் காட்டும், பரிதியின் - சூரியனைப் போல, ஒரு தான் ஆகி - உலகுக்கெல்லாந் தானொரு முதலேயாகி, முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த - தோற்றமும் ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்புமாகிய வற்றை இயல்பாகவே நீங்கி நிற்றலாற்றலைவனாகிய, அற்புத மூர்த்தி - ஞானமே திருமேனியாகவுடையான், தன் அலர் தரு தன்மையின் - தனதுவிரிந்த தன்மையாகிய கருணையினாலே, மன இருள் இரிய - உயிர்களின் மனத்திருளாகிய அவித்தை கெட, மாண் பொருள் முழுவதும் - மாட்சிமைப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடென்னு நான்கு பொருளையும், முனிவு அற அருளிய - விருப்புடன் அருளிச்செய்த, மூவறுமொழி களும் - பதினெண்ணிலத்துமொழிகளுள்ளும், குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின் இருந்தமிழ்க் கடலுள் - இந்நான்கெல்லையினையுடைய நிலத்து மொழியாகி இயலிசை நாடகமென்று பெயர் பெற்ற பெரிய தமிழென்னுங் கடலுள், அரும்பொருள் ஐந்தையும் - அவ்வறமுதற்பொரு ணான்கையு முணர்தற்குக் கருவியாய் அருமையவாகிய இயற்றமிழின் பாகுபாடான எழுத்துச் சொற்பொருள் யாப்பணியென்னும் ஐந்துபொருளையும், யாவரும் உணர - அவ்வியற்றமிழுணர்தற்குமுன்னரே உயர்ந்தோர்செய்யுளிடத் தாராய்ச்சியுடையராய் அவ்வராய்ச்சியான்வலியோரே யன்றி எளியோருமுணர, தொகை வகை விரியின் தருக என - வழியி னெறியாகிய நால்வகையுட் டொகுத்தும் வகுத்தும் விரித்து மாக்கப்படும் யாப்பினாற் பாடித் தருகவென, துன்னார் இகல் அற நூறி - பகைவரது பகைமை கெட அவரைத் துணித்து, இரு நிலம் முழுவதுந் தனது எனக் கோலி - பெரிய பூமி யனைத்தினையுந் தன்னுடையதாகப் பற்றிக்கொண்டு, தன்மத வாரணம் திசைதொறும் நிறுவிய திறல் உறு தொல் சீர் - தன் மதயானைகளை எட்டுத்திக்கினுந் திசைக்களிறுகள் போல நிறுத்திய வெற்றி மிகுந்து தன்னளவேயன்றித் தன்றந்தை மூதாதை முதலியோரைத்தொட்டு வருங் கீர்த்தியினையும், கருங்கழல் - பெருமை பொருந்திய வீரக்கழலினையும், வெண்குடை - வெண்கொற்றக் குடையினையும், கார்நிகர் வண்கை - மேகம்போலக் கைம்மாறு கருதாது கொடுக்குங் கையினையும், திருந்திய செங்கோல் - கோடாத செங்கோ லினையுமுடைய, சீயகங்கன் - சிங்கம்போன்ற கங்கன், அருங்

கலை வினோதன் - அரிய நூல்களை யாராய்தலே பொழுது போக்கும் விளையாட்டாகவுடையான், அமர் ஆபரணன் - தன்னகத்து விழுப்புண்பட அமர் செய்தலையே ஆபரணமாகவுடையான், மொழிந்தனன் ஆக - சொன்னானாக, முன்னோர் நூலின் வழியே - தொல்லாசிரியர் நூலின்வழியே, நன்னூற்பெயரின் வகுத்தனன் - நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன், பொன்மதிற் சனகை - பொன்மதில் சூழ்ந்த சனகாபுரத்துளிருக்கும், சன்மதிமுனி அருள் - சன்மதிமுனிவன் பெற்ற, பன்னருஞ் சிறப்பின் பவணந்தி என்னும் நாமத்து - சொல்லுதற்கரிய ஞானவொழுக்கச் சிறப்பினையும் பவணந்தியென்னும் பெயரினையுமுடைய, இருந்தவத்தோன் - பெரிய தவத்தினையுடையோன் என்றவாறு.

இதனுள், பவணந்தியெனவே ஆக்கியோன்பெயரும், முன்னோர் நூலின்வழியெனவே வழியும், நான்கெல்லையெனவே எல்லையும், நன்னூலெனவே நூற்பெயரும், அரும்பொருளைந்தெனவே நுதலிய பொருளும், அவற்றை யாவருமுணரவெனவே முன்னர் நிகண்டு கற்றுச் செய்யுளாராய்ச்சியுடையார்க்கே அவற்றையாராய்வுழி அவற்றின்கணுளவாகிய செய்கைவேறுபாடுகளுஞ் சொன்முடிவு பொருண்முடிவு வேறுபாடுகளும் இன்னவென்று துணியப்படாமையின், அவற்றைத் துணிந்தறியவேண்டி இவ்வியற்றமிழ் நூல் கேட்டறிதலின் கண்ணே ஊக்கஞ்செல்லுமாகலின் அவையாராய்ந்த பின்னர் இது கேட்கற்பாற்றென்னும் யாப்பும், அவையாராய்ந்தோர் இது கேட்டதற்குரியாரென்னுங் கேட்போரும், அவர் அப்பொருளைந்தினையுமுணர்ந்து மொழித்திறத்தின் முட்டறுத்தலின் மொழித்திறத்தின் முட்டறுத்தலென்னும் பயனும், சீயகங்கன் மொழிந்தனனாக நன்னூற்பெயரின் வகுத்தனனெனவே அவன்காலத்துப் பாடப்பட்டு அவனவைக்களத்து அரங்கேற்றியதெனக் காலமுங் களனும், சீயகங்கன் மொழிந்தமையானும் யாவரிடத்தும் இரக்கமுடைமையானும் வகுத்தமையாற் காரணமும் பெறப்பட்டன.



இனி, இவற்றுட் காலமுதலிய மூன்றும் நூல்செய்தார் காலத்து நிகழ்ந்தன; ஆக்கியோன் பெயர் முதலியவெட்டும் நூல் செய்தார்காலத்தும் நூல் வழங்குங்காலத்தும் ஒப்ப நிகழ்வன; இவை தம்முள் வேற்றுமை கழிந்தவற்றை யுணர்தலாற் பெரும் பயனின்மையின் அவை ஒருசாராராற் கொள்ளப்பட்டன; ஆக்கியோன் பெயர் முதலியன ஒருதலையானுணரவேண்டுதலின் அவை எல்லாவாசிரியரானுங் கொள்ளப்பட்டன.

வடநூலார், யாப்பை ஆனந்தரியமென்றும், நுதலிய பொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும் பயனைப் பிரயோசனமென்றுங் கூறுப. அவருள் ஒரு சாரார், ஆனந்தரியப் பொருள் நூலை பயப்பித்தற்குக் காரணமாய்க் கேட்போரை விசேடித்து நிற்றலின் வேறு கூறவேண்டாவென்னுங் கருத்தால், ஆனந்தரிய நீக்கிச் சம்பந்தமொன்று கூட்டி, நான்கென்பாராயினார். சம்பந்தமென்பதூஉம் யாப்பென்னும் பொதுச் சொல்லாற் கொள்ளப்படும். அது, நன்னூற் பெயரின் வகுத்தனனெனவே நூற்கும் நூனுதலிய பொருட்கும் வகுப்பதூஉம் வகுக்கப்படுவதூஉமாகிய சம்பந்தமென்பது பெறப்பட்டது. யாப்பு, இயைபு, தொடர்ச்சி என்பன ஒருபொருட்கிளவி.

ஈண்டுக் கேட்டல் பாடங்கேட்டல்; அது "கேள்வி விமரிசம் * பாவனை" என்பதனானும், "கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்" "ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பின்" என்பவற்றானுமுணர்க.

இவ்வெட்டு முணர்ந்ததற்குப் பயன் நூல் பயிலுதற்கண் ஊக்கமுண்டாதல். ஊக்கம் - உள்ளக்கிளர்ச்சி.

இனி வாய்ப்பக்காட்டலென்பதனானே இத்துணைச் சிறப்பிலவாய், அவ்வவற்றிற்கு இனமாய்க் காட்டப்படுவனவுமுளவென்பதுபெற்றாம். அவை ஆக்கியோன்பெயரேயன்றி ஆக்குவித்தோன் பெயர் கூறுதலும், வழியேயன்றி அதன்வகையாகிய தொகுத்தன் முதலிய நான்கனுள் ஒன்றுமாறு கூறுதலும், தன் முதனூற்கு வழி கூறுதலும், அது வந்த மரபுவழி கூறுதலும், பொதுவெல்லை

* விமரிசம் - சிந்தித்தல். விமரிசனமெனினுமொக்கும்.

கூறுதலேயன்றிச் [illegible]தமிழ் முதலியவற்றின் சிறப்பெல்லைகூறுதலும், நூற்பெயரேயன்றிப் படலப்பெயர் ஒத்தின்பெயர் கூறுதலும், நூற்கு இயைபு கூறுதலேயன்றி நூலினுட்படல முதலியவற்றிற்கு இயைபு கூறுதலும் சம்பந்தங்காட்டுவார் மதத்தின் நூற்கும் நூனுதலிய பொருட்குங் கிழமை கூறுதலேயன்றி நூனுதலிய பொருட்கும் பயனுக்குங் கிழமை கூறுதலும், நூற்கும் நூல் செய்தோனுக்குங் கிழமை கூறுதலும், நூனுதலிய பொருளேயன்றிப் படல நுதலியதூஉம் ஒத்து நுதலியதூஉஞ் சூத்திர நுதலியதூஉங் கூறுதலும், கேட்போரேயன்றிக் கேட்பிப்போரைக் கூறுதலும், பலனேயன்றிப் பயனுக்குப் பயன் கூறுதலுமாம்.

இவ்வெட்டனுள் சீயகங்கனெனவே ஆக்குவித்தோன் பெயரும், தொகைவகை விரியெனவே வழியின் வகையும், மாண்பொருண் முழுவதுமெனவே பயனுக்குப் பயனும் பெறப்பட்டன. ஏனைய இந்நூலுள் வந்துழி வந்துழிக் காண்க.

பயனுக்குப் பயனுவது, வெண்பா: "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்—மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு-மொழிதிறத்தின்—முட்டறுத்த நல்லோன் முதனூற்பொருளுணர்ந்து—கட்டறுத்து வீடு பெறும்." என்பதனாற் காண்க. எனவே முதனூற்பொருளுணர்தற்கு முறையானே இது கருவி நூலென்பது பெறப்பட்டது. முதனூலென்றது அறமுதலிய நான்கினையும் உணர்த்து நூலையெனவறிக. எழுத்தென்றது இயற்றமிழை. அது: "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப" என்பதனானு முணர்க. இசைத்தமிழும் நாடகத்தமிழும் இவ்வியற்றமிழ்போல முதனூற்பொருளுணர்தற்குக் கருவியன்மையின், இயற்றமிழொன்றுமே கூறினார்; ஆயின், இயற்றமிழை அரும்பொருளைந்தெனக் கூறினமையின், இந்நூலுட் கூறியபொருள் யாப்பணிகளென்னு மூன்றதிகாரங்களும் அக்காலத்துள்ளனபோலும்.

ஈண்டுக் கேட்பிப்போர் இயற்றமிழ் வல்ல ஆசிரியர். படல நுதலியது இவ்வதிகாரம் என்னுதலிற்றோவெனினென்பது. ஒத்து நுதலியது இவ்வோத்தென்னுதலிற்றோ வெனினென்பது. சூத்திர நுதலியது இச்சூத்திரமென்னுதலிற்றோவெனினென்பது. படலத்திற்கியைபு மேலையதிகாரத்தோடியைபுடைத்தாயிற்றென்



பது. ஒத்திற்கியைபு மேலையோத்தினோடியைபுடைத்தாயிற்றென்பது. சூத்திரத்திற்கியைபு மேலைச் சூத்திரத்தோ டியைபுடைத்தாயிற்றென்பது. இவை, நூன்முகத்துக் காட்டப்படுதலேயன்றிப், படலமுகத்தும், ஒத்துமுகத்தும், சூத்திரமுகத்துங் காட்டப்படும். இவையெல்லாம் பாயிரமேயாம். பிறவும் இவ்வாறே கண்டு கொள்க.

அற்றேல், கேட்போர் மாணாக்கருங் கேட்பிப்போர் ஆசிரியருமாகலான், இவ்விரண்டும் பொதுப்பாயிரத்தாற் பெறப்படுமாலோவெனின்; — அற்றன்று: பொதுவகையான் ஆசிரியர்க்கும் மாணாக்கர்க்கும் இலக்கணம்பெறப்பட்டனவல்லது. இந்நூற்கின்னோரென்னுஞ் சிறப்புவகை ஆண்டுப் பெறப்படாமையின், இஃதீண்டுக் காட்டப்படும். இது காட்டாக்கால், சிற்றறிவோர் பெருநூலும், பேரறிவோர் சிறுநூலும், முத்தமிழுள் ஒரு நூற்குரியார் ஏனையிரண்டு நூலும், அறம்பொருள் இன்பம் வீடென்னும் நான்கனுள் ஒன்றற்குரியார் ஏனை மூன்று நூலுங்கேட்பான்புக்கு இடர்ப்பட்டு மயங்குபவாகலின், இஃது ஒருதலையாற் காட்டல் வேண்டுமென்பது. இதுபற்றியன்றே, பொதுவெனவுஞ் சிறப்பெனவும் பாயிரம் இருபகுதிப்பட்டதூஉமென்க.

இக்கருத்தறியாத உரையாசிரியரை * யுள்ளிட்டோரெல்லாரும், நூலரங்கேறும் அவைக்களத்துக் கேட்டாரைக் கேட்போரென்றும், தொகுத்தன முதலிய வழியின்வகையினை யாப்பென்றும் கூறினார். ஆக்கியோன்பெயர் நுதலியபொருளென்பனபோல இறந்தகாலத்தாற் கூறாது கேட்பாரென எதிர்காலத்தாற் கூறியதே அஃதுரையன்மைக்குச் சான்றாமாகலானும், காலங் கடந்துளடங்குதலின் வேறுகூறவேண்டாமையானும், ஆக்கியோன் பெயர் முதலியனபோல நூல்வழங்குங்காலத்து நிகழ்வதன்றாகலின் அவற்றோடு ஒருங்குவைத்தெண்ணல் பொருந்தாமையானும், கேட்டற்குரிய அதிகாரிகளாவாரை ஒரு தலையாக உணர்த்தல்வேண்டுமாகலானும், தொகுத்தன் முதலியன வழியுள்

* ஈண்டு உரையாசிரியரெனப்பட்டார் இளம்பூரணர்; ஆதியிலக்கணமாகிய தொல்காப்பியத்திற்கு முன்னருரை செய்தமையால் இவருக்கு உரையாசிரியரென்னும்பெயர் வழங்குவதாயிற்று.

அடங்குதலானும், இயைபும் ஒருதலையானுணர்த்தற்பாலதாக லானும், யாங்கூறியதே வடநூலார்க்கும் உடன்பாடாகலானும் அவருரை போலியுரையென்க.

வழியின் வகையாகிய நால்வகை யாப்பினுட்டொகைவிரியாப்பென ஒன்று போந்ததன்றித் தொகை வகை விரியெனப் போந்ததில்லையாலோவெனின்:—நடு நின்றவகை, பின்னின்ற விரியை நோக்கிற் றொகையாகவும், முன்னின்ற தொகையை நோக்கின் விரியாகவும் அடங்குதலின், இது தொகைவிரியாப்பென்றதன்பாற்படுமென்க; எனவே தொகை விரியென இரண்டாய் வரினும், மரத்தினது பராரையினின்றுங் கவடு கோடு கொம்பு வளார் பலவாய் ஒன்றோடொன்று தொடர்ப்பட்டெழுந்து நிற்றல் போற்றொகையினின்றும் ஒன்றோடொன்று தொடர்படப் பகுக்கப்பட்டுப் பலவாய் வரினுந் தொகைவிரியாப்பேயாமென்க.

இப்பாயிரம் ஒரு நூற் குரித்தாகலிற் சிறப்புப்பாயிரமாமென்க.

சிறப்புப்பாயிர முற்றிற்று.



நன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை
செய்கவென நரேந்திர சிங்கந்
தென்னூற்று மலைமருதப் பன்புகலப்
பொருள்விளங்கச் செய்தான்பாரின்
எந்நூற்கு மெழுத்தொடு சொற்பொருளறி
சங்கரநமச்சி வாயனென்னும்
பன்னூற் செந்தமிழ்ப் புலவன்சைவ
சிகாமணி நெல்லைப் பதியினானே. (1)

அகத்தியந் தொல்காப்பியமே முதலிய
முன்னூல்கள் பலவாய்ந்துமுப்பால்
பகுத்ததிரு வள்ளுவரே முதன்ஞான
நூல்களெல்லாம் பகல்செய்வான்போல்
இகத்திலுரை செயவலசங் கரநமச்சி
வாயனெனு மிசைப்பேர்பெற்ற
தகைப்புலவ னன்னூலுக் குரைவகுத்த
தொருவியப்போ தமிழ்வல்லோரே. (2)

முன்னூற்கு மலயமுனி தன்னூற்கும்
புவியிடத்து முதியோராற்சொல்
எந்நூற்குந் தமிழ்க்கடலு ளினியற்று
நூற்கும் வகையிதனாற்காட்டி
நன்னூற்கு விரித்துரைசெய் தான்றிகாந்
தத்தளவு நடாத்துங் கீர்த்தித்
தென்னூற்று மலைமருதப் பன்சொலச்
சங்கரநமச் சிவாயன்றானே. (3)

இம்மூன்றுமுரைப்பாயிரம்.

# பொதுப்பாயிரம்.

1. முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

என்பது சூத்திரம். என்னுதலுற்றோவெனின்: பாயிரத்துக்கு வரூஉங் காரணக்குறிகளுணர்த்துதனுதலிற்று.

**இதன்பொருள்.** பாயிரத்தின் இலக்கணங்களை முன்னுணர்ந்தல்லது நூல்களைச் செய்தலும் அவற்றையீதலும் ஏற்றலு முடியாமை கருதி முன்னுரைத்தலின் முகவுரையென்றும், "பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்—தொகுதியாகச் சொல்லுத றானே" என்பவாகலின், மேல் வகுக்கும் ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப் பொருளையுந் தொகுத்துச் சொல்லுதலிற் பதிகமென்றும், நூலினது பெருமை முதலிய விளங்க அணிந்துரைத்தலின் அணிந்துரையென்றும், முகவுரையென்றாற்போல நான்முகமென்றும், நூனுதலிய பொருளல்லனவற்றை உரைத்தலிற் புறவுரை யென்றும், நூற்குள்ள நுதலிய பொருளல்லனவற்றை அதற்குத் தந்துரைத்தலிற் றந்துரையென்றும், அணிந்துரையென்றாற்போலப் புனைந்துரையென்றும், பாயிரத்துக்குப் பெயராம் என்றவாறு. பாயிரமென்பது வரலாறு.

பாயிரங் கூறப் புகுந்தார் நிகண்டுபோல அதன் பெயர் விகற்பங்களைக் கூறியதென்னையெனின்:—இப்பாயிரம், பதிகமாகிய புறவுரையாய்த் தந்துரைக்கப்படுவதேனும், நூற்கு இன்றியமையாத அணியாய் முன்னுரைக்கப்படுவ தென்பது, இக்காரணக்குறிகளான் விளங்குதலினென்க. (1)

2. பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே.

**எ - னின்.** மேற்பாயிரமென்றதனை வகுத்துணர்-ற்று.

**இ - ள்.** மேற்பாயிரமென்றது பொதுப்பாயிரமுஞ் சிறப்புப்பாயிரமுமென இருவகையினையுடைத்து. எ-று. (2)

3. நூலே நுவல்வோ னுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றா மைந்தும்
எல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம்.

**எ - னின்.** இருவகைப் பாயிரத்துட் பொதுப்பாயிரத்தை விரித்துணர்-ற்று.

**இ - ள்.** நூலினது வரலாறும், ஆசிரியனது வரலாறும், அவ்வாசிரியன் நூலை மாணாக்கற்குச் சொல்லுதலின் வரலாறும், மாணாக்கனது வரலாறும், அவன் கேட்டலின் வரலாறுமென்னும் ஐந்தும் எல்லா நூற்குமாம் ஆதலின், இவ்வைந்து வரலாற்றையும் விளங்கவுணர்த்துவது பொதுப்பாயிரமாம். எ - று.

திறன் கூற்றென்றது வரலாற்றையாதலின், அதனை ஏனையவற்றுள்ளும் பிரித்துரைத்தாம். ஆமென்பதனை எல்லாநூற்கும் ஆமெனக் கூட்டுக.

“ஈவோன் றன்மை யீத லியற்கை—கொள்வோன் றன்மை கோடன் மரபென—வீரிரண் டென்ப பொதுவின் றொகையே” என்பாரும் உளராலோவெனின்:—பாயிரங் கூறுதல் நூல்கட்கன்றிப் பிறவற்றிற் கன்றே; அங்ஙனமாதலின், நூல்களின் வரலாறொன்றுமே கூறவேண்டும்; அதனோடு ஆசிரியன் வரலாறு முதலிய நான்கினையும் உடன் கூறுதல், வரலாற்று முறைமையின் வாராதார் நூல்களைக் கற்பிக்கவும் கற்கவும் புகின், “பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்—பேதை வினைமேற் கொளின்” என்றவாறேயாய், நூல்கள் அருமையும் பெருமையுங் கெட்டுப் பயன்படாவாமென்பது கருதியென்க. அங்ஙனமாயின், நான்முகத்துரைக்கப்படும் பாயிரவுறுப்பினுள் நூலைக் கூறுவது பொருந்தாதெனின்:—இவ்விலக்கணத்தான் அமைபவன் ஆசிரியனென்றார்போல இவ்விலக்கணத்தான் அமைவது நூலென்றலன்றிப் பாயிரத்துள் நூலைக் கூறியதன்றாம், ஆதலின், ஆசிரியர் தொல்காப்பியர் நூலினியல்பை ஒத்துறுப்பாகிய மரபியலுட் கூறினார் போல, இவ்வாசிரியர் பாயிரவுறுப்பினுட் கூறினாரென்க. (3)



---

## 1. நூலினது வரலாறு.

4. நூலி னியல்பே நுவலி னோரிரு
பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்
நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி
ஐயிரு குற்றமு மகற்றியம் மாட்சியோ
டெண்ணான் குத்தியி னோத்துப் படலம்
என்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.

**எ - னின்.** மேற்கூறிய ஐந்தனுள் நூலினது வரலாறுணர்-ற்று.

**இ - ள்.** மேற்கூறிய ஐந்தனுள், நூலினது வரலாற்றைச் சொல்லின், இருவகைப் பாயிரத்தையும் முன்னுடைத்தாதன் முதலாக இங்ஙனம் விகற்பித்த பதின்மூன்று விகற்பநடைகளைப் பெற்று வரும். எ - று. (4)

### நூல்களின் வகை.

5. முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்.

**எ - னின்,** நூலினது வரலாற்றைத் தொகுத்துக் கூறினார்; அவற்றுள் ‘ஓரிருபாயிர’த்திற்கு வகை போந்து கிடந்தமையின் அதனையொழித்து, ஏனையவற்றை வகுத்துக் கூறுவான்றொடங்கி, ‘மும்மையினொன்றாய்’ என்றதனை வகுத்துணர் - ற்று.

**இ - ள்.** முதனூல், வழிநூல், சார்புநூலென மூன்று கூற்றதாநூல். எ - று. (5)

### முதனூல்.

6. அவற்றுள்,—
வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

**எ - னின்.** நூன் மூன்றனுண் முதனூலாமா றுணர்-ற்று

**இ - ள்.** வினையினீக்கி விளக்கப்படும் அறிவினையுடை உயிர்கட்கு, வினையினீங்கி விளங்கிய அறிவினையுடை முதல்வன் ஆதிக்கண்ணே செய்ததியாது? அது முதனூலா. எ - று.

### வழிநூல்.

7. முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்.

**எ - னின்.** வழிநூலாமா றுணர்-ற்று.

**இ - ள்.** தொல்லாசிரியர் நூல்களின் பொருண் முழுவதுமொத்து, வழிநூல் செய்வோன் முதனூ தாகவுந் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக வேண்டி விகற்பங்களையும் உடன்கூறி, அவ்விகற்பங்கள் உணர்வுடையோர் பலர்க்கும் ஒப்ப முடிந்தமையின், அழியாது உலகத் நின்றுநிலவு மரபினையுடையது வழிநூலாம். எ - று.

பின்னோன் வேண்டும் விகற்பங்கூறலாவது; "பழையன
வ தலும் புதியன புகுதலும் வழுவல" என்றவற்றை இறந்
பெ விலக்கல் எதிரது போற்றலென்னும் உத்திகளான், விலக்
கோ பாற்றியுங் கூறுதன் முதலியன.
கெட

நூன் 'முனைவன் கண்டது முதனூலாகும்' என ஒருமைய பொருளினோர், ஈண்டு முன்னோர் நூலெனப் பன்மையாற் கூறியது, னென்று



னூலையும் அவனருள் வழிப்பட்டுத் தத்தமரபின் வருங் பலர் நூலையுந் தழீஇக்கோடற்கென்க; எனவே, முதனூன் ரையாய் நிற்பது இறைவனூலும், வழிநூன்மாத்திரையாய் இறுதிநூலுமன்றி, இடைநிற்கு நூல்களெல்லாம், ஒருவற்கு யினான் மற்றொருவற்குத் தந்தையாயினாற்போல, முத ம் வழிநூலாயும் நிற்குமென்பது பெற்றாம். (7)

### சார்புநூல்.

இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

**எ - னின்.** சார்புநூலாமா றுணர்-ற்று.

**இ - ள்.** முதனூல் வழிநூலென்னும் இருதிறத்து நூல்கட்கும், பொருண்முடிபு ஒருபுடையொத்து, ஒழிந்தன வெல்லாம் ஒவ்வாமையையுடையது சார்புநூலாம் எ - று.

எனவே, முதனூற்கு, வழிநூலுஞ் சார்புநூலும், ஒருவற்கு ந்தனும் மருமானும் போலுமென்க.

நூல், தனக்கு வழிநூலை நோக்கின் முதனூலாகவும், நோக்கின் வழிநூலாகவும், அயனூலை நோக்கிற் சார்பு நிற்குமாயினும்,இம்முத்திறத்தினுள் ஒருதிறத்தின்கண் திறமின்மையின், 'மும்மையினென்றாய்' என்றார். (8)

### இருநூற் சிறப்புவிதி.

முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொ
[ழியும்
பொன்னே போற்றுவ மென்பதற்கும்—
[முன்னோரின்
வேறுநூல் செய்துமெனு மேற்கோளி லென்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள். [பதற்குங்

**எ-னின்.** வழிநூற்கும் சார்புநூற்கும் எய்தியதன்மேற் சிறப்பு விதியுணர்-ற்று; முன்னோர் நூலின் பொருண்முடிபு முழுவது மொப்பவும் ஒரு புடையொப்பவுங் கூறுவதன்றியும், அந்நூற் சூத்திரங்களையும் ஒரோவழியெடுத்துக் கூறுகவென்றலின்.

**இ-ள்.** முன்னோர் மொழிந்த பொருளையேயன்றி அவர் மொழியினையும் பொன்போலப் போற்றிக்கொள்வ மென்பதற்கு இலச்சினையாகவும், முன்னோர் நூலையே கூறாது அந்நூலினின்றும் வழிநூல் சார்புநூல் செய்தோமாயினும், ஆசிரிய வசனங்களை ஒரோவழி யெடுத்து உடன்கூறுதல் வழிநூற்குஞ் சார்புநூற்கும் இலக்கணமாதலின் இந்நூலகத்து ஆசிரிய வசனமில்லையெனக் குற்றங் கூறுவராதலின் அக்குற்றம் ஒழிதற்காகவும், பழஞ்சூத்திரத்தின் கோளைக்கூறு. எ-று.

ஆசிரிய வசனமெனினும், மேற்கோளெனினும், பழஞ்சூத்திரத்தின் கோளெனினும் ஒக்கும்.

முன் போற்றுவஞ் செய்துமென உளப்பாட்டுத் தன்மைப் பன்மை முற்றாகவும், பின்னர்க்கூறென முன்னிலையேவலொருமையாகவுங் கூறினமையின், வழிநூலுஞ் சார்புநூலுஞ் செய்வோர் பலர் குழீஇ ஒருவர்க்கொருவர் கூறுங் கூற்றாக, இச்சூத்திரஞ் செயப்பட்டதென்க. (9)

### நூலின்பயன்.

10. அறம்பொரு ளின்பம்வீ டடைத னூற் பயனே.

**எ-னின்.** நாற்பொருட்பயனென்றதனை வகுத்துணர்-ற்று.

**இ-ள்.** அறமும், பொருளும், இன்பமும், வீடடைதலுமாகிய இந்நான்கும் நூல்தழுவப்படும் பயனாம். எ-று.

வீடென வாளா கூறாது வீடடைதலென்றார், வீடென்பது பேரின்பமாகிய சாத்தியமாகலின், நான்குமென்னுஞ் செவ்வெண்ணின்றொகையோடு உம்மைகள் விகாரத்தாற்றொக்கன. (10)



### மதம் ஏழு.

11. எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப்
பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே.

**எ-னின்.** எழுவகை மதமென்றதனை வகுத்துணர்-ற்று.

**இ-ள்.** மேல் எழுவகை மதமென்று சொல்லப்பட்டன; இங்ஙனம் பிறர் மதத்தை உடன்படன் முதலியவாக விதந்தனவாம். எ-று.

நூல் தழுவிய மதங்கள் பலவாயினும், தலைமை பற்றிய மதம் எழென்பது நூல்வழக்காமென்க. குற்றம் பத்து, அழகு பத்து, உத்தி முப்பத்திரண்டு என்பனவும் அன்ன.

இவ்வெழுவகை மதங்கட்கும், பதப்பொருளோடு உதாரணம் விளங்க, இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங் குணர்க. (11)

### குற்றம் பத்து.

12. குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித் [தல்
சென்றுதேய்ந் திறுத னின்றுபய னின்மை
என்றிவை மீரைங் குற்ற நூற்கே.

**எ-னின்.** பத்துக் குற்றமென்றதனை வகுத்துணர்-ற்று.

**இ-ள்.** நூற்குப் பத்துக் குற்றங்களாவன, குன்றக் கூறன் முதலிய இவைகளாம். எ-று.

நூல்கள் இக்குற்றங்கள் சாராது வருதல் காண்க. (12)

### அழகு பத்து.

13. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமைநன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்
முறையின் வைப்பே யுலகமலை யாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுத னூலிற் கழகெனும் பத்தே.

எ - னின். பத்தழகென்றதனை வகுத்துணர்-ற்று.

இ - ள். நூலிற்கு அழகென்று சொல்லப்படும் பத்தாவன, சுருங்கச்சொல்லன் முதலியவாம். எ - று.

நூல்கள் இப்பத்தழகோடுங் கூடி வருதல் காண்க. (13)

### உத்தி 32.

14. நுதலிப் புகுத லோத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டன் முடிவிடங் கூறல்
தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்
சொற்பொருள் விரித்த றொடர்ச்சொற்புணர்த்
இரட்டுற மொழித லேதுவின் முடித்தல் [தல்
ஒப்பின் முடித்தன் மாட்டெறிந் தொழுகல்
இறந்தது விலக்க லெதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின்முடித்தன்முடிந்ததுமுடித்தல்
உரைத்து மென்ற லுரைத்தா மென்றல்
ஒருதலை துணித லெடுத்துக் காட்டல்
எடுத்த மொழியி னெய்த வைத்தல்
இன்ன தல்ல திதுவென மொழிதல்



எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்
பிறநூன் முடிந்தது தானுடன் படுதல்
தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்
சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்
ஒன்றின முடித்த றன்னின முடித்தல்
உய்த்துணர வைப்பென வுத்தியெண் ணான்கே.

எ - னின். முப்பத்திரண்டுத்தியென்றதனை வகுத்துணர்-ற்று.

இ - ள். முப்பத்திரண்டுத்தியாவன, நுதலிப்புகுதன் முதலியவாம். எ - று.

இவற்றுள் ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்த லென்பதோருத்தி. உய்த்துணரவைப்பென்பதனை உத்திக்கடையாக்கி, உய்த்துணரவைப்பெனுமுத்தி யெண்ணான்கே எனப் பாடமோதி, அதனை இரண்டுத்தியாக்கினுமமையும்.

இவ்வுத்திகட்குப், பதப்பொருளோடு உதாரணம் விளங்க, இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க.

மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தியுள்ளுங் கூறியதென்னையெனின்:—கொள்கைவகையான் மதமென்றும், சிறப்புவகையான் அழகென்றும், இம்மதம் அழகு முதலிய வெல்லாம் புத்தி நுட்பத்தமையும் வகையான் உத்தியென்றுங் கூறப்படுமென்க. அங்ஙனமாயின், மதம் அழகெல்லாவற்றையும் உத்தியின்பாற்படுத்துக் கூறாது, சிலவற்றைக் கூறியதென்னையெனின்:—வரம்பின்றி வருமுத்தியுட் டலைமைபற்றிக் கூறுமுப்பத்திரண்டின் வந்தன கூறினாரென்க. (14)

### உத்தி விளக்கம்.

15. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துத றந்திர வுத்தி.

எ - னின். மேற்றொகுத்தும் வகுத்துங் கூறிய உத்திக்கிலக்கணமுணர்-ற்று.

**இ - ள்.** ஓரிலக்கண நூலால் உணர்த்தப்படும் பொருளை நூல்வழக்கோடும் உலகவழக்கோடும் பொருந்த வுணர்த்தி, அப்பொருளை, மற்றோரிலக்கிய நூற்கண்ணும், எற்குமிட மறிந்து, இவ்விடத்திற்கு இஃதாமெனக் கருதித், தக்க வகையாகச் செலுத்துவது தந்திரவுத்தியாம் எ - று.

தந்திரமென்பது நூல். உத்தியான் அமைக்கும் பொருளை உத்தியென்றது ஆகுபெயர். (15)

### ஓத்து விளக்கம்.

16. நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

**- னின்.** இருவகையுறுப்பினுள் ஓத்துறுப்பாமாறுணர்-ற்று

**இ - ள்.** ஒரு சாதியாயுள்ள மணிகளை முறையே பதித்தாற்போல ஒருசாதியாயுள்ள பொருள்களை ஒருவழிப்படக் கூறுவது ஓத்துறுப்பாமெனச் சொல்லுவர், உயிர்க்குறுதி பயக்கும் மெய்ம்மொழிகளையுடைய புலவர். எ-று.

நேர்தல் ஒன்றுபடுதல்.

இவ்வாறு வருதல் இந்நூலுறுப்பினுட் காண்க. (16)

### படல விளக்கம்.

17. ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும்.

**எ - னின்.** படலவுறுப்பாமாறுணர்-ற்று.

**இ - ள்.** ஒருவழிப்படாது விராய பொருளோடு பொருந்திப் பலபொருளை யுணர்த்தும் பொதுச்சொற்கள் ஒரோவழியன்றித் தொடர்ந்துவரின், அது படலவுறுப்பாம்.



படலவுறுப்பினையுடைய காப்பியங்களுட் பாட்டுடைத் தலைவனது சரிதையேயன்றி மலை கடல் நாடு முதலிய பலபொருட்டிறங்களும் விரவிவருதலும், பலபொருளை யுணர்த்தும் பொதுச்சொற்கள் ஒரோவழியன்றித் தொடர்ந்து வருதலுங் காண்க. (17)

### சூத்திர விளக்கம்.

18. சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்.

**எ - னின்.** சூத்திரமாமாறுணர்-ற்று.

**இ - ள்.** சிறிய கண்ணாடியிற் பெரிய சரீரமுதலியவற்றின் சாயை செவ்வாகச் செறிந்து இனிதாக விளங்கினாற்போலச் செவ்வாகச் செறிந்து இனிதாக விளங்கச், சில்வகையெழுத்துக்களான் இயன்ற யாப்பின்கட் பல்வகைப்பட்ட பொருள்களைச் செவ்வாகச் செறித்து இனிதாக விளக்கி, அப்பல பொருட்டிண்மையும் நுண்மையுஞ் சிறந்து வருவன சூத்திரங்களாம். எ - று.

திட்பம்-குற்றமின்மையின் அலைவற நிற்றல்.

இவ்வாறு வருதல் இச்சூத்திரத்துள்ளும் காண்க. (18)

19. ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத் திரநிலை.

**எ - னின்.** இதுவுமது.

**இ - ள்.** மேற்கூறிய சூத்திரங்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கு நிலைகள், ஆற்றொழுக்கு முதலிய நான்கினையும் போலும். எ - று.

இவ்வாறு நிற்றல் இந்நூலுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க., (19)

## சூத்திரவகை.

20. பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்.

**எ - னின்.** இதுவுமது.

**இ - ள்.** பிண்டமெனவும், தொகையெனவும், வகையெனவும், குறியெனவும், செய்கையெனவும், இவற்றை அலைவறக் கொண்டு இவற்றின் புறத்து அடையாய் வரும் புறனடை யெனவுங் கூறுங் கூற்றினையுடையவாம் மேற்கூறிய சூத்திரங்கள். எ - று.

இவற்றுள், பிண்டமாவன, 'பன்னிருபாற்றதுவே' என்றற்றொடக்கத்துத் தொகைபோலாது 'நன்கியம்புவனெழுத்தே' என்றற்றொடக்கத்துப் பொதுப்பட வருவன. தொகையும், வகையும் புறனடையும் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. விரி வகையின்பாற்படுதலிற் கூறாராயினர். குறியாவன, இவை உயிர், இவை ஒற்று, இவை பெயர், இவை வினை என்றற்றொடக்கத்து அறிதன்மாத்திரையாய் வருவன. குறியென்பது, அறிதலையுணர்த்திய முதனிலைத் தொழிற்பெயர். செய்கையாவன, பதமுன்விகுதியும்பதமும் உருபும் புணரும் புணர்ச்சிவிதி அறிந்து, அங்ஙனமறிதன் மாத்திரையாய் நில்லாது, அவ்வாறு வேண்டுழிப் புணர்த்தலைச் செய்தலும், பெயர் வினை முதலிய கொள்ளும் முடிபுவிதி அறிந்து, அங்ஙனமறிதன் மாத்திரையாய் நில்லாது, அவ்வாறு வேண்டுழி முடித்தலைச்செய்தலு முதலியன. இப்பிண்ட முதலிய ஆறுபெயரும், அப்பொருளையுணர்த்துஞ் சூத்திரங்கட்கு ஆகுபெயராய் வந்தன.

எல்லாச் சூத்திரங்களும் பிண்டந் தொகை வகை புறனடை யென்னு நான்கனுள் அடங்குமன்றே; அங்ஙனமாகக் குறியினையுஞ் செய்கையினையும் வேறோதியது, எல்லா நூலுள்ளுஞ் சொல்லப்படுவன அ[illegible]துஞ் செய்வதுமன்றி வேறின்மையின், பிண்டமாக்கியுந் தொகுத்தும் வகுத்தும் புறத்தடை கொடுத்துங் கூறப்படுவன குறியுஞ் செய்கையுமே யென்பது, தோன்றற்கென்க. இங்ஙனங் கூறவே, எல்லா நூலுள்ளும் வரும் எல்லாச் சூத்திரங்களும், குறிச்சூத்திரஞ் செய்கைச் சூத்திரமென இரண்டாய் அடங்குமென்பது பெற்றாம்.

இவ்வாறன்றிக், குறியென்பதற்குப் பெயர்களையுணர்த்துஞ் சூத்திரமென்றும், செய்கை யென்பதற்கு எழுத்துப்புணர்ச்சியை யுணர்த்துஞ் சூத்திரமென்றும் பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங் கூறின், ஏனையிலக்கணங்களைக்கூறுஞ் சூத்திரங்களையும் விதந்து கூறவேண்டும், அவையின்மையானும், பெயரும் புணர்ச்சியும் இவ்விலக்கண நூற்கன்றிப் பொதுப்பாயிரமாய் எல்லா நூற்கும் பொருந்தாமையானும், அது பொருளன்றென்க. (20)



## உரையின் பொது இலக்கணம்

21. பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை யுதாரணம் வினாவிடை விசே
விரிவதி காரந் துணிவு பயனோ [டம்
டாசிரிய வசனமென் றீரே ழுரையே.

**எ - னின்.** மேற்காண்டிகையுரை விருத்தியுரை யென்றார்; அவற்றை யுணர்த்துவான்றொடங்கி, உரையினது பொதுவிலக்கணமுணர் - ற்று.

**இ - ள்.** இப்பதினான்கு வகையான் உரைக்கப்படும் நூற்குரை. எ - று.

இவற்றுள், விசேடமாவது, சூத்திரத்துட்பொருளன்றி ஆண்டைக்கு வேண்டுவன தந்துரைத்தல்; விரிவாவது, வேற்றுமை முதலிய தொக்கு நின்றனவற்றை விரிக்க வேண்டுழி விரித்துரைத்தல். அதிகாரமாவது, எடுத்துக்கொண்ட அதிகாரம் இதுவாதலின், இச்சூத்திரத்ததிகரித்த பொருள் இதுவென அவ்வதிகாரத்தோடு பொருந்த உரைக்க வேண்டுழி உரைத்தல். துணிவாவது: ஐயுறக்கிடந்துழி, இதற்கிதுவே பொருளென உரைத்தல். ஏனைய பொருள் விளங்கிக் கிடந்தன.

இப்பதினான்கும் இவ்வுரையுள் வந்துழி வந்துழிக் காட்டுதும்; ஆங்காங்குணர்க. (21)

காண்டிகையுரை.

22. கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை யாக்க லானுஞ்
சூத்திரத் துட்பொருள் தோற்றுவ காண்டிகை.

**எ - னின்.** காண்டிகையுரையாமாறுணர்-ற்று.

**இ - ள்.** மேற்கூறிய பதினான்கினுட் கருத்துரையும் பதப்பொருளும் உதாரணமுமாகிய மூன்றனையும் உரைத்தலானும், அம்மூன்றனோடு வினாவிடையென்னும் இரண்டனையுங்கூட்டி உரைத்தலானும், சூத்திரத்துட்பொருளை விளக்குவன காண்டிகையுரைகளாம். எ - று. (22)

விருத்தியுரை.

23. சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்டைக்
கின்றி யமையா யாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐய மகல வைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி.

**எ - னின்.** விருத்தியுரையாமாறுணர்-ற்று.

**இ - ள்.** காண்டிகையுரைபோற் சூத்திரத்துட்பொருள் விளக்குதன் மாத்திரையின் நில்லாது, அவ்விடங்கட்கு இன்றியமையாத பொருள்கள் யாவையும் விளங்கத், தானுரைக்கு முரையானும், ஆசிரிய வசனங்களானும், மேற்கூறிய காண்டிகையுறுப்பைந்தனானும், ஐயந்தீரச் சுருங்காது, மெய்ம்மைப் பொருளை விரித்துரைப்பது விருத்தியுரையாம். எ-று.

சூத்திரத்துட் பொருளன்றியும் என்றமையான், மேற்கூறிய பதினான்குறுப்புங்கொண்டது விருத்தியுரையென்பது பெற்றாம்.()



நூலின் பெயர்க்காரணம்.

24. பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—வெஞ்
கையேவா யாகக் கதிரே மதியாக [சாத
மையிலா நூன்முடியு மாறு.

**எ - னின்.** நூலென்னும் பெயர் வருமாறுணர்-ற்று.

**இ - ள்.** இந்தநூன் முடியுமாறு இதுவாதலின், நூலென்றது உவமையாகு பெயராம். எ - று. (24)

25. உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின்வள முருக்கிப் பொல்லா—மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன்
மனக்கோட்டந்தீர்க்குநூன்மாண்பு. [மாந்தர்

**எ - னின்.** இதுவுமது.

**இ - ள்.** அந்நூல்போற் செப்பஞ் செய்தலானும் நூலென்றது உவமையாகுபெயராம். எ - று.

புரத்தினது உரத்தின் வளம் பெருக்கி உள்ளிய தீமை வளமுருக்கியெனக் கூட்டுக. புரம் உடம்பு. உரம் நெஞ்சு.

பின்பு தீமை வளமென்றமையான், முன்பு நல்வளமெனத் தந்துரைக்க. (25)

---

## 2. ஆசிரியனது வரலாறு.

26. குலனரு டெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகிய லறிவோ டுயர்குண மினையவும்
அமைபவ னூலுரை யாசிரி யன்னே.

எ - னின். நிறுத்த முறையானே ஆசிரியனது வரலா றுணர்-ற்று.

இ - ள். இவ்வியல்பினையுடையார் கற்பிக்குமாசிரிய ராவார். எ - று. (26)

நில மாட்சிமை.

27. தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறை
பருவ முயற்சி யளவிற் பயத்தலும் [யும்
மருவிய நன்னில மாண்பா கும்மே.

எ - னின். மேற்கூறிய உவமையை விரித்துணர்-ற்று.

இ - ள். நிலத்தினது மாட்சிமை இதுவாதலின், இஃதுவமையாயிற்று. எ - று. (27)

மலை மாட்சிமை.

28. அளக்க லாகா வளவும் பொருளுந்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே.

எ - னின். இதுவுமது.

இ - ள். மலையினது மாட்சிமை இதுவாதலின், இஃதுவமையாயிற்று. எ - று. (28)

நிறைகோல் மாட்சிமை.

29. ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே.

எ - னின். இதுவுமது.

இ - ள். நிறைகோலினது மாட்சிமை இதுவாதலின், இஃதுவமையாயிற்று. (29)



மலர் மாட்சிமை.

30. மங்கல மாகி யின்றி யமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே.

எ - னின். இதுவுமது.

இ - ள். மலரினது மாட்சிமை இதுவாதலின், இஃதுவமையாயிற்று. எ - று.

இவ்வுவமைகளினது மாட்சிமைபோலப் பொருளினது மாட்சிமையும் விரித்துரைத்துக்கொள்க. (30)

தகுதியற்ற ஆசிரியர்.

31. மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பும்
அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலுங்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்
உடையோ ரிலரா சிரியரா குதலே. [தையும்

எ - னின். ஆசிரியராகார் இவரெனவுணர்-ற்று.

இ - ள். இக்குற்றங்களையுடையோர் கற்பிக்குமாசிரிய ராகார். எ - று. (31)

கழற்குடத்தின் தன்மை.

32. பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றருஞ்
செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.

எ - னின். மேற்கூறிய உவமையை விரித்துணர்-ற்று.

இ - ள். கழற்பெய்த குடத்தின் குற்றம் இதுவாதலின், இஃதுவமையாயிற்று. எ - று. (32)

பனையின் தன்மை.

33. தானே தரக்கொளி னன்றித் தன்பால்
மேவிக்கொளக்கொடா விடத்ததுமடற்பனை.

எ - னின். இதுவுமது.

இ - ள். மடற்பனையின் குற்றம் இதுவாதலின், இஃது வமையாயிற்று. எ - று. (33)

பருத்திக்குண்டிகையின் தன்மை.

34. அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிற
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை. [ர்க்

எ-னின். இதுவுமது.

இ - ள். பருத்தி பெய்த குண்டிகையின் குற்றம் இது வாதலின், இஃதுவமையாயிற்று. எ - று. (34)

முடத்தெங்கின் தன்மை.

35. பல்வகை யுதவி வழிபடு பண்பின்
அல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே

எ - னின். இதுவுமது.

இ - ள். முடத்தெங்கினது குற்றம் இதுவாதலின், இஃதுவமையாயிற்று. எ - று.

இவ்வுவமைகளின் குற்றம் போலப் பொருளின் குற்றமும் விரித்துரைத்துக்கொள்க. (35)



## 3. நூல் கற்பித்தலினது வரலாறு.

36. ஈத லியல்பே யியம்புங் காலைக்
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்
சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொரு ளுள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்
[கொளக்
கோட்டமின் மனத்தினூல் கொடுத்தலென்ப.

எ - னின். நிறுத்த முறையானே ஆசிரியன் கற்பிக்குமா றுணர்-ற்று.

இ - ள். கற்பிக்குமாறு இவ்வாறெனச் சொல்லுவர் புலவர். எ - று. (36)

---

## 4. மாணாக்கனது வரலாறு.

37. தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன்வழிபடுவோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே.

எ - னின். நிறுத்தமுறையானே மாணாக்கனது வரலாறு ணர்-ற்று.

இ - ள். இவ்வறுவர்க்குஞ் சொல்லப்படுவது நூல். - று. (37)

மாணவர் வகை.

38. அன்ன மாவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடமா டெருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.

எ - னின். இதுவுமது.

இ - ள். மேற்கூறிய அறுவருள், அன்னமும் பசுவும் போல்வார் தலைமாணுக்கர்; மண்ணுங் கிளியும் போல்வார் இடைமாணுக்கர்; இல்லிக்குடமும் ஆடும் எருமையும் நெய்யரியும் போல்வார் கடைமாணுக்கர். எ - று.

இவ்வுவமைத் திறமும் பொருட்டிறமும் விரித்துரைத்துக் கொள்க. (38)

### மாணவராகாதவர்.

39. களிமடி மானி காமி கள்வன்
பிணிய னேழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் றொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் றறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே.

எ-னின். மாணுக்கராகார் இவரெனவுணர்-ற்று,

இ - ள். இக்குற்றங்களையுடையார்க்கு நூலைச்சொல்லார் ஆசிரியர். எ - று. (39)

---

## 5. நூல் கற்றலினது வரலாறு.

40. கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி யவன்குறிப் பிற்சார்ந்
திருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்னவார் வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவைகேட்டவைவிடாதுளத்தமைத்துப்
போவெனப் போத லென்மனார் புலவர்.



எ - னின். நிறுத்த முறையானே மாணுக்கன் நூலைக் கற்குமாறுணர்-ற்று.

இ - ள். கற்குமாறு இவ்வாறெனச் சொல்லுவர் புலவர். எ - று. (40)

### நூல்பயிலும் முறை.

41. நூல்பயி லியல்பே நுவலின்வழக் கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல்
அம்மா ண்புடையோர் தம்மொடு பயிறல்
வினுதல் வினயவை விடுத்த லென்றிவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்வாறு நூலைப் பயின்றவர்க்கு அறியாமை மிகுதியும் போம். எ - று. (41)

42. ஒருகு றி கேட்போ னிருகாற் கேட்பிற்
பெருக நூலிற் பிழைபா டிலனே.

எ - னின். இதுவுமது.

இ - ள். ஒருகாற் கேட்ட துணையானே அமையாது இருகாற் கேட்பானாயின், அந்நூலின்கட் பிழைபாடு மிகுதியுமிலன். எ - று. (42)

43. முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். முக்காற்கேட்பானாயின், ஆசிரியன் கற்பித்த முறையறிந்துரைப்பன். எ - று. (43)

44. ஆசா னுரைத்த தமைவரக் கொளினும்
காற்கூ றல்லது பற்றல னாகும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். ஆசிரியன் கற்பித்தனவற்றைத் தன்னறிவின்கண் அமையக் கற்றானாயினும், புலமைத் திறத்திற்காற் கூறல்லது பற்றான். எ - று. (44)

45. அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகாற்
செவ்வியி னுரைப்ப வவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். தன்போலியரோடு பயிலும் வகையாற் காற்கூறும், அக்கல்வியைத் தன் மாணாக்கர்க்கும் அவைக்களத்தோர்க்கும் உணர விரித்துரைத்தலான் அரைக் கூறுமாகக், குற்றமற்ற புலமை நிரம்பும். எ - று. (45)

### வழிபாடு விளக்கம்.

46. அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே.

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்வாறொழுகுதல் வழிபாடாம். எ-று.

---

### சிறப்புப்பாயிரத்திலக்கணம்.

47. ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.



எ - னின். 'பாயிரம் பொதுச்சிறப்பு' என மேல் நிறுத்த முறையானே 'மலர்தலை யுலகின்' என்றற்றொடக்கத்தனவாய் எல்லா நூற்கண்ணும் வருஞ் சிறப்புப் பாயிரங்களினது பொதுவிலக்கணமுணர்-ற்று. இதனையும் பொதுப்பாயிரத்துட் கூறினார், பொது வைந்தனுள் நூன்முகத்தினது இலக்கணமாதலின் என்க.

இ - ள். இவ்வெட்டுப் பொருளையும் விளங்கவுணர்த்துவது சிறப்புப் பாயிரத்திலக்கணமாம். எ - று.

ஆக்கியோன் பெயரே என்றற்றொடக்கத்தனவற்றுட் சிறப்பென்பது தோன்றினமையிற், பாயிரமென வாளா கூறினாரென்க. (47)

48. காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே.

எ - னின். இதுவுமது.

இ - ள். அவ்வெட்டனோடு இம்மூன்றனையும் கூட்டிப், பதினொன்றாகக் கூறுவாருமுளர். எ - று. (48)

### நூலின் பெயர்.

49. முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய்வித்தோன் றன்மைமுதனிமித்
இடுகுறி யானு நூற் கெய்தும் பெயரே. [தினும்

எ - னின். மேற்கூறிய பதினொன்றனுள் நூற்பெயர்க்குச் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். முதனூன்முதற் றன்மையீறாகக் கூறிய எழும் பிறவுமாகிய காரணங்களானும், இடுகுறியானும் நூற்குப் பெயர் வரும். எ - று.

வரலாறு: முதனூலாற்பெயர்பெற்றன ஆரியப்படலம் பாரத முதலாயின. கருத்தனாற் பெயர்பெற்றன அகத்தியந் தொல்காப்பிய முதலாயின. அளவினாற் பெயர்பெற்றன பன்னிருபடலம்

நாலடிநானூறு முதலாயின. மிகுதியாற் பெயர்பெற்றன களவியன் முதலாயின. பொருளாற் பெயர்பெற்றன அகப்பொருண் முதலாயின. செய்வித்தோனாற் பெயர்பெற்றன சாதவாகன முதலாயின. தன்மையாற்பெயர் பெற்றன சிந்தாமணி நன்னூன் முதலாயின. இடுகுறியாற் பெயர் பெற்றன நிகண்டு கலைக்கோட்டுத்தண்டு முதலாயின. பிறவுமன்ன. (49)

### நூல் யாப்பு.

50. தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெய
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப. [ர்ப்

**எ - னின்.** வழியின் வகையாகிய நூல்யாப்பினுக்குச் சிறப்பு விதியுணர்-ற்று.

**இ - ள்.** நூல் யாப்பு இந்நான்கு கூற்றதாம் என்று சொல்லுவர் புலவர். எ - று.

வெண்பா முதலிய யாப்பினோடு இவற்றிற்கு வேற்றுமை தோன்ற நூல்யாப்பென்றார். (50)

### சிறப்புப்பாயிரம் கூறுதற்கு உரியவர்.

51. தன்னா சிரியன் றன்னொடு கற்றோன்
தன்மா ணாக்கன் றகுமுரை காரனென்
றின்னோர் பாயிர மியம்புதல் கடனே.

**எ - னின்.** இவ்விலக்கணங்களையுடைய சிறப்புப்பாயிரங் கூறுதற்குரியார் இவரெனவுணர்-ற்று.

**இ - ள்.** ஒருவன் கூறிய நூற்கு இந்நால்வருள் ஒருவர் சிறப்புப்பாயிரங் கூறுதன் முறைமையாம். எ - று. (51)

### சிறப்புப்பாயிரம் பிறர்செய்வதன் காரணம்.

52. தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினுந்
தான்றற் புகழ்த றகுதி யன்றே.



**எ - னின்.** சிறப்புப்பாயிரம் பிறர் கூறுதற்குக் காரணமுணர்-ற்று.

**இ - ள்.** தோன்றாத நுட்பங்களையெல்லாந் தோற்றிப் பல துறைப்பட்டு விரிந்த நூலைச்செய்து முடித்தானாயினும் தன்னைத்தான் புகழ்தல் தகுதியன்றாம்; ஆதலின், நூல் செய்தானது புகழாகிய சிறப்புப்பாயிரத்தைப் பிறர் கூற வேண்டும். எ - று. (52)

### தற்புகழ்ச்சியின் தகுதி.

53. மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினுந்
தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்
மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினு
தன்னை மறுதலை பழித்த காலையுந் [ந்
தன்னைப் புகழ்தலுந் தகும்புல வோர்க்கே.

**எ - னின்.** தற்புகழ்ச்சியும் ஒரோவழிக் குற்றமன்றென்பதுணர்-ற்று.

**இ - ள்.** இவ்விடங்களாயின், தன்னைப் புகழ்தலுந் தகும் புலவோர்க்கு. எ - று.

புகழ்தலுமென்ற உம்மையான், இவ்விடங்களினுந் தன்னைப் புகழாமையே தகுதியென்பது பெற்றாம். (53)

### பாயிரம் இன்றியமையாதது.

54. ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே.

**எ - னின்.** இருவகைப் பாயிரங்களும் நூற்கு இன்றியமையாதனவென்பதுணர்-ற்று.

**இ - ள்.** ஆயிரமுறுப்புக்களான் விரிந்த நூலாயினும், பாயிரமில்லாதது நூலன்று. எ - று. (54)

55\. மாடக்குச்சித்திரமு மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோ ணல்லார்க் கணியும்போல்—[நாடிமுன்
ஐதுரையாநின்ற வணிந்துரையையெந்நூற்கு
பெய்துரையா வைத்தார் பெரிது. [ம்

எ-னின், மேற்பாயிரமில்லது பனுவலன்றென்றூர், அஃ தன்றூதற்குக் காரணமுணர்-ற்று.

இ - ள். அறிவுடையோர், மாடமுதலிய மூன்றற்குஞ் சித்திரமுதலிய மூன்றும் போலக்கருதி, அழகிதாகிய பொருளை யுணர்த்தாநின்ற இருவகைப் பாயிரங்களையு முரைத்து, எவ்வகைப்பட்ட பெரிய நூல்கட்கும் முன்னர்ப் பெய்துவைத்தார் பெரும்பாலும்; ஆதலிற் பாயிரமில்லது பனுவலன்றூம். எ - று. (55)

பொதுப்பாயிர முற்றிற்று.

---

# 1. எழுத்ததிகாரம்

எழுத்ததிகாரமென்பது, எழுத்தினது அதிகாரத்தை யுடையதென அன்மொழித்தொகையாய், அப்படலத்திற்குக் காரணக் குறியாயிற்று.

எழுத்தென்றது, அகரமுதல் னகரவிறுவாய்க் கிடந்த முதலெழுத்து முப்பதும், உயிர்மெய் முதலிய சார்பெழுத்துப் பத்துமாம். அவற்றிற்கு எழுத்தென்னுங் குறி 'மொழிமுதற்காரணம்' என்னுஞ் சூத்திரத்தாலோதுபவாகலின், ஈண்டெடுத்தோதிற்றிலர் என்பது எழுதப்பட்டது.

அதிகாரம் அதிகரித்தல்; அஃதிருவகைப்படும். அவற்றுள், ஒன்று, வேந்தன் இருந்துழியிருந்து தன்னிலமுழுவதுந் தன்னாணையினடப்பச் செய்வதுபோல, ஒருசொன்னின்றுழி நின்று பல சூத்திரங்களும் பலவோத்துக்களுந் தன்பொருளே நுதலி வரச்செய்வது. ஒன்று, சென்று நடாத்துந் தண்டத்தலைவர்போல, ஓரிடத்து நின்ற சொற் பல சூத்திரங்களோடுஞ் சென்றியைந்து தன் பொருளை பயப்பிப்பது. இவற்றிற்கு, முறையே, வடநூலார் யதோத்தேசபக்கமெனவுங் காரியகாலபக்கமெனவுங் கூறுப. இது சேனாவரையருரையானுமுணர்க. அவற்றுள், ஈண்டதிகாரமென்றது முன்னையது; அதனையுடையதெனவே, எழுத்தை நுதலி வரும் பலவோத்தினது தொகுதி எழுத்ததிகாரமென்றூராயிற்று.

எழுத்தினததிகாரத்தை யுடையதென்புழி, ஆறுவது, வினைமுதற் பொருண்மையின்கண் வந்த காரகம்.

இப்படலத்துள் விதிக்கப்படுவனவெல்லாங் கருவியுஞ் செய்கையுமென இருவகைப்படும். அவற்றுட் கருவி எழுத்தியல் பதவியலென்னும் இரண்டோத்தானும், செய்கை உயிரீற்றுப் புணரியன் முதலிய மூன்றோத்தானுங் கூறப்படும். கருவி பொதுவுஞ் சிறப்புமென இருவகைத்து. முதலிரண்டோத்தினுங் கூறப்படுவன பொதுக்கருவி. உயிரீற்றுப் புணரியன் முதற்கட் புணர்ச்சி இன்னதெனக் கூறப்படுவனவும், உருபுபுணரியலினிறுதிக்கட்சாரியைத் தோற்றங் கூறப்படுவனவும், செயற்கையொன்றற்கேயுரிய கருவியாகலிற் சிறப்புக்கருவி.

---

## 1. எழுத்தியல்.

### கடவுள் வணக்கமும் அதிகாரமும்.

56. பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த
நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே

**எ - னின்.** கடவுள் வணக்கமும் அதிகாரமுமுணர்-ற்று.

**இ - ள்.** பூக்கண் மலிந்த அசோக மரத்தினது அலங்கரிக்கு நிழலின்கண் எழுந்தருளியிருந்த நான்கு திருமுகங்களையுடைய கடவுளை வணங்கி, நன்றாகச் சொல்லுவன் எழுத்திலக்கணத்தை. எ - று.

எல்லா நூலும் மங்கலமொழிமுதல் வகுத்துக் கூறவேண்டுதலிற் பூமலியென்றும், எல்லாச் சமயத்தோராலும் வணங்கப்படும் படைப்பு முதலிய ஐந்தொழிற்கு முரிய எல்லாக்கடவுளாகியு நின்றான் ஒருவனே என்பார் அருகனை நான்முகனென்றுங் கூறினார்.

இவ்வாறு **வள்ளுவநாயனாரும்,** "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தா—நிலமிசை நீடுவாழ் வார்" என வரையாது கூறுதல் காண்க.



எழுத்தென்பது ஆகுபெயர். ஏகாரம் ஈற்றசை.

(எல்லாம் வல்ல கடவுளை வணங்கலான் இனிது முடியுமென்பது கருதி நன்கியம்புவனென்று புகுந்தமையின், இது நுதலிப் புகுதலென்னுமுத்தி, (1)

### எழுத்திலக்கண வகை.

57. எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதலீ றிடைநிலை போலி யென்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.

**எ - னின்.** அவ்வெழுத்திலக்கணம் இத்துணைத்தென்பதுணர்-ற்று.

**இ - ள்.** இப்பன்னிரு பகுதியினையுமுடைத்து அவ்வெழுத்திலக்கணம். எ - று.

என்றாவென்பது எண்ணிடைச்சொல்.

(இச்சூத்திரந் தொகுத்துச் சுட்டலென்னுமுத்தி, மேல் வருவனவெல்லாம் வகுத்துக்காட்டல்.) (2)

---

## 1. எண்.

### எழுத்தின் விளக்கமும் அதன் வகையும்.

58. மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே.

**எ - னின்.** 'பன்னிருபாற்றதுவே' என்றவற்றுள், எழுத்தின் அகத்திலக்கணமாகிய பத்தையும் ஓரியலாகவும், அதன் புறத்திலக்கணமாகிய பதம் புணர்பென்னும் இரண்டனுள் அவ்வெழுத்தானாகும் பதத்தை ஓரியலாகவும், அப்பதம் புணரும் புணர்ப்பை மூன்றியலாகவும், ஒத்து முறைவைப்பென்னுமுத்தியான் வைக்கப் புகுந்து, முதற்கண் வைத்த எழுத்தியலின் எழுத்தினதெண்ணினை

நிறுத்தமுறையா னுணர்த்துவான்றொடங்கி, எழுத்தின்னதென்ப தூஉம் அதன் வகையுமுணர்-ற்று.

**இ - ள்.** மொழிக்கு முதற்காரணமாய் அணுத்திரளின் காரியமாய் வரும் ஒலியாவது எழுத்து; அது முதலெழுத் தென்றுஞ் சார்பெழுத்தென்றும் இருவகையினையுடைத்து. எ - று.

எனவே, மொழிக்கு முதற்காரணம் எழுத்தானாற்போல, எழுத்திற்கு முதற்காரணம் அணுத்திரளென்பது பெற்றாம்.

ஆமென்னும் பெயரெச்சம் ஒலியென்னும் பெயரோடு முடிந்தது.

முற்கு வீளை முதலியவற்றிற்கு முதற்காரணமாய் அணுத்திரளின் காரியமாய் வரும் ஒலி எழுத்தாகாமையின், மொழிமுதற் காரணமாமொலியென்றாக. சிதலது நீர்வாய்ச் சிறுதுகளாற் பெரும் புற்றுரு வமைந்த பெற்றிய தென்ன வைம்புலப் பேருரு வைந்து மைந்தணுவா லிம்பரிற் சமைவதியாவரு மறிதலின், அநாதி காரணமாகிய மாயையினை ஈண்டுக் கூறாது, ஆதிகாரண மாகிய செவிப் புலனாமணுத்திரளை எழுத்திற்கு முதற்காரண மென்றார். இவ்வாசிரியர்க்கு மாயை உடன்பாடன்று. அணுத் திரளொன்றுமே துணிவெனிற் பிறிதொடுபடாஅன் தன்மதங் கொளலென்னும் மதம் படக் கூறினாரென்றுணர்க. ஈண்டு அணு வென்றது ஒலியினது நுட்பத்தை. (3)

## முதல் எழுத்து.

59. உயிரு முடம்புமா முப்பது முதலே.

**எ - னின்.** முதலெழுத்தின் விரியுணர்-ற்று.

**இ - ள்.** உயிரும் உடம்புமாகும் முப்பதெழுத்தும் முதலெழுத்தாம். எ - று. (4)

## சார்பெழுத்து.

60. உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள
பஃகிய இ உ ஊ ஔ மஃகான்
தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்.



**எ - னின்.** சார்பெழுத்தின் விரியுணர்-ற்று.

**இ - ள்.** இப்பத்துஞ் சார்பெழுத்தாம். எ - று.

அஃகுதல் சுருங்குதல், தனிநிலை ஆய்தம்.

உயிர்களோடும் மெய்களோடுங் கூடியும் கூடாதும் அலி போலத் தனி நிற்றலிற்றனிநிலை யெனப்படும்.

உயிர்மெய் உயிரு மெய்யுங் கூடிப் பிறத்தலானும், ஆய்தம் உயிர்போல "அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு—பெற்றா னெடிதுய்க்கு மாறு" என அலகுபெற்றும், மெய்போலத் "தோன் றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்—தோன்றலிற் றோன்றாமை நன்று" என அலகு பெறாதும், ஒருபுடையொத்து, அவற்றி னிடையே சார்ந்து வருதலானும், ஏனைய தத்தமுதலெழுத்தின் றிரிபு விகாரத்தாற் பிறத்தலானும், சார்பெழுத்தாயினவெனக் கொள்க. அவ்வாறன்றி, உயிர்மெய்யொழிந்தன, அகரமுதலியன போல் தனித்தானும், ககரமுதலியன போல அகரமொடு சிவணி யானும், இயங்குமியல்பின்றி, ஒருமொழியைச் சார்ந்து வருதலே தமக்கிலக்கணமாக வுடைமையாற் சார்பெழுத்தாயினவெனக் கோடலுமாமென்க.

இனி ஆசிரியர் தொல்காப்பியர் செய்கையொன்றனையு நோக்கிச் சார்பெழுத்து மூன்றெனக் கருவி செய்தாராகலின், இவ்வாசிரியர் செய்கையுஞ் செய்யுளியலு நோக்கிச் சார்பெழுத்துப் பத்தெனக் கருவி செய்தாரென்பதும் உய்த்துணர்க. (5)

61. உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுய ராய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறே ழஃகு மிம்முப் பானேழ்
உகர மாறா றைகான் மூன்றே
ஔகா னொன்றே மஃகான் மூன்றே
ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபா னென்ப.

**எ - னின்.** இதுவுமது.

**இ - ள்.** உயிர்மெய் இருநூற்றுப் பதினாறு; குறுகாத ஆய்தம் எட்டு; உயிரளபெடை இருபத்தொன்று; ஒற்றளபெடை நாற்பத்திரண்டு; குற்றியலிகரம் முப்பத்தேழு; குற்றியலுகரம் முப்பத்தாறு; ஐகாரக்குறுக்கம் மூன்று; ஔகாரக் குறுக்கம் ஒன்று; மகரக்குறுக்கம் மூன்று; ஆய்தக் குறுக்கம் இரண்டுடனே சார்பெழுத்தினது மிகுந்தவிரி முந்நூற்றறுபத்தொன்பதாம் என்று சொல்லுவர் புலவர். எ - று.

இவை இத்துணையவாதல் பிறப்பதிகாரத்துட் காண்க.

இவ்வாறு உயிர்மெய்யொழிந்தனவற்றையும் விரித்தல் தொன்னெறியென்பார் என்பவென்றூர்.

---

## 2. பெயர்.

### பெயர்ப் பொது இலக்கணம்.

62. இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.

**எ - னின்.** நிறுத்தமுறையானே எழுத்தின் பெயராமாறுணர்த்துவான் றொடங்கிப், பெயர்க்கெல்லாம் பொதுவிலக்கணமுணர்-ற்று.

**இ - ள்.** இடுகுறிப்பெயருங் காரணப்பெயருமாகிய இரண்டும், பல பொருட்குப் பொதுப்பெயராயும், ஒரு பொருட்குச் சிறப்புப்பெயராயும் வருவனவாம். எ - று.

ஒரு பொருளைக் குறித்தற்குக் கடவுளானும் அறிவுடையோரானும் இட்டகுறியாகிய பெயர் இடுகுறிப்பெயர், காரணத்தான் வரும் பெயர் காரணப்பெயர்,

உதாரணம்: மரமென்பது இடுகுறிப்பொதுப்பெயர். பனையென்பது இடுகுறிச் சிறப்புப்பெயர். அணியென்பது காரணப் பொதுப்பெயர். முடியென்பது காரணச் சிறப்புப்பெயர்.

இனி, இரட்டுறமொழிதலென்னு முத்தியான், இச்சூத்திரத்திற்கு, இடுகுறியென்றுங் காரணமென்றுஞ் சொல்லப்படும் இலக்கணங்களையுடைய பெயர்கள், இடுகுறி காரணமென்னும் இரண்டற்கும் பொதுவாயும், இடுகுறிக்கே சிறப்பாயும், காரணத்திற்கே சிறப்பாயும், வருவனவாம் என்றும், பொருளுரைத்துக்கொள்க.



உ - ம். பரமென்பது இடுகுறிப்பெயர். பரமனென்பது காரணப்பெயர். முக்கணன், அந்தணன், மறவன், முள்ளி, கறங்கு, மொழி, சொல் என்பன காரண விடுகுறிப்பெயர். இவை காரண விடுகுறியாய தென்னையெனின்:—இவற்றுண் முக்கணனென்னும் பெயர், யானைமுகக் கடவுண் முதலியோர்க்கு மூன்று கண்ணுளவாகலிற் காரணங் கருதியவழி மூன்று கண்ணினையுடையோர் பலர்க்குஞ் சேறலானும், காரணங் கருதாதவழி இடுகுறி மாத்திரையேயாய்ப் பரமனுக்கே சேறலானும், காரணவிடுகுறியாயிற்று. ஏனைப்பெயர்கட்கும் இவ்வாறே காண்க.

இவ்வாறே, வடநூலார், இடுகுறியை ரூடியென்றும், காரணத்தை யோகமென்றும், காரணவிடுகுறியை யோகரூடியென்றும் வழங்குப.

இவ்விலக்கணத்தான் எழுத்தினது பெயரும் பிற பெயரும் வருமாறு காண்க. (7)

### எழுத்தின் பெயர்.

63. அம்முத லீரா றாவி கம்முதன்
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.

**எ - னின்.** ஒருசாரெழுத்தினது பெயராமாறுணர்-ற்று.

**இ - ள்.** அகரமுதல் ஔகாரமீறாகக் கிடந்த பன்னிரண்டனையும் ஆவியென்றும், ககரமுத னகரமீறாகக் கிடந்த பதினெட்டனையும் மெய்யென்றும், நூல்களாற் சொன்னார் அறிவுடையோர். எ - று.

கடவுளால் ஆவி மெய்யென்றமைத்த பெயர்க்காரணம் உயிர்களான் முற்றுமுணர்தற்கருமையும், கடவுணூலுணர்ந்தோர்வழிச் செல்லுந் தமது பெருமையுந்தோன்ற, விளம்பினர் புலவரென்றூர்.

ஆவியுமெய்யும் போறலின், இவ்விருவகையெழுத்திற்கும், ஆவிமெய்யென்பன, உவமவாகுபெயராய்க், காரணப் பொதுப் பெயராயின. ஏனையவும் இவ்வாறே காண்க. (8)

### குற்றெழுத்து.

64. அவற்றுள்,
அ இ உ எ ஒக்குறி லைந்தே.

எ - னின். இதுவுமது,

இ - ள். ஆவி மெய்யென்றவற்றுள் இவ்வைந்தும் குற்றெழுத்தாம். எ - று. (9)

### நெட்டெழுத்து.

65. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில்.

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்வேழும் நெட்டெழுத்தாம். எ-று. (10)

### சுட்டெழுத்து.

66. அ இ உம்முதற் றனிவரிற் சுட்டே.

எ - னின். இதுவுமது.

இ - ள். இம்மூன்றெழுத்தும், மொழிக்குப் புறத்தும் அகத்தும் முதற்கட்டனித்துச் சுட்டுப்பொருளுணர்த்த வரின், சுட்டெழுத்தாம். எ - று.

முதலெனப் பொதுப்படக் கூறினமையிற் புறத்தும் அகத்து மென்பது பெற்றாம்,

உ-ம். அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன், எ-ம். அவன், இவன், உவன், எ-ம். வரும்,

அவனென்பதன்கண் அகரம், அறமென்பதன்கண் அகரம் போலப் பின்னெழுத்துக்களோடு தொடர்ந்து நின்று ஒரு பொருளையுணர்த்தாது, மலையனென்பதன்கட் பகுதிபோல வேறு



நின்று சுட்டுப்பொருளுணர்த்தலின், அகத்து வரும் இதனையுந் தனிவரினென்றார். இவ்வுரை வினாவிற்குங் கொள்க. (11)

### வினா எழுத்து.

67. எ யா முதலும் ஆ ஓ வீற்றும்
ஏ யிரு வழியும் வினாவா கும்மே.

எ - னின். இதுவுமது.

இ - ள். புறத்தும் அகத்தும், மொழி முதற்கண் எகரமும் யாவும், ஈற்றின்கண் ஆகாரமும் ஓகாரமும், இவ்விரண்டிடத்தினும் ஏகாரமும், தனித்து வினாப்பொருளுணர்த்த வரின் வினாவெழுத்தாம். எ - று.

மேல் தனிவரினென்றதனை ஈண்டுங் கூட்டுக.

இவை புறத்தும் அகத்தும் வருதல் ஏற்ற பெற்றி கொள்க.

ஒன்றின முடித்தறன்னின முடித்தலென்னு முத்தியான் யாவினாவையும் உடன் கூறினார்.

உ-ம். எக்கொற்றன். எ-ம். எவன். எ-ம். யாவன். எ-ம். முதற்கண் வந்தன. கொற்றனா, கொற்றனோ என ஈற்றின்கண் வந்தன. ஏவன், கொற்றனே என ஈரிடத்தும் வந்தது. ஏனைப் பெயர் வினைகளோடும் ஏற்றபெற்றி யொட்டிக்கொள்க. (12)

### வல்லினம்

68. வல்லினங் க ச ட த ப ற வென வாறே.

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்வாறும் வல்லினமாம். எ - று.

### மெல்லினம்.

69. மெல்லினம் ங ஞ ண ந ம ன வென வாறே.

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்வாறும் மெல்லினமாம். எ - று.

**இடையினம்.**

70. இடையினம் ய ர ல வ ழ ள வென வாறே.

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்வாறும் இடையினமாம். எ - று.

**இனவெழுத்து.**

71. ஐ ஔ இ உச் செறிய முதலெழுத்
திவ்விரண் டோரின மாய்வரன் முறையே.

எ - னின். இதுவுமது.

இ - ள். இனமில்லாத ஐகார ஔகாரங்கள், ஈகார ஊகாரங்கட்கு இனமாகிய இகர உகரங்களைத் தமக்கும் இனமாகப் பொருந்த, முதலெழுத்துக்கள் இவ்விரண்டு ஓரினமாய் வருவதன்முறை; ஆதலால், அவை இனவெழுத்தென்றும் பெயரவாம். எ - று. (16)

**இனமென்ற காரணம்.**

72. தான முயற்சி யளவு பொருள்வடி
வானவொன் றுதியோர் புடையொப்பினமே.

எ - னின். மேலினமென்றதற்குக் காரணமுணர்-ற்று.

இ - ள். தானமுதலியவாய இவற்றுள், ஒன்றுமுதலாக ஒருபுடை யொத்தலால் இனமாம். எ - று.

தானம் உரமுதலியன. முயற்சி இதழ்முயற்சி முதலியன. அளவு மாத்திரை. (பொருள் பாலன் விருத்தனுறுற்போலக் குறிலினது விகாரமே நெடிலாதலின், இரண்டற்கும் பொருள் ஒன்றென்று முதனூலான் நியமிக்கப்பட்ட பொருள். வடிவு ஒலி வடிவு வரிவடிவு. இவற்றுள், ஒன்றும் பலவுமொத்து இனமாய் வருதல் கண்டுகொள்க.



சார்பெழுத்திற்குப் பெயர் கூறுதொழிந்தார், ஆய்தந் தனிநிலையாதலானும், ஏனைச் சார்பெழுத்திற்குச் சுட்டு வினுவென்று விதந்தோதினவையொழிந்த முதலெழுத்தின் பெயரே பெயராய் அடங்குதலானுமென்க.

இச்சூத்திரம் ஏதுவின் முடித்தலென்னுமுத்தி. (17)

---

## 3, முறை.

73. சிறப்பினுமினத்தினுஞ்செறிந்தீண்டம்முதல்
நடத்த றனே முறையா கும்மே.

எ - னின். நிறுத்த முறையானே முறையாமாறுணர்-ற்று.

இ - ள். சிறப்பினும் இனத்தினும் பொருந்தி, இவ்வுலகத்து அகரமுதலாக வழங்குதருனே, எழுத்தினது முறையாம். எ - று.

குறிலினது விகாரமே நெடிலாதலாற் குறின் முன்னிற்றலிற் சிறப்பினென்றும், நெடில் இனமாய்ப் பின்னிற்றலின் இனத்தினென்றும், நாதமாத்திரையாய் எல்லாவெழுத்திற்குங் காரணமாய் முன்னிற்றலின் அம்முதலென்றும், எல்லாவெழுத்திற்கும் வைத்தமுறைக்காரணம்உயிர்களான் முற்றுமுணர்தலாகாமையின் நடத்தருனேயென்றுங் கூறினர்.

அங்ஙனமாயினும், நெடுங்கணக்கினுள் அகரமுதல் னகரவிறுவாய்க் கிடக்கை முறையாதற்குக் காரணமும் ஒருவாறு காட்டுதும்:—

அகரமுதலிய பன்னீருயிருந் தனித்தியங்கும் ஆற்றலுடைமையானும், ககர முதலிய பதினெட்டு மெய்யும் அகரத்தோடுகூடியல்லதியங்கும் ஆற்றலின்மையானும், அச்சிறப்புஞ் சிறப்பின்மையுநோக்கி, உயிர்முன்னும் மெய் பின்னுமாக வைக்கப்பட்டன

இனி, உயிர்களுள், அ இ உ என்பன, முறையே, அங்காந்து கூறுமுயற்சியானும், அவ்வங்காப்போது அண்பல்லடி நாவிளிம்

புறக் கூறுமுயற்சியானும், அவ்வங்காப்போடு இதழ்குவித்துக் கூறு முயற்சியானும் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன. ஆகார ஈகார ஊகாரங்கள், அகர முதலியவற்றிற்கு இனமாதலின், அவற்றைச் சார வைக்கப்பட்டன. இனி, எகரமாவது அகரக்கூறும் இகரக்கூறுந் தம்முளொத்திசைத்து நரமடங்கல் போல் நிற்பதொன்றாகலானும், ஒகரமாவது அகரக்கூறும் உகரக்கூறுந் தம்முளொத்திசைத்து அவ்வாறு நிற்பதொன்றாகலானும், அவை அவற்றின் பின் முறையே வைக்கப்பட்டன. எகார ஓகாரங்கள், இனமாதலின், அவற்றின் பின் முறையே வைக்கப்பட்டன. அகரமும் யகரமும் இகரமுந் தம்முளொத்திசைத்து நிற்பதொன்றாகலின், எகர எகாரங்களின் பின்னர் ஐகாரமும், அகரமும் வகரமும் உகரமுந் தம்முளொத்திசைத்து நிற்பதொன்றாகலின், ஒகர ஓகாரங்களின் பின்னர் ஔகாரமும் வைக்கப்பட்டன. இவ்வாறாதல் பற்றி, எ ஐ ஓ ஔ என்னு நான்கனையும் வடநூலார் சந்தியக்கரமென்பர்; கையடனார் நரமடங்கல்போல என்றுவமையுங் கூறினார். இக்கருத்தே பற்றி, ஆசிரியர் "அம்முனிகரம் யகரமென்றிவை—மெய்திணையொத்திசைக்கு மவ்வோ—டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன" என்றார். இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும். "அகர விகர மைகார மாகும்" "அகர வுகர மௌகார மாகும்" எனக் கூறி, ஐயென்னு நெட்டெழுத்தின் வடிவு புலப்படுத்தற்கு அகர இகரங்களேயன்றி அவற்றிடையே யகரமும் ஒத்திசைக்கு மென்பார் "அகரத்திம்பர் யகரப் புள்ளியு—மையெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" என்றும், 'மெய்பெற' என்ற இலேசானே, ஔவென்னு நெட்டெழுத்தின் வடிவு புலப்படுத்தற்கு அகர உகரங்களேயன்றி அவற்றிடையே வகரமும் ஒத்திசைக்குமென்றும், இம்பர் உம்பரென்றாற் போல்வன காலவகை இடவகைகளான் மயங்குமாகலின், இவற்றின் முதற்கணிற்பதியாதோ இறுதிக்கணிற்பதியாதோவென்னும் ஐயநீக்குதற்கு "இகரமும் யகரமும் மிறுதி விரவும்" என்றுங்கூறினார். மொழிந்தபொருளோடொன்றவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தலென்னு முத்தியான் எகர ஏகாரங்கள் ஒகர ஓகாரங்கள் அவ்வாறாதலுங் கொள்ளவைத்தார். மாபாடியத்துள், ஊகாரத்தின் பின்னின்ற வடவெழுத்து நான்



குயிர்க்கும் இடையே ரகர வகரக்கூறுகள் ஒத்து நிற்குமென்ற ஆசிரியர் பதஞ்சலியார்க்கு, ஐ ஔ வென்புழியும் இடையே யகர வகரக்கூறுகள் விரவி நிற்குமென்பது உடன்பாடாதல் பெற்றாம். எகர முதலியவற்றுள் அகரக்கூறு குறைவும் இகரவுகரக் கூறுகண் மிகுதியுமாமெனவு முணர்க. இதுவும் மாபாடியத்திற் கண்டது. ஈண்டுக் கூறியவாற்றானே, அகரம் உயிரெழுத்துக்களினுங்கலந்து நிற்குமாறறிக.

இனி, மெய்களுள், வலியாரை முன்வைத்து மெலியாரைப் பின்வைத்தன் மரபாகலின், அச்சிறப்பு நோக்கி, வல்லெழுத்துக்கண் முன்னும், அவ்வவற்றிற்கினமொத்த மெல்லெழுத்துக்கள் அவ்வவற்றின் பின்னுமாக, வைக்கப்பட்டன. அவ்விரண்டு நோக்கியல்லது இடைநிகரனவாய் ஒலித்தல் அறியப்படாமையின், அதுபற்றி இடையெழுத்துக்கள் அவ்விருகூற்றிற்கும் பின்வைக்கப்பட்டன. ஒருவாற்றானொத்தலும் ஒருவாற்றான் வேறாதலுமுடைமைபற்றியன்றே இனமென்று வழங்கப்படுவது; அவற்றுள் இடையெழுத்தாறும், இடப்பிறப்பானொத்தலும் முயற்சிப்பிறப்பான் வேறாதலுமுடைமையின், இடைக்கணமென ஓரினமாயின. உயிர்க்கணம், வன்கணம், மென்கணமென்பவற்றிற்கும் இஃதொக்கும்.

இனிக், க ஙக்களும், ச ஞக்களும், ட ணக்களும், த நக்களும், ப மக்களும், அடிநாவண்ணம், இடைநாவண்ணம், நுனிநாவண்ணம், அண்பல்லடி, இதழெனும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலான், அப்பிறப்பிடத்து, முறையே முறையாக வைக்கப்பட்டன. ய ர ல வக்கணான்கும், முறையே, அடியண்ணமும், இடையண்ணமும், அண்பன் முதலும், இதழுமென்னும் இவற்றின் முயற்சியாற் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக, வைக்கப்பட்டன. ழகார றகார னகாரங்கண் மூன்றும், தமிழெழுத்தென்பதறிவித்தற்கு இறுதிக்கண் வைக்கப்பட்டன. அவற்றுளும் ழகாரம், இடையெழுத்தாகலின் அதுபற்றி இடையெழுத்தோடு சார்த்தி, அவற்றிறுதிக்கண் வைக்கப்பட்டது. வடமொழியின், லகரம், ளகரமாகவும் உச்சரிக்கப்படுவதன்றித் தனியே ஓரெழுத்தன்மையின், அச்சிறப்பின்மை பற்றி, இடையெழுத்

தாகிய ளகரம் ழகரத்திற்கும் பின் வைக்கப்பட்டது. இவ்வாறே, உயிருள்ளும் எகர ஒகரங்கள், ஒருவாற்றாற் சிறப்பெழுத்தாயினும், பிராகிருதமொழியிற் பயின்று வருதலானும், சாமவேதமுடையாருள் ஒருசாரார் இசைபற்றிக் குழூஉக்குறிபோலக் கொண்டோதுபவர்களானும், இறுதிக்கண் வையாது, முறைபற்றி ஏகார ஓகாரங்களின் முன் வைக்கப்பட்டன. ஆகையான், முறையாமாறு இவையென உய்த்துணர்ந்துகொள்க.

இவ்வாறு உலகத்தும் பிறப்பொத்தல் பற்றியே இனமென்றுவழங்குபவாகலின், ஈண்டு இனத்தினுமென்றதற்குப் பிறகாரணங்களுமுளவேனும், பெரும்பான்மையும் பிறப்பொத்தலே இனமென்று கொள்க. (18)

---

## 4. பிறப்பு.

### பிறப்பின் பொது இலக்கணம்.

74. நிறையுயிர் முயிற்சியி னுள்வளி துரப்ப
எழுமணுத் திரளுரங் கண்ட முச்சி
மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.

**எ-னின்.** நிறுத்தமுறையானே பிறப்பாமாறுணர்த்துவான் றொடங்கி அதன் பொதுவிதியுணர்-ற்று.

**இ-ள்.** ஒலியெழுத்தாகிய காரியத்திற்கு வேண்டுங் காரணங்களின் ஒருவாற்றானுங் குறைவின்றி நிறைந்த உயிரினது முயற்சியால் உண்ணின்ற வளியெழுப்ப எழுஞ் செவிப்புலனும் அணுத்திரள், உரமுதலிய நான்கிடத்தையும் பொருந்தி, இதழ் முதலிய நான்கின்றொழில்களால் வெவ்வேறெழுத்தாகிய ஒலிகளாய்த் தோன்றுதல், அவற்றின் பிறப்பாம். எ-று.



### முதலெழுத்துகளின் பிறப்பிடம்.

75. அவ்வழி,—
ஆவி யிடைமை யிடமிட றாகும்
மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை.

**எ-னின்.** முதலெழுத்துக்கட்கு இடம் வகுத்துணர்-ற்று.

**இ-ள்.** மேற்கூறிய நெறியாற் பிறக்குங்கால், ஆவி இடையினமென்னும் இருவகை யெழுத்தினது இடம் மிடறாம்; மெல்லினம் மூக்கையிடமாகப் பொருந்தும்; வல்லினம் நெஞ்சையிடமாகப் பெறும். எ-று. (20)

### முதலெழுத்துகளின் முயற்சிப் பிறப்பு.

76. அவற்றுள்,—
முயற்சியுள் அ ஆ வங்காப் புடைய.

**எ-னின்.** முதலெழுத்துட் சிலவற்றிற்கு முயற்சி வகையாற் பிறப்புணர்-ற்று.

**இ-ள்.** மேல் இடம் வகுக்கப்பட்ட முதலெழுத்துக்களுள் அகர ஆகாரங்கள், நால்வகை முயற்சியுள், அண்ணத்தின்றொழிலாகிய அங்காத்தலையுடையவாய்ப் பிறக்கும். எ-று. (21)

77. இ ஈ எ ஏ ஐ அங் காப்போ
டண்பன் முதனா விளிம்புற வருமே.

**எ-னின்.** இதுவுமது.

**இ-ள்.** இவ்வைந்தெழுத்தும், அங்காப்புடனே, அண்பல்லை அடிநாவிளிம்பு பொருந்தப் பிறக்கும். எ-று. (22)

78. உ ஊ ஒ ஓ ஔவிதழ் குவிவே.

**எ-னின்.** இதுவுமது.

இ - ள். இவ்வைங்தெழுத்தும் பிறத்தற்கேதுவாகிய முயற்சி இதழ் குவிவாம். எ - று. (23)

79. க ஙவுஞ் ச ஞவும் ட ணவு முதலிடை
நுனிநா வண்ண முறமுறை வருமே.

எ - னின். இதுவுமது.

இ - ள். கவ்வும் ஙவ்வும் முதனா முதலண்ணத்தையும், சவ்வும் ஞவ்வும் இடைநா இடையண்ணத்தையும், டவ்வும் ணவ்வும் நுனியண்ணத்தையும் பொருந்த, இம்முறையே பிறக்கும். எ - று. (24)

80. அண்பல் லடிநா முடியுறத் த நவரும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். அண்பல்லடியை நாநுனி பொருந்தத், தவ்வும் நவ்வும் பிறக்கும். எ - று. (25)

81. மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். மேலிதழுங் கீழிதழும் பொருந்தப், பவ்வும் மவ்வும் பிறக்கும். எ - று. (26)

82. அடிநா வடியண முறயத் தோன்றும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். அடிநா அடியண்ணத்தைப் பொருந்த, யகரம் பிறக்கும். எ - று. (27)

83 அண்ண நுனிநா வருட ர ழவரும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். அண்ணத்தை நுனிநாத் தடவ, ரவ்வும் ழவ்வும் பிறக்கும். எ - று. (28)



84. அண்பன் முதலு மண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். அண்பன் முதலை நாவிளிம்பு வீங்கியொற்ற லகாரமாகியும், அண்ணத்தை நாவிளிம்பு வீங்கிவருட ளகாரமாகியும், இவ்விரண்டெழுத்தும் பிறக்கும். எ - று. (29)

85. மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே.

எ - னின். இதுவுமது.

இ - ள். மேற்பல்லைக் கீழிதழ் பொருந்த, வகரம் பிறக்கும். எ - று. (30)

86. அண்ண நுனிநா நனியுறிற் ற னவரும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். அண்ணத்தை நுனிநா மிகப்பொருந்திற் றவ்வும் னவ்வும் பிறக்கும். எ - று. (31)

சார்பெழுத்திற்கு இடமும் முயற்சியும்.

87. ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய.

எ - னின். சார்பெழுத்துக்கட்கு இடமுயற்சிவகையாற் பிறப் புணர் - ற்று.

இ - ள். ஆய்தம் பிறத்தற்கு இடந் தலை, முயற்சி அங் காத்தலாம்; ஒழிந்த சார்பெழுத்துக்களும், இடமுயற்சிகள் தம்முதலெழுத்துக்களோடு ஒப்பனவாய்ப் பிறக்கும். எ - று.

சார்பின் சார்பாகிய ஆய்தக்குறுக்கமுந் தன் முதல்போற் பிறக்குமென்பார், எதிரது தழீஇ எனவுமென்றார். (32)

### பிறப்பின் புறனடை,

88. எடுத்தல் படுத்த னலித லுழப்பிற்
றிரிபுந் தத்தமிற் சிறிதுள வாகும்.

எ - னின். மேற்கூறிய பிறப்பிற்கு ஓர்புறனடையுணர் - ற்று.

இ - ள். பலவெழுத்திற்குப் பிறப்பு ஒன்றாகச் சொல்லப் பட்டனவேனும், எடுத்தல் படுத்தல் நலிதலென்னும் எழுத்திற்குரிய ஒலிமுயற்சியான், ஒன்றற்கொன்று பிறப்பு வேறுபாடுகளும், அவ்வவற்றின்கட் சிறிதுசிறிதுளவாம். எ - று. (33)

### உயிர் மெய்.

89. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொ மொற்றுமுன் னாய்வரு முயிர்மெய்.

எ - னின். மேற்பிறப்புணர்த்திய சார்பெழுத்திற்குச், சார்ந்து வருமாறும் ஓர்பிறப்பாதலிற், பிறப்பதிகாரத்துள் அடக்கி யுணர்த்துவான் றொடங்கி, அவற்றுள் உயிர்மெய் வருமாறுணர் - ற்று.

இ - ள். மெய்புள்ளியைவிட்டு, அகரத்தோடு கூடியவழி விட்டவுருவே உருவாகியும், ஒழிந்த உயிர்களோடு கூடியவழி உருவு வேறுபட்டும், தன்மாத்திரைதோன்றாது உயிர் மாத்திரையே மாத்திரையாய்த், தன்வரிவடிவினது விகார வடிவே வடிவாய் உயிர்வடிவையொழித்து, மெய்யுயிரென்னும் பெயராகிய இரண்டிடத்தும் பிறந்த உயிர்மெய்யென்னும் பெயருடனே, ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமாகி வரும் உயிர் மெய்யெழுத்து. எ - று.

ஒழித்தென்றும், ஒற்று முன்னாயென்றும், வந்த சினைவினை, இருவயிற் பெயரொடும் வருமென்னும் முதல்வினையோடு முடிந்தன.



உருவு திரிதல், புள்ளி பெறுவன புள்ளிபெற்றும், மேலுங் கீழும் விலங்கு பெறுவன விலங்கு பெற்றும், கோடு பெறுவன கோடு பெற்றும், புள்ளியுங்கோடும் உடன் பெறுவன உடன் பெற்றும், வருவனவாம். அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாகவெழுதுவர்.

பூதி முதலியவற்றிற்றீட்டிய வரிவடிவும், ஒலி வடிவுபோலப் பயன்றருமொற்றுமை குறித்து, ஈண்டவ்விருதிறனும் விரவிக் கூறினார்.

இவ்விலக்கணத்தான் ஒவ்வொரு மெய்யிற் பன்னீருயிருங் கூடப் பன்னிருபதினெட் டிருநூற்றொருபத்தாறாய் வருமாறு, வழங்கும் வரிவடிவுள்ளும் ஒலிவடிவுள்ளுங் காண்க. (34)

### முற்றாய்தம்.

90. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே

எ - னின். முற்றாய்தம் வருமாறுணர் - ற்று.

இ - ள். புள்ளிவடிவினதாய ஆய்தம், குற்றெழுத்தின் முன்னதாய், உயிரோடு கூடிய வல்லெழுத்தாறன் மேலதாய் வரும். எ - று.

உயிர்வருக்கத்து இறுதிக்கட்டந்த ஆய்தவடிவைப் பிற்காலத்து வேறுபட வரைந்து வழங்குவராதலின், தொல்லை வடிவு தோன்ற ஆய்தப்புள்ளியென்றார்.

(உ - ம். எஃகு, கஃசு, இருபஃது, அஃகடிய, அஃகான், மஃகான் என வரும். தனிக்குறிலென்று வரைந்தோதாமையின், "விலஃஃகி லீங்கிரு ளோட்டுமே மாத—ரிலஃஃகு முத்தினினம்" எனவும் வரும். பிறவுமன்ன.

இச்சூத்திரம், மேற்கோளாதலால், தானெடுத்து மொழித லென்னுமுத்தி.)

வல்லின வகையான் இயல்பாக வந்த ஆய்தமாறனோடு, புணர்ச்சிவிகாரத்தான் வரும் ஆய்தமுஞ் செய்யுள் விகாரத்தான் வரும் ஆய்தமுங்கூடி, எட்டாய் வருமாறு காண்க. (35)

## உயிரளபெடை.

91. இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலை
[நெடில்
அளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே.

எ - னின். உயிரளபெடை வருமாறுணர்-ற்று.

இ - ள். செய்யுட்கண் இசை குன்றின், மொழி முதலினும் இடையினுங் கடையினு நின்ற நெட்டெழுத்தேழும், அவ்விசை நிறைக்கத் தத்தமாத்திரையின் மிக்கொலிக்கும்; அவ்வாறளபெடுத்தன அறிதற்கு, அவற்றின் பின், அவற்றிற்கு இனமாகிய குற்றெழுத்துக்கள் வரிவடிவின்கண் அறிகுறியாய் வரும். எ - று.

உ - ம். "ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோ—டிஇ ரிரையுங்கொண் டிரைப் பள்ளியுட்—டூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றோண்—மேஎ வலைப்பட்ட நம்போ னறுநுதா—லோஒ வுழக்குந் துயர்" எ-ம். "உறூஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்—செறூஅஅய் வாழிய நெஞ்சு" எ-ம். "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு— நல்ல படாஅ பறை." எ-ம். வரும். செறூஅஅய் வாழியென்புழி நான்கு மாத்திரையாயும், ஏனைய மூன்று மாத்திரையாயும், அலகுபெற்றுச், செய்யுளிசை நிறைத்து, மூவிடத்தும் வந்தவாறு காண்க. பிறவுமன்ன.

இனி இசைகெடினென்று பொதுப்படக் கூறினமையால், "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே—யெடுப்பதூஉ மெல்லா மழை" எனக் குறில் நெடிலாய் அளபெழுந்து அலகு பெற்றும் பெறாதும் இன்னிசை நிறைப்ப வருவனவும், "உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்—வரனசைஇ யின்னு முளேன்" என அள்பெழுந்து அலகுபெற்றும் பெறாதுஞ் சொல்லிசை நிறைப்ப வருவனவும், "வீழப் படுவார் கெழீஇயிலர் தாம் வீழ்வார்—வீழப் படாஅ ரெனின்" என்பதனுட் கெழீஇயிலரென அளபெழுந்து அலகு பெறாது சொல்லிசை நிறைப்ப வருவனவுங்கொள்க.



எழுத்துப் பலவாயின ஒலிவேற்றுமையானன்றே, அங்ஙனமாதலின், நெடிலது விகாரமாய் ஓரொலியாய்ப் பிறப்பதே அளபெடையென்பார் நெடிலளபெழுமென்றும், அவற்றவற்றினக் குறில் குறியேயென்றுங் கூறினார். ஆசிரியர் தொல்காப்பியரும், நீரு நீருஞ் சேர்ந்தாற்போல நெட்டெழுத்தோடு குற்றெழுத்தொத்து நின்று நீண்டிசைப்பதே அளபெடையென்பார்; "குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்க—நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே" என்றார். இங்ஙனம் ஒலிபற்றிக் கூறும் வகையால் இருவர்க்குங் கருத்து ஒன்றேயாயினும், குறியேயென்றது, இவ்விரண்டு மேற்கோளில் ஒன்று துணிதலான், ஒருதலைதுணிதலென்னுமுத்தியும் அம்மதமும் பட வந்ததென்க. இப்பெற்றியறியாதார், நெடிலுங் குறிலும் விரலும் விரலுஞ் சேர நின்றாற்போல இணைந்து நின்றளபெடுக்குமெனத், தமக்கு வேண்டியவாறே கூறுப. நெடிலுங் குறிலும் அவ்வாறு நின்றளபெழுமென்றல் பொருந்தாமைக்கு, எழுத்தெடை யென்னாது அளபெடையென்னுங் குறியீடே சான்றாதலறிக. அற்றேல், ஓரெழுத்தினையே இரண்டு மாத்திரையும் ஒருமாத்திரையுமாகப் பிரித்து, அசைத்து, அதனாற் சீர்செய்து, தளையறுத்தல் பொருந்தாதெனின்,—அற்றன்று; எழுத்து வகையானென்னாது, "மாத்திரை வகையாற் றளைதம கெடாநிலை—யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்" எனக் கூறுபவாகலின், எழுத்திற்கு மாத்திரை கோடலும், அசைத்தலும், சீர் செய்தலும், தலையறுத்தலும், ஓசைபற்றியல்லது, எழுத்துப்பற்றியல்ல வென்க.

இதனுட், செப்பலோசை முதலியவோசை குன்றாது நெட்டெழுத்தேழும் மொழி முதலிடை கடைகளினின்று அளபெடுக்குங்கால், ஒளகாரம் மொழியிடை கடைகளின் வரப்பெறாமையின், அவ்விடங்களின் அஃதொழிய நின்று அளபெடுக்கும் அளபெடை பத்தொன்பதோடு, இன்னிசை நிறைப்பவுஞ் சொல்லிசை

நிறைப்பவும் அளபெடுக்கும் அளபெடையிரண்டுங் கூடி, உயிரளபெடை எழுமூன்றாய் வருமாறு காண்க. (36)

## ஒற்றளபெடை.

92. ஙஞண நமன வயலள வாய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே.

எ - னின். ஒற்றளபெடை வருமாறுணர் - ற்று.

**இ - ள்.** செய்யுட்கண் இசை குன்றின், குறிலிணைக் கீழுங் குறிற்கீழுமாய் மொழி யிடையினும் ஈற்றினும் நின்ற இப்பத்தொற்றும், ஆய்தமும், அவ்வோசை நிறைக்கத், தம் மாத்திரையின் மிக்கொலிக்கும்; அவ்வாறளபெடுத்தன அறிதற்கு, அவற்றின் பின் அவ்வெழுத்துக்களே வரிவடிவின்கண் வேறறிகுறியாய் வரும். எ - று.

'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்பதனான் மேல் 'இசைகெடின்' என்பதனை இவ்வளபெடைக்கும் வருவித்துக்கொள்க.

மாத்திரை நிறைத்தற்கன்றி அறிகுறிமாத்திரையாய் வருமென்று கோடற்கு வேறேயென்றார்.

உ - ம். "இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்குக்—கலங்ங்கு நெஞ்சமிலை காண்" எ - ம். "எங்ங் கிறைவனுள னென்பாய் மனனேயா—னெங்ங் கெனத்திரிவா ரின்." எ - ம். "கலங்ங் கொண்ட கண்மார்பர்" "மடங்ங் கலந்த மனனே களத்து—விடங்ங் கலந்தானை வேண்டு" எ-ம். "அங்ங் கனிந்த வருளிடத்தார்க் கன்பு செய்து—நங்ங் களங்கறுப்பா நாம்" எ-ம். ஙகரம், குறிலிணைக் கீழுங் குறிற்கீழும், மொழிக்கிடையினுங் கடையினும், முறையே அளபெழுந்தது. "கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு—பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ—மின்ன் னுழை மருங்குன் மேதகு சாயலா—ளென்ன் பிறமகளா மாறு." என



ணகரமும் னகரமுங், குறிற்கீழ், மொழியீற்றின் அளபெழுந்தன. "எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்—வெஃஃகு வார்க்கில்லை வீடு" என ஆய்தம், குறிற்கீழ், மொழிக்கிடையின் அளபெழுந்தது. பிறவுமன்ன.

ஆய்தம் ஒற்றொடும் ஒருபுடையொத்து வருதலின், ஈண்டுத் தந்துரைத்தார்.

ஙகரம் விதியீறாய் வருதலின் அதனை விலக்காது, ஆய்தம் ஒருமொழிக்கண்ணுந் தொடர்மொழிக்கண்ணும் விதித்த முதலெழுத்துக்கள் இருமருங்கு நின்றெழுப்ப இருசிறகெழுப்ப எழுமுடலதுபோல். இடையெழுந்தொலிப்பதன்றி ஒருவாற்றானும் ஈறாய் வருந் தன்மையதன்றாகலின், அஃகடியமுதலியவற்றின் கட்டிரிந்த ஆய்தம் அஃகான் முதலியவற்றின் கட்டோன்றிய ஆய்தம்போலத் தொடர்மொழிக்கண் இடைநிலையாயதன்றி விதியீறன்றென்று அதனுண்மை துணிந்து, அதனையிறுதிக்கண் விலக்கி, ஒற்றளபெடை நாற்பத்திரண்டென்று மேலுரைத்தவாறு இங்ஙனம் வருதல் காண்க. (37)

## குற்றியலிகரம்.

93. யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்
அசைச்சொன் மியாவி னிகரமுங் குறிய.

எ - னின். குற்றியலிகரம் வருமாறுணர் - ற்று.

**இ - ள்.** யகரம் வருமொழிக்கு முதலாகிவர, நிலைமொழிக்கீறாகி நின்ற குற்றியலுகரந் திரிந்த இகரமும், மியாவென்னும் அசைச்சொல்லின்கண் இகரமும், குற்றியலிகரங்களாம். எ - று.

எனவே, இங்ஙனம் வருமாயின், இவ்வெழுத்தின்றொடர்பாற் குறுகுமென்பது பெற்றாம்.

உ - ம். (நாகியாது, எஃகியாது, வரகியாது, கொக்கியாது, குரங்கியாது, அல்கியாது.) எ-ம். கேண்மியா, சென்மியா. எ-ம். வரும். பிறவுமன்ன.

பொதுப்படக் கூறிய குற்றியலுகர முப்பத்தாறனும், அசைச் சொன்மியாவினுனும், குற்றியலிகரம் முப்பத்தேழாய் வருமாறு காண்க. (38)

## குற்றியலுகரம்.

94. நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடைத்
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே.

எ-னின். இடமும் பற்றுக்கோடுஞ் சார்ந்து குற்றியலுகரம் வருமாறுணர்-ற்று.

இ-ள். தனிநெடிலேழுடனே, ஆய்தமொன்றும், மொழியிடையீறுகளின் வரப்பெறாத ஔகாரமொழித்தொழிந்த உயிர் பதினொன்றும், வல்லெழுத்தாறும், மெல்லெழுத்தாறும், வல்லெழுத்துக்களோடு தொடராத வகரமொழித்தொழிந்த இடையெழுத்தைந்துமாகிய முப்பத்தாறெழுத்தினுள், யாதானுமொன்று ஈற்றுக்கயலெழுத்தாய்த் தொடரப்பட்டு, மொழியிறுதிக்கண் வல்லெழுத்துக்களுள் யாதானுமொன்று பற்றுக்கோடாக, அதனையூர்ந்து வரின், அவ்வுகரந் தன்மாத்திரையிற் குறுகும்: அது தன் மாத்திரையிற் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்குங் காரணம், இவ்வோரெழுத்துத் தொடர்தன் மாத்திரையின் அமையாது, பிறவெழுத்துக்களுள் ஒன்றும் பலவும் மேலே தொடரவும் பெறும். எ-று.

நெடிலை ஒடுக்கொடுத்துப் பிரித்தார், தனிநெடிலாதலின் உயிரென்றது குற்றுயிர் நெட்டுயிர் இரண்டனையும்.

தொடரென்னும் வினைத்தொகை வன்மையூருகரமென்னுஞ் செயப்படுபொருளோடு முடிந்தது.



பிறவென்றது, 'பகாப்பதமேழும் பகுபதமொன்பதும்' என்று வரையறுத்தவற்றின், இங்ஙனம் ஈற்றயலும் ஈறுமாகக்கூறிய இரண்டுமொழித்து, ஒழிந்த எழும் ஐந்துமாய் எழுத்துக்களை.

தொடரவுமென்ற உம்மை இறந்தது தழீஇ நின்றது.

பெறுமேயென்றது தனிநெடிலொழிந்த ஐந்து தொடரும், வன்மையூருகரங் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்கும் மேற்றொடர்தலும் இன்றியமையாமையின்.

உ-ம். (நாகு, எஃகு, வரகு, பலாசு, கொக்கு, குரங்கு, அல்கு எனவரும்; பிறவுமன்ன.)

இனி, இங்ஙனம் பிறமேற்றொடரவும் பெறுமேயெனக் கூறாதொழியின், இவ்வைவகையெழுத்தும் ஈற்றெழுத்துங்கூடியே ஒருமொழியாய் நிற்குமெனவும் பட்டு, அது இது என்றற்றொடக்கத்தனவுங் குற்றியலுகரமாவான் செல்லுமெனவும், ஆய்தமுந் தனிமெய்யும் மொழிக்கு முதலாமெனவும், தனிநெடிலை ஒடுக்கொடுத்து விதக்கவேண்டாவெனவும், ஆசிரியர் தொல்காப்பியர் "நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங் — குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே." எனத் தொகுத்துக் கூறியவாறே கூறாது, எல்லாவெழுத்தையுங் கூறுவார், அவற்றையே ஆய்தமுதல் ஐந்தாக வகுத்துத், தனிநெடிலோடு ஆறாகக், குற்றுகரத்தை அறுவகையான் வழங்குதற்கு இலக்கணந் தோன்றக் கூறினமையின், அவ்வாறு எடுத்தாளுதற்பொருட்டு, எல்லாவெழுத்தையுங் குறியீடாக விதந்த ஆய்தமுதலிய ஐந்தனுள் ஒன்று ஈற்றயலினின்று இறுதி வன்மையூருகரத்தைத் தொடர்தலேயன்றிப் பிற மேற்றொடர்தலுங் குறுகுதற்கேதுவன்றெனவும் பொருள்படுமாறறிக.

இச்சூத்திரப்பொருள் முன்மொழிந்து கோடலென்னுமுத்தி.

இனி, இவ்வாறன் பகுதித் தொடரும் இடமாதலின், இவ்விடவேற்றுமையாற் குற்றியலுகரம் முப்பத்தாறென்று மேற்கூறியவாறே வருமாறு காண்க.

இவ்வாறு கொள்ளாது, ஆசிரியர் ஈற்றயலினின்ற எழுத்தை இடமாகக் கொண்டாற்போல, ஈற்றயலினின்ற அசையை இடமாகக்கொண்டு, அவற்றுள் அது இது முதலிய முற்றுகரத்தை நீக்கு

தற்குக் குற்றெழுத்துத் தனியே வரும் அசையொன்றனையும் ஒழித்து, எனையேழசையினையும் "நெடிலே குறிலிணை குறினெடி லென்றிவை—யொற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்—றேழ்குற் றுகரக் கிடனென மொழிப" எனக் கூறினாருமுள ராலோவெனின்:—அவ்வாறு எழிடமெனக் கோடு மென்பார்க் குப் பிண்ணாக்கு சுண்ணாம்பு பட்டாங்கு விளையாட்டு இறும்பூது முதலியனவும், ஆய்தந் தொடர்ந்தனவும், நெட்டொற்றிறுதி நெடி லிறுதிக் குற்றுகர முதலியனவுங் குற்றொற்றிறுதிக் குற்றுகரமு மாய் அடங்குமேனும், போவது வருவது ஒன்பது முதலியன அடங்காமையறிக. நெடின் முதலாயின ஈற்றயலினிற்றல் வேண்டு மென யாப்புறவின்மையின், முதற்கணிற்பினும் ஈற்றுகரம் அவற் றிறுதியாதல் அமையுமெனக்கொண்டு, போவது முதலியனவும் நெடிலிறுதி முதலியனவாய் அடங்குமென்பார்க்கும், அங்ஙனம் பாகுபடுத்துக் கருவி செய்ததனாற் போதப்பயனின்றென்பதாம். இது பிறர் நூற்குற்றங் காட்டலென்னுமதம்.)

இனி, மொழிந்த பொருளோடொன்றவவ்வயின் மொழியா ததனையு முட்டின்று முடித்தலென்னுமுத்தியான், நுந்தையென்னு "முறைப்பெயர் மருங்கி னொற்றிய நகரமிசை" உகரமூர்ந்து மொழிமுதற்கணிற்பினுங் குற்றியலுகரமாமெனவும், அவ்வுகரம் செக்குக்கணை சுக்குக்கொடு எனப் புணர்மொழி யிடைப்படினுந் தன்னரை மாத்திரையிற் குறுகுமெனவுங் கொள்க. (39)

## ஐகார ஔகார குறுக்கங்கள்.

95. தற்சுட் டளபொழி யைம்மூ வழியும்
ஐயு மௌவு முதலற் றாகும்.

எ-னின். ஐகார ஔகாரக்குறுக்கங்கள் வருமாறுணர்-ற்று.

இ-ள். ஐகாரம், தன்னைக் கருதித் தன்பெயர் கூறு மளவிற் குறுகாது, ஒழிந்த மொழி முதலிடை கடையென் னும் மூன்றிடத்தும், முன்னும் பின்னும் இருமருங்குமாய எழுத்தின்றொடர்பால், தன்மாத்திரையிற் குறுகும். ஔகார மும், தன்பெயர் கூறுமளவிற் குறுகாது, ஒழிந்த மொழி



முதற்கட் பின் வருமெழுத்தின் றொடர்பாற் றன்மாத்திரை யிற் குறுகும். எ-று.

சுட்டளபென்பது வினைத்தொகை.

அளபென்றார், எழுத்தின் சாரியை தொடரினுங் குறுகுமென் பது கருதி. எனவே, ஓரெழுத்தொரு மொழியாய், நிலைமொழி வரு மொழியாய்த் தொடராது, தனித்து ஒரோவிடங்களின் வரின், தன்மாத்திரை குறுகாதென்பதூஉம் பெற்றாம்.

உ-ம். ஐப்பசி, மைப்புறம். எ-ம். வலையன். எ-ம். குவளை எ-ம். மௌவல். எ-ம். வரும்.

இனி "அளபெடை தனியிரண் டல்வழி யையௌ—வுளதா மொன்றரை தனிமையு மாகும்" எனக் கூறினாருமுளராலோ வெனின்;—தன்னியல்பாய இரண்டு மாத்திரையினின்றுங் குறு குதலில்லனவற்றை ஒழிப்பார் விகாரத்தான் மூன்று மாத்திரை யும் நான்கு மாத்திரையுமாய் மிக்கொலிக்கும் அளபெடையை ஒழிக்க வேண்டாமையின், அது பொருந்தாதென்க. இது மறுத்த லென்னுமதம். எனைய உடன்படல்.

இடவகையான், ஐகாரக்குறுக்கம் மூன்றும், ஔகாரக் குறுக்கம் ஒன்றும் வருமாறு காண்க.

இனி, ஐகாரக்குறுக்கம் மொழிமுதற்கண் ஒன்றரைமாத்திரை யாயும் எனையிடங்களின் ஒரு மாத்திரையாயும், ஔகாரக்குறுக்கம் மொழிமுதற்கண் ஒன்றரை மாத்திரையாயுங் குறுகுமென்பது உய்த்துணர்ந்துகொள்க. அவ்வாறு உய்த்துணர்ந்து கொள்ளாக் கால், "வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்—வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்—வைகலும் வைகற்றம் வாழ் நாண்மேல் வைகுதல்—வைகலை வைத்துணரா தார்." எ-ம். "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்—மெய்வேல் பறியா நகும்." எ-ம். "ஔவிய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்—கேடு நினைக்கப் படும்." எ-ம். வரும் இலக்கியங்கட்கு இலக்கணம் இன்றாய் முடியுமென்க. (40)

### மகரக் குறுக்கம்.

96. ண ன முன்னும் வஃகான் மிசையுமக் குறுகும்.

எ - னின். மகரக்குறுக்கம் வருமாறுணர்-ற்று.

இ - ள். ணகார னகாரங்களின் ஒன்றுநின்று தொடர்ந்திட அதன்முன்வரினும், வகாரம் வந்து தொடர்ந்திட அதன் மேனிற்பினும், மகரந் தன்னரை மாத்திரையிற் குறுகும். எ - று.

உ - ம். "பசுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர்—முசுப்போல முள்காந் திருப்பர்-பசுத்தான்—வெருளினு மெல்லாம் வருளுமஃதன்றி—மருளினு மெல்லா மருண்ம்." எ-ழ். "திசையறி மீகானும் போன்ம்," எ-ம். தரும் வளவன். எ-ம். வரும்.

இனி, ணகர னகரங்களின் முன்வந்த மகரஞ் செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றீற்ற தென்பதூஉம், அவ்வீற்றயலுகரங் கெட அவ்வுகர மூர்ந்த ளகர லகரங்கள் ஈற்று மகரத்தோடு மயங்காமையின் மயங்குதற்குரிய ணகர னகரமாய்த் திரிந்தன ஈண்டு நின்ற ணகர னகரமென்பதூஉம், இவற்றுள் ஒன்றுடன் ஈரொற்றாய் மயங்கின் மகரங் குறுகுமென்பதூஉம், இவற்றின் முன் குறுகுதல் செய்யுட்கண்ணதென்பதூஉம், காணும் கூனும் என இயல்பாக நின்ற ணகர னகரங்கண் முன் இவ்வாறு வந்து மகரங் குறுகாதென்பதூஉம், பிறவும் மேல் வருஞ்சூத்திரங்களெல்லாவற்றையும் வேண்டிப் பருந்தின் வீழ்வாய் நின்ற இச்சூத்திரத்து உய்த்துணர்ந்து கொள்க. இஃது உய்த்துணர வைப்பென்னுமுத்தி. (41)

### ஆய்தக்குறுக்கம்.

97. ல ள வீற் றியைபி னாய்த மஃகும்.

எ - னின். ஆய்தக்குறுக்கம் வருமாறுணர்-ற்று.

இ - ள். லகார ளகாரவீற்றுப் புணர்ச்சியினால் வரும், 'குறில்வழி லளத்தவ் வணையி னாய்த—மாகவும் பெறூஉம்' என்ற ஆய்தம், இருமருங்குமாய எழுத்தின்றொடர்பால் தன்னரை மாத்திரையிற் குறுகும். எ - று.



உ - ம். கஃறீது, முஃடீது என வரும்.

இது முடிவிடங் கூறலென்னுமுத்தி.

இவ்வாய்தங் குறுகாதெனக் காண்டல் விரோதங் கூறுவாருமுளர். (42)

---

## 5. உருவம்.

### எழுத்துக்களின் மாத்திரை.

98. தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்து மெகர வொகரமெய் புள்ளி.

எ - னின். நிறுத்த முறையானே உருவமாமாறுணர்-ற்று.

இ - ள். எல்லாவெழுத்தும் பலவேறு வகைப்பட வரைந்து வழங்கும் பழைய வடிவினையுடையவாம்; அவ்வடிவினவாய் வழங்குமிடத்துத், தனித்தும் உடம்பூர்ந்தும் வரும் எகரவொகரமுந் தனிமெய்களும், இயல்பாய புள்ளியைப் பிற்காலத்து ஒழித்து விரைந்து ஏகாரவோகாரங்களோடும் உயிர்மெய்களோடும் ஐயப்பட வழங்கும் வழக்கினையுடையவன்றித், துணியப்படுந் தொல்லை வடிவினது உறுப்பாய புள்ளியைப் பெறும். எ - று.

வரலாறு. எ் எ, ஒ் ஒ, கெ் கெ, கொ் கொ, க் க என வரும். பிறவுமன்ன. (43)

---

## 6. மாத்திரை.

99. மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே
குறிலோ டையெளக் குறுக்க மொற்றள
பரையொற் றிஉக் குறுக்க மாய்தங்
கால்குறண் மஃகா னாய்த மாத்திரை.

எ - னின். நிறுத்தமுறையானே மாத்திரையாமாறுணர்-ற்று.

இ - ள். உயிரளபெடைக்கு மாத்திரை மூன்றும்; நெடிலுக்கு மாத்திரை இரண்டாம்; குறிலுக்கும் ஐகாரக் குறுக்கத்திற்கும் ஔகாரக்குறுக்கத்திற்கும் ஒற்றளபெடைக்குந் தனித்தனி மாத்திரை ஒன்றும்; ஒற்றிற்குங் குற்றியலிகரத்திற்குங் குற்றியலுகரத்திற்கும் ஆய்தத்திற்கும் தனித்தனி மாத்திரை அரையாம்; மகரக்குறுக்கத்திற்கும் ஆய்தக்குறுக்கத்திற்குந் தனித்தனி மாத்திரை காலாம். எ - று.

உயிர்மெய்க்கு அளவு கூறுதொழிந்தார், மேல் 'உயிரளவாய்' என்றுரைத்தலின். இஃதுரைத்தாமென்னுமுத்தி.

உயிரளபெடை நான்குமாத்திரையவாதலும், ஐகாரஔகாரக் குறுக்கங்கள் ஒன்றரை மாத்திரையாதலும், ஆரிடத்துள்ளும் அவை போல்வனவற்றுள்ளும் அருகிவந்து செய்யுள் வழுவமைதியாய் முடிதலின், அவற்றையொழித்து, எல்லார்க்குமொப்ப முடிந்து பயின்று வருவன மூன்று மாத்திரையும் ஒருமாத்திரையுமேயாகலின், மூன்றுயிரளபென்றும் ஒன்றே குறிலோடையெனக் குறுக்கமென்றுங் கூறினர்.

குற்றியலுகரம் புணர்மொழியிடைப்படிற் குறுகிக் கான்மாத்திரைபெறுதல், உரையிற்கோடலென்பதனாற் கொள்க. (44)

### மாத்திரை அளவு.

**100.** இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை.

எ - னின். எழுத்தொலியெழுச்சி பலவற்றையும் அளந்து கோடற்குக் கூறிய ஒருமாத்திரை யென்னுங் காலசங்கையினையுணர்-ற்று.

இ - ள். மாந்தருடைய இயல்பாக எழும் இமைப்பொழுதும், நொடிப்பொழுதும், ஒரு மாத்திரையென்னும் வரையறைப் பொழுதாம். எ - று.



இமையென்றது இமைத்தலை. நொடியென்றது நொடித்தலை. இவை யிரண்டும், ஆகுபெயராய்க், காலத்தையுணர்த்தி நின்றன.

இயல்பெழுமென்னும் பெயரெச்சம், இமை நொடியென்னும் பெயர்களோடு முடிந்தது.

எழுத்தொலி முதலியவற்றை இயல்பு கெடுத்து ஒருவன் வேண்டியவாறே எழுப்பினும் அவ்வாறெழாநிற்கும், இமையும் நொடியும் இயல்பு கெடுத்து எழுப்பவேண்டினும் அவ்வாறெழாது இயல்பாகவே எழாநிற்குமாதலின் இயல்பெழுமெனவும், மேலைச் சூத்திரத்து எழுத்தொலிகளை வேண்டியவாறே எழுப்பாது இவ்வளவான் அளந்தெழுப்புகவெனவுங் கூறினர்.

பின்னது நிறுத்தவென்னு முத்தியான், இவ்வளவுகருவி பிற்கூறப்பட்டது.

### மாத்திரைக்குப் புறனடை.

**101.** ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலும்
மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின்.

எ - னின். தவளைப்பாய்த்தாய் ஒன்றிடையிட்டு நின்ற மேவதற்கோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். முதல் சார்பனைத்துமாய ஆவியுமொற்றும், மேற்கூறிய அளவிறந்து மிக்கொலித்தலையும் பொருந்தும், இசைவிளிபண்டமாற்று முதலியவற்றின்கண். எ - று.

ஆதியென்றமையான், நாவல் குறிப்பிசை முறையீடு புலம்பலுங் கொள்க.

இசையின் அளவிறந்திசைக்குங்கால், ஆவி பன்னிரண்டு மாத்திரையீறாகவும், ஒற்று பதினொரு மாத்திரையீறாகவும்; இசைக்குமென்றூர் இசைநூலார் (இது பிற நூன்முடிந்தது தானுடன்படுதலென்னுமுத்தி.) ஏனையவற்றின் அளவிறந்திசைக்குங்கால், உலகநடை பிறழாதிசைப்பதே வரையறையென்க.

நாவலென்பது நெற்போர் தெழிக்கும் பகட்டினங்களைத் துரப்பதோர் சொல். "காவலுழவர் கடுங்களத்துப் போரேறி—நாவலோ ஒஒஒ வென்றிசைக்கு நாளோதை - மாவலவன்—கொல் யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே—நல்யானைக் கோக்கிள்ளி நாடு" என்பதனுலறிக. "கஃஃஃஃறென்னுங் கல்லதரத்தம்" "கஃஃஃறென்னுந் தண்டோட்டுப்பெண்ணை" என்பன குறிப்பிசை. ஏனைய பொருடோன்றிக் கிடத்தலின், அளவிறந்திசைத்தல் வந்தவழிக் காண்க. (46)

---

## 7. முதனிலை.

### பொதுவிதி.

102. பன்னீ ருயிருங் க ச த ந ப ம வ ய
ஞ ங வீ ரைந்துயிர் மெய்யு மொழிமுதல்.

எ - னின். நிறுத்த முறையானே மொழிக்கு முதலாமாறுணர்-ற்று.

இ - ள். பன்னிரண்டுயிரும், உயிரூர்ந்த இப்பத்து மெய்யும், மொழிக்கு முதலாம். எ - று.

உ-ம். அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடு, ஏடு, ஐயம், ஒதி, ஓதி, ஔவியம். எ - ம். களி, சவடி, தளிர், நலம், படை, மலே, வளம், யவனர், ஞமலி, அங்ஙனம். எ - ம். வரும். பிறவுமன்ன.

உயிர்போற்றனித்து முதலாந்தன்மைய வல்லவாதலின், உயிர் மெய் என்ருர். இஃதின்னதல்லதிதுவென மொழிதலென்னு முத்தி. (47)

### சிறப்பு விதி.

103. உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல்

எ - னின். பொதுவிதியுட் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். இந்நான்குமல்லாத, எட்டுயிரோடும் லகரம் மொழிக்கு முதலாம். எ - று.



உ - ம். வளி, வாளி, விளி, வீளி, வெளி, வேளை, வைகல், வௌவு என வரும். (48)

104. அ ஆ உ ஊ ஓ ஔ யம்முதல்

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்வாறுயிரோடும் யகரம் மொழிக்கு முதலாம். எ - று.

உ - ம். யவனர், யானை, யுகம், யூகி, யோகம், யௌவனம் எனவரும்.

மேலையொடுவை வருவித்துக் கொள்க. (49)

105. அ ஆ எ ஒவ்வோ டாகு ஞம்முதல்

எ - னின். இதுவுமது.

இ - ள். இந்நான்குயிரோடும் ஞகரம் மொழிக்கு முதலாம். எ - று.

உ-ம். ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று என வரும்.()

106. சுட்டியா வெகர வினவழி யவ்வை
ஒட்டி ஙவ்வு முதலா கும்மே.

எ - னின். இதுவுமது.

இ - ள். மூன்று சுட்டும் யாவினுவும் எகர வினவுமாய இடைச்சொற்களின் பின் அகரத்தை யொட்டி ஙவ்வும் மொழிக்கு முதலாம். எ - று.

உ - ம். அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம், எங்ஙனம் என வரும். இவற்றை அங்கு எங்கு என்ருற்போல ஒருமொழிகளென்ரு லென்னையெனின்:—அஞ்ஞான்று எஞ்ஞான்று என்பனபோலப் பிளவுபட்டு இடையே மெல்லொற்று மிக்கு வருதலிற் ருெடர்மொழிகளேயாமென்க.

ஙனமென்பது, இடத்தினையுந் தன்மையினையும் உணர்த்தும் பலபொருளொரு சொல்லாய்வரினும், தனித்து வருந் தன்மைய

தன்றி, முடவன் கோலூன்றி வந்தாற்போலச் சுட்டு வினாவாகிய இடைச்சொற்களை முன்னிட்டு வருதலான், வழியென்றும், ஏனைய மெய்கள்போல முதலாகாமையின் அவ்வோடென்னாது ஒட்டியென்றும், ஒருவாற்றான் முதலாதலின் இழிவு சிறப்பாக நவ்வுமென்றுங் கூறினார். இங்ஙனங் கூறலான், ஙகரம் மொழிக்கு முதலாகா தென்பார்க்கு உடன்படலும் மறுத்தலுமாய்ப் பிறர்தம்மத மேற்கொண்டுகளைவே யென்னும் மதம்படக் கூறினாரென்றுணர்க.

இனி முதலாமென்ற பத்துயிர்மெய்யுள் வகரமுதலிய நான்கினையும் விதந்து கூறவே, ஒழிந்த ஆறு மெய்யும் பன்னிரண்டுயிரோடு முதலாமென்பது அருத்தாபத்தியாற் பெற்றாம்.

இனி "சகரக் கிளவியு மவற்றோ ரற்றே—அ ஐ ஔவெனு மூன்றலங் கடையே" என்பது முதலாக இன்னோரன்ன சிலவெழுத்துக்களை மொழிக்கு முதலாகாவென ஆசிரியர் தொல்காப்பியர் விலக்கினாராலோவெனின்;— இவ்வட மொழிகளுந் திசைச்சொற்களும் அக்காலத்து இவ்வாறு தமிழின்கட் பயின்று வாராமைபற்றி யென்க. (51)

---

## 8. இறுதி நிலை.

107. ஆவி ஞண நமன யரலவ ழளமெய்
சாயு முகரநா லாறு மீறே.

எ - னின். நிறுத்த முறையானே மொழிக்கீறாமாறுணர்-ற்று.

இ - ள். தனித்தும் ஒற்றோடும் வரும் ஆவி முதலாக இங்ஙனங்கூறிய இருபத்து நான்கெழுத்தும் மொழிக்கீறாம். எ - று.

உ - ம். ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. எ-ம். சுட்டும் வினாவும் உவமவுருபடியுமாய ஓரெழுத்தொருமொழியாம் இடைச்சொல்லாகிய அ, இ, உ, எ, ஒ. எ-ம். விள, பலா, கரி, குரீஇ, கடு, மரூஉ, சே, தை, கோ. எ-ம். உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வாள், அஃகு எ - ம். வரும். காட்டாதொழிந்தன வருஞ் சூத்திரத்தாற் காண்க.



குற்றுகரமும் உயிராய் அடங்குமேனும், புணர்ச்சி வேறுபாடு தோன்ற வேறெடுத்தோதினாரென்க. (52)

### சிலவற்றிற்குச் சிறப்புவிதி

108. குற்றுயி ரளபி னீறா மெகர
மெய்யொடே லாதொந் நவ்வொ டாமௌக்
ககர வகரமோ டாகு மென்ப.

எ - னின். குற்றுயிர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் எகரத்திற்கு எய்தியதொருமருங்கு விலக்கலும் ஒகரத்திற்கும் ஔகாரத்திற்கும் எய்தியவற்றுட் சிறப்புவிதியும் உணர்-ற்று.

இ - ள். குற்றுயிர் அளபெடையின்கண் ஒலிவடிவின் ஈறாம்; எகரம் மெய்யோடு ஈறாகாது; ஒகரம் நகரமொன்றுடன் ஈறாம்; ஔகாரங் ககரவகரங்களிரண்டுடனும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம். "ஆஅவளியவலன்" எ - ம். நொ. எ - ம். கௌ, வௌ. எ - ம். வரும்.

நெடில் அளபெடுப்புழி நெட்டெழுத்துத் தனியே வந்த நேரசை குற்றெழுத்துத் தனியே வந்த நேரசை என்று கொள்ள நிற்றலிற் குற்றுயிரளபினீறாமென்றார்.

எகர ஒகர ஔகாரங்களை விதந்தோதவே, ஏனையுயிர்கள் தமக்கேற்ற மெய்களோடு ஈறாமென்பது பெற்றாம்.

முதலுஞ் சார்புமாய் வகுத்து விரித்துக்கொண்ட எல்லாவெழுத்தும் உயிரும் மெய்யும் ஆய்தமுமாய் அடங்கலின், முதலுமீறுமாகாத ஆய்தத்தையொழித்து, ஒழிந்த உயிர்மெய்யுமாய இரண்டனையும் உயிர்முதல் மெய்ம்முதல் உயிரீறு மெய்யீறெனவகுத்துக்கொண்டார், மேல் வரும் புணர்ச்சிவிதி அடங்குதற்பொருட்டெனக் கொள்க.

### முதலும் ஈறும்.

109. நின்றநெறி யேயுயிர் மெய்முத லீறே

ஏ - னின். எழுத்தினது முதலும் ஈறுமாமாறுணர்-ற்று.

இ - ள். உயிர்மெய்யினது முதல் யாது அதனீறியா தெனின், ஒற்று முன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்து நின்ற நெறியே, மெய் அதன்முதலாம், உயிர் அதனீறாம். எ - று.

எனவே, உயிரும் ஒற்றும் ஆய்தமுதலிய ஒன்பது சார்பெழுத்துக்களும் ஓரேழுத்தாகலின், அவற்றிற்கு முதலும் ஈறும் அவையேயாமென்பது அருத்தாபத்தியாற் கூறினார். இஃது எஞ்சிய சொல்லினெய்தக்கூறலென்னுமுத்தி இத்தொடக்கத்தனவல்லன, சொல்லின் முடிவினப்பொருண் முடித்தலென்னுமுத்தி.

முன்னர் மொழிக்கு முதலீறென்றவற்றுள்ளும், பின்னர் இடைநிலை போலி பதம் புணர்பென்பவற்றுள்ளும், உயிர்மெய்யைப் பிரித்துத் தனிமெய்யும் தனியுயிரும் போல வைத்து இலக்கணங் கூறலின், மொழிக்கு முதலுமீறுங் கூறுதலன்றி எழுத்திற்கு முதலுமீறுங் கூறினாரென்றுணர்க. இச்சூத்திரஞ் சிங்கநோக்கம். அற்றன்றி, ஆற்றொழுக்காய், முன்னின்ற மொழி முதலீறுரைக்குஞ் சூத்திரங்களையே தொடர்ந்து வந்ததென்பாருமுளர். பின் 'நம் முன் கவ்வாம்' என்றும், 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர் முன் க ச த ப மிகும் என்றும், உயிர்மெய்யின் உயிரையும் மெய்யையும் வேறுபிரித்தோதுவது இலக்கணமன்றாய் முடியுமாதலின், அது பொருந்தாதென்க.

எண்ணதிகாரத்துள் உயிர்மெய்யை ஒரெழுத்தாக எண்ணினார், ஈண்டு இரண்டாக வைத்து இலக்கணங் கூறுவதென்னையெனின்:—அப்பொடு பெய்த உப்பே போல, உயிரொடு புணர்ந்தியமெய், தன்னளவு தோன்றாது ஒன்றாய் நிற்றலின் ஒன்றுமாய், ஒற்று முன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்து நின்ற நெறியான் இரண்டுமாய், நிற்றலினென்றுணர்க. இவ்வாற்றான், உயிர்மெய் யென்னுஞ் சொல், மாத்திரைவகையான் உம்மைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகவும், ஒலிவகையான் உம்மைத்தொகையாகவுங் கொள்ளப்படும். (54)

---



## 9. இடைநிலை மயக்கம்.

110. க ச த ப மொழித்த வீரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்
டாகுமிவ் விருபான் மயக்கு மொழியிடை
மேவு முயிர்மெய் மயக்கள வின்றே.

ஏ - னின். நிறுத்தமுறையானே மொழிக்கிடைநிலையாமாறுணர்த்துங்கால், உயிருடன் உயிர் மயங்கலும், மெய்யுடன் மெய் மயங்கலும், இவ்விரண்டும் மாறி மயங்கலுமென மூன்றாக வகுக்கப்படும்; இவற்றுள், உயிருடன் உயிர்மயங்குந் தன்மையின்மையின் அதனையொழித்து, ஏனையிரண்டனையுமுணர்-ற்று.

இ - ள். மெய் பதினெட்டுள், க ச த ப வென்னும் நான்கையுமொழித்த பதினான்கு மெய்யும் பிறமெய்களோடு கூடுங்கூட்டம் வேற்றுநிலைமெய் மயக்கமாம்; ரகார ழகாரமென்னும் இரண்டனையுமொழித்து ஒழிந்த பதினாறு மெய்யுந் தம்மொடு கூடுங் கூட்டம் உடனிலைமெய் மயக்கமாம். இவ்விரண்டு பகுதி மயக்கமும் மொழிக்கிடையே வரும். இவ்வாறு மெய்யுடன் மெய் மயங்குதலன்றி, உயிருடன் மெய்யும், மெய்யுடன் உயிரும் மாறி, உயிரு மெய்யும் மயங்கு மயக்கத்திற்கு வரையறையின்று; வேண்டியவாறே மயங்கும். எ - று.

கூட்டமெனினும் மயக்கமெனினுமொக்கும்.

உடனிலையென்பதனாற் பிறமெய்யென்பது பெற்றாம்.

மொழியென்றது ஒருமொழி தொடர்மொழியென்னும் இரண்டனையும்.

உயிருமெய்யு மயங்குதற்கு இடம் விதந்து கூறாது பொதுப்படக் கூறினார், மொழியினும் உயிர்மெய்யென்னும் ஓரெழுத்தினும் வருதலின்.

இச்சூத்திரத்தான், மெய்யுடன் மெய் மயங்குங்கால், க ச த ப வென்னு நான்குந் தம்மொடு தாமே மயங்குமெனவும், ர ழ வென்னுமிரண்டுந் தம்மொடு பிறவே மயங்குமெனவும், ஒழிந்த பன்னிரண்டு மெய்யுந் தம்மொடு தாமும் பிறவுமயங்குமெனவும் பெற்ரும்.

உயிருமெய்யும் மயங்குதற்கு உதாரணம். அல், வில். எ-ம். கா. எ-ம். மொழிக்கண் மயங்கின. க என எழுத்தின்கண் மயங்கின. மெய்யுடன் மெய் மயங்குதற்கு உதாரணம் மேல் வருஞ் சிறப்புச்சூத்திரங்களிற் காண்க.

இவ்விடைநிலையை ஒருமொழி தொடர்மொழியென்னும் இரண்டினுங்கொள்ளாது ஒருமொழிக்கேயெனக் கொள்வாருமுளர். எவ்விடத்துவரினும் இரண்டெழுத்து இணங்கிப் பொருந்தும் பொருத்துவாயை இடைநிலையென்ருேதலானும், இணங்காதன வரின் விகாரப்படுதலானும், அது நூற்கருத்தன்றென்க.

இனி, உயிர்மெய் மயக்களவின் றென்பதற்கு, உயிர்மெய் முன் உயிர்மெய் மயங்குதல் வரையறையின்றெனப் பொருள்கூறு வாருமுளர். இங்ஙனம் உயிர்மெய்யை இரண்டெழுத்தாகப் பிரித்து மயக்கவிதி கூறுவார் அதனையே ஒன்ருக வைத்து மயக்க விதி கூருரரதலானும், கூறினும், இடைநிலை மயக்க முழுவதும் இச்சூத்திரத்து அடங்காமையானும், அது பொருந்தாதென்க. ()

## வேற்றுநிலை மெய்ம்மயக்கம்.

111. ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே.

எ - னின். வேற்றநிலை மெய்ம்மயக்கத்துள் விதந்து சிறப்பு விதியுணர்-ற்று.

இ - ள். ஙகர முன்னர்க் ககரமும், வகர முன்னர் யகரமும் மயங்கும். எ - று.

உ - ம். கங்கன், தெவ் யாது என வருும். 56)

112. ஞ நமுன் றம்மினம் யகரமொ டாகும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்விரண்டு மெய்முன்னரும், தமக்கினமாகிய சகர தகரங்களும், யகரமும், மயங்கும்.



உ - ம். கஞ்சன், உரிஞ் யாது, கந்தன், பொருந்யாது என வருும்.

113. ட றமுன் க ச ப மெய்யுடன் மயங்கும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்விரண்டு மெய்முன்னரும், க ச ப வென்னு மூன்று மெய்யும் இணங்கி மயங்கும். எ - று.

உ - ம். கட்கம், கட்சி, நுட்பம், கற்க, கற்சிருர், கற்ப என வருும். (58)

114. ண னமுன் னினங் க ச ஞ ப ம ய வவ்வரும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். இவ்விரண்டு மெய்முன்னரும், தமக்கினமாகிய டறக்களும், க ச ஞ ப ம ய வ என்னும் ஏழு மெய்யும், மயங்கும். எ - று.

உ - ம். விண்டு, வெண்கலம், வெண்சோறு, வெண்ஞமலி, வெண்பல், வெண்மலர், மண்யாது, மண்வலிது. எ-ம். புன்றலை புன்கண், புன்செய், புன்ஞமலி, புன்பயிர், புன்மலர், பொன்யாது, பொன்வலிது. எ - ம். வருும். (59)

115. மம்முன் ப ய வ மயங்கு மென்ப.

எ - னின். இதுவுமது.

இ - ள். மகரமெய் முன்னர்ப் பகர யகர வகரங்கண் மயங்குமென்று சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம். கம்பன், கலம் யாது. கலம் வலிது என வருும். (60)

116. ய ர ழ முன்னர் மொழிமுதன் மெய்வருும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். இம்மூன்று மெய் முன்னரும் மொழிமுதற்கு விதந்துகொண்ட. பத்துமெய்யும் மயங்கும். எ - று.

**உ-ம்.** வேய், வேர், வீழ், கடிது, சிறிது, தீது, பெரிது, நீண்டது, மாண்டது, ஞான்றது, யாது, வலிது. எ-ம். வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு. எ-ம். வரும்.

சுருங்கச் சொல்லலென்னும் வனப்பு வகையான் மொழிமுதன் மெய்யெனக் கூறலின், யகரத்தின் முன் யகரமயங்கும் உடனிலை ஈண்டுக் கொள்ளாதொழிக. (61)

117. ல ள முன் க ச ப வ யவொன் றும்மே.

**எ-னின்,** இதுவுமது.

**இ-ள்.** இவ்விரண்டு மெய்முன்னரும், க ச ப வ ய வென்னும் ஐந்துமெய்யும் மயங்கும். எ-று.

**உ-ம்.** வேல், வாள், கடிது, சிறிது, பெரிது, வலிது, யாது என வரும். (62)

உடல்நிலை மெய்ம்மயக்கம்.

118. ர ழவல்லன தம்முற் றுமுட னிலையும்.

**எ-னின்.** உடனிலை மெய்ம்மயக்கத்தின் சிறப்புவிதி புணர்-ற்று.

**இ-ள்.** ரகார ழகார மல்லனவாகிய வேற்றுநிலை மெய்ம்மயக்கத்துட் கூறிய பன்னிரண்டு மெய்யும், உடனிலைக்கேயுரிய க ச த ப நான்கும், தம்முற்றுமுடனின்று மயங்கும். எ-று.

**உ-ம்.** அங்ஙனம், அவ்வை, அஞ்ஞானம், அந்நீர், அட்டு, அற்றம், அண்ணம், அன்னை, அம்மை, அய்யம், அல்லி, அள்ளல். எ-ம். அக்கு, அச்சு, அத்து, அப்பு. எ-ம். வரும். (63)

119. யரழவொற் றின்முன் க ச த ப ங ஞ ந ம ஈரொற் றும்ரழத் தனிக்குறி லணையா.

**எ-னின்.** தனிமெய்யுடன் தனிமெய்யாயும் மயங்குவன இனைய வென்பதூஉம், மொழிக்குறுப்பாக மயங்காதன இனையவென்பதூஉம் உணர்-ற்று.



**இ-ள்.** ய ர ழ வென்னும் மூன்றொற்றும், இவற்றின் முன் மயங்குமென விதித்த பத்தொற்றுள் இங்ஙனங் கூறிய எட்டொற்றும், தனிமெய்யும் உயிரூர்ந்த மெய்யுமாய் மயங்குவனவன்றி, ஈரொற்றாயும் மயங்குவனவாம். ரகார ழகாரவொற்றும், தனிக்குறிலும், மயங்குந் தன்மையவாயினும், மொழிக்குஉறுப்பாக வருவதும் நிற்பதுமாய் மயங்கா. எ-று.

ஈரொற்று மாமென்னும் உம்மையும், மொழிக்குறுப்பாக் வென்னுஞ் சொற்களும் எஞ்சி நின்றன.

**உ-ம்.** வேய்க்குறை, வேர்க்குறை, வீழ்க்குறை, சிறை, தலை, புறம். எ-ம். வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு. எ-ம். காய்ந்தனம், நேர்ந்தனம், வாழ்ந்தனம். எ-ம். வரும். ஏனைய வந்துழிக் காண்க.

அணையாவென்ற ஆகாதனவற்றிற்கு உதாரணங் காட்டலாகாமையுணர்க. (64)

120. ல ளமெய் திரிந்த ன ணமுன் மகாரம் நைந்தீ ரொற்றுஞ் செய்யு ளுள்ளே.

**எ-னின்.** செய்யுட்குரியவாய் ஈரொற்றுடனிற்பன இனைய வென்பது உணர்-ற்று.

**இ-ள்.** லகார ளகாரவொற்றுத் திரிந்த னகார ணகாரங்கண்முன் வரும் மகரவொற்று, முன்னர்க் கூறியவாறே குறுகி, அவற்றுடன் ஈரொற்றுடனிலையாஞ் செய்யுளகத்து. எ-று.

**உ-ம்.** "திசையறி மீகானும் போன்ம்." எ-ம். "மயிலியன் மாதர் மருண்ம்" எ-ம். வரும்.

மகாரநைந்தென அநுவதித்தார், மகரங் குறுகுதற்குத் தொடரும் னகர ணகரங்கள் லகர ளகரந் திரிந்தனவென்பதூஉம், அக்குறுக்கஞ் செய்யுட்கண்ணதென்பதூஉம் உய்த்துணர்தற்கென்க.

**121.** தம்பெயர் மொழியின் முதலு மயக்கமும்
இம்முறை மாறியு மியலு மென்ப.

**எ - னின்.** மொழி முதலீறிடை நிலைகட்கு ஆவதோர் புறனடையுணர்-ற்று.

**இ - ள்.** எழுத்துக்கள் தம்பெயர்களை மொழிந்து நிலைமொழி வருமொழியாகப் புணர்க்குமிடத்து, எல்லாமொழி முதற்கும், இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லா வெழுத்தும், முதலாம், மயக்கத்திற்கு, இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்தும் மயங்கும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

இங்ஙனம் எல்லாவெழுத்துந் தனித்தனி அதற்கதுவே முதலாக வருமெனவே, ஈற்றிற்கு விதித்தனவும் விலக்கியனவுமாகிய எல்லாவெழுத்துந் தனித்தனி அதற்க·துவே ஈருக வருமெனச் சொல்லாதே அருத்தாபத்தியான் அமைதலின், ஈறுமென மிகைபடக் கூருதொழிந்தார்.

உ - ம். "அவற்றுள், லளஃகான் முன்னர் யவ்வுந் தோன்றும்" என்புழி, லகரம் முதலாகியும், கூனிறுதி ளகரவொற்றோடு மயங்கியும், நின்றது. கெப்பெரிது என்புழி, எகரம் மெய்யோடுருய் நின்றது. பிறவும் வரையறையின்றி வருதல் காண்க.

ஆய்தத்திற்குப் பிறப்பதிகாரத்துள் வருவாய் கூறியவழி மயக்கவிதி அமைந்து கிடந்தமையானும், தன்பெயர் மொழிய வாராமையானும் கூருதொழிந்தார். (66)

---

## 10. போலி.

### இறுதிப் போலி.

**122.** மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே.



**எ - னின்.** நிறுத்த முறையானே போலியாமாறு உணர்த்துவான்ருெடங்கி, மொழியிறுதிப்போலியுணர்-ற்று.

**இ - ள்.** பால்பகாவஃறிணைப்பெயர்களினிடத்து இறுதி மகரம், னகரத்தோடு ஒத்து நடப்பனவுளவாம். எ - று.

மகரவிறுதியென்றதனுல், பால்பகாவஃறிணைப் பெயரென்பது பெற்ரும்.

மகரம் னகரத்தோடொத்தலாவது, பெயரிறுதிக்கண் மகர நின்ற நிலைக்களத்து னகர நிற்பினும் வேற்றுமையின்றியொத்தல்.

உ - ம். "அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து—நல்விருந் தோம்புவா னில்." இதனுள், அகம் அகன், முகம் முகன். எ - ம். தலம் தலன், நிலம் நிலன், கலம் கலன், நலம் நலன், வலம் வலன். எ - ம். வரும். பிறவுமன்ன.

உறழா நடப்பனவுள என்னுஞ் சொல்லாற்றலான், உறழாதன பெரும்பாலவென்க. அவை வட்டம், குட்டம், மாடம், கூடம் முதலாயின.

பால்பகாவஃறிணைப் பெயர்களிடத்து இயல்பாய மகரவிறுதி நிலையின்னகரம் போலியாய் வருமெனவே, அகன் முகன் முதலிய சொற்களைப் பால்பகுத்த ஆடூஉவறிசொல்லெனக் கொள்ளற்க வென்பதூஉம், எகின் பயின் குயின் வயின் முதலிய னகரவீற்றுப் பெயர்க்கு இவ்வையப்பாடில்லை யென்பதூஉம் பெற்ரும்.

இனி, இவ்விறுதிப்போலியை முற்கூறியவதனுல், சுரும்பு சுரும்பர், அரும்பு அரும்பர், சாம்பல் சாம்பர், பந்தல் பந்தர் முதலியனவுங்கொள்க. (67)

### முதல் இடைப் போலிகள்.

**123.** அ ஐ முதலிடை யொக்குஞ் ச ஞ ய முன்.

**எ - னின்.** மொழிமுதற்போலியும் மொழியிடைப்போலியும் உணர்-ற்று.

**இ - ள்.** மொழிமுதலினும், இடையினும், அகர ஐகா ரங்கள் வேற்றுமையின்றி ஒத்து நடப்பனவாம், சகர ஞகர யகரங்கட்கு முன்னர் வருமாயின். எ - று.

ஈண்டு முன்னென்றது கால முன்னெனக் கொள்க.

உ - ம். பசல் பைசல், மஞ்சு மைஞ்சு, மயல் மையல். எ - ம். அமச்சு அமைச்சு, இலஞ்சி இலைஞ்சி, அரயர் அரையர். எ - ம். வரும். பிறவுமன்ன. (68)

**இடைப் போலி.**

124. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகா னுறழு மென்மரு முளரே.

**எ - னின்.** இதுவும் மொழியிடைப்போலியுணர் -ற்று.

**இ - ள்.** மொழியிடைக்கண், சிலவிடத்து, ஐகாரத்தின் பின்னும், யகரவொற்றின் பின்னும், இயல்பாய் வரும் நகரத் தோடு ஞகரம் உறழும் என்று சொல்லுவாருமுளர். எ - று.

இப்போலி அருகி வருதலிற் சில்வழியென்றும், எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததன்றாகலின் என்மருமென்றுங் கூறினர்.

உ - ம். "செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பல வன்—மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்து நிற்க—நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீலமணி மிடற்றான்— கைஞ்ஞின்ற வாடல் கண்டாற் பின்னைக் கண்கொண்டு காண்ப தென்னே." எ - ம். ஐஞ்ஞூறு எ - ம். வரும்.

இச்சூத்திரம் பிறன்கோட் கூறலென்னுமுத்தி.

"மண்யாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே" "மண் ஞாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே." எ - ம். "பொன் யாத்த தாரப் புரவி பரிக்குமே." "பொன்ஞாத்த தாரப்புரவி பரிக்குமே." எ - ம். வருமொழி வினைக்குமுன்னர், யா நின்ற நிலைக்களத்து ஞா நிற்பினும் ஒக்கும் போலிக்கு, ஆசிரியர் தொல்காப்பியர் "ண ன வென்புள்ளிமுன் யாவு ஞாவும்— வினையோரனைய வென்மனார் புலவர்" எனச் சூத்திரஞ் செய்தவாறு, இவ்வாசிரியருஞ் சூத்திரஞ் செய்யாதொழிதல் இறந்தது விலக்கலென்னுமுத்தி. பிறவுமன்ன.



இம்மூன்று சூத்திரத்தானுங் கூறிய போலிகளை இடைநிலை மயக்கத்தின்பாற்படுத்துப் பொருள் கூறுவாருமுளர். இங்ஙனங் கூறிய எழுத்துக்கண் மொழிக்குறுப்பாகி, ஒன்றுநின்ற நிலைக்களத் து மற்றொன்று அதுபோல மொழிநிரப்ப நிற்பதன்றி, ஒன்றோ டொன்று மயங்கி, இரண்டெழுத்தும் உடனிற்பதின்மையானும், முதலீறிடைநிலைகட்குப் புறனடையுங் கூறிக் குறைவறுத்தமையா னும், 'உறழா நடப்பன' என்றும் 'ஒக்கும்' என்றும் 'உறழும்' என் றும் உவமையுருபு கொடுத்து இம்மூன்று சூத்திரத்துங் கூறுதலா னும், அது பொருந்தாதென்க. (69)

---

**சந்தியக்கரம்.**

125. அம்மு னிகரம் யகர மென்றிவை
எய்தி னையொத் திசைக்கு மவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன.

**எ - னின்.** வடநூலார் சந்தியக்கரமென்பவற்றுள் ஐ ஔ என்னு நெட்டெழுத்துக்களின் வடிவு புலப்படுதல் உணர் -ற்று.

**இ - ள்.** அகரத்தின்முன்னர் இகரமும் யகரமுந் தம்மு ளொத்தெய்தின், ஐயென்னு நெட்டெழுத்தொலிக்கும்; அகரத்தோடு உகரமும் வகரமுந் தம்முளொத்து ஒருதன் மையவாக எய்தின், ஔவென்னு நெட்டெழுத்தொலிக்கும். எ - று.

மொழிந்தபொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தலென்னு முத்தியான், அகரக்கூறும் இகரக் கூறுந் தம்முளொத்து எகரமொலிக்கும், அகரக்கூறும் உகரக் கூறுந் தம்முளொத்து ஒகரமொலிக்குமெனவுங் கொள்க.

இனி, இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கொள்ளாது, தமிழ்நூற் பயிற்சியொன்றுமே யுடையார், எழுத்துப்போலியுணர்த்

திற்றென்று பொருள்கொண்டு, அ இ, ஐ; அய், ஐ; கஇ, கை; கய், கை; அஉ, ஔ; அவ், ஔ; கஉ; கௌ, கவ், கௌ. என உதாரணங் காட்டுவர். அவ்வாறு பொருள்கொண்டு உதாரணங் காட்டுமாற்றாற் பெரும்பயனின்மையானும், வடநூலோடு மாறுபடுமாதலானும், அது பொருந்தாதென்க. (70)

---

## எழுத்தின் சாரியைகள்.

126. மெய்க ளகரமு நெட்டுயிர் காரமும்
ஐ யௌக் கானு மிருமைக் குறிலிவ்
விரண்டொடு கரமுமாஞ் சாரியைபெறும்பிற.

எ - னின். மேல் எழுத்திலக்கணங் கூறிய முகத்தாற் போந்த எழுத்தின் சாரியைகளைத் தொகுத்து இனமடைத்தனுதலிற்று.

**இ - ள்.** மெய்கள் அகரச் சாரியையும், நெட்டுயிர்கள் காரச்சாரியையும், அவற்றுள் ஐகார ஔகாரங்கள் காரச் சாரியையுடனே கான் சாரியையும், உயிர்க்குறிலும் உயிர் மெய்க்குறிலும் காரங்கானென்னும் இவ்விரண்டுடனே கரச் சாரியையும் பெறும். எ - று.

மெய்களை முற்கூறினார், அவற்றிற்கு அச்சாரியை இன்றியமையாமையின். மெய்களவ்வுமென்னாது அகரமுமென்றார், அங்ஙனங் கரங் காரங் கான்கள் வரின், சாரியையகரத்தினது சாரியையென்று கோடற்கு. ஆஞ்சாரியை யென்றார், காரமுதலிய சாரியைகளை ஏற்ற பெற்றிகோடற்கு.

**உ - ம்.** க, ங. எ-ம். **ஆகாரம், ஐகாரம், ஔகாரம்.** எ-ம். **ஐகான், ஔகான்.** எ-ம். அகாரம், அஃகான், **அகரம்;** மகாரம், மஃகான், மகரம். எ-ம். வரும். பிறவுமன்ன.

பிறவென்றமையால், குறிலோடு கான் புணருங்கால் இடையே ஆய்தத்தோற்றமும், வழங்கும் பிற சாரியைகளுங் கொள்க.



உயிர்மெய்நெடிலும் ஆய்தமுங் கூறாதொழிந்தார், உயிர்மெய் நெடில் இங்ஙனங் கூறிய மூன்று சாரியையும் ஏலாமையானும், ஆய்தம் பிறவழி வாராமையின் மொழியிடைப்படுத்து அம்மொழி இறுதிக்கட் பிறசாரியை தந்து உயிர்வருக்கத்திறுதிக்கண்ணே வழங்குதலானும் என்க.

விகற்பத்தின் முடித்தலென்னு முத்தியான் மேல் விரிந்து முடிந்து கிடந்தனவற்றைப் புலப்படவேண்டி ஈண்டுத் தொகுத்து முடித்தலான், இச்சூத்திரம் முடிந்தது முடித்தலென்னுமுத்தி. ()

---

## இவ்வியலுக்குப் புறனடை.

127. மொழியாய்த்தொடரினுமுன்னனைத்தெழுத்தே

எ - னின். இவ்வியலுக்கு ஆவதோர் புறனடையுணர்-ற்று.

**இ - ள்.** இவ்வெழுத்துக்கள், பதமாயினும், அப்பதந் தம்மோடும் உருபோடும் புணரினும், அவற்றாற் பிறழாது, முன்னர்க் கூறிய அப்பத்திலக்கணத்தையும் உடையவாம் எ - று.

எழுத்துச்சுண்ணத்தின்கண் அரிசனமுதலியபோலாது மாலையின்கண் மலர்போல் அவற்றினிற்றலின், முன்னனைத்தென்றார்.

எழுத்தென்பது, சாதியொருமையாதலின், அனைத்தென்னும் ஒருமையோடு முடிந்தது.

முன்னனைத்தாதல் பதவியல் முதலிய நான்கியலுள்ளுங் காண்க. (72

எழுத்தியல் முற்றிற்று.

# 2. பதவியல்.

## பதம்.

### பதத்தின் இலக்கணமும் வகையும்.

128. எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற்
பதமா மதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி யியலு மென்ப.

**எ-னின்.** நிறுத்த முறையானே பதத்தினது இலக்கண முணர்த்துவான்றொடங்கி, எழுத்தாற் பதமாதலும் அஃது இத்துணைய வென்பதூஉம் உணர்-ற்று.

**இ-ள்.** எழுத்துக்கடாமே ஒவ்வொன்று தனித்தும் இரண்டு முதலாகத் தொடர்ந்தும் பிறபொருளைத்தருமாயின், அது பதமாம்; அப்பதம், பகாப்பதமெனவும், பகுபத மெனவும், இரண்டு பகுதியவாகி நடக்கும் என்று சொல்லுவர் புலவர். எ-று.

எழுத்தானாய பதம் அரிசனமுதலியவற்றாற் சமைந்த சுண்ணம்போலாது மலராற் சமைத்த மாலைபோனிற்றலின் எழுத்தே யென்றும், ஓரெழுத்தேனும் பிறபொருடருதலிற் பதமாமென் பார் தனித்தென்றும், ஒன்று இரண்டு பலவென்பன வடநூல் வழக்கு. ஒன்றல்லனவெல்லாம் பலவென்பது தமிழ் நடையாக லின் வடநூல் வழக்குப்பற்றி ஆசிரியர் தொல்காப்பியர் "ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி—யிரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட—மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே" எனக் கூறினாரேனும், கல் வில்லென்றற்றொடக்கத்து ஈரெழுத்தொரு மொழிகளும் ஒன்றோடொன்று தொடர்ந்து நின்றே பிறபொருளுணர்த்தலின் இவற்றைத் தொடர்ந்தனவல்ல வெனக் கூறினாரல்ல ரென்பதற்குத் தொடர்மொழியென வாளா கூறாது "இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி" என அடை



கொடுத் தோதியதே சான்றாகலால் தமிழ் நடைபற்றி "ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி—யிரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட — மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே" என்றார்க்கு இரண்டெழுத்துத் தொடர்ந்தனவல்ல வெனின் அதுமொழியுமன்றென்பார் தனிநிலையொழிந்தன வற்றைத் தொடர்ந்தென்றும், இறிஞிமிறிஞியெனின் தொடரு மேனுந்தன்னையுணர்த்துமன்றிப் பிறபொருடாராமையிற் பதமாகா தென்பார் பொருடரினென்றும், "தன்னை யுணர்த்தி னெழுத் தாம் பிறபொருளைச்—சுட்டுதற் கண்ணேயாஞ் சொல்" என்பவா கலிற் பொருளென்றது பிறபொருளென்பார் உணர்த்தினென் னாது தரினென்றும், அணுவென்னும் ஒலிநுட்பத்தான் எழுத்தா னாற்போல் எழுத்தென்னும் ஒலிநுட்பத்தான் மொழியாமென்பார் பதமாமென்றும், இப்பதவியலுக்கு மேற்கோள் ஆரியமென்பார் மொழியென்னாது பதமென்றுங் கூறினார்.

இச்சூத்திரத்துள் 'தொடர்ந்து' மென்றது பிறர்நூற் குற்றங் காட்டலென்னு மதம். (1)

### ஓரெழுத்தொருமொழி.

129. உயிர்மவி லாறுந் தபநவி லைந்துங்
கவசவி னாலும் யவ்வி லொன்றும்
ஆகு நெடினொது வாங்குறி லிரண்டோ
டோரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின.

**எ-னின்.** மேல் எழுத்துத்தனித்துந் தொடர்ந்தும் ஒருமொழி யாமென்றார்; அவற்றுள் ஓரெழுத்தொருமொழி இவையென் பதூஉம் இத்துணைய வென்பதூஉம் உணர்-ற்று.

**இ-ள்.** உயிர்வருக்கத்தும், மவ்வருக்கத்தும் அவ் வாறும், தவ்வருக்கத்தும், பவ்வருக்கத்தும், நவ்வருக்கத்தும் ஐவைந்தும், கவ்வருக்கத்தும், வவ்வருக்கத்தும், சவ்வருக்கத் தும் நந்நான்கும், யவ்வருக்கத்து ஒன்றுமாகும் நெட்டெழுத்தா னாகிய மொழிநாற்பதும், நொவ்வுந் துவ்வுமாகுங் குற்றெழுத் தானாகிய மொழி இரண்டுடனே, ஓரெழுத்தானாகிய மொழி இந்நாற்பத்திரண்டுஞ் சிறப்பினவாம். எ-று.

உ - ம். ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ. எ-ம். மா, மீ, மூ, மே, மை, மோ. எ-ம். தா, தீ, தூ, தே, தை. எ-ம். பா, பூ, பே, பை, போ, எ-ம். நா, நீ, நே, நை, நோ. எ-ம். கா, கூ, கை, கோ. எ-ம். வா, வீ, வை, வௌ. எ-ம். சா, சீ, சே, சோ. எ-ம். யா. எ-ம். நொ, து. எ-ம். வரும். இவற்றுள், ஊ இறைச்சி; ஓ மதகுநீர் தாங்கு பலகை; பே நுரை; நே அன்பு; சோ அரண்; நொ, து என்னும் குறிலிரண்டும், துன்பி, புசி என்னுமேவல்.

இவை சிறப்பினவெனவே, வகரவீற்றுச் சுட்டுப்பெயர்ப் பொருளை ஒப்புமையானுணர்த்தி நிற்றலான் ஔவென்னும் ஓரெழுத்தொருமொழியும், சுட்டு வினா உவமைப்பொருளைத் தரும் இடைச்சொல்லாதலாற் குற்றுயிர் ஐந்தானாய ஓரெழுத்தொரு மொழிகளும், கௌவென்னும் உயிர்மெய்யானாய ஓரெழுத்தொரு மொழியும், இவைபோல்வன பிறவுஞ் சிறப்பில்லனவெனக் கொள்க. (2)

## தொடரெழுத்தொருமொழி.

130. பகாப்பத மேழும் பகுபத மொன்பதும்
எழுத்தீ றாகத் தொடரு மென்ப.

எ - னின். தொடரெழுத்தொருமொழியாமாறுணர்-ற்று.

இ - ள். பகாப்பதம் இரண்டெழுத்துமுதல் ஏழெழுத்தீறாகவும், பகுபதம் இரண்டெழுத்து முதல் ஒன்பதெழுத்தீறாகவும் தொடரும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம். அணி, அறம், அகலம், அருப்பம், தருப்பணம், உத்திரட்டாதி. எ-ம். கூனி, கூனன், குழையன், பொருப்பன், அம்பலவன், அரங்கத்தான், உத்திராடத்தான், உத்திரட்டாதியான். எ-ம். வரும்.

எழுந்திருக்கின்றார், நடத்துவிப்பிக்கிறார், நடத்துவிப்பிக்கின்றார், நடத்துவிப்பிக்கிறார்கள், நடத்துவிப்பிக்கின்றார்கள், நடத்துவிப்பிக்கின்றவர்கள் எனப் பகுதி முதலிய உறுப்பு வேறுபட்டு வருவனவற்றிற்கு இவ்வரையறையில்லையென்க. (3)



## பகாப்பத இலக்கணமும் வகையும்.

131. பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி
முன்னே யொன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை யிடையுரி நான்கும் பகாப்பதம்.

எ - னின். மேற்பதம் பகாப்பதம் பகுபதமென இரண்டு பகுதியவாய் நடக்குமென்றார்; அவற்றுட் பகாப்பதம் இனையவென்பதூஉம் இத்துணையவென்பதூஉம் உணர்-ற்று.

இ - ள். பகுபதம்போலத் தன்னைப் பகுத்துப் பார்க்கின் அப்பகுப்பாற் பகுதி விகுதி முதலிய உறுப்பின் பயன் விளைவதின்றிக், காரணத்தான் வரும் அப்பதம் போலாது இடுகுறியாய்ப், பகுதி விகுதி முதலிய ஆறுறுப்பானும் பின்பு முடிக்கப்படும் அப்பதம் போலாது படைப்புக்காலந் தொட்டு ஒன்றாய் முடிந்து நடக்கின்ற பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொலென்னும் நான்கும் பகாப்பதமாம். எ - று.

பகுபதத்திற்கு மறுதலைப்பட்டதென்பார் இவ்வாறு கூறினார்.

உ - ம். நிலம், நீர், எ-ம். நட, வா. எ-ம். மன், கொல், எ-ம். உறு, கழி. எ-ம். வரும். பிறவுமன்ன. (4)

## பகுபத இலக்கணமும் வகையும்.

132. பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே.

எ - னின். பகுபதம் இனையவென்பதூஉம் இத்துணையவென்பதூஉம் உணர்-ற்று.

இ - ள். இங்ஙனம் கூறிய பொருளாதியாறுங் காரணமாக வரும் பெயர்ச்சொற்களும், தெரிநிலையாயுங் குறிப்பாயுங் காலத்தைக்கொள்ளும் வினைச்சொற்களுமாகிய இரண்டும் பகுபதமாம். எ - று.

பொழுதுகொள் வினை பகுபதமெனவே, அவ்விருவகை வினையாலணையும் பெயரும் பகுபதமாமென்பது அருத்தாபத்தியாற் கூறினரென்க.

உ-ம். பொன்னன், அகத்தன், ஆதிரையான், கண்ணன், கரியன், ஊணன் எனப் பெயர்ப் பகுபதம் வந்தன. நடந்தான், நடக்கின்றான், நடப்பான். எ-ம். நடந்த, நடக்கின்ற, நடக்கும். எ-ம். நடந்து, நடக்க, நடக்கின். எ-ம். நடவான். எ-ம். நடவாத. எ-ம். நடவாமல். எ-ம். தெரிநிலையுடன்பாட்டு வினைமுற்றும் எச்சமும், எதிர்மறை வினைமுற்றும் எச்சமுமாய வினைப்பகுபதங்கள் முறையே வந்தன. பொன்னன், அகத்தன், ஆதிரையான், கண்ணன், கரியன், ஊணன். எ-ம். கரிய, பெரிய, எ-ம். அன்றி; இன்றி. எ-ம். குறிப்புவினைமுற்றும் எச்சமுமாய வினைபகுபதங்கள் வந்தன. நடந்தான் நடந்தவன் எனத் தெரிநிலைவினையாலணையும் பெயர்ப்பகுபதம் வந்தன. பொன்னன் ஊணன் எனக் குறிப்புவினையாலணையும் பெயர்ப்பகுபதம் வந்தன. பிறவுமன்ன.

இனி, இங்ஙனம் பொருளாதியாறும் அடியாகத் தோன்றிய அவ்வினைக்குறிப்புப் பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் வேற்றுமை யாதோவெனின்:—வினைக்குறிப்புச் சொல்லெல்லாந் தெரிநிலை வினைபோல முதனிலையிற் பொருள் சிறந்து நிற்கும்; வினைக்குறிப்புப் பெயர்ச்சொல் அவ்வாறன்றி விகுதியிற் பொருள் சிறந்து நிற்குமெனவறிக. எனவே, பொருளாதியாறுங் காரணமாக வரும் பெயர்ச்சொற்கள் முதனிலை விகுதியாகிய அவ்விரண்டினும் பொருள் சிறந்து நிற்குமென உய்த்துணர்ந்துகொள்க. எல்லாச் சொற்களையுங் கூறுங்கால், பொருள் சிறக்குமிடத்து எழுத்தினையெடுத்தும், அயலெழுத்தினை நலிந்தும், ஏனையெழுத்துக்களைப் படுத்துங் கூறுக.

அவன் இவன் உவன் என்னுஞ் சுட்டுப்பெயரும், எவன் யாவன் என்னும் வினாப்பெயரும், தமர் நமர் நுமர் என்னும் கிளைப் பெயரும், தந்தை எந்தை நுந்தை என்னு முறைப்பெயரும், இவை போல்வன பிறவும், சுட்டுப்பொருளும் வினாப்பொருளுங் கிளைப்பொருளும் முறைப்பொருளும் காரணமாகப் பிறபொருட்கு வரும் பெயராய்ப், பகுதி விகுதிமுதலிய உறுப்பும் உறுப்பின்



பொருளுந் தந்து, வெள்ளிடைக்கிடக்கும் பகுபதமாய்ப் பகுக்கப் படுதலால், இவற்றைப் பகுபதமென்னாது பகாப்பதமெனக்கூறின் அது பொருந்தாதென்க.

இனிப், பகுதி விகுதி முதலிய உறுப்பும் உறுப்பின் பொருளுந் தரும் ஒரு சொல்லைப் பகுபதமென்றமையின், சொன்மை பொருண்மை இன்மை செம்மை சிறுமை நடத்தல் வருதல் முதலிய சொற்கள், பகுதி விகுதியாகப் பகுக்கப்படுதலானும், விகுதிக்கு வேறு பொருளின்றிப் பகுதிப்பொருள் விகுதியாய் நிற்றலானும், சொன்னிலையாற் பகுபதமென்றும் பொருணிலையாற் பகாப்பதமென்றுங் கொள்ளப்படுமென்க.

மேற்சொல்லதிகாரத்துள், திணை பாலிடமுதலிய இலக்கணங்களான் விதந்து 'கிளையெண் குழூஉமுதற் பல்பொருள்' என்னுஞ் சூத்திரமுதலியவற்றான் நான்கியலுள்ளுமுணர்த்த, ஆண்டுணர வரும்பெயர் வினையிடையுரிகள் ஈண்டுரைவாராவேனும்,உரைத்துமென்னுமுத்தியான் அவற்றைப் பகாப்பதம் பகுபதமென்றார்.()

## பகுபத உறுப்புகள்.

133. பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.

**எ-னின்.** பகுபதவுறுப்பு இத்துணையவென்பதுணர்-ற்று.

**இ-ள்.** இங்ஙனங் கூறிய பகுதி முதலிய ஆறுறுப்பினுள்ளும், இப்பதப்பொருளமைதிக் கேற்பனவற்றைக் கருதி அறிவுடையோராற்கூட்டி முடிப்ப, எவ்வகைப்பட்ட பகுபதங்களுமுடியும். எ-று.

பிரகிருதி விகிருதியென்னும் ஆரியமொழிகள் பகுதி விகுதியெனத் திரிந்து நின்றன.

இக்கருவிகளாறும், முறையே, தன்னியல்பினிற்றலிற் பகுதியென்றும், தன்னியல்பினிற்கும் ஒருவனுள்ளத்தை ஆடையணி முதலியவற்றோடு ஒருத்தி முன்னின்று தன்னிடத்தவாவ விகாரப்

படுதல்போலத் தன்னியல்பினிற்கும் பகுதிப்பொருளை இடைநிலை முதலியவற்றோடு விகுதி முன்னின்று தன்னிடத்தவாவ விகாரப் படுத்தலின் விகுதியென்றும், முதனிலைப் பகுதிக்கும் இறுதிநிலை விகுதிக்கும் இடைநிற்றலின் இடைநிலையென்றும், இவ்விகுதி முதலிய புணர்ப்பைச் சார்ந்து ஆண்டைக்கியைந்து நிற்றலிற் சாரியையென்றும், நால்வகைச்சொல்லும் ஒன்றோடொன்று சந்திக்குமிடத்து வருதலிற் சந்தியென்றும், செய்யுட்டொடை முதலியவற்றான் வலித்தன் மெலித்தன் முதலாக விகாரப்படுத லின் விகாரமென்றும் பெயர் பெற்றன.

அல்வழி வேற்றுமைப் புணர்ச்சிக்கு விதித்த தோன்றறிரிதல் கெடுதலையுஞ் செய்யுட்கு விதித்த ஒன்பது விகாரத்தையும் இப் பதம் பெறுமென மாட்டுதலின், இது மாட்டெறிந்தொழுக லென்னுமுத்தி. (6)

---

## பகுதி.

### பகுதியின் இலக்கணம்.

134. தத்தம்,—
பகாப்ப தங்களே பகுதி யாகும்.

எ - னின். பகுபதவுறுப்பாறனுள், பின்னைய மூன்றும் புணரி யலுள் உணர்த்தப்படுதலின் அவையொழித்து, முன்னைய மூன்ற னுட்பகுதி இனையவென்பதுணர்-ற்று.

இ - ள். பெயர்ப்பகுபதங்களுள்ளும், வினைப்பகுபதங்க ளுள்ளும், தத்த முதனிலையாய பகாப்பதங்களே அவற்றின் பகுதியாம். எ - று.

பகுபதத்துட் பகுதி விகுதி முதலியவுறுப்பெல்லாம் பகாப் பதமாயினும், விகுதி முதலியவற்றை மேல் விதந்து கூறலின், ஈண்டுத் தத்தம் பகாப்பதங்களென்றது முதனிலைகளையே யென்பது பாரிசேடத்தாற் பெற்றாம்.



பகுபதவுறுப்பா முதனிலை இறுதிநிலை இடைநிலைகளாய பகாப்பதங்களினின்றும் முதனிலைப் பகாப்பதமொன்றனையுமே பிரித்துத் தந்தமையின், பகாப்பதங்களேயென்னும் ஏகாரம் பிரி நிலைக்கண் வந்தது. (7)

### பண்புப் பகுதிக்குச் சிறப்புவிதி.

135. செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே.

எ - னின். பண்புப் பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்-ற்று.

இ - ள். இங்ஙனங் கூறிய பதினொன்றும், இவற்றிற் கெதிரான வெண்மை கருமை பொன்மை பசுமைகளும், பெருமை அணிமை நன்மை தண்மை பழமை வன்மை கீழ்மை நொய்மை இன்மை பருமையும், இவைபோல்வன பிறவும், பகுதியாய பண்புப்பொருளினின்றும் வேறு பொருள் பகுக்கப்படாத நிலைப்பதமாம். எ - று.

இங்ஙனங் கூறிய வாய்பாடு முதலியவெல்லாம், சொன்னிலை யாற் பகுபதமாயினும், மைவிகுதிக்குப் பகுதிப்பொருளன்றி வேறுபொருளின்மையிற் பொருணிலையாற்பகுக்கப்படாதென்பார் பண்பிற் பகாவென்றும் "மெய்யி னியக்க மகரமொடு சிவணும்." என்றாற்போல இங்ஙனங் கூறிய வாய்பாட்டுப் பண்புகள் மைவிகுதி யின்றி இயங்காமையின் இவ்விகுதியினையும் பகுதியாகநிறீஇ மேல் வரும் விகுதியோடு புணர்க்கப்படுமென்பார் நிலைப்பதமென்றுங் கூறினார்.

பண்புப்பகாப்பதமென்னாது பண்பிற்பகாநிலைப்பதமென்றல் சொற்பொருள் விரித்தலென்னுமுத்தி. செம்மை சிறுமை முதலிய வாய்பாடுகள் எடுத்துக்காட்டலென்னுமுத்தி. (8)

136. ஈறு போத லிடையுகர மியவாதல்
ஆதி நீட லடியகர மையாதல்
தன்னொற் றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிக லினையவும் பண்பிற் கியல்பே. [ல்

எ - னின். இதுவுமது.

இ - ள். மேற் செம்மை சிறுமை முதலாகத் தெரித்த வாய்பாடுகளின் இறுதி விகுதி போதலும், இடையினின்ற உகரம் இகரமாதலும், முதனின்ற குறில் நெடிலாதலும், முதனின்ற அகரம் ஐகாரமாதலும், இடையே தன்னொற்று மிகுதலும், முன்பு நின்ற மெய் திரிதலும், வருமெழுத்திற்கு இனவெழுத்து மிகுதலும், இவைபோல்வன பிறவும், அப்பண்பினுக்கு இயல்பாம். எ - று.

"மெய்யினியக்க மகரமொடு சிவணும்" என்ற அகரம் பன்னீருயிரும் மெய்யொடு புணரவருங் காலத்து நீங்கினாற்போல, விகுதி முதலிய புணர வருங்காலத்துப் பண்படிநிற்க அப்பகுதிப்பொருள் விகுதிநீங்குமென்பார் ஈறுகெடுதலென்னாது ஈறுபோதலென்றும், விதந்து கூறா விகாரங்களுமுள அவை வந்துழிக் காண்கவென்பார் இனையவென்றும், இவ்விகாரம் ஒருதலையன்று சிவப்பன் கறுப்பனென்னும் பிறவாய்பாடுகள் போலச் செம்மையன் கருமையனெனவும் முடியுமென்பார் எதிர்மறையும்மை கொடுத்து இனையவுமென்றும், பெயர்விகுதியோடும் வினைவிகுதியோடும் பதங்களோடும் புணரினும் ஒருவழி இவ்விகாரப்படுமென்பார் பகுதிக்கென்னாது பொதுமையிற் பண்பிற்கியல்பேயென்றுங் கூறினார்.

பதப்புணர்ச்சிக்கும் ஈண்டுக் கூறல் ஒப்பின் முடித்தலென்னுமுத்தி.

உ - ம். நல்லன், வல்லன் என்பன ஈற்று விகுதி போயின. கரியன், பெரியன் என்பன ஈற்று விகுதி போய் இடையுகரம் இகரமாயின. பாசி, பாசடை என்பன ஈற்று விகுதிபோய் ஆதி



நீண்டன. பைங்கண், பைந்தார் என்பன ஈற்று விகுதிபோய் இடையுகரஞ் சகரத்தோடுகெட்டு வருமெழுத்திற்கினமிகுந்து அடியகரம் ஐகாரமாயின. வெற்றிலை, நெட்டிலை என்பன ஈற்றுவிகுதி போய் தன்னொற்றிரட்டின. சேதா, சேதாம்பல் என்பன ஈற்று விகுதிபோய் ஆதி நீண்டு முன்னின்ற மகரவொற்றுத் தகரவொற்றாய்த், திரிந்தன.

செம்மை சிறுமை முதலாக விதந்தும் இன்னவுமென அடக்கியுங் கூறிய பல்வேறு வகைப்பட்ட பண்புவாய்பாட்டு விகற்பங்களெல்லாம், பொதுவிதியானும், ஈறுபோதல் முதலாக விதந்தும் இனையவுமென அடங்கியுங்கூறிய சிறப்புவிதியானும், விகுதி பதங்களோடு புணர்ந்து அலைந்து கிடந்தமை உய்த்துணர்ந்து கொள்க.

இங்ஙனம் விதந்து கூறிய விகாரங்கள் அன்பன் அழகன் முதலிய வாய்பாடுகட்கெய்தாமையானும், செம்மை சிறுமை முதலாக எடுத்துக் காட்டு மொழிகட்கெய்தினமையானும், இஃது எடுத்தமொழியினெய்தவைத்தலென்னுமுத்தி. (9)

### தெரிநிலை வினைப்பகுதிக்குச் சிறப்புவிதி.

137. நடவா மடிசீ விடுகூ வேவை
நொப்போ வெளவுரி ஞுண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கே ளஃகென்
றெய்திய விருபான் மூன்றா மீற்றவுஞ்
செய்யெ னேவல் வினைப்பகாப் பதமே.

எ - னின். தெரிநிலைவினைப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். நட வா மடி சீ விடு கூ வே வை நொ போ வெள உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகு என்று முதனிலையாய் எய்திக் கிடந்த இவ்விருபத்து மூன்றாகும் உயிரும் ஒற்றுங் குற்றுகரமுமாகிய ஈற்றினையுடைய இத்தொடக்கத்து வாய்பாடுகளெல்லாம்,

செய்யென்னும் ஏவலினது பகாப்பதமாகிய பகுதியும், ஏனை வினையினது பகாப்பதமாகிய பகுதியுமாம். எ - று.

இத்தொடக்கத்து வாய்பாடுகளென்பார் அஃகாமென்றது அஃகென்றனவும், ஈற்றவுமெனவும், எகரஉயிர் வினாவிடைச் சொற்கண்ணுந் தன் பெயர்க்கண்ணுமன்றிப் பிறவழியீறாகாமையின் அஃதொழிந்தவை ஈண்டைக்காமென்பார் ஆமீற்றவெனவும், விகற்பத்தின் முடித்தலென்னு முத்தியான் இருபத்துமூன்றீற்ற வாக விகற்பித்தெடுத்துக்காட்டும் வாய்பாடுகண் முதலியவெல்லாம் இப்பொதுவாய்பாட்டின் அடங்குமென்பார் முடிந்தது முடித்தலென்னுமுத்தியாற் செய்யெனவுங் கூறினார்.

இரட்டுறமொழிதலென்னும் உத்தியான் எடுத்துக்கொண்ட முன்னிலையொன்றற்கேயுரிய ஏவலினது பகுதிப்பொருளும் ஏனை வினையினது பகுதிப்பொருளுந் தந்து நிற்கும் நட வா முதலிய வாய்பாடுகளை எண்ணித் தொகுத்த இருபான்மூன்றாமீற்றவென்னுந் தொகை, செய்யெனேவற் பகாப்பதமென்னும் பயனிலையோடும், செய்யென்வினைப்பகாப்பதமென்னும் பயனிலையோடும் தனித் தனி முடிந்தன.

செய்யென் வினைப்பகாப்பத மென்றதுணையானே செய்யெனேவற் பகாப்பதமும் அடங்காதோவேறு கூறவேண்டியதென்னை யெனின்:—நட வா உண் தின் என்றற்றொடக்கத்துமுதனிலைகளே விகுதியோடு புணராது தனித்து நின்று ஓசை வேறுபாட்டான் முன்னிலையேவலொருமையெதிர்காலவினைமுற்றுப் பொருண்மை யுணர்த்தினவோ விகுதியோடு புணர்ந்துநின்ற அப்பொருண்மை யுணர்த்தினவோ வென்றையுறுவார்க்கு ஐயமறுத்தற்குக்கூறிய தெனவுணர்க.

ஏவற்பகுதிக்குதாரணம்: நடவாய், வாராய், உண்ணாய், தின்னாய், அஃகாய். எ-ம். நடமின், வம்மின், உண்மின், தின்மின், அஃகுமின். எ-ம். வரும். இனி, ஆசிரியர் தொல்காப்பியர் "செய்யா வென்னு முன்னிலை வினைச்சொற்— செய்யென் கிளவி யாகிட னுடைத்தே." எனக்கூறியவாற்றான், ஆவென்னும் விகுதி குன்றி நட வா உண் தின் அஃகு எனவும் நிற்குமெனவுணர்க



நிற்பினும், விகுதியோடு புணர்ந்தனவேயாம். அஃது அச்சூத்திரத்திற் சேனாவரையர் கடாவிடைகளான் விளங்கக்கூறியவாற்றானு மறிக. இனி, இவ்வாறேவற்பொருளுணர்த்தாது முதனிலைத்தனி வினைப் பொருளுணர்த்தி நிற்பிற் பகாப்பதமென்று கொள்ளப் படும். இது பற்றியன்றே முன்னரே வினைப் பகாப்பதத்திற்கு உதாரணங் காட்டியதூஉமென்க. இன்னும், அச்சூத்திரத்து மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தலென்னுமுத்தியான் விகுதி புணர்ந்து கெட்டு நிற்குஞ் சொற்கள் பலவுள; அவையெல்லாம் பதமுடிப்புழிக் காண்க.

ஏனைவினைப்பகுதிக்குதாரணம்: நடந்தான், வந்தான், மடித்தான், சீத்தான், விட்டான், கூவினான், ஏவினான், வைத்தான், நொந்தான், போயினான், வெளவினான், உரிஞினான், உண்டான், பொருநினான், திருமினான், தின்றான், தேய்த்தான், பார்த்தான், சென்றான், வவ்வினான், வாழ்ந்தான், கேட்டான், அஃகினான். எ-ம். கிடந்தான், கண்டான். எ-ம். ஏகினான், குறுகினான், கட்டினான், பொருந்தினான், எய்தினான். எ-ம். வரும். பிறவுமன்ன, இவற்றுட் பகுதி முதனிலையாய் எய்திக் கிடந்தமை காண்க.

இனி, இச்சூத்திரத்திற் செய்யெனேவல் வினைப்பகாப்பதம் என்பதற்கு, இவ்வாறு பொருள் கூறாது, ஆற்றொழுக்காகச், செய்யெனேவல்வினைப் பகாப்பதமே வினை வினைப்பெயர்கட்கெல்லாம் முதனிலையெனப் பொருள் கூறுவாருமுளர். "அடியேனுன்னடியார் நடுவு ளிருக்கு மருளைப் புரியாய்." "எந்தாயினித்தானிரங்காயே." "மருங்கே சார்ந்து வரவெங்கள் வாழ்வே வாவென்றருளாயே." "நரிப்பாய் நாயே னிருப்பேனோ நம்பியினித்தானல்காயே." "கீதமினிய குயிலே—அந்தமிலான் வரக்கூவாய்." என்றற்றொடக்கத்தனவாய திணைபாலிடங் காலங் காட்டும் விகுதியுறுப்போடு கூடி முற்றி நிற்கும் முன்னிலையேவலொருமை யெதிர் கால வினைமுற்றுப் பகுபதங்களைப் பகாப்பதமென்றல் கூடாமையேயன்றித் 'தத்தம் பகாப்பதங்களே பகுதியாகும்' என்னும் பொதுச்சூத்திரத்தோடு மாறுகொளக் கூறலாமாதலின், அது பொருளன்றென மறுக்க.

இங்ஙனம் முதனிலை புடைபெயர்தலே வினையாதலின், எல்லா வினைச்சொற்களும் பிறத்தற்கு மூலமாகிய பொது முதனிலைத் தனிவினைப்பெயரென்றே கொள்க. அதனைப் படுத்தலோசையாற் கூறிக் காண்க. எல்லா வினைச்சொற்களாவன திணை பாலிடங் காலம் விதி மறை பொதுச்சிறப் பாதியோடுங் கூடிய முற்றெச்சங் களுந் தொழிற்பெயர்களுமென்க.

சையறியா மாக்கட்கன்றி நூலியற்று மறிவினையுடைய மக்கட்குப் பல்கலைக்குரிசில் பவணந்தியென்னும் புலவர்பெருமான் புகழ்போல விளங்கி நிற்றலான், உலகமலையாமையுள்ளிட்ட பத்தழகோடும் பிறந்து நின்றது இச்சூத்திரமென்றுணர்க.

வடநூன் மேற்கோளாக, ஒரு மொழிகளை விதந்து, பகாப் பதம் பகுபதமெனக் காரணக்குறி தாமே தந்து, அவற்றை நல் விருந்தென்ன நாவலர் பயில 'எழுத்தே தனித்தும்' என்னுஞ் சூத்திர முதல் இச்சூத்திரமீறுகப் பகாப்பதம் பகுபதமெனப் பல்காற் கூறுதல் தன்குறிவழக்க மிகவெடுத்துரைத்தலென்னு முத்தி. (10)

### ஏவற்பகுதிக்குச் சிறப்புவிதி.

138 செய்யென் வினைவழி விப்பி தனிவரிற்
செய்வியென் னேவ வினையினீ ரேவல்.

எ - னின். மேல் இரட்டுறமொழிந்தவற்றுள், ஏவற்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். மேற்கூறிய செய்யென்னும் வாய்பாட்டு முதனிலைத் தனிவினையின்பின் வி பி என்னும் இவ்விரண்டு விகுதியினுள் ஒன்று வருமாயிற் செய்யென்னும். ஏவன்மேல் ஓரேவலாய்ச் செய்வியென்னும் வாய்பாட்டேவற் பகுதியாம்; அவற்றின்பின் இவ்விகுதிகள் தன்னோடும் பிறிதோடும் இணைந்து வருமாயிற் செய்விப்பியென்னும் வாய்பாட்டேவற் பகுதியாம். எ - று.



விதந்த ஏவற்சிறப்பு வாய்பாட்டையெல்லாஞ் செய்யென்னும் ஏவற்பொதுவாய்பாட்டுளடக்கி மேற்கூறலின் நட வா முதலிய வினைவழியென்பார் செய்யென்வினைவழியென்றும், இவை பெரு வழக்கல்லவென்பார் தனிவரினென்றும், இணையினென்றும், இவ் விகுதி ஒன்றும் இரண்டும் ஏற்ற பெற்றி வருமென்பார் செய்பி யென்ளுது செய்வியென்றுங் கூறினர்.

உ-ம். நடப்பியாய், நடப்பிப்பியாய், வருவியாய், வருவிப்பியாய்.
எ-ம். ஆய் விகுதி குன்றி நடப்பி, நடப்பிப்பி, வருவி, வருவிப்பி.
எ-ம். வரும்.

நட வா முதலிய ஏவற்சிறப்பு வாய்பாட்டிற்கு இலக்கணங் கூறிய முகத்தே ஏவற்பொதுவாய்பாட்டிற்கும் செய் செய்வி செய் விப்பியெனக் கூருக்கூற்ருய் இலக்கணம் அமைந்து கிடந்தமை யின், இக்கூற்று இரட்டுறமொழிதலென்னுமுத்திக்கினம். இவை போல்வன பிறவுமது. (11)

### வினைப்பகுதிக்குப் புறனடை.

139 விளம்பிய பகுதிவே ருதலும் விதியே.

எ - னின். வினைப்பகுதிக்கு ஆவதோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். ஏவற்பகுதி வேருதற்போல, அதன் பின்னே விளம்பிய வினைப்பகுதி வேருதலும் விதியாம், விலக்கன்று எ - று

உ-ம். நடத்தினுன், நடப்பித்தான், நடப்பிப்பித்தான், நடத்து வித்தான், நடத்துவிப்பித்தான் என வரும். பிறவுமன்ன.

ஈண்டும் விப்பிகள் ஏற்றபெற்றி கொள்க.

இவற்றுள், நடவென்னுந் தன்வினைப்பகுதி பிறவினைப் பகுதியாய் வேறுபட்டு நின்றவாறு காண்க. வேறுபடாதது பிர கிருதியாமன்றி வேறுபட்டது பிரகிருதியாகாதேனும், தந்தை யைக்குறிக்க மகனெனப்பட்டானொருவன் தன் மகனைக் குறிக்கத் தந்தையாஞற்போலப், பிறவினைப்படுத்த வரும் இவ்விகுதிகளும் மேல்வரும் அன் ஆன் முதலிய விகுதிகளைக் குறிக்கப் பகுதியா

மாதலின், விதியேயெனப் புறனடை தந்தார். முன்னர் எவற் பகுதி வேறுபட்டமையுமன்ன.

இச்சூத்திரத்திற்கு, வாவென் பகுதி முதலியன வந்தான் வருகின்றான் என விகாரப்படுதலைப் பொருளாகக் கூறுவாரு முளர். இவ்விகாரங்கள் பகுபதவுறுப்பாக மாட்டெறிந்துகொண்ட மூன்று சந்தியுள்ளும் ஒன்பது விகாரத்துள்ளும் அமைந்து கிடத்த லின், அது பொருந்தாதென்க. (12)

---

## விகுதி.

140\. அன் ஆன் அள் ஆள் அர் ஆர் பம்மார்
அ ஆ குடுதுறு என் ஏன் அல் அன்
அம் ஆம் எம் ஏம் ஓமொ டும்மூர்
கடதற ஐ ஆய் இம் மின் இர் ஈர்
ஈயர் கயவு மென்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே.

**எ-னின்.** விகுதி இனையவென்பதுணர்-ற்று.

**இ-ள்.** இங்ஙனம் அன் ஆன் முதன் முப்பத்தேழாகச் சொல்லப்படுவனவும் இவை போல்வன பிறவுந் தெரிநிலை யின் விகுதிகளாம்; பெயரிடத்தும் இவற்றுட் சில விகுதி களாம். எ-று.

இரட்டுற மொழிதலென்னுமுத்தியால் தன்மை யொருமைக் கும் அஃறிணைப்படர்க்கை யொருமைக்கும் பொதுவாக டு து று வென்றும், முன்னிலையொருமைக்கும் முன்னிலையேவலொரு மைக்கும் பொதுவாக ஆய் என்றும், அன் என்னுந் தன்மை யொருமை விகுதி தொன்று தொட்டதன்றி இலக்கியங் கண்டமை யின் எதிரது போற்றலென்னு முத்தியாற்றழீஇக் கொண்டதாத லின் அதனை வலியுறுத்திப் பின்னும் அன்னென விதந்தும், இன்னும் இவற்றுள் இரட்டுறமொழிதலான் அடங்குவனவடங்க அடங்காவாய பெயரெச்சம்வினையெச்சம் நடத்து நடப்பி முதலிய



பிறவினையென்பவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் பகுதியை விகுதிப் படுத்தி வருவனயாவை அவையெல்லாம் விகுதியென்று கருதிக் கோடற்குப் பிறவுமென்றுங் கூறினார்.

பெயரினுஞ் சிலவென்ற மாத்திரையிற் குறிப்புவினையினுஞ் சிலவென்பது கூறாதேயமைதலின், இங்ஙனம் வினையென்றது அவ்விரண்டுமொழிந்த தெரிநிலைவினையென்பது பெற்றாம்.

**உ-ம்.** நடந்தனன், நடந்தான் இவை ஆண்பாற் படர்க்கை. நடந்தனள், நடந்தாள் இவை பெண்பாற் படர்க்கை. நடந்தனர், நடந்தார், நடப்ப, நடமார் இவை பல்லோர் படர்க்கை. நடந்தன, நடவா இவை பலவின்படர்க்கை. நடக்கு, உண்டு, நடந்து, சேறு, நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பன் இவை ஒருமைத் தன்மை. நடந்தது, கூயிற்று, குண்டுகட்டு இவைஒன்றன்படர்க்கை நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம், நடக்கும், உண்டும், நடந்தும், சேறும் இவை தன்மைப்பன்மை. நடந்தனை, நடந்தாய், நடத்தி இவை ஒருமைமுன்னிலை. நடமின் நடந்தனிர் நடந்தீர் இவை பன்மைமுன்னிலை. நிலீயர், நடக்க, வாழிய இவை வியங்கோள். நடக்கும் இது செய்யுமென்னுமுற்று. பிறவுமன்ன.

இவை திணைபாலிடங்களையுணர்த்தி வினையினிறுதிநிலையாய் முழுவதும் வந்தன.

வில்லன், வில்லான், வளையள், வளையாள், ஊரர், ஊரார், வில்லி, வாளி, அரசி, செட்டிச்சி, காதறை, மூக்கறை இவை பெயர்க்கட் சிலவந்தன. பிறவுமன்ன. (13)

---

## இடைநிலை.

### பெயர் இடைநிலை.

141\. இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலிற்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெய ரல்பெயர்க் கிடைநிலை யெனலே.

எ - னின். இடைநிலையா மாறுணர்த்துவான் றொடங்கிப் பெயர்க்கிடை நிலையுணர்-ற்று.

இ - ள். அறிவுடையோரான் நியமிக்கப்படும் இலக்கியங்கண்டு அதனுக்கு அவ்விலக்கியத்தின் அமைதியே இலக்கணமாகக் கூறலின், மேற்கூறிய பகுதியையும் விகுதியையும் பகுத்து, இடையே நின்றதியாது, அதனை, வினையாலணையும் பெயரல்லாத பெயர்கட்கு, இடைநிலையென்று சொல்லுக. எ - று.

குறிக்கப்படும் இலக்கணத்தையுடையனவெல்லாம் இலக்கியமாயினும், ஈண்டிலக்கியமென்றது பெயர்ப்பகுபதத்தை. இலக்கணமென்றது அதனகத்துப் பகுதி முதலிய உறுப்புக்களை.

மா பலா முதலியன பராரை முதலிய சினையோடு நின்றனவெனக் கண்டது கூறுவார்போலப் பகுபதம் பகுதிமுதலிய உறுப்பொடு நின்றதெனக் கண்டது கூறி அப்பதந் தந்த தோலாநாவின் மேலோராணையினிற்றலிற் கண்டதற்கென்றும், சாரியை சந்தி விகாரங்களும் இடை நிற்குமேனும் அவைமேல் விதக்கப்படுதலின் அவை யொழிந்தனவற்றை இடைநின்றதையென்றும், மேல் வினைக்கு விதந்து கூறும் இடைநிலை வினையாலணையும் பெயர்க்கும் அமைதலின் வினைப்பெயரால் பெயர்க்கென்றும், இப்பெயரிடைநிலை வரையறுக்கப்பட்டதன்று. ஆங்காங்குணர்ந்துரைக்கவென்பார் எனவேயென்றுங் கூறினார்.

உ - ம், அறிஞன் என்பது ஞகரவிடைநிலை பெற்றது. ஓதுவான், பாடுவான் என்பன வகரவிடைநிலை பெற்றன. வலைச்சி புலைச்சி என்பன சகரவிடைநிலைபெற்றன. வண்ணாத்தி, பாணத்தி, மலையாட்டி, வெள்ளாட்டி, தந்தை, எந்தை, நுந்தை என்பன தகரவிடைநிலை பெற்றன. பிறவுமன்ன. (14)

## வினை இடைநிலை

142. தடறவொற் றின்னே யைம்பான் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை.



எ - னின். இறந்தகாலவினைக்கு இடைநிலையுணர்-ற்று.

இ - ள். தகர டகர றகர மெய்களும், இன் என்னுங் குற்றொற்றும், ஐம்பான் மூவிடத்தும் இறந்தகாலத்தைத் தரும், வினைப்பகுபத விடைநிலைகளாம். எ - று.

உ - ம். நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன நடந்தேன், நடந்தேம், நடந்தாய், நடந்தீர். எ-ம். உண்டான். எ-ம். சென்றான். எ-ம். உறங்கினான். எ-ம். வரும். இன்னிடைநிலை, எஞ்சியது எனக் கடைக்குறைந்தும், போனது என முதல் குறைந்தும் வரும். பிறவுமன்ன. (15)

143. ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பா னிகழ்பொழு தறைவினை யிடைநிலை.

எ - னின். நிகழ்கால வினைக்கு இடைநிலையுணர்-ற்று.

இ - ள். ஆநின்றென்பதூஉம், கின்றென்பதூஉம், கிறுவென்பதூஉம், ஐம்பான் மூவிடத்தும் நிகழ்காலத்தைத் தரும் வினைப்பகுபத விடைநிலைகளாம். எ - று.

தருவினையை அறைவினையென்றது இலக்கணை. மேலைச்சூத்திரத்தில் வருவதூஉமது.

உ - ம். நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறான் என வரும். ஏனைப் பாலிடங்களினு மொட்டிக்கொள்க. (16)

144. பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில.

எ - னின். எதிர்கால வினைக்கு இடைநிலையும் முக்காலவிடைநிலைகட்கும் ஆவதோர் புறனடையும் உணர்-ற்று.

இ - ள். பகரவொற்றும், வகரவொற்றும் ஐம்பான் மூவிடத்தும் எதிர்காலத்தைத் தரும் வினைப்பகுபதவிடைநிலைகளாம். இம்முக்காலமும் முறையே காட்டுந் தகரவொற்று முதல் வகரவொற்றீறாய இடைநிலைகள், சில முற்றுவினை எச்சவினைகட்கு இலவாம். எ - று.

உ-ம். நடப்பான், வருவான் எனவரும். ஏனைப்பாலிடங்களினு மொட்டிக்கொள்க.

இனி இவை சிலவிலவெனவே, காலத்தை இறுதிநிலை தருமென்பதூஉம், முதனிலை தருமென்பதூஉம், பிறவிடைநிலை தருமென்பதூஉம் பெற்றாம். இவ்விகற்பமெல்லாம் வருஞ் சூத்திரத்தாற் கூறுப. (17)

---

## காலங் காட்டும் விகுதி.

145. றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவுந்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு
கழிவுங் கவ்வோ டெதிர்வுமின் னேவல்
வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தஞ்
செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையு மேற்கு மீங்கே.

எ-னின். மேலைச் சூத்திரத்து 'இவை சிலவில' என்றார்,
அவை இவையென்பதுணர்-ற்று.

இ-ள். றகரத்தோடு கூடிய உகரவீறும் உம்மீறும் இறந்த காலமும் எதிர்காலமும், தகரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் அவ்விருகாலமும், டகரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் இறந்த காலமும், ககரத்தோடுகூடிய அவ்விரண்டீறும் எதிர்காலமும், மின்னீறும் ஏனையேவலின் வரும் ஐயீறும் வியங்கோளீறும் இகரவீறும் மாரீறும் எதிர்காலமும், பகரவீறு இறந்தகாலமும் எதிர்காலமும் செய்புமென்னும் வாய்பாட்டுமுற்றீறு நிகழ்காலமும் எதிர்காலமும், முற்றுவிகுதி எச்சவிகுதிகளோடு புணர்தற்குரிய எதிர்மறையாகாரவீறு மூன்றுகாலமும் ஏற்கும், மேலைச் சூத்திரத்து 'இவை சிலவில' என்றவற்றுள். எ-று.



அந்தமென்பதனை எல்லாவற்றினும் ஒட்டிக்கொள்க.

றவ்வொடுகரவும் மீறும் தவ்வொடுகரவும் மீறும் பாந்தமும் இறந்தகாலமும் எதிர்காலமும் ஏற்குமெனத் தொகுத்துக்கூறாது, விகற்பத்தின் முடித்தலென்னுமுத்தியான் வகுத்துக் கூறினார், புலப்படவேண்டியென்க.

இகரவீறு தனித்தியலாமையின் யாதானுமோர் மெய்யினையூர்ந்து வருமென்பதூஉம், அது காலங்காட்டாதென்பதூஉம், அது காலங் காட்டியதேல் இவ்வீறு காலங்காட்டாதென்பதூஉம், செய்புமென்னும் வாய்பாட்டெச்சமும் இடைநிலையின்றி ஈறு காலங்காட்டுமேனும் அஃதெதிர்காலங் காட்டுமென மேல்விதத்தலின் இங்ஙனஞ் செய்புமென எடுத்தோதிய முற்றென்பதூஉம் பெற்றாம். மூன்றுகாலமும் அவைபற்றிப் புடைபெயரும் வினையுமில்லனவற்றை எதிர்மறைவினை மூன்றுகாலமு மேற்குமென்று கூறுதல் இலக்கணையாதலிற் பிற்கூறினார்.

உ-ம். சென்று, சென்றும், சேறு, சேறும், வந்து, வந்தும், வருது, வருதும், உண்டு, உண்டும், உண்கு, உண்கும், உண்மின், உண்ணாய், உண், உண்க, வாழிய, வாழியர், சேறி, உண்மார், உண்ப, உண்ணும், உண்ணான் என வரும்.

மும்மையுமென்னு முற்றும்மையை 'முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.' என்பதனான் எச்சவும்மையாக்கி, நடந்திலன் நடவாநின்றிலன் என எதிர்மறை ஒருகாலமேற்று வருதலும் கொள்க.

சென்றி செல்லாநின்றி என வருமாயின், இடைநிலை காலங் காட்டிய இகரவீற்றவாம்.

'இவை சிலவில' என்றவற்றுள், இறுதிநிலை காலங் காட்டுவனவற்றை விதந்தோதி, முதனிலையும் பிறவிடைநிலையுங் காலங் காட்டுவனவற்றை ஓதாமையின், அவை சிறுபான்மைய, வந்த வழிக் காண்கவென்றாராயிற்று. அவை வருமாறு:—

தொட்டான், விட்டான், உற்றான், பெற்றான், புக்கான், நக்கான் என்பனவற்றுள், இடைநிலையின்றி முதனிலை விகாரமாய் இறந்தகாலங் காட்டின.

என்றிசினோர், என்மர், என்மனார் என்பவற்றுள், எடுத்தோதாப் பிறவிடைநிலைகள் நின்று முன்னையதொன்றும் இறந்தகாலமும் பின்னையவிரண்டும் எதிர்காலமுங் காட்டின. பிறவுமன்ன.

ஈங்கேயென்றமிகையானே, "வருதி பெயர்தி வருந்துதிதுஞ்சாய்—பொருதி புலம்புதி நீயும்." என இகரவீறு நிகழ்காலங் காட்டலும், ஏனைய கூறிய காலத்திற் பிறழ்ந்து வருவனவுளவேல் அவையும், பெயரெச்ச வினையெச்சங்களின் இடைநிலையின்றி இறுதிநிலை காலங் காட்டுவனவுங் கொள்க.

இனிப் பகுதி முதலிய உறுப்புக்களாற் பகுபதமுடியுமாறு:—

அவனென்னுஞ் சுட்டுப் பொருட்பெயர்ப் பகுபதம், அ என்னும் பகுதியும், அன்னென்னும் விகுதியும் பெற்று, 'எகரவினா முச்சுட்டின் முன்னர்' என்னுஞ் சூத்திரத்தால் வகரந் தோன்றி, 'உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே.' என்பதனான் வகரத்தின்மேல் விகுதியுயிரேறி முடிந்தது.

தமனென்னுங் கிளைப்பொருட்பெயர்ப் பகுபதம், தாமென்னும் பகுதியும், அன்னென்னும் விகுதியும் பெற்றுத், 'தான்றா நாமுதல் குறுகும்' என்பதனாற் பகுதிமுதல் குறுகி, உடன்மேலுயிரேறி முடிந்தது.

குறிஞ்சியானென்னும் இடப்பெயர்ப் பகுபதம், குறிஞ்சியென்னும் பகுதியும், ஆனென்னும் விகுதியும் பெற்று, யகரவுடம்படுமெய் தோன்றி உயிரேறி முடிந்தது.

பிரபவனென்னுங் காலப்பெயர்ப் பகுபதம், பிரபவவென்னும் பகுதியும், அன்னென்னும் விகுதியும் பெற்று, 'ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே.' என்பதனாற் பகுதி கடைக்குறையாய் வகரவொற்றின் மேல் விகுதியகரவுயிரேறி முடிந்தது.

திணிதோளனென்னுஞ் சினைப்பெயர்ப் பகுபதம், திணிதோளென்னும் பகுதியும், அன்னென்னும் விகுதியும் பெற்று, உடன்மேலுயிரேறி முடிந்தது.

பெரியனென்னுங் குணப்பெயர்ப் பகுபதம், பெருமையென்னும் பகுதியும், அன்னென்னும் விகுதியும் பெற்றுப், பகுதியீறு போய், இடையுகரம் இகரமாய், யகரவுடம்படுமெய் தோன்றி, உயிரேறி முடிந்தது.



ஓதுவானென்னுந் தொழிற்பெயர்ப் பகுபதம், ஓது என்னும் பகுதியும், ஆனென்னும் விகுதியும், வகரவிடைநிலையும் பெற்று, உயிரேறி முடிந்தது.

நன்மையென்னும் பகுபதம், நல்லென்னும் பகுதியும், மையென்னும் விகுதியும் பெற்று, 'மெலிமேவி னணவும்,' என்பதனான் லகரம் னகரமாய்த் திரிந்து முடிந்தது.

வருதலென்னும் பகுபதம், வாவென்னும் பகுதியும் தல் என்னும் விகுதியும் பெற்று, 'வலித்தன் மெலித்தல்' என்பதனாற் பகுதி முதல் குறுகி, ரகரவுகரம் விரிந்து முடிந்தது.

நடந்தனனென்னும் இறந்தகாலவினைப் பகுபதம், நடவென்னும் பகுதியும், அன்னென்னும் விகுதியும், இறந்தகாலந் தருந் தகரவிடைநிலையும், அன் சாரியையும் பெற்றுப், பகுபதவுறுப்புக்களுட் பகுதியொழிந்தன இடைச்சொல்லாதலின் 'இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்' என்பதனாற் பகுதியீற்றினின்ற உயிர் முன் வந்த தகரவிடைநிலை மிகாது அதற்கின மிகுந்து, இடைநிலைத் தகரவொற்றின்மேற் சாரியை யகரவுயிரேறி முடிந்தது.

நடவாநின்றானென்னு நிகழ்காலவினைப்பகுதம், நடவென்னும் பகுதியும், ஆனென்னும் விகுதியும், ஆநின்றென்னும் இடைநிலையும் பெற்று, உடம்படுமெய்தோன்றி, இடைநிலையீற்றுக் குற்றுகரங் கெட்டு, உயிரேறி முடிந்தது.

நடப்பானென்னும் எதிர்காலவினைப்பகுதம், நடவென்னும் பகுதியும், ஆனென்னும் விகுதியும் மகரவிடைநிலையும் பெற்று, 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்.' என்பதனாற் பகரமிகுந்து, உடன்மேலுயிரேறி முடிந்தது.

நடந்தது என்னும் அஃறிணையொருமைப் படர்க்கையிறந்த காலவினைப் பகுபதம்; நடவென்னும் பகுதியும், துவ்வென்னும் விகுதியும், தகரவிடைநிலையும், துவ்விகுதிக்குந் தகரவிடைநிலைக்குமிடையே அகரச்சாரியையும் பெற்று முடிந்தது.

நடவாயென்னு முன்னிலையேவலொருமை யெதிர்காலவினை முற்றுப் பகுபதம், நடவென்னும் பகுதியும், ஆயென்னும் விகுதி

யும் பெற்று, வகரவுடம்படுமெய் தோன்றி, விகுதியாகாரவுயிரேறி முடிந்தது.

நடப்பியாயென்னுமேவற் பிறவினைப்பகுபதம், நடவென்னும் பகுதியும், பி என்னும் விகுதியும் பெற்றுப், பகரமிகுந்து, இரண்டுமோர் பகுதியாய் நின்று, மேல் வரும் ஆய்விகுதியோடு புணர்ந்து, யகரவுடம்படுமெய் தோன்றி, விகுதியாகாரவுயிரேறி முடிந்தது.

நடப்பிப்பியாயென்னும் அவ்வினைப்பகுபதம், நடப்பியென்னும் பகுதியும், பி என்னும் விகுதியும் பெற்றுப், பகரமிகுந்து, அனைத்துமோர் பகுதியாய் நின்று, மேல்வரும் ஆய்விகுதியோடு புணர்ந்து, யகரவுடம்படுமெய் தோன்றி, விகுதியாகாரவுயிரேறி முடிந்தது.

விளம்பிய பகுதி வேறுனவையும், இவ்வாறே முடிந்து, அனைத்துமோர் பகுதியாய் நின்று, மேல்வரும் அன் ஆன் முதலிய விகுதியோடு புணர்ந்தமை காண்க.

நடவானென்னு மெதிர்மறைவினைப் பகுபதம் நடவென்னும் பகுதி எதிர்மறையாகார விகுதியோடு புணர்ந்து இரண்டுமோர் பகுதியாய் நின்று மேல் வரும் ஆன் விகுதியோடு புணர்ந்து 'ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே.' என்பதனான் விகுதியினதாகாரங் குறைந்து முடிந்தது.

நடவாவென்னும் அஃறிணைப் பன்மைப் பகுபதம் 'ஆவேயெதிர்மறைக் கண்ணதாகும்.' என்பவாகலிற் பால்காட்டும் ஆகார விகுதியன்றி எதிர்மறையாகாரம் வேண்டாது முடிந்தது.

நடந்திலன் நடவாநின்றிலன் என்பவற்றுட் காலவிடைநிலையும் அவற்றை மறுத்த இல்லென்னும் எதிர்மறையிடைநிலையுந் தந்து அவற்றையோர் பகுதியாக்கி முடிக்க.

இவ்வாறே பெயரெச்ச வினையெச்சங்களும் பிறவும் பகுதி விகுதி முதலிய உறுப்புக்களோடு ஏற்றவாறமைந்து கிடந்தமை காண்க.



எழுதப்படுவதென்னும் பொருட்கண், எழுத்தென்னு முதனிலை முன்னர்ச் செயப்படுபொருண்மையுணர்த்தும் ஐகார விகுதி புணர்ந்து கெட்டுக் கெட்டவழித் தகரமிரட்டித்து, எழுத்தென முடிந்தது.

ஊண், தீன், கோள் என்றாற்போல்வனவும், செயப்படுபொருண்மையுணர்த்தும் ஐகாரவிகுதி புணர்ந்து கெட்டு, முதனீண்டு நின்றன.

திரை, நுரை, அலை, தளிர், பூ, காய், கனி என்றாற்போல்வன, வினைமுதற்பொருண்மையுணர்த்தும் இகரவிகுதி புணர்ந்து கெட்டு நின்றன.

"கெடுவாக வையாதுலகம்" என்புழிக் கெடுவென்பது புடைபெயர்ச்சியையுணர்த்துந் தல் விகுதி கெட்டு நின்றது. கேடென்பது அவ்வாறாய் முதனீண்டு நின்றதெனக் கொள்க.

ஏனையவும் இவ்வாறே ஏற்றபெற்றியறிந்து முடித்துக் கொள்க.

திரை, நுரை, தளிர் என்றாற்போல்வன விகுதி குன்றி முதனிலை மாத்திரையாய் நிற்றல் பற்றி, இவற்றை முதனிலை வினைப்பெயரென வழங்குப.

ஐகாரவிகுதி செயப்படுபொருண்மை யுணர்த்துதல் நடவை சேக்கை உடுக்கை தொடை விடை என்றாற்போல்வனவற்றுள்ளும், இகரவிகுதி வினைமுதற்பொருண்மை புணர்த்துதல் சேர்ந்தாரைக்கொல்லி நூற்றுவரைக்கொல்லி நாளோதி நூலோதி என்றாற்போல்வனவற்றுள்ளுங் காண்க. இவ்விகுதிகள் சிறுபான்மை பிறபொருளுணர்த்தியும் வரும். வடநூலாரும் வினைப்பெயர் விகுதிகள் கூறிய நியமந் தப்பிப் பிறபொருளுணர்த்தியும் வருமெனக்கொள்வர்.

உடுக்கையென்பது, உடுக்கப்படும் பொருளையுணர்த்துங்கால் ஐகாரவிகுதித்தென்றும், உடுத்தலெனப் புடைபெயர்ச்சியையுணர்த்துங்காற் கைவிகுதித்தென்றுந் தெரிந்துணர்ந்துகொள்க.

'பகுதி விகுதி' என்னுஞ் சூத்திரமுதல் இச்சூத்திரமீறாகப் பகுபதங்களை மேலோர்முடித்தவாறு முடித்துக் காட்டினமையின், இது முடித்துக்காட்டலென்னுமுத்தி.

முன்னைத் தமிழ்நூல்களுள் இல்லனவற்றை, இவ்வாசிரியர் தாமே, பகாப்பதம் பகுபதமென முன்னர் காட்டி, இச்சூத்திரக் காறும் அவற்றிற் கிலக்கணந் தந்து நிறுத்தமையிற் றாஅனுட்டித் தனது நிறுப்பென்னுமதம். (18)

---

## வடமொழியாக்கம்.

146. இடையி னான்கு மீற்றி லிரண்டும்
அல்லா வச்சை வருக்கமுத லீறி
யவ்வாதி நான்மை ளவ்வாகு மையைம்
பொதுவெழுத் தொழிந்தநா லேழுந் திரியும்.

எ - னின். இவ்வியன்மொழியாக்கமாதலின், ஆரியமொழி திரிந்து வடமொழியாமாறுணர்த்துவான்றொடங்கி, அவற்றின் பொதுவிதியுணர்-ற்று.

இ - ள். ஆரியமொழியுள், அச்சென்று வழங்கும் உயிர் பதினாறனுள்ளும் இடையினின்ற ஏழாமுயிர் முதனான்கும் ஈற்றினின்ற இரண்டுமான ஆறுமொழிந்து நின்ற அ ஆ இ ஈ உ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் பத்தும், அல்லென வழங்கும் முப்பத்தேழு மெய்யுள்ளுங் க ச ட த ப என்னும் ஐந்து வருக்கத்தினிடையில் உரப்பியும் எடுத்துங்கனைத்துஞ் சொல்லப்பட்டு நிற்கும் மூன்றுமொழிந்த க ங ச ஞ ட ண த ந ப ம என்னும் பத்தும், ய ர ல வ என்னு நான்கும், ளவ்வுமாகும் இருபத்தைந்தும், தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம்; இவையன்றி, மேல் உயிருள் ஒழிந்த ஆறும், ஐந்து வருக்கங்களினும் இடைகளின் ஒழிந்த பதினைந்தும், முப்பத்தாமெய் முதலான எட்டனுள் ளகரமொழிந்த ஏழுமான இருபத்தெட்டும், ஆரியத்திற்குச் சிறப்பெழுத்தாய்த் தமக்கேற்ற பொதுவெழுத்தாகத் திரிந்து வடமொழியாம். எ - று.



மேல் ஏழாமுயிரென விதப்பாராதலின், இடையினான்கென விதவாது கூறினார்.

பொதுவெழுததெனவே, சிறப்பெழுத்தென்பது பெற்றாம். தமிழை நோக்கிச் சிறப்பாயின.

சிறப்பெழுத்துத் திரியுமென வரையறை கூறவே, பொதுவெழுத்து இயல்பாயுந் தமக்கேற்ற விகாரமாயும் வருமென்பதூஉங் கூறினாராயிற்று. (19)

## சிறப்பு விதி.

147. அவற்றுள்,—
ஏழாமுயி ரிய்யு மிருவுமை வருக்கத்
திடையின் மூன்று மவ்வம் முதலும்
எட்டே யவ்வு முப்பது சயவும்
மேலொன்று சடவு மிரண்டு சதவும்
மூன்றே யகவு மைந்திரு கவ்வும்
ஆவீ றையு மீயீ றிகரமும்.

எ - னின். மேலதற்குச் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். மேற்றிரியுமென்றவற்றுள், சிறப்பெழுத்தாகிய ஏழாமுயிர் இகரமும் இருவுமாம்; ஐந்து வருக்கங்களினும் இடையினின்ற மூன்றும் அவ்வவ்வருக்கங்களின் முதலெழுத்தாம்; எட்டாமெய்யான சவ்வருக்கத்துள் எடுத்துச்சொல்லு மெய் ஓரோவிடத்து யகரமுமாம்; முப்பதாமெய் மொழி முதற்கட் சகரமும் இடைக்கண் யகரமுமாம்; முப்பத்தொன்றாமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் டகரமுமாம்; முப்பத்திரண்டாமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் தகரமுமாம்; முப்பத்து மூன்றாமெய் மொழி முதற்கண் அகரமும் இடைக்கட் ககரமுமாம்; முப்பத்தைந்தா

மெய் இரண்டு ககரமாம்; பொதுவெழுத்துண் மொழியிறுதி ஆகாரம் ஐகாரமாம்; மொழியிறுதியீகாரம் இகரமாம். எ-று.

மேல் 'திரியும்' எனப் பொதுவிதி போந்தவற்றுள், பயின்று வருவனவற்றிற்குத் திரிபு கூறி, ஏனைய வந்தவழிக் காண்கவென்பார், இகரமுமாகுமெனப் பயனிலைகொடுத்து முடியாது, இகரமுமென அவாய்நிலையாக முடித்தார்.

வ-று. இடபம், விடபம், திட்டி. எ-ம். இருடி, மிருகம், விருத்தி. எ-ம். ஏழாமுயிர் இகரமும் இருவுமாயிற்று. நகம், நாகம், மேகம். எ-ம். சலவாதி, விசயம், சருச்சரை. எ-ம். பீடம், பீடை, திடம். எ-ம். தலம், தினம், தரை. எ-ம். பலம், பந்தம், பாரம். எ-ம். ஐந்து வருக்கத்தினும் உரப்பியும் எடுத்துங் கனைத்துஞ் சொல்லு மூன்றும் அவ்வம்முதலாயின. அயம், பங்கயம் என எட்டாமெய் யகரமுமாயிற்று. சாலை, சூலை. எ-ம். மயானம். எ-ம். முப்பதாமெய் சகரமும் யகரமுமாயிற்று. சட்டி. எ-ம். இடபம். எ-ம். முப்பத்தொன்றாமெய் சகரமும் டகரமுமாயிற்று. சித்தி, சூத்திரம், சேனை. எ-ம். ஆதனம், வாதனை. எ-ம். முப்பத்திரண்டாமெய் சகரமுந் தகரமுமாயிற்று. அரன், அரி. எ-ம். சிங்கம், மோகம். எ-ம். முப்பத்துமூன்றாமெய் அகரமுங் ககரமுமாயிற்று. பக்கம், தக்கினம் என முப்பத்தைந்தாமெய் இரண்டு ககரமாயிற்று. வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை என ஆகாரவீறு ஐகாரவீறாயிற்று. புரி, மேதினி, குமரி என ஈகாரவீறு இகரவீறாயிற்று. (20)

148. ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்
கிய்யு மொழிமுத லாகிமுன் வருமே.

**எ-னின்.** இதுவுமது.

**இ-ள்.** ரகர லகர யகரங்களை முதலாகவுடைய ஆரிய மொழிகள் வடமொழியாங்கால், அகர இகர உகர மென்னும் இம்மூன்று குற்றுயிரும், இங்ஙனஞ் சொன்னவாறே அவ்வட



மொழிகட்கு முதலாய், அம்மூன்றெழுத்திற்கு முன்னர் வரும். எ-று.

வ-று. அரங்கம், இராமன், உரோமம். எ-ம். இலாபம், உலோபம். எ-ம். இயக்கன். எ-ம். வரும். (21)

149. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமு நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற.

**எ-னின்.** இதுவுமது.

**இ-ள்.** ஆரியமொழியுள் இரண்டெழுத்திணைந்து ஒரெழுத்து நீர்மையாய் நடக்குங்கால், பின்னிற்கும் ய ர லக்கண்மீதே இகரமும், மகர வகரங்கண்மீதே உகரமும், நகரமீதே அகரமும், வந்து வடமொழியாம்; இணைந்து முன்னிற்கும் ரகரத்திற்குப் பின்னர் உகரமும் வரும்.

வ-று. வாக்கியம், வாச்சியம், நாட்டியம். எ-ம். வக்கிரம், வச்சிரம், சத்திரம், அப்பிரம். எ-ம். சுக்கிலம், ஆமிலம். எ-ம் பதுமம். எ-ம். பக்குவம். எ-ம். அரதனம். எ-ம். அருக்கன், அருத்தம், கருப்பம், சருக்கம், தருமம். எ-ம். வரும்.

பிறவென்றமையானே, சத்தி, கட்சி, காப்பியம், பருப்பதம் என்றற்றொடக்கத்துத் திரியும், தூலம், அத்தம், ஆதித்தன், அநந்தம் என்றற்றொடக்கத்துக்கேடும், மற்றும் விகாரத்தால் வருவனவுங்கொள்க.

## சிறப்பெழுத்தும் பொதுவெழுத்தும்.

150. றனழ எ ஒவ்வு முயிர்மெய்யு முயிரள
பல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே.

**எ-னின்.** வடமொழியாக்கங் கூறவேண்டி ஆரியத்திற்குப் பொதுவெழுத்துச் சிறப்பெழுத்தென விதந்தமையின், இவ்விதப்புத் தமிழிற்கு உண்டோ இன்றோவென்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தனுதலிற்று.

இ - ள். முதலுஞ் சார்புமான நாற்பதெழுத்துள்ளும், றகர னகர ழகர எகர ஒகரமான முதலெழுத்தைந்தும், உயிர்மெய்யும் உயிரளபெடையுமல்லாத சார்பெழுத்தெட்டும், தமிழிற்கே சிறப்பெழுத்தாம்; ஒழிந்த இருபத்தேழுந் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம். எ - று.

மெய்யை முற்கூறினர், எகர ஒகரங்கள் பிராகிருதத்திற்கும் உரியவாதலினென்க. (23)

பதவியல் முற்றிற்று.

---

# 3. உயிரீற்றுப்புணரியல்.

## புணர்ச்சி.

151. மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களுந்
தன்னொடும் பிறிதொடு மல்வழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே.

எ - னின். நிறுத்தமுறையானே மேலையியலுட் கூறிய பதங்கள் ஒன்றோடொன்று புணருமாறுணர்த்துவான்றொடங்கிப், புணர்ச்சி இன்னதென்பதூஉம் பொதுப்புணர்ச்சியும் முறையே தலைப்பெய்து உயிரீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப்புணர்ச்சி கூறுவார், கழுகந்தோட்டமென்றாற்போல மிகுதிபற்றிய குறியாய் இவ்வியற்கு உயிரீற்றுப்புணரியலெனப் பெயர்தந்தமையின், இவ்வியலின்வைத்த முறையே, புணர்ச்சியின்னதென்பதுணர்-ற்று.

இ - ள். மெய்யையும் உயிரையும் முதலும் ஈறுமாகவுடைய பகாப்பதம் பகுபதமென்னும் இரண்டு பதங்களும், தன்னொடு தானும் பிறிதொடு பிறிதுமாய் அல்வழிப்பொருளினாதல் வேற்றுமைப் பொருளினாதல் பொருந்துமிடத்து, நிலைமொழியும் வருமொழியும் இயல்போடும் விகாரத்தோடும் பொருந்துவது மேற்கூறிய புணர்ச்சியாம். எ - று.

உயிர்மெய் முதலீறாமெனின் உயிர்மெய்யென்னும் ஓரெழுத்தாகப் பொருள்படுமாதலின், மெய்யுயிர் முதலீறாமென மெய்யை முற்கூறினர்.

திசைச்சொல்லும் வடசொல்லும் பெயர் வினையிடையுரியாய் அடங்குமாதலின், அவற்றுளடக்கி இருபதங்களுமென்றார்.

வேற்றுமையல்லாதவழி அல்வழியாதலின், வேற்றுமையல் வழியெனக் கூறல்வேண்டும்; அங்ஙனங் கூறின், வேற்றுமைப் பொருள் அல்வழிப்பொருளென இருபொருட்படாது, வேற்றுமை

யென்பது அல்வழியை விசேடித்ததாய் அல்வழிப்பொருளொன்றினும்பொருந்துழியெனப் பொருள்படுமாதலின், அல்வழிவேற்றுமையென அல்வழியை முற்கூறினார்.

இயல்பெனினும், தன்மையெனினும், இயற்கையெனினும், ஒக்கும். விகாரமெனினும், செயலெனினும், செயற்கையெனினும், விதியெனினும் ஒக்கும். இவ்விரண்டனுள் "நின்ற சொன்முன் னியல்பா கும்மே." என இயற்கையைச் செயற்கையாகவும் "இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்—வசையன்று வையத் தியற்கை" எனச்செயற்கையை இயற்கையாகவுங் கூறுதல் இலக்கணை.

புணரியல் மூன்றனுள்ளும் மெய்யுயிர் முதலீறுமிருபதங்களும் இவ்வாறு புணர்ந்து வருதல் காண்க. (1)

## வேற்றுமை விளக்கம்.

152. வேற்றுமை யைம்முத லாறு மல்வழி
தொழில்பண் புவமை யும்மை யன்மொழி
எழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடரடுக் கெனவீ ரேழே.

எ - னின். மேல் அல்வழி வேற்றுமையென்றார், அவை இவை யென்பதுணர்-ற்று.

இ - ள். வேற்றுமைப் புணர்ச்சி: 'பெயரே ஐ ஆல், என்னுஞ் சூத்திரத்து ஐம்முதலியவாறுருபுந் தொக்கும் விரிந்தும் வரப்பதங்கள் பொருந்துந் தொடர்ச்சியாம். அல்வழிப்புணர்ச்சி, வினைத்தொகை முதலிய ஐந்து தொகைநிலையும் எழுவாய்முதல் ஒன்பது தொகாநிலையுமெனப் பதங்கள் பொருந்துந் தொடர்ச்சி பதினான்காம். எ - று.

வேற்றுமைத்தொகைநிலை தொகாநிலையென விதவாமையின் அவ்விரண்டும் வேற்றுமைப் புணர்ச்சியென்பதூஉம், முற்றெச்சங்களை விதந்தமையிற் றொழிலென்றது வினைத்தொகையையென்பதூஉம், வினைத்தொகைமுதலைந்தும் விரிந்தவழி, வினைத்தொகை பெயரெச்சமாயும், பண்பை விளக்குமொழி இடைச்சொல்லாதலிற் பண்புத்தொகையிரண்டும் இடைச்சொற் சந்தியாயும், உவமைத்தொகை இரண்டாம் வேற்றுமையோடு பயனிலையாயும், உம்மைத்தொகை இடைச்சொற்சந்தியாயும், அன்மொழித்தொகை பொற்றொடியென்பது பொன்னாலாய தொடியினையுடையாளெனச் சொற்களுஞ் சந்திகளும் பலவாயும் முடிதலானும், வேற்றுமைத்தொகையன்றி இத்தொகைகள் தொகாநிலையுமாமென மேற்சூத்திரஞ் செய்யாமையானும், இவ்வைந்து தொடருந் தொகாநிலையென்பதூஉம் பெற்றாம்.



இரண்டென்பதனை முற்றென்பதனோடும், தழுவுதொடரென்பதனை எல்லாவற்றோடும் ஒட்டுக.

அடுக்குந் தழுவுதொடராயினும், ஒருசொல் அடுக்கிவருதலின் ஏனையபோந் தழுவுதொடரன்றென்பார், விதந்து பிற்கூறினார்.

உ - ம். பொன்னுடையான், பொன்னையுடையான்; கல்லெறிந்தான், கல்லாலெறிந்தான்; கொற்றன்மகன், கொற்றனுக்குமகன்; மலைவீழருவி, மலையின்வீழருவி; மலையுச்சி, மலையினதுச்சி; மலைமுழை, மலைக்கண்முழை; என வேற்றுமைப்புணர்ச்சி வந்தன. கொல் யானை, கருங்குதிரை, ஆயன் சாத்தன், பொற்சுணங்கு, இராப்பகல், பொற்றொடி, கொற்றன், கொடுத்தான், கொற்றா கொள், உண்டசாத்தன், உண்டு வந்தான், உண்டான் சாத்தன், குண்டுகட்டெருமை, "அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை," "நனி பேதையே," "படைபடை யென்றஞ்சி" என அல்வழிப்புணர்ச்சி வந்தன.

தழுவுதொடராறும் பதினான்குமெனக் கூறவே, தழுவாத் தொடருஞ் சிலவுள அவ்விருவழியுமென்றாராயிற்று. அவை வருமாறு: கைக்களிறு, பொற்குடம், ஆடகப்பூண் என்பன தழுவு தொடராகிய உருபும் பயனும் உடன்றொக்கமையிற் களிறு குடம் பூண் என்பனவற்றோடு நிலைமொழிகள் தழுவாது தொடர்ந்து மூன்றுவிகாரமுமேற்ற வேற்றுமைப்புணர்ச்சி. "இரும்பு திரித் தன்ன மாயிரு மருப்பிற் பரலவலடைய இரலை தெறிப்ப." என்பதனுள், மருப்பினிரலையெனக் கொண்டு கூட்டாக வந்து, இரண்

டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்கு, மருப்பென்பது இரலையென்பதனோடு புணராது, மருப்பிற் பரலெனப் புணர்ந்து திரிந்தது. இத்தொடக்கத்தனவெல்லாந் தழாத்தொடரரிய வேற்றுமைப் புணர்ச்சியாமென்க. “சுரையாழ வம்மிமிதப்ப” என்பதனுள், மொழிமாற்றாய்ச் சுரை மிதப்பவெனத் தழுவு தொடராகி வருவழி இயல்பாக முடியும் எழுவாய்ப்புணர்ச்சி; சுரையாழவெனத் தழாத்தொடராய் உடம்படுமெய் தோன்றி முடிந்தது: இத்தொடக்கத்தனவெல்லாந் தழாத்தொடராய அல்வழிப்புணர்ச்சியாமென்க,

மாடத்தைக்கட்டினான் என வேற்றுமையுருபுஞ் சாரியையும் விரிந்துநின்ற இருமொழியொரு சந்தியாகிய வேற்றுமைச் சந்தியை, வேற்றுமைநயங்கருதி நான்குசொன் மூன்றுசந்தியாக்கி, உருபுஞ்சாரியையும் இடைச்சொல்லாதலின் அல்வழியுள் இடைச்சொற் சந்தியென்று கோடலுமொன்று.

‘எட்டே வேற்றுமை’ என மேற்கூறுவார் எழுவாயும் விளியுமொழித்து வேற்றுமையையும் முதலாறென்றது என்னையெனின்:—பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலான் வேற்றுமையெட்டென்பார், எழுவாய்க்கும் விளிக்கும் உருபுபெயரும் பெயராது விகாரமுமன்றி வேறுருபின்மையின் அவ்விரண்டனையுமொழித்துத் தமக்கென உருபுடையன இடைநின்ற ஆறுவேற்றுமையுமே யாதலின் அவற்றினுருபாறுந் தொக்கும் விரிந்தும் இடைநிற்க அவ்வாறோடும் பதங்கள் பொருந்தும் புணர்ச்சியை வேற்றுமைப் புணர்ச்சியென்றாரென்க.

வினைத்தொகை பண்புத்தொகை அன்மொழித்தொகையென்னும் அல்வழிப்புணர்ச்சியவாய தொகைநிலைத் தொடர்மொழிகளை ஒருமொழிகளென்பாருமுளர். அவர் கூற்றுத் தாய் மலடியென்றாற் போலும். (2)

### இயல்பு புணர்ச்சி.

**153. விகார மனைத்து மேவல தியல்பே.**

**எ-னின்.** மேல் ‘இயல்பொடு விகாரத்தியைவது’ என்றார். அவற்றுள் இயல்பாவதுணர்-ற்று.



**இ-ள்.** மேல் வரும் விகாரவகையனைத்தும் மேவாதது இயல்பு புணர்ச்சியாம். எ-று.

வ-று. பொன்மலை, புகழழகிது, ஒளிமணி என வரும்.

இயல்புக்கு விதி கூறவேண்டுவதென்னையெனின்:—மலர்க்கணை தொடுத்தான் என விகாரமாயவழி மலராகிய கணையைத் தொடுத்தான் எனவும், மலர்கணை தொடுத்தான் என இயல்பாயவழி மலரையுங் கணையையுந் தொடுத்தான் எனவும் பொருள் வேறுபடுதலின் கூறவேண்டுமென்க. (3)

### விகாரம்.

**154. தோன்ற றிரிதல் கெடுதல் விகாரம்**
**மூன்று மொழிமூ விடத்து மாகும்.**

**எ-னின்.** விகாரமுணர்-ற்று.

**இ-ள்.** மெய்யேனும் உயிரேனும் உயிர்மெய்யேனுஞ் சாரியையேனும் ஒன்றும்பலவுந் தோன்றுதலுந் திரிதலுங் கெடுதலும் மேற்சொன்ன விகாரமாம். இம்மூவகை விகாரமும் நிலைமொழி வருமொழிகளின் முதலிடை கடையென்னும் மூன்றிடத்தும் ஏற்றபெற்றி வரும். எ-று.

உ-ம். பூக்கொடி, பூங்கொடி வருமொழிக்கு முதலின் மெய் தோன்றின. பஃறலை வருமொழி முதலினும் நிலைமொழி யீற்றினும் மெய் திரிந்தன. நிலவலயம் நிலைமொழியீற்றின் மெய் கெட்டது. அறுபது நிலைமொழிமுதலுயிர் திரிந்து வருமொழியிடையொற்றுக் கெட்டது. பல்பொருள் நிலைமொழியீற்றுயிர் கெட்டது. நாடுரி நிலைமொழியீற்றுயிர்மெய் கெட்டு டகரந்தோன்றிற்று. தமிழ்ப்பிள்ளை, பனங்காய் நிலைமொழியீற்றிற் சாரியை தோன்றின. காட்டாதொழிந்தன வந்தவழிக் காண்க.

இவ்விகாரங்கள், நிலைமொழி வருமொழிகளுள், ஒருமொழியைச்சார்ந்து வந்தன.

ஒருமொழி தொடர்மொழியென வீதவாது பொதுப்பட மொழிமூவிடத்து மாகுமென்றமையின், இருமொழியைச் சார்ந்து வருவனவுமுளவெனக்கொள்க. அவை வருமாறு:—ஆவழகிது வகரவுடம்படுமெய் தோன்றிற்று. உரியநெய் யகரவுயிர்மெய் தோன்றிற்று. புளியங்காய் அம்முச்சாரியை தோன்றிற்று. இத் தோன்றல் விகாரங்கள், நிலைமொழி வருமொழிகளும் ஒரு மொழிக்கேயுரியவன்றி, இருமொழியையுஞ் சார்ந்துவந்தமை காண்க. (4)

## செய்யுள் விகாரம்.

155. வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல் விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி.

எ - னின். செய்யுள் விகாரமுணர்-ற்று.

**இ - ள்.** அல்வழிவேற்றுமையான் வரும் மேற்கூறிய மூன்று விகாரமுமேயன்றி, ஆறுக இங்ஙனங் கூறிய விகாரங் களும் வருவனவாம். செய்யுளகத்து, அடி தொடை முதலிய நோக்கி அமைக்கவேண்டுமிடத்து. எ - று.

இவ்வதிகாரத்துட்கூறுஞ் செய்யுண் முடிபும் பிறவும் அடங்கு தற்கு, இன்னது நோக்கியென வரைந்து கூறாராயினர்.

வ - று. "குறுத்தாட் பூதஞ் சுமந்த—வறக்கதி ராழியெம் மண்ணலைத்தொழினே." இது குறுந்தாளெனற்பாலது குறுத்தா ளென வலித்தவாறு. "தண்டையி னினக்கிளி கடிவோள்— பண்டைய எல்லண் மாஞேக் கினளே." இது தட்டையெனற் பாலது தண்டையென மெலித்தவாறு "தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற்—போத்தரூர் புல்லறிவினுர்." இது பொத்தருரெனற்பாலது போத்தருரென நீட்டியவாறு. "யானை— யெருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன்—றிருத்தார்நன் றென்றேன்றியேன்." இது தீயேனெனற்பாலது தியேனெனக் குறுக்கியவாறு. "சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே." இது விளையுமே யெனற்பாலது விலையும்மேயென ஒற்றில்வழி ஒற்றை



விரித்தவாறு. இதனுட் சிறியவிலையெனற்பாலது சிறியிலை யெனத் தொகுத்தவாறு. "தொட்டனைத்தூறு மணற்கேணி மாந்தர்க்குக்—கற்றனைத் தூறு மறிவு." இதுவுந் தொட்டது கற்றது எனற்பாலது தொட்டு, கற்று எனத்தொகுத்தவாறு. பிறவுமன்ன. (5)

156. ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே.

எ - னின். இதுவுமது.

**இ - ள்.** அடி தொடை முதலிய நோக்கித் தொகுக்கும் வழித் தொகுத்தலன்றி, வழக்கின்கண் மரூஉப்போலச் செய்யுட்கண் மரூஉவாய் அடிப்பாடாக ஒருமொழி முத லிடை கடையென்னு மூன்றிடத்துங் குறைந்து வருதலுஞ் செய்யுள் விகாரமாம். எ - று.

வ - று. "மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி" எ-ம். "வேதின வெரிநி னோதிமுது போத்து." எ-ம். "நீலுண்டு கிலிகை கடுப்ப." எ-ம். முறையே தாமரை, ஓந்தி, நீலம் எனற்பாலன குறைந்தவாறு காண்க.

செய்யுட்கேயுரிய விகாரங்களை ஈண்டுக் கூறியதென்னை யெனின்:—செய்யுளகத்து அல்வழி வேற்றுமையான் வரும் மூன்று விகாரமும் இவ்வொன்பது விகாரமும் வருதலின், வேறு பாடறிதற்கென்க. (6)

157. ஒருபுணர்க் கிரண்டு மூன்று முறப்பெறும்.

எ - னின். அல்வழி வேற்றுமைப்புணர்ச்சி விகாரத்தின் வருவதோரைய மறுத்தனுதலிற்று.

**இ - ள்.** ஒருபுணர்ச்சிக்கட் டோன்றறிரிதல் கெடுத லென்ற விகாரம் எத்துணை வருமென்று ஐயுறற்க; ஒன்றே யன்றி, இரண்டு மூன்றும் வரப்பெறும். எ - று.

'விகாரத்தியைவது புணர்ப்பு' எனவே, ஒன்று வருதல் கூறுதே அமைதலின், இரண்டு மூன்றுமென்றூர்.

வ - று. யானைக்கோடு, நிலப்பனை, பனங்காய் என முறையே காண்க. (7)

---

## பொதுப் புணர்ச்சி.

158. எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரு ஞநமய வக்க ளியல்புங்
குறில்வழி யத்தனி யைந்நொது முன்மெலி
மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்.

எ - னின். பொதுப்புணர்ச்சியுணர்-ற்று.

இ - ள். இயல்பாகவும் விதியாகவும் இருபத்துநான்கெழுத்தையும் ஈறுகவுடைய பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல் திசைச்சொல் வடசொல்லென்பன நிலைமொழியாக நிற்க, இவற்றிற்கு முன்னர் வரும் ஞகார நகார மகார யகார வகாரங்கள், அல்வழி வேற்றுமையாய இருவழியும், இயல்பாதலும், குற்றெழுத்தின் பின்வரும் யகரவொற்றே ஓரெழுத்தொருமொழியான உயிர் உயிர்மெய் யென்னும் ஐகாரமே நொவ்வே துவ்வே யென்பனவற்றிற்கு முன்னர் வரும் ஞகார நகார மகாரங்கள் பிற சொற்கண் முன் இயல்பாதலன்றி மிக்கு முடிதலுமாம்; ணகார ளகார னகார லகாரங்கட்கு முன் வரும் நகாரம், பிறவீற்றின்முன் இயல்பாதலன்றித் திரியும். எ - று.

எவ்வகைமொழிக்குமென்றமையான், விதியீறும் பெற்றாம்.

நகரம் இவ்வாறு திரியுமென ஈண்டுக் கூறிக் குறைவறுமையின், மேலவற்றோடு ஒருங்கெண்ணுது விதந்தார்.

புணரியலிடத்து யாண்டும் அல்வழி வேற்றுமையெனக் குறிப்பாயேனும் வெளிப்படையாயேனும் விதவாராயின், இருவழியுங் கொள்க.



உ - ம். விள, பலா, புளி, தீ, கடு, பூ, சே, பனை, கோ, கௌ, உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், யாழ், வாள், எஃகு என நிறுத்தி, ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது. எ-ம். ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வலிமை. எ-ம். விளவை நாட்டினன், மண்ணை வைத்தான். எ-ம். வருவித்து, இருவழியும் வருமொழிக்கு முதலாயமென்கணமும் இடைக்கணமும் இயல்பாயவாறு காண்க. ஒழிந்த உயர்திணைப்பெயர் முதலிய அறுவகைச் சொற்களினும் இவ்வாறே யொட்டுக. மெய், கை, ஞான்றது, நீண்டது, மாண்டது. எ-ம். ஞாற்சி, நீட்சி, மாட்சி. எ-ம். இருவழியுமிக்கன. நொ, து, ஞெள்ளா, நாகா, மாடா என இவை, வினையாகலின், அல்வழியின் மிக்கன. தொழிற்பெயரிறுதிமெய் உகரம் பெறுதலும் நகரத்திரிபும் மேல்வருஞ் சிறப்புச் சூத்திரத்துட் காண்க.

மெலி மிகலுமாமென எண்ணின்கணிற்கும் எச்சவும்மையானே, நொ, து என்னும் இரண்டு சொன்முன்னும் இடையின மிகலுமாமெனக் கூறினாராயிற்று. அவை வருமாறு. நொய்யவனு, நொவ்வளவா, துய்யவனு, துவ்வளவா என வரும். இடையின மிகுதல் குறில்வழி யவ்விற்குந் தனியைக்கும் பொருந்தாமையின், உம்மையாற்றழீஇயினர். இவ்வாறு இடையின மிகுதலை ஆசிரியர் தொல்காப்பியரும் "அவற்றுள் மெல்லெழுத்தியற்கை யுறழினும் வரையார்." என உம்மையாற்றழீஇயினர். அச்சூத்திரத்திற்கு அவ்வாசிரியர் கருத்தன்றி வேறுரை செய்வாருமுளர். நொ துவென்னும் இவ்விரண்டு சொன்முன்னும் மெல்லினமும் இடையினமும் மிகாவேற்புணர்ச்சியின்றி விட்டிசைபோலும்; அற்றேல் வாழைபழம் கீரைகறியென்றாற்போலும்.

எகரவீற்றிற்கு உதாரணங் காட்டிற்றிலம்; அது வினவிடைச் சொற்கணன்றி ஈறுகாமையானும், அவ்வினவிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி மேற்கூறுதலானுமென்க.

இச்சூத்திர முதலியன தொடர்ச்சொற் புணர்த்தலென்னு முத்தி.

159. பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்று
வலிவரி னியல்பா மாவி யரமுன் [மெய்
வன்மை மிகாசில விகார மாமுயர் திணை.

எ - னின். இதுவுமது.

இ - ள். இருதிணைப்பொதுவான பெயர்க்கும் உயர்திணைப்பெயர்க்கும் ஈறான மெய்கள் வல்லின முதன்மொழி வந்தால் இயல்பாம். உயிரே யகரமே ரகரமே யென்னும் இவ்வீற் றவ்விருபெயர்கண் முன்னரும் வருங் க ச த பக்கண் மிகாவாம். மெய்யுயிரீற்றுயர்திணைப்பெயர்கள் நாற்கணங்களோடும் புணருமிடத்து நிலைமொழி வருமொழிகள் விகாரப் படுவனவுஞ் சிலவுளவாம். எ - று.

வல்லினத்துண் மயங்காதன மயங்கின் ஈற்றுமெய் விகாரப் படுவனவுமுளவாதலிற் பொதுப்பட வலி வரினென்றும், வல்லின மிகுதற்குரிய ழகரம் அஃறிணைக்கன்றி இவ்விருபெயர்க்கும் ஈறாகாமையின் அதனை யொழித்து ய ர முன்னென்றும், வன்கணமே யன்றி ஏனைக்கணங்கள் புணரினும் விகாரப்படுமாதலின் இறந்தது தழீஇயவெச்சவும்மை கொடுத்து விகாரமுமாமென்னாது விகாரமா மென்றும், அவ்விகாரம் நிலைமொழி வருமொழியிரண்டினும் ஏற்ற பெற்றியாக வருதலின் உயர்திணையீறென்னாது உயர்திணை யென்றுங் கூறினார். உயர்திணைப்பெயரைப் பின்வைத்தார், பின்பு மெடுத்து விதத்தற்கென்க.

உ - ம். சாத்தன், கொற்றன், ஆண்: குறிது, சிறிது, தீது, பெரிது; குறியன், சிறியன், தீயன், பெரியன். எ-ம். கை, செவி, தலை, புறம். எ-ம். பொதுப்பெயரிறுதி னகர ணகரங்கள் வன்மை வர இருவழியுமியல்பாயின. ஊரன், அவன்: குறியன், சிறியன், தீயன், பெரியன். எ-ம். கை, செவி, தலை, புறம். எ-ம், உயர்திணைப் பெயர்களீற்று னகரம் வன்மை வர இருவழியுமியல்பாயிற்று. பிறவுமன்ன. சாத்தி, கொற்றி, தாய்: குறிது, சிறிது, தீது, பெரிது; குறியள், சிறியள், தீயள், பெரியள். எ-ம். கை, செவி, தலை, புறம். எ-ம். பொதுப்பெயரீற்றிகர யகரங்கண்முன் வந்த வல்லினம்



இருவழியும் மிகாவாயின. நம்பி, விடலை: குறியன், சிறியன், தீயன், பெரியன். எ-ம். கை, செவி, தலை, புறம். எ-ம். அவர், ஒருவர்: குறியர், சிறியர், தீயர், பெரியர். எ-ம். கை, செவி, தலை, புறம். எ-ம். உயர்திணை இகர ஐகார ரகரங்கண்முன் வந்த வல்லினம் இருவழியும் மிகாவாயின. பிறவுமன்ன. கபிலபரணர், வடுகநாகன், அரசவள்ளல். எ-ம். ஆசீவகப்பள்ளி, குமரகோட்டம், குமரக் கோட்டம். எ-ம். இருவழியும் உயர்திணையுட் சில தமக்கேற்ற விகாரமாயின. பிறவுமன்ன.

160. ஈற்றியா வினாவிளிப் பெயர்முன் வலி யியல்பே.

எ - னின். இதுவுமது.

இ - ள். மூன்றீற்று வினாமுன்னும் யா வென்னும் வினாப்பெயர் முன்னும், உயிரீறு ஒற்றீறாய விளிப்பெயர்கண் முன்னும் வரும் வல்லினம் இயல்பாம். எ - று.

உ - ம். நம்பியா கொண்டான், சென்றான், தந்தான், போயினான்; உண்கா கொற்றா, சாத்தா, தேவா, பூதா. எ-ம். யா குறிய, சிறிய, தீய, பெரிய. எ-ம். வினாமுன் வல்லினமியல்பாயின. நம்பி, நம்பீ, விடலை, விடலாய், கிள்ளை, கிள்ளாய், சாத்தி, சாத்தீ, தாய், தாயே: கொள், செல், தா, போ என உயர்திணைப்பெயர் அஃறிணைப்பெயர் பொதுப்பெயரின் அண்மைவிளி முன்னுஞ் சேய்மை விளி முன்னும்வரும் வல்லினமியல்பாயின. பிறவுமன்ன.

இறுதியேகாரவோகார வினாமுன் வரும் வல்லினம் இயல்பாதற்கு உதாரணங் காட்டிற்றிலம், அவ்விரண்டற்கும் மேற் சிறப்பு விதி 'இடைச்சொல் லேயோ' என்னுஞ் சூத்திரத்துள் அடக்கிக் கூறுதலின். (10)

161. ஆவி யரழ விறுதிமுன் னிலைவினை
ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே.

எ - னின். இதுவுமது.

இ - ள். உயிரையும் யரழவென்னும் மூன்றொற்றையும் இறுதியாகவுடைய விகுதியுருபினவாய முன்னிலைவினை

முன்னும் ஏவன்முன்னும் வரும் வல்லினம் இயல்புடனே விகற்பமாம். எ - று.

உ - ம். உண்டி, தின்றி, உண்டனை, தின்றனை, உண்டாய், தின்றாய்; உண்டனிர், தின்றனிர், கொற்றா, சாத்தா, தேவா, பூதா; கொற்றரே, சாத்தரே, தேவரே, பூதரே என முன்னிலைவினை முன் இயல்பாயின. கொணா, எறி, விடு, ஆய், சேர், தாழ்: கொற்றா, சாத்தா, தேவா, பூதா என ஏவன்முன் இயல்பாயின. விகற்பம் வந்தவழிக் கண்டுகொள்க. நட கொற்றா, நடக்கொற்றா, எய் கொற்றா, எய்க்கொற்றா, ஈர்கொற்றா, ஈர்க்கொற்றா, தாழ்கொற்றா, தாழ்க்கொற்றா என ஏவன்முன் விகற்பித்தனவென்று கோடலு மொன்று. இவ்வாறு அருகி வருதலின், இயல்பொடு விகற்பே யென விகற்பத்தைப் பிரித்துக்கூறினார். ழகரவீறு முன்னிலை வினையேலாமையின், உதாரணங் காட்டிற்றிலம்.

முன்னிலைவினையென்றார் ஏவலென விதந்ததென்னை யெனின்:—முன்னிலைவினையென்பது, தன்மைவினை படர்க்கை வினைகட்கு இனமாகிய முன்னிலைவினையை உணர்த்துமல்லது, இனமின்றி முன்னிலையொன்றற்கேயுரிய ஏவல்வினையை உணர்த் தாமையினென்க. (11)

---

## உயிரீற்றுச் சிறப்புப் புணர்ச்சி.

162. இ ஈ ஐ வழி யவ்வு மேனை
உயிர்வழி வவ்வு மேமுனிவ் விருமையும்
உயிர்வரி னுடம்படு மெய்யென் றாகும்.

எ - னின். உயிரீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப்புணர்ச்சி கூறு வான்றொடங்கி, உயிரீற்றின்முன் உயிர்முதல் வந்து புணருமா றுணர்-ற்று.

இ - ள். இகர ஈகார ஐகாரங்களின் வழியே யகரமும், அ ஆ உ ஊ ஒ ஓ ஔ என்னும் இவ்வேழுயிர்களின் வழியே வகரமும், ஏகாரத்தின்வழியே யகரமும் வகரமும், உயிர் முதன்மொழி வந்தால், உடம்படு மெய்யென்றுவரும். எ-று.



இருமையென்பது "ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்—தான்புக் கழுந்து மளறு" என்றார்போலக் குணி யைக் குணமாகக் கூறுவதோர் மரபுவழுவமைதி.

உ - ம். மணியழகிது, தீயெழுந்தது, அவையெளவியம். எ-ம். விளவழகிது, பலாவழகிது, கடுவழகிது, பூவழகிது, நொவ்வழ கிது, கோவழகிது, எ-ம். "ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்." சேவழகிது. எ-ம். அல்வழிக்கட் கூறியமுறையே உடம்படுமெய் பெற்றன. மணியொளி, விளவடி, மணியையளித் தான் என வேற்றுமைக்கண் வந்தன. பிறவுமன்ன.

மாயிருஞாலம் என உரிச்சொல்லாகாரவீற்றின்வழி யகரவுடம் படுமெய் வந்ததென்னையெனின்:— அஃது 'இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்' என்னுஞ் சூத்திரத்தான் அமையுமென்க.

"விண்வத்துக்கொட்கும்" என மெய்யீற்றின்வழியும் உயிர் வரின் உடம்படுமெய் பெறும் என்பாருமுளராலோவெனின்:— உயிரீற்றின்முன் உயிர்முதல்வரின் உயிரோடுயிர்க்கு மயக்கமின் மையிற் புணர்ச்சியின்றி விட்டிசைத்து நிற்குமாதலின், உடம்ப டாத அவ்விரண்டும் உடம்படுதற் பொருட்டு இடையே வரு மெய்யை உடம்படுமெய்யென்பவாகலின், வருமுயிரேறி ஒற்றுமைப் பட்டுப் புணர்தற்குரிய மெய்யீற்றின்வழித் தோன்றுமெய்யை உடம்படுமெய்யென்பது பொருந்தாது. அவ்வகரமெய் தோன்று தற்கு விதி வருஞ் சூத்திரத்துட் கூறுப.

உடன்படலென்பது உடம்படலென மரீஇயிற்று. "உடம்பாடி லாதவர் வாழ்க்கை" என வருதல் காண்க. உயிரோடுயிர்க்கு மயக்க மின்மையின், வருமுயிர்க்கு உடம்பாக அடுக்குமெய் உடம்படு மெய்யெனப் பொருள் கூறுதலுமொன்று.

இவ்வுடம்படுமெய்களின்றோற்றம் ஏனைத்தோன்றல் விகாரம் போலாது மயங்காதன மயங்குதற்கு ஆசுபோல வந்தமையின், இப்புணர்ச்சியை இயல்பு புணர்ச்சியென்று கூறுவார் கூற்றும் அமையுமென்பார், உடம்படுமெய் தோன்றுமென்னாது உடம்படு மெய்யென்றாகுமென்றார்.

ஈண்டும் எகரவீறொழியக் கொள்க. (12)

163. எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்
பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமுந் தோன்றுத னெறியே.

**எ-னின்.** 'இ ஈ ஐவழி; என்னுஞ் சூத்திரத்தானும் 'எண்மூ வெழுத்தீற்று' என்னுஞ் சூத்திரத்தானும் எய்திய விதி விலக்கிப், பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

**இ-ள்.** எ என்னும் வினாவிடைச்சொன் முன்னும், அ இ உ என்னும் மூன்று சுட்டிடைச்சொன்முன்னும், உயிரும் யகரமும் வந்தால் வகரமும், ஒழிந்தமெய்கள்வந்தால் அம்மெய்களும், செய்யுட்கட் சுட்டு நீண்டிசைத்தவழி யகரமும், மிகுதன் முறைமையாம். எ-று.

**உ-ம்.** எவ்வணி, எவ்யானை; அவ்வணி, அவ்யானை; இவ்வணி, இவ்யானை; உவ்வணி, உவ்யானை. எ-ம். அ, இ, உ, எ, குதிரை, சேனை, தண்டு, படை, ஞாலம், நாடு, மலை, வளை. எ-ம். எங்ஙனம், அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம். எ-ம் "ஆயிடைத்தமிழ் கூறு நல்லுலகத்து." எ-ம். வகரமும், வந்த மெய்களும், யகரமும், முறையே தோன்றியவாறு காண்க. பிறவுமன்ன.

யகரமுமெய்தின் வவ்வுமென்றமையின் இங்ஙனந் தோன்றிய வகர யகரங்கள் உடம்படுமெய்யல்லவென்பதூஉம்; சுட்டு நீளினெனவே நீடல் உடன்பாடென்பதூஉம், நீடல் ஒருதலையன்றென்பதூஉம், யகரந் தோன்றுமெனவே இந்நீட்சி அடி தொடை நோக்கி நீட்டும்வழி நீட்டலன்றென்பதூஉம், யகரமுமென எண்ணின்கணின்ற இழிவு சிறப்பும்மையான் யகரத்தோற்றம் உயிர்வருவழியன்றிப் பிறவழித் தோன்றாதென்பதூஉம், நெறியென்றமையின் இவ்வாறு நெறிப்பட வருவனவெல்லாங் கோடல் வேண்டுமென்பதூஉம் பெற்றாம்.

ஆவயினான எனச் சுட்டு நீண்டு, பிறவழி யகரந்தோன்றாதாயிற்று.



இவ்வாறு நெறிப்பட வருவன வருமாறு: யாங்ஙனம் என யாவினாமுன் வருமொழி ஙகர மிகுந்தது. ஆங்ஙனம், ஈங்ஙனம், ஊங்ஙனம் எனச் சுட்டு நீண்டவழியும் வருமொழி ஙகர மிகுந்தது. ஈது. எ-ம். ஆங்கு, ஈங்கு, ஊங்கு. எ-ம். ஆண்டு, ஈண்டு. எ-ம். சுட்டுப்பெயர்ச்சொல் நீண்டன. "விண்வத்துக் கொட்கும்." எ-ம். "செல்வுழிச்செல்க." எ-ம். "சார்வுழிச் சார்ந்த தகையள்." எ-ம். மெய்யீற்று முன் உயிர் வருங்கால் இங்ஙனம் உடம்படுமெய்யன்றெனக் கூறும் வகரந் தோன்றின. பிறவுமன்ன. (13)

164. உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்
யவ்வரி னிய்யா முற்றுமற் றொரோவழி.

**எ-னின்.** குற்றியலுகரத்திற்கு 'இ ஈ ஐவழி' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தலும், முற்றியலுகரத்திற்கு அச்சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்பு விதி வகுத்தலும் நுதலிற்று.

**இ-ள்.** குற்றியலுகரம் உயிர்முதன்மொழிவந்தால, தனக்காதாரமான மெய் நிற்கத் தான் கெடும்; யகர முதன் மொழி வந்தால், இகரமாகத்திரியும். முற்றியலுகரமும் அவ்விருவிதியும் பெறும் ஒரோவிடங்களின். எ-று.

உ-ம். நாகரிது, நாகியாது. எ-ம். நாகின்வளர்ச்சி, நாகியமன் கொள்ளான், தனாதடி. எ-ம். கதவு, செலவு, அழகிது, யாது. எ-ம். அதனை, இதனை. எ-ம். இருவழியும் வந்தன. பிறவுமன்ன.

கெடுமென்னாது ஓடுமென்றமையால், குற்றியலுகரம் ஒரோவழி 'இ ஈ ஐவழி' என்னும் பொதுவிதி பெறுதலுங் கொள்க.

வ-று. 'தன்முகமாகத் தானழைப்பதுவே' 'ஆறனுருமைக் கதுவுமாதுவும்.' என வரும்.

ஆசிரியர் தொல்காப்பியர்: அவற்றுள், மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்." எ-ம். "குற்றிய லுகரமு மற்றென மொழிப" எ-ம். கூறிய சூத்திரங்களுள், அற்றென்னுமாட்டேற்றிற்கு, மெய்யீறுபோலக் குற்றியலுகரவீறும் புள்ளியொடு நிற்கு

மெனப் பொருள் கொள்ளாது, இம்மூன்றுஞ் சூத்திரத்தைப் "புள்ளி யீற்றுமு னுயிர்த்தனி தியலாது—மெய்யொடு சிவணு மவ்வியல் கெடுத்தே" என்னும் முப்பத்தாறுஞ் சூத்திரத்தோடு மாட்டெறிந்ததாகக், குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங்கொடுத்துக் கெடாது இரண்டுயிரும் ஒருங்கு நிற்குமெனக் கூறிச் சாதிப்பாருமுளர். அவ்வாறு கூறன் மாட்டேற்றிலக்கண மன்றாம். அன்றியும், மெய்யுயிரென்பன உவமவாகுபெயராய் வந்த காரணக்குறியல்லவாக வேண்டும்; அதனால் அஃது அந்நூலச்சிரியர் கருத்தன்றாம். இவ்வாறு அந்நூலோடு பொருந்தா உரைக்கோள் பலவுள. அவற்றை அந்நூற் கருத்தாகத் துணிந்து, அந்நூலோடு இந்நூலை மறுதலைப்பட்டதென்று கோடற்க. (14)

---

## உயிரீற்றுமுன் வல்லினம்.

165. இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்
க ச த ப மிகும்வித வாதன மன்னே.

எ-னின். உயிரீற்றின்முன் வல்லினம் புணருமாறுணர்த்துவான்றொடங்கி, உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்க்கு 'ஆவியர முன் வன்மை மிகா, என எய்தியதன்மேற் சிறப்புவிதியும், அஃறிணைப்பெயர்க்கும் வினை முதலியவற்றிற்கும் எய்தாததெய்துவித்தலு நுதலிற்று.

இ-ள். இயல்பினானும் விதியினானும் இறுதியாக நின்ற உயிர்களின் முன்னர் வருங் க ச த பக்கள் பெரும்பாலு மிகும், விதந்து சொல்லாதன. எ-று.

விதியீறுவன, முன்னைய உயிரீறும் மெய்யீறுமொழிய உயிரீறாய் நிற்பனவும், யாதானுமோருயிர் பின்னர் இறுதிக்கட்டோன்றி நிற்பனவுமாம். விதப்பாவன சிறப்புவிதி.

உ-ம். ஆடூஉக் குறியன், சிறியன், தீயன், பெரியன், நம்பிக் கொற்றன். எ-ம். சாத்திப்பெண். எ-ம். தாராக்கடிது. எ-ம். ஒற்றைக்கை வட்டக்கல், தாழ்க்கோல். எ-ம். மூவகைப் பெயர்ப்பத



முன் அல்வழியின் மிக்கன. இவற்றுள், ஒற்றை, வட்ட, தாழ என்பன விதியீறு. ஆடூஉக்கை, செவி, தலை, புறம், எட்டிப்பூ, காவிதிப்பூ, நம்பிப்பூ. எ-ம். விளக்கோடு, கடுக்காய், ஆட்டுக்கால் எ-ம். உயர்திணை அஃறிணைப்பெயர்ப்பதமுன் வேற்றுமைக்கண் மிக்கன. ஆடிக்கொண்டான், ஆடாக்கொண்டான், ஆடூஉக்கொண்டான், ஆடெனக்கொண்டான், ஆடக்கொண்டான்; உண்பாக்குச் சென்றான், பூத்துக் காய்த்தது, பொருளெனப் பரந்தது, சாலப் பகைத்தது. எ-ம். இருளின்றிக் கண்டார், பொருளன்றிக்காணார். எ-ம். பலவகைத் தெரிநிலை குறிப்பாய வினையெச்சங்கள்முன் மிக்கன. மற்றைச் சாதி. எ-ம். கடிக்கமலம். எ-ம். சொன்றிக் குழிசி. எ-ம் கங்கைச்சடை. எ-ம். இடைச்சொல் உரிச்சொல் திசைச்சொல் வடசொன்முன் மிக்கன. பிறவுமன்ன.

விதவாதன பெரும்பாலுமிகுமெனவே, விதந்தன சிறுபான்மை மிகுமெனவும், விதவாதன சிறுபான்மை மிகாவெனவுங் கூறினாராயிற்று. அவைவருமாறு:—நொக்கொற்றா, துக்கொற்றா, சாத்தா, தேவா, பூதா என்பன 'எவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே' என்று முற்கூறிய விதப்புவிதி பெறாது மிகுந்தன. எனவே, நொ து முன் மூவினமும் மிகுமென்றாராயிற்று. எரிகரை, குழந்தைகை, குழவி கை, "பழமுதிர்சோலை மலைகிழவோனே." எ-ம். கூப்புகரம், ஈட்டுதனம், நாட்டுபுகழ் எ-ம். இருவழியும் பின் விதவாதன மிகாவாயின. பிறவுமன்ன. (15)

166. மரப்பெயர் முன்ன ரினமெல் லெழுத்து
வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே.

எ-னின். உயிரீற்றுச் சில மரப்பெயர்முன் வரும் வல்லெழுத்திற்கு எய்தியதொருவழி விலக்கிப் பிறிதுவிதியுணர்-ற்று.

இ-ள். உயிரீற்று மரப்பெயர்கண்முன், மேலைப் பொதுவிதியான் வல்லெழுத்து மிகாது, வரும் வல்லெழுத்திற்கு இனமான மெல்லெழுத்து மிகப்பெறுவனவுஞ் சிலவுள வேற்றுமைக்கண். எ-று.

பெறுவனவென்னுஞ் சொற் பெறுனவெனத் தொகுத்தல் விகாரமாயிற்று.

உ-ம். விளங்காய், களங்கனி, மாங்கொம்பு, செதிள், தோல், பழம் என வரும். பிறவுமன்ன.

இனமெல்லெழுத்து மென்னாமையிற் பொதுவிதி இக்காட்டேலாவென்க. (16)

---

## அகரவீற்றுச் சிறப்பு விதி.

167. செய்யிய வென்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரி னெச்சமுற் றாற னுருபே
அஃறிணைப் பன்மை யம்மமுன் னியல்பே.

**எ-னின்.** உயிரீறுகட்குத் தனித்தனி சிறப்புவிதி கூறுவான்றொடங்கி, அகரவீற்றுச் சொல்லுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கனுதலிற்று.

**இ-ள்.** இங்ஙனம் விதந்த அகரவீற்றுச் சொற்கள் ஆறன் முன்னும் வரும் வல்லினம் இயல்பாம். எ-று.

பல்வகையென்பதனை முற்றென்பதனோடு மொட்டுக.

பெயரினெச்சமென இன்சாரியை, தவிர்வழி வந்தமையின், விரித்தல் விகாரம்.

இதன் முதலிறுதிகளின் அகரவீற்றுச்சொல் வைத்தமையான் இடையனவும் அகரவீற்றவென்பதூஉம், பல்வகையென்றதனான் வினையடி நான்கினும் பிறந்த பெயரெச்சமுற்றென்பதூஉம், முற்றென விதந்தமையின் அஃறிணைப்பன்மையென்றது பெயரென்பதூஉம் பெற்றாம். வினையடி நான்காவன, இயல்பாகிய வினையடியொன்றும் எனைப் பெயரிடையுரியடியாகப் பிறந்த வினையடி மூன்றுமாம்.

உ-ம். உண்ணிய கொண்டான், சென்றான், தந்தான், போயினான் எனச் செய்யியவென்னும் வினையெச்சமுன் இயல்பாயின. உண்ட, உண்ணாநின்ற, உண்ணாத. எ-ம். கடைக்கணித்த, சித்திரித்த, வெளுத்த, சினவிய, கறுவிய, அமரிய. எ-ம். திண்ணென்ற, பொன்போன்ற. எ-ம். சான்ற, உற்ற. எ-ம். குதிரை, செந்நாய், தகர், பன்றி. எ-ம். நால்வகைத் தெரிநிலைப் பெயரெச்ச முன்னும் இயல்பாயின. அமர்முகத்த, கடுங்கண்ண, சிறிய, பெரிய, உள, இல, பல, சில. எ-ம். பொன்னன்ன. எ-ம். கடிய. எ-ம். குதிரை, செந்நாய், தகர், பன்றி. எ-ம். மூவகைப் பெயரெச்சக் குறிப்பின் முன்னும் இயல்பாயின. முற்றிற்கும், பொருள் வேறுபாடன்றிச் சொல் வேறுபாடின்மையின், இவையே காட்டாகக் கொள்க. வாழ்க, வாழிய, கொற்றா, சாத்தா, தேவா, பூதா என வியங்கோள் முற்றின்முன் இயல்பாயின. முற்றுமுனியல்பாமென்றமையின், அருத்தாபத்தியான், இவ்வினைமுற்று வினையெச்சமாயுங் குறிப்புமுற்றீரெச்சமாயும் நின்றவழிவரும் வல்லினம் இயல்பாதலுங் கொள்க.



வ-று. உண்ட கண்டன. எ-ம். அமர்முகத்த குதிரை. எ-ம். அமர்முகத்த கலக்கின. எ-ம். வரும். தனைகைகள், செவிகள், தாள்கள், பதங்கள் என ஆறனுருபின்முன் இயல்பாயின. பல குதிரை, செந்நாய், தகர், பன்றி. எ-ம். பல கொடுத்தான், செய்தான், தந்தான், படைத்தான். எ-ம். இருவழியும் அஃறிணைப் பன்மைப்பெயர் முன் இயல்பாயின. பிற பெயர்களுமன்ன. அம்மகொற்றா, சாத்தா, தேவா, பூதா என உரையசையிடைச் சொன்முன் இயல்பாயின.

ஒருசொல்லையே பலவிடத்துங் காட்டியதென்னையெனின்:— இங்ஙனங் காட்டியவற்றுட் பலவென்னும் ஒருசொல், பெயரெச்சக் குறிப்பாயும், குறிப்புவினைமுற்றாயும், குறிப்புமுற்றீரெச்சமாகும் பெயரெச்சக் குறிப்பாயும், வினையெச்சக் குறப்பாயும், குறிப்பு வினையாலணையும் அஃறிணைப்பன்மைப் பெயராயும், பொருளாதியாறனுட் பண்பு காரணமாக வரும் அஃறிணைப்பன்மைப் பெயராயும், அறுவகைப்பட்டுப், பொருணோக்க முதலியவற்றான் இன்னதென்று துணியப்படுமாதலானென்க. பிற்சொற்களுமன்ன. இவ்விகற்பமெல்லாஞ் சொல்லதிகாரத்துட் காண்க. (17)

168. வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே.

**எ - னின்.** வியங்கோண் முற்றுச்சொற்கு எய்தாததெய்துவித்தலும், எய்தியவழிப் புணரும் வல்லினத்திற்கு எய்தியதிகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

**இ - ள்.** வாழியவென்னும் வியங்கோண்முற்றினது ஈற்றுயிர்மெய் குறைதலுமுரித்து; குறைந்து இகரவீறாய் நின்றாலும், வல்லினம் பொதுவிதியான் மிகாது, சிறப்புவிதியுட் கூறிய இயல்பேயாம். எ - று.

**உ - ம்.** ஆவாழி, அந்தணர்வாழி, படாதி வாழி என ஈற்றுயிர்மெய் குறைந்து வந்தது. வாழி கொற்றா, சாத்தா, தேவா, பூதா எனக் குறைந்தவழியும் வல்லினம் இயல்பாயின.

எகலுமுரித்தென முடித்துப் பின்பு அஃதெனச் சுட்டிப் புணர்ச்சிவிதி கூறுதலானும், செய்யுளிறுதிக்கண் வாழியென முடித்து நிற்றலானும், இது புணர்ச்சிவிகாரமன்று கடைக்குறையென்பதூஉம், இவ்வடிப்பாடாகக் குறைந்தியலுந் தன்மை செய்யியலென்னும் வாய்பாட்டு வாழியவென்னும் வினையெச்சத்திற்கின்மையின் வாழியவென்னும் வியங்கோண் முற்றிற்கே இவ்விகாரங் கூறினரென்பதூஉம் பெற்றாம். (18)

169. சாவவென் மொழியீற் றுயிர்மெய் சாதலும் [விதி.

**எ - னின்.** சாவவென்னு நிலைமொழிக்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

**இ - ள்.** சாவவென்னுஞ் செயவெனெச்ச வினைச்சொல்லினது ஈற்றுயிர்மெய்கெட்டுப் புணர்தலும் விதியாம். எ - று

**உ - ம்.** சாக்குத்தினான் என வரும்.

இப்புணர்ச்சி சாவக்குத்தினானென்னும் புணர்ச்சிபோற் சிறந்த தன்மையிற் சாதலுமென்றும், ஒரோவழியருகி வருதலின் விதியென்றுங் கூறினார். (19)

170. பலசில வெனுமிவை தம்முன் றாம்வரின்
இயல்பு மிகலு மகர மேக
லகரம் றகர மாகலும் பிறவரின்
அகரம் விகற்ப மாகலு முளபிற.



**எ - னின்.** வருமொழிக்கு எய்தியதிகந்துபடாமைக்காத்தலும், அதன்மேற் சிறப்புவிதியும், நிலைமொழிக்கு எய்தாததெய்துவித்தலும் நுதலிற்று. இதனுண் மிகுதல் 'செய்யிய' என்னுஞ் சூத்திரத்தான் விலக்கி ஈண்டு விதித்தமையிற் சிறப்புவிதியாயிற்று.

**இ - ள்.** பல சிலவென்னும் இவ்விருசொல்லும், தம் முன்னர்த் தாம் வருமாயின், இயல்பாதலும், மிகுதலும், அகரங்கெட லகரம் றகரமாகலும், இவற்றின்முன் பிறமொழிகளுள் யாதானுமொன்றுவரின், அகரம் நிற்றலும் நீங்கலும் உளவாம். எ - று.

**உ - ம்.** பலபல, சிலசில எனவியல்பாயின. பலப்பல, சிலச்சில என மிக்கன. இம்மிகுதி இயல்புபோற் பயின்று வாராமையின், வல்லினம் விகற்பமாகலுமென்னாது இயல்புமிகலுமென்றார். பற்பல, சிற்சில என அகரமேக லகரம் றகரமாயின. பலகலை பல்கலை; பலசாலை, பல்சாலை; பலதாழிசை, பஃறாழிசை; பல படை, பல்படை; பல ஞானம், பன்ஞானம்; பலநாள், பன்னாள்; பலமணி, பன்மணி; பலவளை, பல்வளை; பல யானை, பல்யானை; பலவணி, பல்லணி; பலவாயம், பல்லாயம் எனப் பிறவரின் அகரம் விகற்பமாயின. சிலவென்பதற்கும் இவ்வாறே கொள்க.

பிறவென்ற மிகையானே, பல்பல, சில்சில என அகரமேக லகரம் றகரமாகாது அருகி வருதலும், பிற வல்லினமொழிவரின் லகரம் றகரத்தோடுறழும்வழி உறழாதியல்பாதலும், அகரவீற்றுப் புணர்ச்சியுள் அமையாதொழிந்தன உளவேல் அவையுங் கொள்க.

அகர நீங்க நின்ற பல்லாயமுதலியன, நன்மை வன்மை மென்மை அன்மை இன்மை என்பனபோல, லகரமெய்யீற்றுப்பண்படியாய் நின்று வருமொழியோடு புணர்ந்தனவன்றோ, அவற்றை அகரவீற்றனவாக வைத்துப் புணர்த்ததென்னையெனின்:— அப்பண்படி, பன்மை சின்மை எனப் பகுதிப்பொருள் விகுதியோடேனும், பலர் பல சில என விகுதிப்பொருள் விகுதியோடேனுமன்றித், தனித்து நில்லா ஒற்றுமை நயம்பற்றியென்க.

இஃது ஒன்றினமுடித்த றன்னினமுடித்தலென்னு முத்திக்கினம்.

அகரம் விகற்பமாமென்ற துணையானே பல் சில் எனப் பண்படி தோன்றினமையின், இவ்விதி அல்வழிக்கேயென்பது கூறுதேயமையுமென்க. (20)

---

## ஆகாரவீற்றுச் சிறப்பு விதி.

171. **அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா.**

**எ - னின்.** ஆகாரவீற்றுச் சொல்லுட் சிலவற்றிற்கு எய்திய தொருமருங்கு விலக்குதனுதலிற்று.

**இ - ள்.** அல்வழிக்கண் ஆவும்மாவுமாகிய இருபெயரும், மியாவென்னும் முன்னிலையசையிடைச்சொல்லும், ஆகார வீற்றஃறிணைப்பன்மை யெதிர்மறை முற்றுவினையும் நிற்க, இவற்றின்முன் வரும் வல்லினமிகா. எ - று.

உ - ம். ஆ குறிது, மா குறிது, சிறிது, தீது, பெரிது. எ - ம். கேண்மியா கொற்றா, சாத்தா, தேவா, பூதா. எ - ம். உண்ணு குதிரைகள், தின்னு குதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள். எ - ம். வரும்.

ஆமாவென்ற துணையானே காட்டாவெனவும் பொருடா இரட்டுறமொழிந்தமையான், ஆமாகுறிது, சிறிது, தீது, பெரிது. என மிகாமையும், முற்றுமுன் மிகாவென்றமையான் அருத்தா பத்தியான் அவ்வினையாலணையும் பெயர்முன் உண்ணுகுதிரைகள்; தின்னுகுதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் என மிகாமையும், அவ்வினைமுற்று வினையெச்சமாயவற்றின்முன் உண்ணு கிடந்தன, தின்னுகிடந்தன, சென்றன, தந்தன, போயின என மிகாமையுங் கொள்க. உண்ணுக்குதிரைகள், உண்ணுக்கிடந்தன எனப் பொதுவிதியான் மிகுமேல், எதிர்மறைப்பெயரெச்சமுஞ் செய்யாவென்னும் வாய்பாட்டுவினையெச்சமுமாமென்க. (21)

172. **குறியதன் கீழாக் குறுகலு மதனோ**
**டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்.**



**எ - னின்.** ஆகாரவீற்றுட் சில சொல்லினதிறுதிக்கு எய்தா தனவெய்துவித்தலும், அவ்வழி வருவதோரையமறுத்தலும் நுதலிற்று.

**இ - ள்.** குற்றெழுத்தின் கீழ்நின்ற ஆகாரங் குறுகலும், அக்குறுகலுடனே உகரம்பெறுதலும்; அவ்விரண்டுமின்றித் தன்னியல்பினிற்றலுமாகிய மூன்றுவிதியும் பெறுஞ் செய்யுட் கண். எ - று.

உ - ம். "சுறமறிவன துறையெல்லாம்." "நிலவிரிகானல் வாய்." எ - ம். "இறவுப் புறத்தன்ன." "சுறவுக்கோட்டன்ன." "மருவினென்செய்யுமோ நிலவு." எ - ம். "நிலாவணங்கு வெண் மணன்மேனின்று." "நெடியகழியுமிரா." எ - ம். முறையேகாண்க.

ஈண்டு இயல்பு ஐயமறுத்தற்குரைத்தாரென்க.

இம்மூன்றுமாந் தூக்கினெனவே, வழக்கின் இரண்டுமொன் றுமாமென்றாயிற்று.

வ - று. உதித்தது நிலவு, நிலா; கண்டேன் கனவு, கனு எனக் குறுகுதலோடு உகரமேற்றலுந் தன்னியல்புமாகிய இரண்டும் வந்தன. தரா, மிடா எனத் தன்னியல்பொன்றுமாய் நின்றன.

இவ்விகாரங்கள் அல்வழி வேற்றுமைப் புணர்ச்சியான் வந்தன வல்லவென்று ஐயமறுத்தற்குக் கூறப்பட்டனவென்க. இவ்வாறு வருவனவெல்லாமன்ன. (22)

---

## இகரவீற்றுச் சிறப்பு விதி.

173. **அன்றி யின்றியென் வினையெஞ் சிகரந்**
**தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே.**

**எ - னின்.** இகரவீற்றுச் சொற்களுள், அன்றி இன்றியென் னும் வினையெச்சக்குறிப்பிற்கு எய்தாததெய்துவித்தலும், எய்திய வழிப் புணரும் வல்லினத்திற்கு எய்தியது விலக்கலும் நுதலிற்று.

இ - ள். அன்றி இன்றி யென்னும் வினையெச்சக் குறிப்புச் சொற்களினது ஈற்றிகரஞ் செய்யுட்கண் உகரமாய் வருமாயின், க ச த பக்கள் பொதுவிதியான் மிகாதியல்பாம். எ - று.

என்னென்னும் வினைத்தொகையும், எஞ்சென்னும் வினைத் தொகையும், சொல்லென்னு முதற்பெயரோடு முடியாது அதன கத்திகரமென்னுஞ் சினைப்பெயரோடு முடிந்தன.

இவ்வாறு உடம்பொடு புணர்த்திக் கூறினமையின் இதற் கிதுவே விதியென்பதூஉம், உகரமாய் வரினெனவே உகரமாதல் உடன் பாடென்பதூஉம், அஃதொருதலையன்றென்பதூஉம் பெற்றாம்.

உ - ம். "நாளன்று போகிப்புள்ளிடைதட்பப்—பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்—வறிது பெயர்குந ரல்லர்—நெறிகொளப் படான் றிரங்கு மருவிப்—பீடுகெழு மலையற்பாடி யோரே." எ-ம். "உப்பின்று புற்கை யுண்கமா கொற்கையோனே." எ-ம். வரும். பிறவுமன்ன. (23)

174. உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகரவுயிர் மெய்யா மேற்பன வரினே.

எ - னின். எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

இ - ள். உரியென்னும் அளவுப்பெயர் வரின், நாழி யென்னும் அளவுப் பெயரினது ஈற்றுயிர்மெய் கெட, அவ்வழி டகரவொற்று வரும்; உரியென்னும் அளவுப்பெயரின் பின் யகரவுயிர்மெய் வரும்; அவ்வுயிர்மெய் வருதற்கேற்ற வரு மொழிகள் வருமாயின். எ - று.

உ - ம், நாடுரி. எ-ம். உரியவுப்பு, உரியபயறு, உரியமிளகு, உரியவரகு. எ-ம். வரும்.

ஏற்பன வரினெனவே, ஏலாதன வரின் உரியரிசி, உரியா ழாக்கு, உரியெண்ணெய் என இச்சிறப்புவிதி பெறாது பொது



விதியேபெறுதல் கொள்க. நாடுரியென்பது நாவுரியென இக்காலத்துமரீஇயிற்று. பொதுவிதியான் வரும் உடம்படுமெய்யை இச்சிறப்புவிதி விலக்கினமையின், நாழியுரியென்பது இலக்கண மன்றென்க.

175. சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்
[றும்.

எ - னின். எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். புளியென்னும் மாமும் பழமுமன்றி, அறு சுவையுள் ஒன்றையுணர்த்தும் பெயர்முன் வரும் வல்லின மிகுதலேயன்றி, அவற்றிற்கினமாய மெல்லினமும் ஓரோவழி மிகும். எ - று.

உ - ம். புளிங்கறி, சோறு, தயிர், பாளிதம் என வரும். பல சுவையுமுடைத்தேனும் மிகுதிப்பற்றிப் புளிப்பாகிய கறியென வும் புளிப்பையுடைய கறியெனவும் விரிதலின், இருவழிக்கும் இவையே காட்டாமென்க.

மென்மையுமென்ற இறந்தது தழீஇயவிழிவு சிறப்பும்மையாற் புளிக்கறியெனப் பொதுவிதியான் வரும் வல்லெழுத்துப்பேறே சிறப்புடைத்தென்க. (25)

---

## இகர ஐகாரவீற்றுச் சிறப்பு விதி.

176. அல்வழி இ ஐம் முன்ன ராயின்
இயல்பு மிகலும் விகற்பமு மாகும்.

எ - னின். இகர ஐகாரவீற்றஃறிணைப்பெயர்முன் வரும் வல்லினத்திற்கு ஒருவழி எய்தியது விலக்கலும், எய்தியதிகந்து படர்க்கை காத்தலும், எய்தியது விலக்கலுடன் விலக்காமையு முணர்-ற்று.

**இ - ள்.** இகர ஐகாரவீற்றஃறிணைப் பெயர்முன், வல்லினம் அல்வழிக்கண் வருமாயின் இயல்பாயும், பொது விதியான் மிகுந்தும், ஒன்றற்கே ஒருகான் மிகாதும் ஒருகான் மிகுந்தும், புணரும். எ - று.

இவ்வீற்றுயர்திணைப்பெயர் பொதுப்பெயர் வினைகட்குப் பொதுச் சூத்திரங்களான் இம்மூன்று விதியும் அமைந்து கிடந்தமையின், இச்சூத்திரத்தாற்கூறுதன் மிகுதியொன்றுமே அமைந்து கிடந்த அஃறிணைப்பெயர்க்கென்பது பெற்றாம்.

ஒப்பின் முடித்தலான் ஐகாரவீறும் உடன் கூறினர்.

உ - ம். பருத்தி, ஒதி, யானை, குதிரை, குறிது, சிறிது, தீது பெரிது என வியல்பாயின. கிளிகுறிது, கிளிக்குறிது; தினைகுறிது, தினைக்குறிது வன விகற்பித்தன. பிறவுமன்ன.

மிகுதி எய்தியதிகந்துபடாமைக் கூறினமையிற் காட்டிற்றிலம். (26)

---

## ஈகாரவீற்றுச் சிறப்பு விதி.

177. ஆமுன் பகரவீ யனைத்தும்வரக் குறுகும்
மேலன வல்வழி யியல்பா கும்மே.

**எ - னின்.** தொடர்மொழியுட் பின்னின்ற இடக்கர்ச்சொல் லினதீற்றீகாரத்திற்கு எய்தாததெய்துவித்தலும், எய்தியவழி அதன்முன் வரும் வல்லினத்திற்கு மேலைச்சூத்திரத்தான் எய்திய திகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

**இ - ள்.** ஆவென்னும் பெயர்முன்னின்ற பகரவீகாரம் இருவழியும் நாற்கணங்களும் வரிற் குறுகும்; குறுகி விதி யிகரவீறாக நின்ற அதன்மேல் வரும் வல்லினம், அல்வழிக் கண் மேலைச் சூத்திரத்துட்கூறிய விதி மூன்றனுள், இயல் பைப் பெறும். எ - று.



குறுகுதற்குக் காரணம் அனைத்தும் வருதலேயன்றி மெனின்ற ஆவுமாமென்பார் ஆமுன்னென்றார்.

பகரவீயென்றது இடக்கரடக்கல். வருஞ் சூத்திரத்துட் பவ்வீயும் அது.

ஆவென்னுஞ் சொல்லும் நாற்கணத்துள் ஒன்று முன்னும் பின்னுந் தொடராதேற் குறுகாதென்பார், வரக்குறுகுமென்றார்.

இருமொழியை நிலைமொழியாக நிறீஇப் புணர்த்தமையான் வரும் விதியிகரவீறாதலின், எய்தியதிகந்துபடாமை இயல்பாகு மென்றார்.

ஆகும்மேயென்றது விரித்தல் விகாரம்.

உ - ம். ஆப்பியரிது, ஆப்பி குளிரும், ஆப்பி நன்று, ஆப்பி வலிது. எ-ம். ஆப்பி யருமை, ஆப்பிக் குளிர்ச்சி, ஆப்பி நன்மை, ஆப்பி வன்மை. எ-ம். இருவழியும் ஈகாரங்குறுகுதலும் அல்வழிக் கண் வல்லினவியல்பு இகந்துபடாமையுங் காண்க. (27)

178. பவ்வீ நீமீ முன்ன ரல்வழி
இயல்பாம் வலிமெலி மிகலுமா மீக்கே.

**எ - னின்.** ஈகாரவீற்றிடக்கர்ப் பெயர்க்கும் நீயென்னும் பெயர்க்கும் மீயென்னும் பெயர்க்கும் முன்னர் வரும் வல்லினத் திற்கு ஒருவழி 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கலும், இவற்றுண் நீயென்பதன்முன் வரும் வல்லினத்திற்கு அச்சூத்திரத்தான் எய்தியதிகந்துபடாமைக் காத்தலும், எய்தியது விலக்கிப் பிறிதுவிதியுமுணர்-ற்று.

**இ - ள்.** பகரவொற்றை யூர்ந்து நின்ற ஈகாரவீற்றிடக் கர்ப்பெயரும், நீ யென்னும் முன்னிலையொருமைப் பொதுப் பெயரும், மீயென்னு மேலாய பண்பையும் அப்பண்பாகு பெயராய் மேலாய இடமுதலியவற்றையுமுணர்த்தி நிற்கும் பலபொருளொரு சொல்லும் நிற்க, இவற்றின்முன் வரும் வல்லினம் அல்வழிக்கணியல்பாம். இங்ஙனம் புணரும் மீயென்னுஞ் சொற்குமுன், அல்வழிக்கண் வல்லெழுத்து மிகலுமாம், மெல்லெழுத்து மிகலுமாம். எ - று.

உ-ம். மீ குறிது, சிறிது, தீது, பெரிது. எ-ம். மீ குறியை, சிறியை, தீயை, பெரியை. எ-ம். மீகண். எ-ம். இயல்பாயின. மீக்கூற்று, மீக்கோள் என வெய்தியதிகந்துபடாமை மிக்கது. மீந்தோல் என மெலி மிகுந்தது. பிறவும் ஏற்றபெற்றி வருவன வுளவேற் கொள்க.

மீகண் என்பது, கண்ணினது மேலிடமெனப் பொருடந்து நிற்குமேனும், ஆறனுருபின் பயனிலையாகும் மீயென்னும் வருமொழி நிலைமொழியாய்நின்று வல்லெழுத்து மிகாதுபுணர்ந்த மையின், இலக்கணப்போலியாய், அல்வழியாயிற்று. மீக்கூற் றென்பது புகழ், அது மேலாயசொல்லாற் பிறந்த புகழென்னும் மேம்பாடெனப் பொருடந்து நிற்றலிற் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. மீக்கோளென்பது மேற்போர்வை; அது யாக்கையின்மேற் கொள்ளுதலையுடைய போர்வையெனப் பொருடந்து நிற்றலின் ஏழாம்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை ஈண்டு மீயென்றது, இடப்பொரு ளோடு ஏழாம்வேற்றுமையுருபின் பொருள்பட நின்றதேனும், கண்ணுதியுருபுவேண்டாமையின் வேற்றுமைத்தொகையாயிற்று. மீந்தோலென்பது மேற்றோல்; அது மேலாயதோலெனப் பொரு டந்து நிற்றலிற் பண்புத்தொகை. இஃதிக்காலத்துப் பீந்தோ லென மரீஇயிற்று.

நீயென்பதன் முன் வல்லினம் இயல்பாதல் 'பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்' என்னுஞ் சூத்திரத்தான் அமை யாதோவெனின்:—விகாரமொழியன்றி அல்வழிக்கண்ணும் வேற் றுமைக்கண்ணும் ஆவியரக்களின் ஒற்றீற்றதாய் நின்று புணரும் பொதுப்பெயர்க்கே வன்மை மிகாவென இருவழிக்குங் கூறிய தமையுமன்றி, அல்வழிக்கண் நீயென உயிரீறாயும் வேற்றுமைக் கண் நின் என நெடில் குறுகி னகரவொற்றீறாயும் விகாரப்பட்டு நிற்கும் இப்பொதுப்பெயர்க்கு அவ்விதியமையாதென்க. (28)



## முற்றுகரவீற்றுச் சிறப்பு விதி.

179. மூன்று றுருபெண் வினைத்தொகை சுட்டீ
றூகு முகர முன்ன ரியல்பாம்.

எ-னின். முற்றுகரவீற்றுட் சிலவற்றின் முன்வரும் வல்லி னத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கனுதலிற்று.

இ-ள். முற்றுகரவீற்று மூன்றுமுருபே ஆறுமுருபே, இயல்பாயும் விகாரமாயும் வரும் எண்ணே, வினைத் தொகையே, சுட்டுப்பெயரேயென்னும் இவற்றின்முன் வரும் வல்லினமியல்பாம். எ-று.

மூன்றுறுருபென்புழி ஆமென்னுஞ் சாரியை தொக்கன.

உ-ம். சாத்தனொடு கொண்டான், சென்றான், தந்தான், போயினன். எ-ம். சாத்தனது கை, செவி, தலை, புறம். எ-ம். எழு, ஒரு, இரு, அறு, கை, செவி, தலை, புறம். எ-ம். அடுகளிறு, சேனை, தானை, படை. எ-ம். அது, இது, உது, குறிது, சிறிது, தீது, பெரிது. எ-ம். கண்டான், செகுத்தான், தந்தான், படைத்தான். எ-ம். வரும்.

உது காண், உதுக்காண் என இயல்பாயும் விகாரமாயும் வரப் பெறுமாலோவெனின்:—அஃது 'இயல்பின் விகாரமும்' என்னுஞ் சூத்திரத்து 'அன்ன பிறவும்' என்பதனான் அமையுமென்க. (29)

180. அதுமுன் வருமன் றூன்றூந் தூக்கின்.

எ-னின். அதுவென்னுஞ் சுட்டுப்பெயர் முன்வரும் அன் றென்னுஞ்சொற்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

இ-ள். அதுவென்னுஞ் சுட்டுப்பெயர்முன் வரும் அன்றென்னும் வினைக்குறிப்புச் சொன் முதனீளுஞ் செய்யு ளகத்து. எ-று.

உ-ம். அதான்று என வரும்.

ஆன்றேயாமென இயல்பை விலக்காமையின், அதுவன்று அதன்று என வருவனவும் கொள்க. அதுமுதன் வருமன்றான்றா மென விதந்தமையான், ஏனை இது உது முன் வருமன்றான்றாகா தென்பது பெற்றாம். (30)

---

## குற்றுகரவீற்றுச் சிறப்பு விதி.

181. வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி.

எ - னின். குற்றுகரவீற்றுட் சிலவற்றிற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதொருவழி விலக்குத லுதலிற்று.

**இ - ள்.** வன்றொடரொழிந்த ஐந்துதொடர்க் குற்றுகர வீற்றின் முன்னும்வரும் வல்லினமிகா அல்வழிக்கண். எ - று.

உ - ம். நாகு, எஃகு, வரகு, குரங்கு, தெள்கு, கடிது, சிறிது, தீது, பெரிது. எ-ம். எகுகால், அஃகுபிணி, பொருது சென்றான், அறிந்து தந்தான், எய்து கொன்றான். எ-ம். வரும். பிறவுமன்ன.

182. இடைத்தொட ராய்தத் தொடரொற் [றிடையின்
மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா [வேற்றுமை.

எ - னின். இதுவுமது.

**இ - ள்.** இடைத்தொடர் முன்னும், ஆய்தத்தொடர் முன்னும், ஒற்றிடையே மிகாத நெடிற்றொடர்முன்னும், உயிர்த்தொடர் முன்னும், வரும் வல்லினமிகா வேற்றுமைக் கண். எ - று.

**உ - ம்.** தெள்கு கால், சிறை, தலை, புறம். எ-ம். எஃகு கடுமை, சிறுமை, தீமை, பெருமை. எ-ம். நாகு கால், செவி, தலை, புறம். எ-ம். வரகு கதிர், சோறு, தாள், பதர். எ-ம். வரும்.



ஒற்றிடையின்மிகா என்பதனை உயிர்த்தொடரென்பதனோடுங் கூட்டுக.

ஒற்றிடையின் மிகும் அவ்விரு குற்றுகரங்களும் வருஞ் சூத்திரத்தாற் கூறுப. அவற்றிற்கு முன்வரும் வல்லினமிகுமென் றுணர்க. "ஈரெழுத்து மொழியு முயிர்த்தொடர் மொழியும்— வேற்றுமை யாயி னொற்றிடையின்மிகத்—தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி." "ஒற்றிடையின் மிகாமொழியுமா ருளவே யத்திறத்தில்லைவல்லெழுத்துமிகலே." "இடையொற்றுத்தொடரு மாய்தத் தொடரு—நடையா யியல வென்மனார் புலவர்." என்றார் ஆசிரியர் தொல்காப்பியருமென்க. (32)

183. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுட்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.

**எ - னின்.** மேலை நிலைமொழிக்கோர் புறனடையாய் எய்தாத தெய்துவித்தலும், வருமொழிக்கு முதல் உயிரேல் இந்நிலைமொழிக்கு 'உயிர்வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன் மேற் சிறப்பு விதியுமுணர் - ற்று.

**இ - ள்.** நெடிற்றொடர்க்குற்றுகரவீற்று மொழிகளுள்ளும், உயிர்த்தொடர்க்குற்றுகரவீற்று மொழிகளுள்ளும், அவ்வுகரப் பற்றுக்கோடாகிய வல்லெழுத்தாறனுள், டகார றகாரமான இரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்க ணிரட்டும். எ - று.

குற்றுகரங்களென்னும் எழுத்துக் குறிப்பு அம்மொழிகளை யுணர்த்திநின்றது. வருமொழி வரையாமையின், நாற்கணமுங் கொள்க.

உ - ம். (ஆட்டுக்கால், பாற்றுக்கால், முருட்டுக்கால், முயிற்றுக்கால், செவி, தலை, புறம், ஞாற்சி, நிறம், மயிர், யாப்பு, வண்மை, அடி எனவரும்.

இவ்விரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டுமெனவே சிறுபான்மை வேற்றுமைக்கண் இரட்டாமையும், சிறுபான்மை அல்வழிக்கண் இரட்டுதலும், சிறுபான்மை பிறவொற்றிரட்டுதலுங் கொள்க.

வ - று. "காவிரி புரக்கு நாடுகிழ வோனே." "காடகமிறந் தார்க்கே யோடுமென் மனனே காண்." "கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை." என வேற்றுமைக்கண் இரட்டாவாயின. காட்டரண், குளிற்றியானை என அல்வழிக்கண் இரட்டின. வெருக்குக்கண், வெங்கருணை, எருத்துக்கால். எ-ம். எருத்து மாடு. எ-ம். இருவழியும் பிறவொற்றிரட்டின. (33)

**184. மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற் றம்மின வன்றொட ராகா மன்னே.**

எ - னின். மென்றொடர்க் குற்றுகர மொழிகளுட் சில நிலைமொழிக்கு, மூவினமும்வரின் எதிர்மறைமுகத்தான் எய்தாத தெய்துவித்தலும், உயிர்வரின் அவ்வெதிர்மறை முகத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியுமுணர்-ற்று.

இ - ள். மென்றொடர்க் குற்றுகரமொழிகளுட் சில, வேற்றுமைக்கண் தமக்கினமான வன்றொடராதலையொழிந் தன பெரும்பால. எ - று.

சிலவென்னுமெழுவாய், ஆகாவென்னும் எதிர்மறைவினையா லணையும் பெயரகத்து முதனிலையோடு முடிந்தது.

வருமொழி வரையாமையின், நாற்கணமுங் கொள்க.

உ - ம். மருத்துப்பை, சுருப்புநாண், கருப்புவில், கற்று என வரும்.

இவ்வாறு சில வருதலையும் எதிர்மறை முகத்தாற் கூறினமையின், வழக்கின்கண்ணுஞ் சான்றோர் செய்யுட்கண்ணும் ஏற்ற பெற்றி கொள்க. (வண்டுக்கால், பந்துத் திரட்சி முதலியனவெல்லாம் வன்றொடராகாதனவென்க.)

சில வன்றொடராமெனவே ஆகாதன பலவென்பது தாமே போதரவும், மன்னேயென்ற மிகையானே, எற்புடம்பு, அற்புத் தளை, குரக்குமனம் என அல்வழிக்கண் அருகி வன்றொடராதலுங் கொள்க. (34)



**185. ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே.**

எ - னின். இதுவும் மேலை நிலைமொழிக்கு எய்தாததெய்து வித்தலும், எய்தியதன்மேற் சிறப்புவிதியுமுணர்-ற்று.

இ - ள். ஐகாரச்சாரியை இறுதியிலே பெற்று வரும் மென்றொடர்க் குற்றுகரமொழிகளுஞ் சிலவுள. எ - று.

மேலைச் சூத்திரத்தைச்சார வைத்தமையான், இதுவுமென் றொடரென்பது பெற்றாம். வருமொழி வரையாமையின், நாற்கண முங் கொள்க.

உ - ம். பண்டைக்காலம், இற்றைநாள், எ-ம். அற்றைக் கூலி, இற்றை நலம், எ-ம். வரும். பிறவுமன்ன.

மேலைச் சூத்திரத்தைச்சார வைத்தாரேனும், ஐயீற்றுடைக் குற்றுகரமெனப் பொதுப்படக் கூறினமையின், நேற்றைப் பொழுது எனப் பிறதொடர்கள் ஐகாரம் பெறுதலும், ஐயீற் றுடைக்குற்றுகரமென உடைமையாக்கிக் கூறினமையின் வரு மொழிப் புணர்ச்சியானன்றி ஒற்றை இரட்டை வேட்டை என ஒருமொழியாய் நின்று ஐகாரம்பெறுதலும், ஈராட்டை மூவாட்டை எனத் தொடர்மொழியாய் நின்று ஐகாரம் பெறுதலுங் கொள்க.()

**186. திசையொடு திசையும் பிறவுஞ் சேரின் நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும் றகரம் னல்லவாத் திரிதலு மாம்பிற.**

எ - னின். குற்றுகரவீற்றுத் திசைப்பெயர்க்கு எய்தாததெய்து வித்தனுதலிற்று.

இ - ள். திசைச்சொல்லோடு திசைச்சொல்லும் பிற சொல்லும் புணருமிடத்து, நிலைமொழியீற்றினின்ற உயிர் மெய்யும் அதன்மேனின்ற ககரவொற்றுங் கெடுதலும், அங்ஙனநின்ற றகரவொற்று னகரவொற்றும் லகரவொற்று யுந் திரிதலுமாம். எ - று.

உ-ம். வடகிழக்கு, வடமேற்கு, வடதிசை, வடமலை, வடவேங்கடம்; தென்கிழக்கு, தென்மேற்கு, தென்குமரி, தென்வீதி, தென்மலை; மேல்பால், மேனாடு; குடதிசை, குடநாடு, குணகடல், குணபால் எனவரும்.

பிறவென்றமையானே, மேற்றிசை, மேலைத்திசை; கீழ்த்திசை கீழைத்திசை; கீழ்மேற்றென்வடல் எனவும் கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு, வடக்கூர், தெற்கூர், வடக்குமலை, தெற்குமலை என இங்ஙனங் காட்டி விகாரமின்றியும் வருமெனவும், இவ்விதியெல்லாம் ஏற்றபெற்றிகோடல் வேண்டுமெனவுங் கொள்க.

வடக்கிழக்கென்பது வடக்குங் கிழக்குமாயதோர் கோணம் என உம்மைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. வடதிசையென்பது வடக்காயதிசையெனப் பண்புத்தொகை. வடமலையென்பது வடக்கின்கண் மலையென ஏழாம்வேற்றுமைத் தொகை. கீழ்மேற்றென்வடல், கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்பன உம்மைத்தொகை. பிறவுமன்ன. (36)

**187.** தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடுங் காய்வரின்.

எ-னின். தெங்கென்னும் பெயர்க்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

இ-ள். காயென்னுஞ்சொல் வருமாயின், தெங்கென்னு நிலைமொழி முதனீண்டு ஈற்றுயிர்மெய் கெடும். எ-று.

ஈறு கெடுமென்றமையான், முதனீளுமென்பது பெற்றாம்.

உ-ம். தேங்காய் என வரும்.

தெங்கு நீண்டீற்றுயிர்மெய் கெட்டே புணருமென இயல்பை விலக்காமையின், தெங்கங்காய் என வருமுடிபுங் கொள்க. (37)

### சிறப்புவிதி எண்ணும் பெயர்கள்.

**188.** எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்
ஒன்று முதலெட் டீறா மெண்ணுண்
முதலீ ரெண்முத னீளு மூன்றா



றேழ்குறு கும்மா றேழல் லவற்றின்
ஈற்றுயிர் மெய்யு மேழ னுயிரும்
ஏகு மேற்புழி யென்மனார் புலவர்.

எ-னின். ஒன்று முதல் எட்டீறாம் எண்ணுப் பெயர்க்கு, உயிர்வரின் எய்தியன்மேற் சிறப்புவிதியும், மெய்வரின் எய்தாததெய்துவித்தலும் நுதலிற்று.

**இ-ள்.** எண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிறபெயரும்வரின், நிலைமொழியாகநின்ற ஒன்று முதல் எட்டீறாமெண்களுள், முதற்கண்ணவாய ஒன்றிரண்டென்னும் இரண்டெண்ணும் முதனீளும்; மூன்றும் ஆறும் ஏழும் முதல் குறுகும்; ஆறும் ஏழுமல்லாத ஆறெண்களினீற்றுயிர்மெய்யும் ஏழென்னு மெண்ணினீற்றுயிருங் கெடும், ஏற்குமிடங்களினென்று சொல்லுவர் புலவர். எ-று.

இச்சூத்திரத்துட் கூறிய விகாரமும், இப்புணர்ச்சி முற்ற முடித்தற்குப் பின் ஐந்து சூத்திரத்தாற் கூறும் விகாரமும், உயிர்வரின் உகரமெய் விட்டோடுதலையும் ஒழிந்த கணங்கள்வரிற் றன்னியல்பினிற்றலையும் விலக்கியவல்ல; இவ்விகாரமனைத்தும் ஒருங்கு வேண்டுமென்னு நியதியவல்ல; இவ்விகாரம் பண்புத்தொகைக்கேயுரிய என்பார், ஏற்புழியென்றும், ஏழென்பதனை உயிரீற்று மொழியாகக் கொள்வார் சிலர், ஒற்றீற்று மொழியாகக் கொள்வார் சிலர், யாமொருதலை துணிந்தாமென்பார், என்மனார் புலவரென்றும், ஒற்றீறும் விலக்கப்படுவதன்றென்பார், உடம்பொடு புணர்த்தி ஒற்றீறாக ஏழ்குறுகுமென்றுங் கூறினார்.

ஏழென்பது, முற்றுகரவீற்றதேனும், ஒன்றினமுடித்தற்றன்னின முடித்தலென்னு முத்தியான் ஈண்டுக் கூறப்பட்டதென்க.

உ-ம். அறுபது, எழுபது; கழஞ்சு, நாழி, மீன். எ-ம். ஏழ்கடல். எ-ம். வரும். ஏனையவற்றிற்குதாரணம் பின்னர்க் காட்டுதும், இரண்டாயிரம், ஏழாயிரம் என உயிர்வரிற் குற்றுகரமும் முற்றுகரமுங் கெட்டுப் புணர்ந்தன. இரண்டு கழஞ்சு

மூன்றுபடி, நான்குபொருள், எழுகடல் எனத் தன்னியல்பினின்று புணர்ந்தன. பிறவுமன்ன. (38)

189. ஒன்றன் புள்ளி ரகர மாக
இரண்ட னொற்றுயி ரேகவுவ் வருமே.

எ - னின். இதுவுமது.

இ - ள். மேற்கூறிய நால்வகைப் பெயரும் வருமிடத்து, ஈற்றுயிர்மெய் யேகுமென்றமையான் இறுதியுயிர்மெய் கெட நின்ற ஒன்றென்னுமெண்ணினது னகரவொற்று ரகர வொற்றாக, இரண்டென்னுமெண்ணினது ணகரவொற்றும் ரகரத்தையூர்ந்து நின்ற அகரவுயிருங்கெட, அவ்விரண்டு ரகரத்தின்மேலும் உகரம் வரும். எ - று.

உ - ம். ஓராயிரம், ஈராயிரம், ஒருபது, இருபது, ஒரு கழஞ்சு, இருகழஞ்சு, ஒருநாழி, இருநாழி, ஒருவகை, இருவகை எனவரும். ஒராயிரம், இராயிரம் என்புழி, உகரக்கேடு 'முற்றுமற்றொரோவழி' என்பதனாற் கொள்க. பிறவுமன்ன. (39)

190. மூன்றனு றுப் பழிவும் வந்தது மாகும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். நால்வகைப் பெயரும் வருமிடத்து, இறுதி யுயிர்மெய்கெட நின்ற மூன்றென்னுமெண்ணினது னகர வொற்றுக் கெடுதலும் வருமொற்றாகத் திரிதலுமாம். எ - று.

உ - ம். மூவொன்று, மூவெடை, மூவுழக்கு, மூவுலகு. எ-ம். முப்பது, முக்கழஞ்சு, மூந்நாழி, மும்மொழி. எ-ம் வரும். (40)

191. நான்கன் மெய்யே லறவா கும்மே.

எ - னின். இதுவுமது.

இ - ள். நால்வகைப்பெயரும் வருமிடத்து, இறுதி யுயிர்மெய் கெட நின்ற நான்கென்னுமெண்ணினது னகர வொற்று லகரவொற்றாயும் றகரவொற்றாயுந் திரியும். எ-று.



உ - ம். நாலொன்று, நாலெடை, நானாழி, நான்மணி. எ-ம். நாற்பது, நாற்கழஞ்சு, நாற்கலம், நாற்கவி. எ-ம். வரும். (41)

192. ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். நால்வகைப் பெயரும் வருமிடத்து இறுதி யுயிர்மெய் கெட நின்ற ஐந்தென்னுமெண்ணினது நகர வொற்று வருமொற்றாகியும், அதற்கினமாகியும், கெட்டும் முடிவதாம். எ - று.

உ - ம். ஐம்மூன்று, ஐம்மஞ்சாடி. ஐவ்வட்டி, ஐவ்வண்ணம். எ - ம். ஐம்பது, ஐங்கழஞ்சு, ஐங்கலம், ஐம்பொறி. எ - ம். ஐயொன்று, ஐயெடை, ஐயாழக்கு, ஐயம்பு. எ - ம். வரும்.

அடைவதுமினமுமென்றமையின், அருத்தாபத்தியான் ஐந்நூறு, ஐந்தூணி என்புழி ஒற்றுத் தன்னியல்பினிற்றல்கொள்க.

193. எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப.

எ - னின். இதுவுமது.

இ - ள். நால்வகைப்பெயரும் வருமிடத்து, இறுதி யுயிர்மெய் கெடநின்ற எட்டென்னுமெண்ணினது டகர வொற்று ணகரவொற்றாகுமென்று சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம். எண்பது, எண்கழஞ்சு, எண்கலம், எண்குணம் எனவரும்.

'எண்ணிறையளவும்' என்னுஞ் சூத்திரத்துட் கூறிய புணர்ச்சிக்கு வேண்டும் விகாரம் இதுகாறுமென்பது தோன்ற, அச்சூத்திரத்துட்கூறிய 'புலவர்' என்னுமெழுவாயைச் சுட்டி, அதன் பயனிலையாக இச்சூத்திரத்திறுதிக்கண் என்பவென்றார். ()

194. ஒன்பா னொடுபத்து நூறு மொன்றின்
முன்னதி னேனைய முரணி யொவ்வொடு
தகர நிறீஇப்பஃ தகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே.

**எ - னின்.** ஒன்பதென்னுமெண்ணுப்பெயர்க்கு எய்தாத தெய்துவித்தலும், அதனோடு புணரும் பத்து, நூறென்னும் வருமொழிகட்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தானும் 'எண்மூவெழுத்தீற்று' என்னுஞ் சூத்திரத்தானும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதியுமுணர்-ற்று.

**இ - ள்.** ஒன்பஃதுடனே பத்தென்பதும் நூறென்பதும் வந்து புணருமாயின், அந்நிலைமொழி வருமொழிகளுண் முன்னர்த்தாகிய நிலைமொழியினின்றும், ஏனை வருமொழியாகிய பத்தையும் நூற்றையும் நிரனிறைவகையானே நூறெனவும் ஆயிரமெனவுந் திரித்து, நிலைமொழிக்கு முதற்கண் ஒகரவுயிரோடு தகரமெய்யை அதற்காதாரமாக நிறுத்தி, அந்நிலைமொழி யிறுதிக்கட்பஃதைக்கெடுத்து, அம்மொழி முதற்கு அயனின்ற னகரவொற்றை முறையே ணகரவொற்றாயும் ளகரவொற்றாயுந் திரிப்பது முறைமையாம். எ - று.

முன்னதினென்னும் இன்னுருபு, நீங்கற் பொருட்டாய், ஏனையவென்னும் இடைச்சொல்லடியாகத் தோன்றிய வினைக் குறிப்புப் பெயர் கொண்டது.

நிலைமொழித் திரிபுபோல வருமொழித் திரிபும் வகைபடக் கூறாது பொதுப்பட முரணியென்றாரேனும், "ஒன்பா னொகர மிசைத் தகரமொற்று—முந்தை யொற்றே ணகார மிரட்டும்—பத்தென் கிளவி யாய்தபக ரங்கெட—நிற்றல் வேண்டு மூகாரக் கிளவி—யொற்றிய தகரம் றகர மாகும்." எ-ம். "ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே—முந்தை யொற்றே ளகார மிரட்டு—நூறென் கிளவி நகார மெய்கெட—வூவா வாகு மியற்கைத் தென்ப—வாயிடை வருதலிகார ரகார—மீறுமெய் கெடுத்து மகர மொற்றும்." எ-ம். ஆசிரியர் தொல்காப்பியர் கூறியவாற்றால் அவற்றின் றிரிபறிந்து திரித்துக்கொள்க.

நெறியேயென்ற இலேசானே தனிக்குறின் முன்னொற்றிரட்டித்தலுங் கொள்க.



உ - ம். தொண்ணூறு. எ-ம். தொள்ளாயிரம். எ-ம். வரும் தொளாயிரமென இக்காலத்து மரீஇயிற்று.

ஒன்பஃது நின்று புணரினும் ஒன்பது நின்று புணரினும் இம்முடிபேயாமென்பார் பஃதகற்றியென்பதனோடு பொருந்த ஒன்பஃதொடென்னாது ஒன்பானொடென்றும், தகரவொற்றை ஒகரவுயிர்க்கு உடம்பாக நிறுத்துகவென்பார் ஒவ்வொடென்றும், இப்புணர்மொழிகள் ஒகரவுயிரொன்றொழிய விகாரப்பட்டுக் கிடந்ததைக் குறிப்பின்றி முடியும் மரூஉமுடிபென்று கொள்ளற்கவென்பார் திரிவதென்னாது திரிப்பதென்றும், இவற்றை இலக்கண முடிபாகத் தொல்லாசிரியர் முடித்தவாறே முடித்தாமென்பார் நெறியேயென்றுங் கூறினார்.

இச்சூத்திரத்து முன்னதினேனைய முரணியென்பதற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது ஒன்பஃதினானே பத்தையும் நூற்றையும் பெருக்கி யெனப் பொருள் கொள்வாருமுளர். முரணியென்னுஞ் சொற்கு அது பொருளன்றாதலானும், அது பொருளாமேனும் அதனால் வருமொழி இவ்வாறு திரிந்தவெனத் தோன்றாமையானும், தோன்றின் நிலைமொழிக்கு விகாரங் கூற வேண்டாமையானும் அது பொருந்தாதென்க.

இன்னும், முன்னதினேனைய முரணியென்பதற்கு, நிலைமொழியாய எட்டின்மேலொன்று ஒன்பஃதெனப்பஃதென்னும் இறுதியாய்த் திரிந்து நின்றாற்போல, வருமொழியாய என்பதின் மேற்பத்தை நூறெனவும் எண்ணூற்றின்மேனூற்றை ஆயிரமெனவுந் திரித்துப் பொருள்கோடலுமொன்று. (44)

195. முதலிரு நான்கா மெண்முனர்ப் பத்தின்
இடையொற் றேக லாய்த மாகல்
எனவிரு விதியு மேற்கு மென்ப.

**எ - னின்.** ஒன்றுமுத லெட்டெண்களின் முன் வரும் பத்தென்னு மெண்ணிற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

**இ - ள்.** ஒன்றுமுதலாகிய எட்டெண்களின் முன்னும் வரும் பத்தென்னு மெண்ணிடை நின்ற தகரவொற்று ஒருகாற் கெடுதலும், ஒருகால் இடையே தகரநின்ற நிலைக்களத்து அது கெட ஆய்தம் வருதலும் என்னும் இவ்விரண்டு விதியையுமேற்கும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

இடையென்பதனைப் பின்னுங் கூட்டுக.

இடையே யாய்தமாக வென்றமையின், அவ்வழித் தகரக்கேடு கூறாதேயமையுமென்க.

**உ - ம்.** ஒருபது, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது. எ-ம். ஒருபஃது, இருபஃது, முப்பஃது, நாற்பஃது, ஐம்பஃது, அறுபஃது, எழுபஃது, எண்பஃது. எ-ம். வரும். (45)

196. ஒருபஃ தாதிமுன் னொன்றுமுத லொன்பான்
எண்ணு மவையூர் பிறவு மெய்தின்
ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே.

**எ - னின்.** மேலைச் சூத்திரத்தானெய்திய ஒருபஃதாதியாய நிலைமொழிக்கு, உயிர்வரின் 'உயிர்வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் மெய்வரின் எய்தாததெய்துவித்தலு நுதலிற்று.

**இ - ள்.** ஒருபஃதாதியாய எட்டெண்களின் முன்னும் ஒன்றுதியொன்பதெண்ணும் அவையூர்ந்த பிறவும் வந்து புணருமாயின், ஆய்தங்கெட, அந்நிலைக்களத்து இயல்பாய தகரம் வரும். எ - று.

ஐயமறுத்தற்கு அவையூர் பிறவுமென்றார்.

உ - ம். ஒருபத்தொன்று, இருபத்தொன்றே காலே யரைக்கால், முப்பத்தொருகழஞ்சு, எழுபத்தொன்பதின்கலனே தூணி எழுபத்தொன்பதியாண்டு என வரும். பிறவுமன்ன.



ஆய்தமழியவாண்டாகுந் தவ்வேயென்றமையான், ஆய்தமழிந்தவற்றிற்கும் ஒருபது முதலிய முற்றுகரவீற்றெண்ணுப் பெயர்கட்கும் வேற்றுமையின்மையின், அருத்தாபத்தியான் அவற்றோடிவ்வருமொழிகள் புணரினும் ஆண்டாகுந்தவ்வே யென்றாராயிற்று. இவற்றிற்குங் காட்டு அவையேயாமென்க. ()

197. ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி
எண்ணிறை யளவும் பிறவரிற் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்றும்
ஏற்ப தேற்கு மொன்பது மினைத்தே.

**எ - னின்.** பத்தென்னு நிலைமொழிக்கு, உயிர்வரின் 'உயிர்வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதியும், மெய்வரின் எய்தாததெய்துவித்தலும், ஒன்பதென்னு நிலைமொழிக்கு, உயிர்வரின் 'உயிர்வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியன்மேற் சிறப்புவிதியும், மெய்வரின் எய்தாததெய்துவித்தலுமுணர்-ற்று.

**இ - ள்.** ஒன்று முதலாகிய பத்துய் ஆயிரமுங் கோடியுமென்னுமெண்ணுப் பெயரும் நிறைப்பெயரும் அளவுப் பெயரும் பிறபெயரும் வந்து புணருமாயின், நிலைமொழியாகிய பத்தென்னுமெண்ணினது ஈற்றுயிர்மெய்யைக் கெடுத்து, அந்நிலைக்களத்து இன்சாரியையேனும் இற்றுச் சாரியையேனும் ஆண்டைக்கேற்பதேற்று நிற்கும். ஒன்பதென்னு நிலைமொழியும், இங்ஙனம் விதந்த எண்ணுதிப் பெயர் வந்து புணருமாயின், இன்னேனும் இற்றேனும் ஆண்டைக்கேற்பதேற்று நிற்கப்பெறும். எ - று.

**உ - ம்.** பதினொன்று, பதின்மூன்று, பதினாயிரம், பதின் கழஞ்சு, பதின்கலம், பதின்மடங்கு. எ-ம். பதிற்றொன்று, பதிற்றிரண்டு, பதிற்றுமூன்று, பதிற்றுக்கோடி, பதிற்றுத்தூணி. எ-ம். ஒன்பதினாயிரம், ஒன்பதின் கழஞ்சு, ஒன்பதின் கலம், ஒன்பதின் மடங்கு. எ-ம். ஒன்பதிற்றொன்று, ஒன்பதிற்றிரண்டு, ஒன்பதிற்

றுக் குறுணி. எ-ம். வரும். பிறவுமன்ன. பதிற்றொன்றென்பது உம்மைத்தொகை. பதிற்றொன்றென்பது பண்புத்தொகை. பிறவுங்கண்டுகொள்க.

பத்துக்கோடி, ஒன்பதுகோடி என இந்நிலைமொழிகள் தன்னியல்பினிற்றலேயன்றி வழக்கின்கண்ணுஞ் சான்றோர் செய்யுட்கண்ணும் இவ்வாறமைந்து கிடந்தனவுங் கொள்கவென்பார் ஏற்பதேற்குமென்றும், ஒன்பதனீற்றுயிர்மெய்யைக் கெடாது குற்றுகரவீற்றுப் பொதுவிதியான் உயிரொன்றுமே கெட இன்னுமிற்று மேற்பதேற்று நிற்றலின் ஒன்பது மிற்றேயெனத் தன்மையணியாக்காது உவமையணியாக்கி இனத்தேயென்று கூறினார். ஒன்பதென்பதனிறுதி பத்தென்பதுபோல முரணி நிற்றலின், அதனோடு இதனை மாட்டெறியப்பட்டதெனினுமமையும். (47)

198. இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்மெய்
கரந்திட வொற்றுனவ் வாகு மென்ப.

எ - னின். இதுவும் பத்தென்னு நிலைமொழிக்கு 'உயிர்வரினுக்குறள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

இ - ள். இரண்டென்பதுவரின், பத்தென்னு நிலைமொழியினது ஈற்றுயிர்மெய் கெடத், தகரவொற்று னகரவொற்றாகத் திரியுமென்று சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம். பன்னிரண்டு என வரும். உம்மைத்தொகைக்கண்ணும் பண்புத்தொகைக்கண்ணும் இரண்டென்னுமெண் வருமொழியாய் வருமேனும், முன்வரினென வருதலைச் சிறப்பித்தமையான், ஒருசொன்னீர்மையாய்ச் சிறந்த உம்மைத்தொகைக்கு இவ்விதி கூறினாரென்க. (48)

199. ஒன்பதொழித்தவெண் ணொன்பதுமிரட்டின்
முன்னதின் முன்னல வோட வுயிர்வரின்
வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி.



எ - னின். ஒன்பதொழித்த ஒன்பதெண்களாய நிலைமொழிகளுள், மூன்றுறேழற்கு 'எண்ணிறையளவும் பிறவுமெய்தின்' என்னுஞ் சூத்திரத்துண் 'மூன்றுறேழ் குறுகும்' என எய்தியதன்மேற் சிறப்புவிதியும், எல்லாவற்றிற்கும் உயிர்வரின் எய்தியது விலக்கிப் பிறிது விதியும் மெய்வரின் எய்தாதெய்துவித்தலும் நுதலிற்று

இ - ள். ஒன்பதென்னுமெண்ணொன்றனையுமொழித்து நின்ற ஒன்றுதிபத்தீறான எண்ணொன்பதனையும் இரட்டித்துக் கூறின், நிலைமொழி முதலெழுத்தொன்று நிற்க, அல்லனவெல்லாங்கெட, உயிர் முதலான எண்வரின் வகரவொற்றும், மெய் முதலான எண்வரின் அவ்வந்தவொற்றும், மிகுதன் முறைமையாம். எ - று.

உ - ம். ஒவ்வொன்று, இவ்விரண்டு, மும்மூன்று, நந்நான்கு ஐவைந்து, அவ்வாறு, எவ்வேழு, எவ்வெட்டு, பப்பத்து எனவரும்.

நெறியென்றமையானே, நான்கிற் குறுக்கமும், ஐவைந்தென்புழி ஐகாரக்குறுக்கத்தின் முன்னொற்றிரட்டாமையும் ஒரோவொன்று, ஒன்றொன்று, கழக்கழஞ்சு, கலக்கலம் என இரட்டித்து வருவனவும், குற்றுகரப்புணர்ச்சி விதியுட் கூறுதொழிந்து நெறிப்பட வருவனவுளவேல் அவையுங் கொள்க.

ஒவ்வொன்று கொடுவென்றால் இம்முறையே பலவற்றையுங் கொடுவெனப் பொருடந்துநிற்றலின், இஃதடுக்கன்று, வேற்றுமையல்லனவெல்லாம் அல்வழியாதலிற் றழாத்தொடராய் அவ்வழியுள் ஒன்றுமென்க.

---

ஊகாரவீற்றுச் சிறப்பு விதி.

200. பூப்பெயர்முன்னின மென்மையுந் தோன்றும்.

எ - னின். ஊகாரவீற்றுப் பூவென்னும் பலபொருளொருசொன்முன் வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

**இ - ள்.** பூவென்னும் பலபொருட் பெயர்ச்சொன்முன் வல்லினம்வரின், பொதுவிதியாற் க ச த ப மிகுதலேயன்றி, அவற்றிற்கினமாகிய மெல்லொற்றுக்களுமிகும். எ - று.

இப்பொருட்டாய பூப்பெயரென விதவாமையின், பலபொருளொருசொல்லென்பது பெற்ரும்.

உ - ம். பூங்கொடி, பூஞ்சோலை, பூந்தடம், பூம்பணை என வரும். இவற்றுட் பூவென்பது, மலரேல் இரண்டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன்ருெக்க தொகையாகவும், பொலிவேற் பண்புத்தொகையாகவும், பூங்கணையென்பது மலரென்னுமொரு பொருட்டாய் மூன்ரும் வேற்றுமையுருபும் பயனுமுடன் ருெக்க தொகையாகவும், பண்புத்தொகையாகவும், பூங்கரும்பென்பது பொலிவென்னுமொரு பொருட்டாய்ப் பண்புத்தொகையாகவும் வருவன காண்க.

உறழ்ந்துவருமென உறுதி கூருது பூக்கொடியென வல்லின மிகுதலை உம்மையாற்றழீஇக்கொண்டமையின் இவ்விருவகைத் தோன்றலும் எற்றபெற்றி கொள்க.

---

## ஏகார ஓகாரவீற்றுச் சிறப்பு விதி.

201. இடைச்சொல் லேயோ முன்வரி னியல்பே.

**எ - னின்.** ஏகார ஓகார விடைச்சொற்கண்முன் வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கனுதலிற்று.

**இ - ள்.** இடைச்சொல்லாய ஆறேகாரத்தின் முன்னும் எட்டோகாரத்தின் முன்னும் வல்லினம் வருமாயிற் பொது விதியான் மிகாதியல்பாம். எ - று.

**உ - ம்.** அவனே கொண்டான் என்பது பிரிநிலையும் வினவும் ஈற்றசையுந் தேற்றமுமாம். அறமே பொருளே காமமே துறவே என்பன எண். "ஏயே தனையென் ருேரிருடி வினவ" என்பது



இசைநிறை. அவனே கொண்டான் என்பது ஒழியிசை முதலிய வெட்டுமாம். இவற்றுள் வல்லினமியல்பாதல் காண்க. இவ்விடைச் சொல் ஒன்று பல பொருடருமாறு இடைச்சொல்லியலுட் காண்க. (51)

---

## ஐகாரவீற்றுச் சிறப்பு விதி.

202. வேற்றுமை யாயி னைகா னிறுமொழி
ஈற்றழி வோடுமம் மேற்பவு முளவே.

**எ-னின்.** ஐகாரவீற்று நிலைமொழிக்கு எய்தாத தெய்துவித்தனுதலிற்று.

**இ - ள்.** ஐகாரவீற்றுச்சொல் வேற்றுமைக்கண் வருமாயின், இறுதியைகாரங் கெடாது அம்முச்சாரியை பெற்று முடிவனவும், ஐகாரங் கெட்டு அம்முச்சாரியை பெற்று முடிவனவுஞ் சிலவுளவாம். எ - று.

உம்மைகளிரண்டனுள், முன்னையது எதிர்மறைக்கண்ணும், பின்னையது எதிர்மறையோடு இழிவு பிறப்பின்கண்ணும் வந்தன.

உ - ம். புன்னையங்கானல், கொல்லையஞ்சாரல், கொன்றையந் தீங்குழல், முல்லையம்புறவம். எ - ம். வழுதுணங்காய், ஆவிரம்பூ, வேர். எ - ம். வரும்.

தகுதியாக்காது எற்பனவென்றமையான், முல்லைப்புறவம் எனவரினுங் கொள்க. அம்மென்றமையின், உம்மையான் வல்லினந் தழீஇயதன்றெனக. வருமொழி வரையாமையின், நாற்கணத்துள் எற்பனகொள்க. (52)

203. பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்
அட்டுறி னைகெட் டந் நீள்வுமாம் வேற்றுமை.

**எ - னின்.** பனையென்னு நிலைமொழிக்கும் அதனோடு புணருஞ் சில வருமொழிகட்கும், 'இயல்பினும் விதியினும்'

என்னுஞ்சூத்திரத்தானும்மேலைச் சூத்திரத்தானும் எய்தியவற்றை இகந்துபடாமற் காத்தலும், 'இ ஈ ஐவழி' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலு நுதலிற்று.

இ - ள். பனையென்னும் பெயர்முன், கொடியென்னும் பெயர் வருமாயின் வந்தது மிகுதலும், க ச த பக்கள் வரின் நிலைமொழி யீற்றைகாரங்கெட்டு அம்முப்பெறுதலும், திரளென்னும் பெயர் வருமாயின் வந்தது மிகுந்தும் ஐ போய் அம்முப் பெற்றுந் தம்முளுறழ்தலும், அட்டென்னும் பெயர் வருமாயின் ஐகாரங்கெட வருமொழியகரம் ஆகாரமாதலுமாம், வேற்றுமைக்கண். எ - று.

கெட்டென்பது செயவெனச்சந் திரிந்து நின்றது.

உ - ம். பனைக்கொடி. எ - ம். பனங்காய், செறும்பு, தூண், பழம். எ - ம். பனைத்திரள், பனந்திரள். எ - ம். பனாட்டு. எ - ம். வரும். பனைக்கொடியென்பது பனையையெழுதிய கொடி. பனாட்டென்பது பனையினது தீங்கட்டி.) (53)

உயிரீற்றுப்புணரியல் முற்றிற்று.

---

# 4. மெய்யீற்றுப்புணரியல்

## மெய்யீற்றின்முன் உயிர்

204. உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே.

எ - னின். மெய்யீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப்புணர்ச்சி இவ்வியலாற் கூறப்படுதலின், மெய்யீற்றின் முன் உயிர் முதல் வந்து புணருமாறுணர்-ற்று.

இ - ள். நிலைமொழியீற்றினின்ற மெய்யின்மேல் வருமொழி முதலுயிர் வந்து ஒன்றுபட்டிணங்கி நிற்பது இயல்பு புணர்ச்சியேயாம். எ - று.

உ - ம். தோன்றலழகன், உரிஞுழகிது, புகழழகிது. எ-ம். வேலெறிந்தான். எ-ம். இருவழியுங் காண்க. பிறவுமன்ன.

இவ்வாறு மெய்யுமுயிருங் கூடி உயிர்மெய்யாய் மெய்யினது புள்ளியும் உயிர் வடிவமுங் கெட்டு நிற்றலின் விகாரமாமென்பாரை விலக்கிச், சிறந்தவொலி வடிவின் யாக்கையுமுயிரும்போன் மெய்யினது மாத்திரை உள்ளடங்க ஒன்றுபட்டு இரட்டையிலை போல் ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமாய் இணங்கிநிற்றலானும், ஒன்றாத தனிக்குறின் முன்னொற்று முதலியன விகாரப்படுதலானும், ஒன்றுவ தியல்பே யென்றார்.

எகாரம் பிரிநிலைக்கண் வந்தது. (1)

205 தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.

எ - னின். எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். தனிக்குறின் முன்னொற்று உயிர்வரின் இரட்டித்து நிற்கும். எ - று.

உ - ம். மண்ணரிது, பொன்னரிது. எ-ம். மண்ணகம், பொன்னொளி. எ-ம். வரும். பிறவுமன்ன. (2)

## மெய்யீற்றின்முன் மெய்.

206 தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரந்
துன்னு மென்று துணிநரு முளரே.

ஏ - னின். யகரமொழிந்த பத்து மெய் முன்னும் வரும் யகரத்திற்கு 'எண்மூ வெழுத்தீற்று' என்னுஞ் சூத்திரத்தான் எய்திய தன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

**இ - ள்.** யகரம், தன்னையொழிந்த ஞ ண ந ம ன ர ல வ ழ ள என்னும் பத்து மெய் முன்னும் வந்தால், தன் முன் இகரச் சாரியையைப் பொருந்துமென்று அரிதிற்கொள்வாருஞ் சிலருளர். எ - று.

உ - ம். வேளியாவன், மண்ணியாது. எ-ம். வேளியானை, மண்ணியானை. எ-ம். வரும். பிறவுமன்ன.

எதிர்மறையாய இழிவுசிறப்பும்மையான், இகரந்துன்னாது பொதுச்சூத்திரத்தான் இயல்பாமென்பார் பலரென்க. (3)

207. ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி யவ்வன் மெய்வரின்
உவ்வுறு மேவ லுறுசில சில்வழி.

ஏ - னின். முதனிலைத்தொழிற்கும் ஏவற்கும் பொதுவாய சிலநிலைமொழிகட்கு எய்தாததெய்துவித்தனுதலிற்று.

**இ - ள்.** ய ர ழக்களையொழிந்த எட்டொற்றுமிறுதியாகும் முதனிலைத் தொழிற்பெயரும், ஏவல்வினையும், மேல் விதந்த யகரமொழிந்த மெய்வருமாயின், பெரும்பாலும் உகரச் சாரியையை இறுதிக்கட் பொருந்தும், சிலவேவல் வினை அவ்வுகரச்சாரியையைப் பொருந்த சிலவிடங்களின். எ - று.

ஏவல்வினையோடு எண்ணினமையின், முதனிலைத்தொழிற்பெயரென்பது பெற்றாம்.



உ - ம். உரிஞுக் கடிது, உண்ணுக்கடிது, பொருநுக்கடிது, திருமுக்கடிது, தின்னுக்கடிது, நீண்டது, வலிது. எ-ம். கடுமை, நீட்சி, வன்மை. எ-ம். தொழிற்பெயர்கள் இருவழியுமுகரம் பெற்றன. பிறவுமன்ன. உரிஞு கொற்றா, உண்ணு கொற்றா, பொருநு கொற்றா, திருமு கொற்றா, தின்னு கொற்றா, நாகா, வளவா என ஏவல்வினை உகரம் பெற்றன. பிறவுமன்ன.

உரிஞு, உண்ணு என வருமொழியின்றி உகரம் பெறுதலும், மணலைவாரு சருகை வாரு எனச் சிறுபான்மை விலக்கிய ஈறு உகரம் பெறுதலுமுளவென்பார் நனியென்றும், யகரம் வருமொழிக்கு இகரம் விதித்தலின் அதனோடு புணரும் இந்நிலைமொழியிறுதி உகரம் பெறாதென்பார் யவ்வன்மெய்யென்றும், உண்ணு கொற்றா உண் கொற்றா என உகரம் பெற்றும் பெறாதும் வருவனவும் உரிஞுகொற்றா என உகரம் பெற்றேவருவனவு முளவென்பார் சிலவேவலுறா சில்வழியென்றுங் கூறினார்.

ஏவலுறாவென்னாது, ஏவற்குறாவெனப் பாடமோதுவாருமுளராலோவெனின்:—உறுமென்னும் வினைக்குத் தொழிற்பெயர்களையும் ஏவல்வினைகளையும் வினைமுதலாக்கிக் கூறுதலானும், அதனை மறுத்த உறாவென்னும் பன்மைவினைக்கு ஒருமையுகரம் வினைமுதலாகாமையானும், அதுபாடமன்றென்க. (4)

208. நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்று
[மை.

ஏ - னின். நகரவீற்றுத் தொழிற்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

**இ - ள்.** நகரமிறுதியாகும் முதனிலைத் தொழிற்பெயர்க்கு உகரச்சாரியையேயன்றி அகரச்சாரியையுமாம் வேற்றுமைக்கண். எ - று.

உ - ம். பொருநக்கடுமை, நன்மை, வன்மை, என வரும். பிறவுமன்ன. பொருநுதல், ஒருவர் மற்றொருவர் போல வேடங் கொள்ளும் பொருநரது தொழிலாதலின், ஒத்தலென்னும் பொருட்டு. (5)

## ணகர னகர வீறு.

209. ணனவல் லினம்வரவுட் டறவும் பிறவரின்
இயல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே.

**எ-னின்.** மேலைச் சூத்திரங்காறு மெய்யீற்றுப் பொதுப் புணர்ச்சி கூறி, அவற்றிற்கேயுரிய ஞகர நகரங்களையொழித்து, ஏனையவற்றிற்கு முறையே தனித்தனி சிறப்புவிதி கூறுவான் றொடங்கி, ணகர னகரவீறு புணருமாறுணர்-ற்று.

**இ-ள்.** ணகார னகாரங்கள், வேற்றுமைக்கண் வல்லினம் வந்தால், முறையே டகாரமும் றகாரமுமாம்; மெல்லினமும் இடையினமும் வந்தால், இயல்பாம்; அல்வழிக்கண் மூவினம் வந்தாலும், இயல்பேயாம். எ-று.

உ-ம். சிறுகட் களிறு, பேரமர்க்கட்பேதை. எ-ம். பொற்றட்டு, பொற்றகடு. எ-ம். வேற்றுமைக்கண் வல்லினம் வரத் திரிந்தன. மண், பொன், ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வன்மை என வேற்றுமைக்கண் மெல்லினமும் இடையினமும் வர இயல்பாயின. மண், பொன், கடிது, சிறிது, தீது, பெரிது, ஞான்றது; நீண்டது, மாண்டது, யாது, வலிது. எ-ம். உண்டான் கொற்றன், வெள்ளன், வளவன். எ-ம். அல்வழிக்கண் மூவினமும் வர இயல்பாயின. பிறவுமன்ன.

ஒப்பின் முடித்தலான், னகரமும் உடன் கூறினர். இவ்வாறு பின் வருவனவுமன்ன. (6)

210. குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.

**எ-னின்.** ணகார னகாரவீற்றுள் ஒருசாரனவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

**இ-ள்.** தனிக்குறி லொன்றனையுமொழிந்து ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்த ணகார னகாரங்கள்,



வருமொழிக்கு முதலாக வந்த நகரம் மயக்கவிதியின்மையிற் றிரிந்தவிடத்து, இயல்பாகாது கெடுதலைப் பொருந்தும். எ-று.

பாணன்று, தூணன்று, பசுமணன்று. எ-ம். நன்மை. எ-ம். அரசனல்லன், செம்பொனன்று. எ-ம். நன்மை. எ-ம். இருவழியுங் கெட்டன. (7)

211. சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பி
டவ்வா கலுமா மல்வழி யும்மே. [ற

**எ-னின்.** ணகரவீற்றுட் சிலவற்றிற்கு வேற்றுமைக்கண் எய்தியது விலக்கலும், சிலவற்றிற்கு அல்வழிக்கண் எய்தியதன் மேற் சிறப்புவிதியுமுணர்-ற்று.

**இ-ள்.** சாதி பற்றியுந் திரள் பற்றியும்வரும் பெயர்களும் பரண் கவணென்னும் பெயர்களுமானவற்றின் இறுதி ணகரம், வேற்றுமைக்கண்ணும் வல்லினம் வந்தால், இயல்பாம்; எண்ணலளவையன்றி உணவிற்குரிய எள்ளின்றிரிசொல்லாய எண்ணென்னும் பெயருஞ் சாணென்னு நீட்டலளவைப்பெயரும், வல்லெழுத்துக்கள் வரிற்றிரிந்து டகரமாகலும் பொருந்தும் அல்வழிக்கண்ணும். எ-று.

அல்வழிக்கண் இறந்தது தழீஇயவெச்சவும்மையை வேற்றுமைக்கண்ணுங் கூட்டுக.

உ-ம். பாண், உமண், குடி, சேரி, தோட்டம், பாடி. எ-ம். அமண்குடி, சேரி, தோட்டம், பாடி, எ-ம். பரண்கால், கவண்கால். எ-ம். வேற்றுமைக்கண்ணும் இயல்பாயின. எட்கடிது, சிறிது, தீது, பெரிது. எ-ம். சாட்கோல். எ-ம். அல்வழிக்கண்ணுந் திரிந்தன: டவ்வாகலுமாமென்னும் இறந்தது தழீஇயவெச்சவிழிவு சிறப்பும்மையான், எண்கடிது, சாண்கோல் என இயல்பாதலே வலியுடைத்தென்க.

பிறவென்ற மிகையானே, வேற்றுமைக்கண் பாணக்குடி என அகரச்சாரியை பெறுதலும், அட்டூண்டுழனி என்னும் இயல்பும், மண்குடம் மட்குடம் என்னும் உறழ்வும், இருவழிக்கண்ணும் இன்னும் ணகரவீற்றுள் அமையாதனவுளவேல் அவையுங் கொள்க.

சாதியுங் குழூவும் ஆகுபெயராய் அவற்றையுடையராய உயர்திணைப்பொருளையுணர்த்தி நின்றனவேனும், தெய்வமென்றாற் போலச் சொல்லான் அஃறிணையாதலிற் 'பொதுப்பெய ருயர்திணைப்பெயர்க ளீற்றுமெய் வலிவரி னியல்பாம்.' என்பதனுன் அமையாவாயின. மேல்வரும் னஃகான் கிளைப்பெயருமது. (8)

212. னஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகான்
அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே.

எ - னின். னகரவீற்றுச் சாதிப்பெயர்க்கு வேற்றுமைக்கண் எய்தியது விலக்கலும் பிறிதுவிதி வகுத்தலு நுதலிற்று.

இ - ள். னகரவீற்றுச் சாதிப்பெயர், வல்லினம்வர, ஈறு திரியாது இயல்பாதலும், அகரச்சாரியை பெறுதலுமாம், வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண். எ - று.

உ - ம். எயின் குடி, எயினக் குடி; சேரி, தோட்டம், பாடி எனவரும்.

பொருட்கேயென்ற மிகையானே, எயினமரபு, எயினவாழ்வு, எயினவணி என ஏனைக்கணம் வரின் அகரச்சாரியை பெறுதலும், எயினக்கன்னி, எயினப்பிள்ளை, எயினமன்னன் என அல்வழிக்கண் அகரச்சாரியை பெறுதலுங் கொள்க.

கிளையென்னும் பலபொருளொருசொல் ஈண்டுச் சாதிமேனின்றது. (9)

213 மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே.

எ - னின். மீனென்னுஞ் சொற்கு வேற்றுமைக்கண் எய்தியதொருவாற்றான் விலக்கனுதலிற்று.



இ - ள். மீனென்னுமொழியீறுதி னகரம் வேற்றுமைக்கண் வல்லெழுத்துவரின், றகரத்தோடு உறழ்ந்து வரும். எ - று.

உ - ம். மீன் கண், மீற்கண், செவி, தலை, புறம் எனவரும் றகரமாதல் இக்காலத்துப்பயின்று வாராதேனும், தொன்னெறியாதலின், ஆணைவழி நிற்கவென்பார் வழியேயென்றார். ()

214. தேன்மொழி மெய்வரி னியல்பு மென்மை
மேவி னிறுதி யழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி.

எ - னின். தேனென்னுஞ்சொற்கு 'ணன வல்லினம் வரட்டறவும்' என எய்தியது விலக்கலும், 'பிறவரினியல்புமாகும் வேற்றுமைக்கல்வழிக்கனைத்து மெய்வரினு மியல்பாகும்மே' என எய்திய திகந்துபடாமற் காத்தலும், இச்சூத்திரத்து இயல்பும் என எய்திய தன்மேற் சிறப்புவிதியும், வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்பு விதியுமுணர்-ற்று.

இ - ள். தேனென்னுஞ் சொல், மூவினமெய்யும்வரின் இறுதினகரம் இயல்பாதலும், மெல்லினம்வரின், அவ்விறுதி இயல்பாதலேயன்றிக் கெடுதலும், வல்லினம்வரின், இறுதி இயல்பாதலேயன்றிக் கெட, வந்த வல்லினமாதல் அதற்கினமாதன் மிகுதலுமாம் இருவழிக்கண்ணும். எ - று.

'குறிலணைவில்லா ணனக்கள் வந்தநகரந்திரிந்துழி கண்ணுங் கேடே' என்றமையின், இயல்பிற்கு நகரமொழிந்த எட்டுமெய்யும் வருவித்துக் காண்க.

உ - ம். தேன் கடிது, தேன் ஞான்றது, தேன் யாது. எ-ம். தேன் மொழி, தேமொழி. எ-ம். தேன் குழம்பு, தேக்குழம்பு, தேங்குழம்பு. எ-ம். அல்வழிக்கண் வந்தன. தேன் கடுமை, தேன். மலிவு, தேன் யாப்பு. எ-ம். தேன் மலர், தேமலர். எ-ம். தேன் குடம், தேக்குடம், தேங்குடம். எ-ம். வேற்றுமைக்கண் வந்தன. பிறவுமன்ன.

தேனென்பது பலபொருளொருசொல்லாதலின், மணங்கமழ் சோலையென்னும் பொருட்டாய்த் தேங்கமழ்சோலையென இவ்விகாரங்கள் ஏற்று வருவனவுங் கொள்க. (11)

215. மரமல் லெகின்மொழி யியல்பு மகரம்
மருவ வலிமெலி மிகலு மாகும்.

எ - னின். எகினென்னுஞ் சொற்கு வேற்றுமைக்கண் 'ணன வல்லினம் வரட்டறவும்' என எய்தியது விலக்கலும், அகர மருவ என்றமையின் அச்சூத்திரத்தால் இருவழிக்கண்ணும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும், வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியுமுணர்-ற்று.

இ - ள். மரமன்றிப் பறவையாய அன்னத்தையுணர்த்தும் எகினென்னுஞ்சொல், வேற்றுமைக்கண்ணும், வல்லினம் வர இறுதியியல்பாதலும், இருவழியும் அகரச்சாரியையைப் பொருந்தவரும் வல்லெழுத்தாதல் அவற்றிற்கினமாதன் மிகுதலுமாம். எ - று.

உ - ம். எகின் கால், சிறை, தலை புறம் என வேற்றுமைக் கண்ணுமியல்பாயிற்று. எகினப்புள், எகினம்புள். எ-ம். எகினக் கால், எகினங்கால். எ-ம். இருவழியும் அகரமருவ வலிமெலி மிகுந்தன. அகர மருவுதற்கு வருமொழி வரையாமையின், நாற் கணமுங் கொள்க. எகின மாட்சி, வாழ்க்கை, அழகு என வரும். பிறவுமன்ன. (12)

216. குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே.

எ - னின். குயின், ஊன் என்னுஞ் சொற்கட்கு 'ணன வல்லினம் வரட்டறவும்' என எய்தியது விலக்கனுதலிற்று.

இ - ள். குயினென்னும் பெயரும், ஊனென்னும் பெயரும், வல்லினம் வரின், அல்வழிக்கண் இயல்பாதலேயன்றி வேற்றுமைக்கண்ணும் இயல்பாம். எ - று.



உ - ம். குயின் கடுமை, ஊன் கடுமை, சிறுமை, தீமை, பெருமை என வரும். குயின் மேகம். (13)

217. மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய
கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்.

எ - னின். மின் பின் பன் கன்னென்னு நான்கு சொற்கும் 'ணன வல்லினம் வரட்டறவும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிது விதிவகுத்தலும், ஈண்டகரச்சாரியை முன்வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத் தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியுமுணர்-ற்று.

இ - ள். இந்நான்கு சொல்லும், தொழிற்பெயர்போல யவ்வன் மெய்வரின், உகரச்சாரியையைப் பொருந்தும்; இவற்றுட் கன்னென்னுஞ் சொல் உகரச்சாரியையேயன்றி அகரச்சாரியையும் பெற்று, வல்லினம் வந்தால் வருமெழுத் தாதல் அதற்கினமாதன் மிகப்பெறும். எ - று.

அவ்வுமென்னும் உம்மையும், பெறுமென்னு முற்றும், விகாரத்தாற் றொக்கன.

உ - ம். மின்னுக் கடிது, பின்னுக் கடிது, பன்னுக் கடிது, கன்னுக் கடிது; நன்று, வலிது. எ-ம். கடுமை, நன்மை, வன்மை, கன்னத்தட்டு, கன்னந் தட்டு. எ-ம். கன்னத் தூக்கு. கன்னந் தூக்கு. எ-ம். அல்வழி வேற்றுமைக்கண் முறையே வந்தன. பிறவு மன்ன. கன்னென்பது சிறுதராசுத் தட்டு. முன்னென்னுஞ் சொல்லை முன்னமென்றாற்போல இதனைக்கன்னமென்றுங்கூறுப.

218. தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மை
யோடுறழு நின்னீ றியல்பா முறவே.

எ - னின். தன்னென்றும் என்னென்றும் வரும் விகார மொழிகட்கு 'ணன வல்லினம் வரட்டறவும்' எனவெய்தியதொரு வாற்றான் விலக்கலும், நின்னென்று வரும் விகாரமொழிக்கு எய்தியது விலக்கலு நுதலிற்று.

இ - ள். தானென்பது தன்னென்றும் யானென்பது என்னென்றும் வரும் விகாரமொழிகளினீற்று னகரம், வல்லினம்வரிற் பொதுவிதியானே றகரமாய்த் திரிதலும், அவ்விதியேலாது இயல்பாதலுமாம்; நீ யென்பது நின்னென நின்ற விகாரமொழியீற்று னகரம், வல்லினம்வரிற் றிரியா தியல்பேயாம். எ - று.

வன்மையென்றது னகரத்திற்கினமாய றகரத்தை.

உ - ம். தன்பகை, தற்பகை, என்பகை, எற்பகை. எ-ம். நின்பகை. எ-ம். வரும்.

உறவேயென்ற மிகையானே, மின், பின் முதலியன மின்கடிது, மின்கடுமை என இருவழியுஞ் சாரியைப்பேறுந் திரிபுமின்றி வருதலும், மான் குளம்பு, அழன் கை என வேற்றுமைக்கண் விதவாதன இயல்பாதலும், வரிற் கொள்ளும் எனச்செயினென்னும் வாய்பாட்டு வினையெச்சம் பொதுச்சூத்திரத்தான் இயல்பாகாது திரிதலும், இன்னும் னகரவீற்றுள் அமையாதனவுளவேல் அவையுங் கொள்க.

நின்னென்பது, விகாரமொழியாதலிற் 'பொதுப்பெயருயர்திணைப் பெயர்களீற்றுமெய்-வலிவரினியல்பாம்' என்பதனுள் அடங்காதாயிற்று. (15)

---

## மகரவீறு.

219. மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும்.

எ - னின். மகரவீறு புணருமாறுணர்-ற்று.

இ - ள். மகரவீற்றுச் சொற்கள், இறுதி மகரங்கெட விதியுயிரீறாய் நின்று இயல்புயிரீறுபோல உயிர்வரினுடம்படுமெய் தோன்றவும், வல்லினம்வரின் அவை மிகவும், மெல்லி



னமும் இடையினமும் வரின் இயல்பாகவும் புணர்வனவும், வல்லினம்வரிற் கெடாது அவற்றிற்கினமாய்த்திரிவனவுமாம். எ - று.

உ - ம். வட்டவாழி, வட்டக்கடல், நேமி, வாரி. எ-ம். மரவடி, மரக்கால், நார், வேர். எ-ம். நாங்கடியம், அடுங்களிறு. எ-ம். நங்கை. எ-ம். முறையே இருவழியும் வந்தன. பிறவுமன்ன.

வன்மைக்கினமாத் திரியுமென்றமையின், அருத்தாபத்தியால் நாம் பெரியம் எனப் பகரம் வரும்வழித் திரியாதென்பது பெற்றாம்.

220. வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும்
அல்வழி யுயிரிடை வரினியல் பும்முள.

எ - னின். சில மகரவீற்றிற்கு மேலைச்சூத்திரத்தான் எய்திய திகந்துபடாமற் காத்தலும் விலக்கலும், வரும் வல்லினத்திற்கு 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன் மேற் சிறப்புவிதியுமுணர்-ற்று.

இ - ள். வேற்றுமைக்கண் மகரவிறுதிகெட, அவற்றின் முன்வரும் வல்லினமாதல் அவற்றிற்கினமாதன் மிகுதலும், அல்வழிக்கண் உயிரும் இடையினமும்வரிற் கெடாது இயல்பாதலு முளவாம். எ - று.

உ - ம். குளக்கரை, குளங்கரை. எ-ம். குளமழகிது, குளம்யாது. எ-ம். அருளுமரசன், கொல்லும் யானை. எ-ம். வரும், பிறவுமன்ன. (17)

221. நுந்தம்,
எம் நம் மீறு மவ்வரு ஞ ந வே.

எ - னின். சில பொதுப்பெயர்க்கு 'மவ்வீறொற்றழிந்து' எனவெய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

இ - ள். இந்நான்கு விகாரமொழிகளீற்று மகரம் மேல், வரு ஞ நக்களாகத் திரியும். எ - று.

உ - ம். நுஞ்ஞாண், நுந்நூல், தஞ்ஞாண், தந்நூல், எஞ்ஞாண், எந்நூல், நஞ்ஞாண், நந்நூல் என வரும்.

ஞ ந வரின் அவையாய்த் திரியுமெனவே, ஒழிந்த மகரம் வரின் நும்மணி என இயல்பாமென்பது பெற்றாம். (18)

222. அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்.

எ - னின். அகமென்னுஞ் சொற்கு 'வன்மைக் கினமாத் திரிபவும்' எனவெய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். அகமென்னுமிடப்பெயர் முன்னர்ச் செவி கையென்னுஞ் சினைப்பெயர்வரின், நிலைமொழியிறுதி மகரம் வன்மைக்கினமாத் திரிதலேயன்றி, அதனிடை நின்ற ககர வொற்றும் அதனையூர்ந்த அகரவுயிருங் கெடும். எ - று.

உ - ம் "அஞ்செவி நிறைய மந்திர மோதி." "அங்கையு ணெல்லியதன் பயன்." என வரும்.

செவியெனச் சகரத்தை முற்கூறினர், "அஞ்சிறைத் தும்பி." எனவும் வருதலினென்க.

இடையன கெட்டே வருமென நியதி கூறாமையின், அகஞ் செவி, அகங்கை, அகஞ்சிறை என வருதல் விலக்கப்பட்டனவல்ல வென்க.

நகர்ப்புறமென்பதனைப் புறநகரென்றாற்போலச், செவியகங் கையகமென்னும் இடவுறுப்புத் தற்கிழமைப் பெயரோடு முடிந்த ஆறாம்வேற்றுமைத் தொகைச்சொல்லை முன்பின்னாக வழங்கலின், இவ்விரண்டும் இலக்கணப்போலியாய்க் தழாத்தொடராய அல்வழியுள் ஒன்றாமென்க.

அகஞ்சிறையென்பது, ஏனையவற்றின் சிறைபோலப் புறத்தின் கண்ணவன்றி அகத்தின் கண்ணவாகலின், ஏழாம்வேற்றுமைத் தொகை. (19)

223. ஈமுங்,
கம்மு முருமுந் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.



எ - னின். இம்மூன்று சொற்கும் 'மவ்வீ றொற்றழிந்து' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்த துதலிற்று.

இ - ள். இம்மூன்று சொல்லும், இருவழியும் முதனிலைத் தொழிற்பெயர்போல யவ்வன் மெய்வரின், உகரச்சாரியைபெற்று முடியும்; இவற்றுண் முதற்கணின்ற ஈமுங் கம்மும், வேற்றுமைக்கண், உகரச்சாரியையன்றி அகரச்சாரியையும் பெறும். எ - று.

இவற்றுட் கம்மென்பது, பலபொருளொருசொல்லாதலின், எப்பொருளையுணர்த்தி நிற்பினும் இவ்விதி கொள்க.

உ - ம். ஈமுக்கடிது, கம்முக்கடிது, உருமுக்கடிது, நீண்டது, வலிது. எ-ம். கடுமை, நீட்சி, வன்மை. எ-ம். ஈமக்குடம், கம்மக் குடம். எ-ம். முறையே காண்க. பிறவுமன்ன. கம்மென்பது கம்மியரது தொழில்; அத்தொழிலாற் சமைந்த குடமென்க. இது முதனிலைத்தொழிலன்றாதலின் மானுமென்றார். (20)

---

## யரழவீறு.

224. யரழ முன்னர்க் கசதப வல்வழி
இயல்பு மிகலு மாகும் வேற்றுமை
மிகலு மினத்தோ றுறழ்தலும் விதிமேல்.

எ - னின். யரழ மெய்யீற்று முன் கசதபக்கள் புணருமா றுணர்-ற்று.

இ - ள். இம்மூன்றீற்றின் முன்னுங் கசதபக்கள் வரின், அல்வழிக்கண் இயல்பாதலும் மிகுதலும், வேற்று மைக்கண் மிகுதலும் வல்லினமாதன் மெல்லினமாதன் மிகுதலும் விதியாம். எ - று.

உ - ம். வேய் கடிது, வேர் கடிது, வீழ் கடிது. எ-ம். மெய்க் கீர்த்தி, போய்க்கொண்டான், கார்ப்பருவம், பூழ்ப்பறவை. எ-ம்.

நாய்க்கால், தேர்க்கால், பூழ்க்கால். எ-ம். வேய்க்குழல், வேய்ங்குழல், ஆர்க்கோடு, ஆர்ங்கோடு. எ-ம். முறையே வந்தன. பிறவுமன்ன.

மேலென்றமிகையானே, "வாய்புகுவதனினுங் கால்பெரிது." என வேற்றுமைக்கண் இயல்பாதலும், பாழ்க்கிணறு பாழ்ங்கிணறு எனப் பண்புத்தொகைக்கண் உறழ்தலும், இன்னும் அமையாதனவுளவேல் அவையுங் கொள்க. [21)

225. தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமே லற்றே.

எ - னின். இவ்விருசொற்கும் எய்தாததெய்துவித்தனுதலிற்று.

இ - ள். தமிழென்னுஞ் சொல், நாற்கணமும்வரின், வேற்றுமைக்கண் அகரச்சாரியைப் பொருந்தவும் பெறும்; தாழென்னுஞ் சொல்லும், கோலென்னுஞ் சொல் வந்து பொருந்துமாயின், அவ்வகரச்சாரியையைப் பெறும். எ-று.

தமிழிற்கு வருமொழிவரையாமையின் நாற்கணமுமென்றாம்.

உ-ம். தமிழப்பல்லவதரையர், தமிழநாகன், தமிழவளவன், தமிழவரசன். எ-ம். தாழக்கோல். எ-ம். வரும். பிறவுமன்ன.

அவ்வுறவுமென்னும் எதிரது தழீஇயவெச்சவும்மையானே தமிழின் சுவை என இன்சாரியை பெறுதலுங் கொள்க.

தமிழையுடைய பல்லவதரையர், தாழைத்திறக்குங் கோல் என விரியும். தாழக்கோலெனினுந் திறவுகோலெனினும் அமையும். தாழாயகோலென ஒருபொருட்கு இருபெயரொட்டாக்கலுமொன்று. (22)

226. கீழின்முன் வன்மை விகற்பமு மாகும்.

எ - னின். கீழென்னுஞ் சொன்முன்வரும் வல்லினத்திற்கு 'ய ர ழ முன்னர்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது பெரும்பாலும் விலக்கனுதலிற்று.



இ - ள். கீழென்னுஞ் சொன்முன்வரும் வல்லினம், ஒருகாலியல்பாகியும் ஒருகான் மிக்கும்வரும் விகற்பத்தையும் பொருந்தும். எ - று.

உ - ம். கீழ்குலம், கீழ்க்குலம்; கீழ்சாதி, கீழ்ச்சாதி எனவரும். பிறவுமன்ன.

இழிவுசிறப்பும்மையான், இவற்றுள் இயல்பே சிறப்புடைத்தென்க. கீழ்மையென்னும் பண்பொடு புணர்தல் பதவியலுண் முடித்துப் போந்தமையின், "கீழிருந்துங்-கீழல்லார் கீழல்லவர்." என்றாற்போலக் கீழென்பது பண்பாகுபெயராய், இத்தொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாமென்க. (23)

---

## லகர ளகர வீறு.

227. லளவேற் றுமையிற் றடவு மல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி
மேவி னணவு மிடைவரி னியல்பும்
ஆகு மிருவழி யானு மென்ப.

எ - னின். லளவீறு புணருமாறுணர்-ற்று.

இ - ள். லகார ளகாரமான இரண்டிறும், வல்லினம் வரின், வேற்றுமைக்கண் முறையே றகார டகாரங்களாம்; அல்வழிக்கண்ணே றகார டகாரங்களுடனே உறழ்வனவாம்; இருவழிக்கண்ணும் மெல்லினம்வரின், னகார ணகாரங்களாம். இடையினம்வரின் இயல்பாம் என்று சொல்லுவர் புலவர்; எ - று.

உ - ம், கற்குறை, முட்குறை. எ-ம். கல்குறிது, கற்குறிது, முள் குறிது, முட்குறிது. எ-ம் கன்ஞெரிந்தது, முண்ஞெரிந்தது. எ-ம். கன்ஞெரி, முண்ஞெரி. எ-ம். கல்யாது, முள்யாது. எ-ம். கல் யாப்பு, முள்யாப்பு. எ-ம். முறையே வந்தன. பிறவுமன்ன.

அல்வழியவற்றோடுறழ்வு மென்றாரேனும் இவற்றோடு மயங்காதென விலக்கிய தகரம்வரின், ஏற்புழிக்கோடலான் உறழ்ச்சியுள் இயல்பொழித்துத் திரிபொன்றுமே பெறுதல் கொள்க. கற்றீது, முட்டீது என வரும். (24)

228. குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்
ஆகவும் பெறூஉ மல்வழி யானே.

எ - னின். இவ்விரண்டீற்றிற்கும் மேலைச் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். தனிக்குறிலின் பின்னின்ற லகர ளகரங்கள், அல்வழிக்கண்ணே தகரம் வருமாயின், றகர டகரங்களாகத் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரிதலையும் பொருந்தும். எ - று.

உ - ம். கஃறீது, முஃடீது என வரும். (25)

229. குறில்செறி யாலள வல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்புந் திரிபு மாவன வுளபிற.

எ - னின். 'லள வேற்றுமையிற் றடவும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

இ - ள். தனிக்குறிலொன்றனையுஞ் சாராது வரும் லகார ளகாரங்கள், அல்வழிக்கண் வந்த தகரந் திரியுமிடத்துக் கெடுதலும், இருவழிக்கண்ணும் வந்த நகரந் திரியுமிடத்துக் கெடுதலும், வல்லினம்வரின் அல்வழிக்கண் உறழாதியல்பாதலுந் திரிதலும், வேற்றுமைக்கட் டிரியாதியல்பாதலும் பொருந்துவனவுள. எ - று.

திரியுமுற் கெடுவனவற்றைத் திரிந்தபிற் கேடுமாய்வுமென்றமையிற் காலவழுவமைதி.



உ - ம். தோன்றீயன், வேடீயன். எ-ம். தோன்றனல்லன், வேணல்லன். எ-ம். தோன்றனன்மை, வேணன்மை. எ-ம். கால் கடிது, மரங்கள்கடிய. எ-ம். வேற்படைக் குமரன், வாட்படைக் கையன். எ-ம். "கால்குதித்தோடிக் கடல்புக மண்டி" "வாள் போழ்ந்தட்ட நீள்கழன் மறவர்." எ-ம். முறையே காண்க.

பிறவென்ற மிகையானே தோன்றீமை வேடீமையென வேற்றுமைக்கண்ணுந் தகரந்திரியுமிடத்துக் கெடுதலும், காற்றுணை தாட்டுணை எனக் கெடாமையும், விற்படை என உறழாது திரிதலும், கொல்களிறு கொள்பொருள் என வினைத்தொகை இயல்பாதலும், இன்னும் இவ்விரண்டீற்றுள் அமையாதன பிறவுங் கொள்க. இங்ஙனம் உயர்திணைச்சொல்லின்கட் காட்டிய விகாரங்கள், மயக்கவிதியின்மையிற் படுவனவாதலின், 'சிலவிகாரமா முயர்திணை' என்பதனுள் அடங்காவென்க. (26)

230. லளவிறு தொழிற்பெய ரீரிடத்து முவ்வுறு
வலிவரி னல்வழி யியல்புமா வனவுள.

எ - னின். விகுதிபெற்ற தொழிற்பெயர்க்கும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்க்கும் வருவதோரைய மறுத்தலும், ஒருவாற்றால் 'அல்வழியவற்றோடுறழ்வும்' என எய்தியது விலக்கலும் நுதலிற்று.

இ - ள். லகாரத்தையிறுதியாகவுடைய விகுதிபெற்ற தொழிற்பெயரும், ளகாரத்தையிறுதியாகவுடைய முதனிலை திரிந்த தொழிற்பெயரும், முதனிலைத் தொழிற்பெயர்போல, யவ்வன்மெய்வரின் உகரம் பெறுமோ பெறாவோவென்றையுறற்க; இருவழியும் உகரம் பெறாவாம். வல்லினம்வரின் அல்வழிக்கண் உறழாதியல்பாவனவுஞ் சிலவுள. எ - று.

உ - ம். ஆடல்சிறந்தது, ஆடற்சிறந்தது; ஆடனன்று, ஆடல் வலிது. எ-ம். ஆடற்சிறப்பு, ஆடனன்மை, ஆடல்வன்மை. எ-ம். கோள்கடிது, கோட்கடிது; கோணன்று, கோள்வலிது. எ-ம்.

கோட்கடுமை, கோணன்மை, கோள்வன்மை, எ-ம். இருவழியும் உகரம் பெறாது பொதுவிதியான் முடிந்தன. நடத்தல் கடிது, நடப்பித்தல்கடிது எனச்சிலவுறழாது அல்வழிக்கண் இயல்பாயின.

சிறந்தது தழீஇயவெச்ச விழிவு சிறப்பும்மையானே, பின்னல் கடிது, பின்னற்கடிது; உன்னல் கடிது, உன்னற்கடிது எனப் பொதுவிதியான் உறழ்தலே பெரும்பாலவென்க. (27)

**231.** வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்
பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.

எ-னின். 'ல ள வேற்றுமையிற் றடவும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

இ-ள். வல்லென்னுஞ் சூதாடுகருவிப் பெயர், யவ்வன் மெய்வரிற்றொழிற்பெயரேபோல இருவழியும் உகரச்சாரியை பெறும்; பலகை நாயென்னும் இருபெயர் வரினும், பிறபெயர் வரினும், வேற்றுமைக்கண், அகரச்சாரியையும் உகரச்சாரியையும் பெறும். எ-று.

வரினுமென்னும் எதிரது தழீஇயவெச்சவும்மையாற் பிறபெயரென்பதூஉம், அவ்வுமென்னும் இறந்தது தழீய வெச்சவும்மையான் உகரச்சாரியை யென்பதூஉம் பெற்றாம்.

உ-ம். வல்லுக் கடிது, நன்று, வலிது. எ-ம். வல்லுக் கடுமை, நன்மை, வன்மை. எ-ம். வல்லப்பலகை, வல்லநாய், வல்லப்புலி, வல்லக்குதிரை. எ-ம். வல்லுப்பலகை, வல்லுநாய், வல்லுப்புலி, வல்லுக்குதிரை. எ-ம். முறையே காண்க. வல்லினத்தை வரைந்த பலகை, வல்லினுணாய் என விரியும். வேற்றுமைக் கென்றமையின் வல்லாய நாய் என இருபெயரொட்டாயவழி அகரச்சாரியை பெறாதென்க. (28)

**232.** நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்வழி யானும் றகர மாகும்.



எ-னின். இதுவுமது.

இ-ள். இந்நான்குசொல்லும், வல்லினம்வரிற் பொதுவிதியான் உறழாது, அல்வழிக்கண்ணும் வேற்றுமைபோல றகரமாய்த் திரிந்து முடியும். எ-று.

உ-ம். நெற், செற், கொற், சொற், கடிது, சிறிது, தீது, பெரிது என வரும். செல்லென்பது மேகம். கொல்லென்பது "சூருயிர்குடித்த" என்றாற்போலக் கொல்லனென்னும் உயர்திணைப் பொருளையுணர்த்தி நின்றதோரஃறிணைச் சொல். (29)

**233.** இல்லெ னிம்மைச் சொற்கை யடைய
வன்மை விகற்பமு மாகா ரத்தொடு
வன்மை யாகலு மியல்பு மாகும்.

எ-னின். இல்லென்னும் பண்புச்சொற்கு 'ல ள வேற்றுமையிற் றடவுமல்வழி யவற்றோடுறழ்வும்' என எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும், அவற்றின் முன்வரும் வல்லினத்திற்கு 'அல்வழி இ ஐம்முன்ன ராயின்' என்னுஞ் சூத்திரத்தானும் 'இயல்பினும் விதியினும்' என்னுஞ் சூத்திரத்தானும் எய்தியதிகந்துபடாமற் காத்தலு நுதலிற்று.

இ-ள். இல்லிடத்தையுணர்த்தாது இன்மைப்பண்பை யுணர்த்தி நிற்குஞ்சொற்கு ஐகாரச்சாரியை பொருந்த அவ்வழி வரும் வல்லினம் விகற்பித்தலும், ஆகாரச்சாரியை பொருந்த அவ்வழிவரும் வல்லினம் மிகுதலும், இவ்விரு விதியும் பெறாது இயல்பாதலும் பொருந்தும். எ-று.

சாரியைப்பேற்றிற்கு வருமொழி வரையாமையின், நாற்கணமுங் கொள்க.

உ-ம். இல்லைப்பொருள், இல்லைபொருள்; இல்லாப்பொருள், இல்பொருள், ஞானம், வன்மை, அணி என வரும்.

இல்லென்னும் பண்படி நின்று வருமொழியோடு புணர்வழி வருஞ் சாரியையாதலின், இவ்விருசாரியை தோன்றியவழியும்,

இல்பொருளென்னும் இயல்புபுணர்ச்சிபோற் பண்புத்தொகையே யாமென்க. இது மெய்யீற்றுப்புணரியலாதலானும், லகரவீற்றிற்குப் பொதுவிதி கூறிச் சிறப்புவிதி கூறும்வழி இன்மைப்பொருளைத்தரும் இல்லென்னுஞ் சொற்கென விதந்தமையானும், விகுதியடைதல் பதவியலுளன்றி ஈண்டுக் கூறவேண்டாமையானும், ஆகாரத்தொடு வன்மையாகலுமென வல்லினப்பேற்றோடு ஆகாரத்தையும் உடனிகழ்த்திக் கூறுதலானும், இயல்புமாகுமென்றமையானும், மறைப்பொருளை இல்லென்னும் பகுதியன்றி ஆகாரந்தர வேண்டாமையானும், தருமேல் இன்மைக்கு மறையாய உண்மைப்பொருளைத்தரவேண்டுமாதலானும், ஆகார மறைவிகுதிதெரிநிலைக்கன்றிக் குறிப்பிற்கு வாராமையானும், ஈண்டுப் பெறும் ஐகாரவாகாரங்கள் சாரியையேயன்றிக் குறிப்புமுற்று விகுதியும், எச்சத்தின்கண் வந்த மறைவிகுதியுமல்லவென்க.

இல்லைபொருள் இல்லைப்பொருள் என்பன இங்ஙனங் கூறியவாறே பண்புத்தொகையாகவும் ஐகாரவீற்றுக் குறிப்புமுற்றுப் பயனிலையோடு முடிந்த தொகாநிலையாகவுங் கொள்ளப்படுமாதலிற் றம்முள் வேற்றுமையாதோவெனின்:—தொகைநிலை ஒருமொழி போனடத்தலுந் தொகாநிலை விட்டிசைத்து நடத்தலுந் தம்முள் வேற்றுமையென்க. இல்லாப்பொருளென்பது, இங்ஙனங் கூறியவாறே பண்புத்தொகையாகவும், இல்லாத வென்னும் பெயரெச்சக்குறிப்பினதிறுதி கெட்டுப் பயனிலையோடு முடிந்த தொகாநிலையாகவுங் கொள்ளப்படும். இவற்றிற்குந் தம்முள் வேற்றுமை அதுவாமென்க.

இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும் "இல்லென் கிளவி யின்மை செப்பின்—வல்லெழுத்து மிகுதலு மையிட வருதலு—மியற்கை யாதலு மாகாரம் வருதலுங்—கொளத்தகு மரபி னுகிட னுடைத்தே." என்றார். (30)

234. புள்ளும் வள்ளுந் தொழிற்பெயரு மானும்.

எ - னின். 'ல ள வேற்றுமையிற்றடவும்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.



இ - ள். இவ்விருசொற்களும், இருவழியும் யவ்வன் மெய் வரிற் பொதுவிதியான் முடிதலேயன்றித் தொழிற்பெயர்போல, உகரச்சாரியை பெற்றும் புணரும். எ - று

உ - ம். புள்ளுக்கடிது, வள்ளுக்கடிது, நன்று, வலிது, எ-ம். கடுமை, நன்மை, வன்மை. எ-ம். வரும். (31)

---

## வ க ர வீ று.

235. சுட்டு வகரமூ வினமுறை முறையே
ஆய்தமு மென்மையு மியல்பு மாகும்.

எ - னின். வகரவீற்றுச் சுட்டுப்பெயர் மூவினத்தோடும் புணருமாறுணர்-ற்று.

இ - ள். அவ், இவ், உவ், என்னும் அஃறிணைப் பன்மைச்சுட்டுப்பெயரீற்று வகரம், வல்லினமும் மெல்லினமும் இடையினமும் வர, முறையானே ஆய்தமும் வருமெல்லினமும் இயல்புமாம். எ - று.

உ - ம். அஃகடிய, இஃகடிய, உஃகடிய எ ம். அஞ்ஞானம், இஞ்ஞானம், உஞ்ஞானம். எ-ம். அவ்யானை, இவ்யானை, உவ்யானை. எ-ம். வரும்.

வேற்றுமைப்புணர்ச்சிக்கு அற்றுச்சாரியை பெறுமென மேல் விதத்தலின், இவ்விதி அல்வழிக்கென்க. (32)

236. தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே
மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.

எ - னின். தெவ்வென்னுஞ் சொல் யவ்வன்மெய்யோடு புணருமாறுணர்-ற்று.

இ - ள். தெவ்வென்னுஞ்சொல், யவ்வன் மெய்யோடு புணருமிடத்துத், தொழிற்பெயர்போல உகரச்சாரியை

பெற்று முடியும்; அவற்றுண் மகரம் வருங்கால், உகரச் சாரியை பெறுதலேயன்றி, ஒரோவழி ஈற்று யகரம் மகரமாகத் திரியவும்பெறும். எ - று.

உ - ம். தெவ்வுக் கடிது, மாண்டது, வந்தது. எ-ம். தெவ்வுக் கடுமை, மாட்சி, வன்மை. எ-ம். தெவ்வுமன்னர், தெம்மன்னர். எ-ம் தெவ்வுமுனை, தெம்முனை. எ-ம். இருவழியினும் முறையே காண்க. இப்பகையென்னும் பண்புப்பெயர் பண்பியாய்ப் பகைப் பொருளையுணர்த்தி ஆகுபெயராய் நின்றவழியும், இவையே காட்டென்க. (33)

---

## வருமொழித் தகர நகரத் திரிபு.

237. னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகுந் தநக்க ளாயுங் காலே.

எ - னின். முன்னர்ப் புணர்த்திய வருமொழிக்கு முதலாய மெய்களுட்டிரிதற்பாலன இவையென விதந்துணர்-ற்று.

இ - ள். னகர லகரங்கண் முன்னர் வருந் தகரம் றகரமாம், அவற்றின் முன்னர் வரும் நகாம் னகரமாம், ணகர ளகரங்களின் முன்னர்வருந் தகரம் டகரமாம், அவற்றின் முன்னர் வரும் நகரம் ணகரமாம் ஆராயுங்காலத்து. எ - று

உ - ம். பொன்றீது, கற்றீது, பொன்னன்று, கன்னன்று, மண்டீது, முட்டீது, மண்ணன்று முண்ணன்று என வரும் தீமை, நன்மை என வருவித்து, வேற்றுமைக்கண்ணுந் திரியுமாறு காண்க.

ஆயுங்காலேயென்றதனுன், அல்வழி வேற்றுமைப்பொருளைக்கத்தானன்றி மயக்கவிதியின்மையின் இங்ஙனம் புணருமுதலீறிரண்டனுள் ஒன்றேனும் இரண்டுமேனும் விகாரப்பட்டு மயங்குதற் குரியனவாகிய நின்று புணருமென்பதூஉம், மயக்கவிதியுள்ளனவற்றிற்கு வரும் விகாரம் அல்வழி வேற்றுமைப் பொருளைக்கத்தான் வருமென்பதூஉம் பெற்றும். (34)



## சிறப்புவிதி.

238. உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.

எ - னின். உயிரீற்றுப்புணரியற்கண்ணும் இவ்வியற்கண்ணும் முடிந்த வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். மேல் உருபுபுணர்ச்சிக்கண் முடியு முடிபுகள் அப்பொருட்புணர்ச்சிக்கண்ணுமொக்கும். எ - று.

உ - ம். எல்லாவற்றதும், எல்லாவற்றுக் கோடும் என, அஃறிணைக்கண் அற்றும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போலப், பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன. எல்லாநமதும், எல்லா நங்கையும் என உயர் திணைக்கண் நம்மும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போலப், பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன. எல்லார் தமதும், எல்லார் தங்கையும்; எல்லீர் நுமதும், எல்லீர் நுங்கையும்; தனது, தன்கை; தமது, தங்கை; நமது, நங்கை; எனது, என்கை; எமது, எங்கை; நினது, நின்கை; நுமது, நுங்கை என உருபுபுணர்ச்சி போற் பொருட்புணர்ச்சியும் முடிந்தவாறு காண்க. பிறவுமன்ன.

---

## புணரியல்களுக்குப் புறனடை.

239. இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்
போலியு மரூஉம் பொருந்திய வாற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே.

எ - னின். இப்புணரியல்கட்கு ஆவதோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். இடைச்சொல்லினும் உரிச்சொல்லினும் வடசொல்லினும் உயிரீறும் ஒற்றீறுமான புணரியலிற்றோன்றறிதல் கெடுதலியல்பென வோதிய புணர்ச்சியிலக்கணங்கள் பொருந்தாது வேறுபட்டு வருவனவும், இலக்கணப்போலி மொழிகளும், மரூஉமொழிகளும், இருவகைவழக்கினும் நடக்கு முறைமையறிந்து அதற்குப் பொருந்துமாறு புணர்க்கை அறிவுடையோரெல்லார்க்கும் முறைமை. எ-று.

**ஆன்** கன்று, வண்டின்கால் என வேற்றுமைப் புணர்ச்சிக்கட் சாரியை யிடைச்சொற் றிரியாதியல்பாயின. மழகளிறு, தடந்தோள் என அகரவீற்றுரிச்சொன்முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயும் மெல்லெழுத்து மிகுந்தும் வந்தன. அளிகுலம், தனதடம் என வியல்பீறும் விதியீறுமான உயிரீற்று வடசொன்முன் வல்லெழுத்து மிகாதியல்பாயின. இன்முன் முன்றில், பொதுஇல் பொதியில் என இலக்கணப்போலி மொழிகளும், அருமருந்தன்னபிள்ளை அருமந்தபிள்ளை, குணக்குள்ளது குணாது, தெற்குள்ளது தெனாது, வடக்குள்ளது வடாது, சோழனாடு சோணாடு, பாண்டியனாடு பாண்டிநாடு, மலையமானாடு மலாடு, தஞ்சாவூர் தஞ்சை, ஆற்றூர் ஆறை, ஆதன்றந்தை ஆந்தை, பூதன்றந்தை பூந்தை, வடுகன்றந்தை வடுகந்தை என மரூஉமொழிகளும் நிலைமொழி வருமொழிகளுள் எற்குஞ் செய்கையறிந்து முடிக்க. பிறவுமன்ன.

மெய்யீற்றுப்புணரியல் முற்றிற்று.

# 5. உருபுபுணரியல்.

## உருபுகள்.

**240.** ஒருவ னொருத்தி பலரொன்று பலவென
வருபெய ரைந்தொடு பெயர்முத லிருநான்
குருபு முறழ்தர நாற்பதா முருபே.

**எ-னின்.** வேற்றுமையுருபுகள் நிலைமொழியோடும் வருமொழியோடும் புணருமாறு இவ்வியலாற் கூறுவான் றொடங்கி, அவ்வெட்டுருபுகளுஞ் சாருமிடவகையான் இத்துணைத்தென்பதுணர்-ற்று.

**இ-ள்.** இப்பாற் பொருளினவென்று கருதவரும் ஐந்து பெயருடனே எழுவாய் வேற்றுமையான பெயர் முதலாக விளியீறாக நின்ற எட்டுருபினையும் உறழ, வேற்றுமையுருபுகள் நாற்பதாம். எ-று.

சொன்மேல் வைத்தோதின் இப்பெயர்களோடன்றிப் பொதுப்பெயர்களோடு உருபுவாராவெனப் பொருள்படுமாதலின், எல்லாப் பெயரும் அடங்குதற்குப் பொருண்மேல் வைத்து, என வருபெயரென்றார்.

வ-று. நம்பி, சாத்தி, மக்கள், மரம், மரங்கள் என்னும் இவற்றுள், நம்பி, நம்பியை, நம்பியால், நம்பிக்கு, நம்பியின், நம்பியது, நம்பிகண், நம்பீ என ஒருவனென்னும் வாய்பாட்டுயர்திணையாண்பாற் பெயரோடு எட்டுருபுகளும் வந்தன. ஏனை நான்கு பெயரோடும் இவ்வாறே யொட்டுக. (1)

**241.** பெயர்வழித் தம்பொரு டரவரு முருபே

**எ-னின்.** வேற்றுமையுருபுகள் வருதற்குக் காரணமும் வருமிடமுமுணர்-ற்று.

**இ-ள்.** வேற்றுமையுருபுகள் தம்பொருளைத் தரப் பெயர்க்குப் பின்வரும். எ-று.

வ - று. நம்பி பெற்றான், நம்பியைப்பெற்றான், நம்பியாற் பெற்றான் என வரும். பிறவுமன்ன.

தம்பொருடர வருவன எழுவாய் முதலிய வெட்டுருபும், வழி வருவன பெயர் முழுவதூஉமுருபாய எழுவாயொழிந்த எழுருபு மெனக் கொள்க. (2)

## உருபுகளின் புணர்ச்சி.

242. ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன் னப்பெயர்வேற் றுமைப்புணர்ப்பே.

எ - னின். ஐம்முதலிய வாறுருபும் நிலைமொழி வருமொழியோடு புணருமாறுணர்-ற்று.

இ - ள். தொகாநிலையாய வேற்றுமைப்புணர்ச்சிக்கண் இடையே நின்று நிலைமொழியோடும் வருமொழியோடும் புணரும் ஒற்றுயிர்களை முதலுமீறுமாகவுடைய ஐம்முதலிய வேற்றுமையுருபாறும், இடைச்சொல்லேனும் இயல்பொடு விகாரத்தினையும் புணர்ச்சிவகையாற் பெரும்பாலுமொக்கும், போனவிரண்டியலுள்ளும் வேற்றுமைப்புணர்ச்சிக்கண் இயல்பொடு விகாரத்தினைந்த ஒற்றுயிர் முதலீற்றுப்பெயர்களை. எ - று.

மன்னென்றமையாற் சிறுபான்மை யொவ்வாவென்பதாம்.

உ - ம். நம்பிகண் வாழ்வு என்புழி, 'ஆவி யரமுன் வன்மை மிகா' என்றும் 'ண ன வல்லினம் வரட்டறவும் பிறவரி னியல்பு மாகும் வேற்றுமைக்கு' என்றுங் கூறியவாறே, கண்ணுருபின் முதலுயீறும் இயல்பாயின. உறிக்கட்டயிர் என்புழி, 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்' என்றும், 'ண ன வல்லினம் வரட்டறவும்' என்றுங் கூறியவாறே, கண்ணுருபின் முதலுமீறும் விகாரமாயின. பழிக்கஞ்சி என்புழி, 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்' என்றும் 'முற்றுமற் றொரோவழி' என்றுங் கூறியவாறே, குவ்வுருபின் முதலுமீறும் விகாரமாயின. நம்பிக்குப்பிள்ளை என்புழி, 'ஆவியரமுன் வன்மை மிகா' என்ற விதியொவ்வாது, குவ்வுருபின் முதல்வல்லொற்று



மிக்கது. பிறவுமன்ன. இவ்வுருபு, சாத்திக்கு, கிளிக்கு எனப் பொதுப்பெயரஃறிணைப் பெயர்க்கண்ணு மிகுதலிற் 'சில விகாரமா முயர்திணை' என்னும் விதியன்று.

ஒற்றுயிர் முதலீற்றுருபுகள் என்றமையின் 'நாற்பதாமுருபே' எனத்தொகை கொடுத்துக் கொணர்ந்தவற்றுள் எழுவாயும் விளியு மொழித்துத் தமக்கென உருபு முதலீறுமுடைய ஐம்முதலியவா றுருபிற்கும் இவ்விதி கூறுகின்றாரென்பதூஉம், இவ்வுருபுகளின் முதலீறுகட்கு மாட்டேற்றான் இவ்விதி கூறவே உருபினிருமருங் கும் புணருநிலைமொழியீறும் வருமொழி முதலும் படும் பாகுபாட் டிற்கு விதி போனவிரண்டியலுள்ளும் வேற்றுமைப்புணர்ச்சிக் கென விதித்தவற்றுள் அடங்குமாதலின் அவையும் இம்மாட்டேற் றான் அமைத்தாரல்லரென்பதூஉம், அங்ஙனமடங்குதற்கு 'மூன்றா றுருபெண்' என்னுஞ் சூத்திரமே கரியென்பதூஉம், 'தான்றா நாமுதல் குறுகும்' என்றற்றொடக்கத்துருபோடு புணரு நிலைமொழிகளின் விகாரங்கள் தொகைநிலைக்கண்ணும் நாற்கணத்தின் முன்னும் வருதலின் அவ்விகாரம் எழுத்துப்புணர்ச்சியான் வந்தன வல்ல வேற்றுமைப் பொருணோக்கத்தானே வந்தன அதனால் இவ்வியலுட் கூறப்படுமென்பதூஉம், ஒக்குமன்னப்பெயர் என்ற மையின் வினையிறுதி வேற்றுமைப்புணர்ச்சிக்கு வாராமையின் அதனையொழித்துப் பெய்ரையுவமித்தாரென்பதூஉம், வேற்று மைப் புணர்ப்பே யென்றமையின் வேற்றுமையுருபின் புணர்ச்சி யாதலின் அதற்கல்வழிப்புணர்ச்சி ஒவ்வாவென்பதூஉம் பெற்றாம் (3)

---

## சாரியை

243. பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்.

எ - னின். உருபுபுணர்ச்சிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யாகச் சாரியை மேல் விதிப்பான்றொடங்கி, அவை வருமாறு

இவ்வாறெனவுணர்த்தும்வழி, ஒப்பின் முடித்தலான் விகுதிப் புணர்ச்சிக்கும் பதப்புணர்ச்சிக்கும் உடனுணர்-ற்று.

இ - ள். பதத்தின்முன் விகுதியேனும் பதமேனும் உருபேனும் புணருமிடத்துச், சாரியை யொன்றேனும் பலவேனும் வருதலும், வாராதொழிதலும், இவ்விரண்டு மாகிய விகற்பமுமாம். எ - று.

புணர்ந்தவழி புணரும்வழியென்னாது புணர்வழியெனப் பொதுமையிற் கூறவே, இம்மூவகைப்புணர்ச்சியுட் சாரியை விதித்தனவற்றுள்ளும் விதிப்பனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளும் ஆவைவருமாறு இவ்வாறென உய்த்துணர்கவென்றாராயிற்று.

வ - று. நடந்தனன். எ-ம். நடந்தான். எ-ம். நடந்தன, நடந்த. எ-ம். விகுதிப் புணர்ச்சியுட் சாரியை வேண்டியும் வேண்டாதும் விகற்பித்தும் வந்தன. புளியமரம், புளியங்காய்; உரினுக்கடிது, உரினுக்கடுமை. எ-ம். புளிக்கறி. எ-ம். நெல்லின் குப்பை, நெற்குப்பை. எ-ம். பதப்புணர்ச்சியுட் சாரியை அவ்வாறாயின. அவற்றை, அவற்றினை; மரத்தை, மரத்தினை. எ-ம். தன்னை, என்னை. எ-ம். ஆனை, ஆவை. எ-ம். உருபுபுணர்ச்சியுட் சாரியை அவ்வாறாயின. பிறவுமன்ன. மாடத்துக்கு, மாடக்கு என்றற்றொடக்கத்தன, வேண்டியவழி இன்மையிற் செய்யுள் விகாரமாமென்க. (4)

244. அன் ஆன் இன் அல் அற்றிற் றத்தம்
தம் நம் நும் ஏ அ உ ஐ கு ன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.

எ - ன். மேற் சாரியையென்றார், அவையிவையென்பதுணர்-ற்று.

இ - ள். அன்னும் ஆனும் இன்னும் அல்லும் அற்றும் இற்றும் அத்தும் அம்மும் தம்மும் நம்மும் நும்மும் ஏயும் அவ்வும் உவ்வும் ஐயும் குவ்வும் னவ்வும், இவைபோல்வன பிறவும், விகுதிபத முருபென்னு மூன்று புணர்ச்சிக்கண்ணுந்



தனிமொழிக்கண்ணும் வருதலிற், பொதுச்சாரியையென்னும் பெயரவாம். எ - று.

வ - று. ஒன்றன் கூட்டம், ஒருபாற்கு, வண்டின்கால், தொடையல், பலவற்றை, பதிற்றுப்பத்து, மரத்திலை, மஃறம், எல்லார்தம்மையும், எல்லார்நம்மையும், எல்வீர்நும்மையும், கலனே தூணி, நடந்தது, சாத்தனுக்கு, "கேழலட்ட பேழ்வாயேற்றை" "துறுகன் மறையினு முய்குவை போலாய்" ஆன் என முறையே காண்க.

இன்னபிறவென்றதனானே, அவன்றனை என்புழித்தன் னென்னுஞ் சாரியையும், அவன்றான் அவர்தாம் எனபுழித் தான் தாம் என்னுஞ் சாரியையும், புற்றஞ்சோறு என்புழி ஆஞ்சாரியையும், இல்லாப்பொருள் என்னும் பண்புத்தொகைக்கண் ஆகாரச் சாரியையும் வந்தன. இன்னும் வருவனவுங்காண்க. (5)

---

## உருபுபுணர்ச்சிக்குச் சிறப்புவிதி.

245. எல்லா மென்ப திழிதிணை யாயின்
அற்றோ டுருபின் மே லும் முறுமே
அன்றே னம்மிடை யடைந்தற் றாகும்.

எ - ன். ஒருசார் சிலமொழியோடு உருபு புணர்தற்கு 'ஒற்றுயிர் முதலீற்றுருபுகள்' என்னுஞ் சூத்திரத்தான் எய்தியதன் மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். எல்லாமென்னும் பொதுப்பெயர் அஃறிணைக்கணானகாலை, அதனோடு ஆறுருபும் புணரின் இடையே அற்றுச்சாரியையும் உருபின்மேன் முற்றும்மையும் பெறும், உயர்திணைக்கணானகாலை இடையே நம்முச்சாரியையும் உருபின்மேன் முற்றும்மையும் பெறும். எ - று.

உ - ம். எல்லாவற்றையும், எல்லாவற்றாலும். எ-ம். எல்லா நம்மையும், எல்லாநம்மாலும். எ-ம். வரும்.

இனி, இரட்டுறமொழிதலென்னு முத்தியான், எல்லாமென்ப திழிதிணையாய், எ ம். இனற்றேடு. எ-ம். பிரித்து, அஃறிணைக் கண்ணாகி இன்சாரியை அற்றுச்சாரியையோடெனப் பொருடந்து எல்லாவற்றினையும் என வருதலுங்கொள்க. ஏனையவற்றோடும் இவ்வாறேயொட்டுக.

இச்சொற்கு இருதிணைக்கண்ணும் அற்றுச்சாரியையும் நம்முச் சாரியையும் உருபுபுணர்ச்சிக்கண் 'பதமுன் விகுதியும்' என்னுஞ் சூத்திரத்துட் கூறியவாறே வேண்டியே வருதறேன்ற இன்றி யமையா முற்றும்மையோடு உடனிகழ்ச்சிப் பொருளவாய் அற்றோ டென்றும் அடைந்தற்றுகுமென்றுங் கூறினர்.

தாம் நாம் நீர் என்னு மூவிடப்பெயர் வேற்றுமைப்புணர்ச்சிக் கண் வந்தமையானே தம் நம் நும் என விகாரப்பட்டுத் தமக்கின மான மூவிடப்பெயர்களை முறையே சார்ந்து சிறப்புப்பொருடா ராமையின் ஒருபொருட்பன்மொழியல்லவாய் வருதலின் இம் மூன்றுஞ் சாரியையிடைச்சொல்லெனப் படுமாதலிற் றம்மென் பதைப் படர்க்கைப்பெயர்க்கும் நும்மென்பதை முன்னிலைப் பெயர்க்கும் வருஞ் சூத்திரத்தமைத்தாற்போல நம்மென்பதனை ஈண்டுத் தன்மைப்பெயர்க்கமைத்தாரென்பதூஉம், தன்மையாயி னுந் திணைப்பொதுமையினில்லாது பாணரேம் என்றாற்போல எல்லாநம்மையுமென்ற துணையானே உயர்திணைத் தன்மை யுணர்த்துமென்பதூஉம் பெற்றாம். (6)

246 எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லு முருபின் பின்ன ரும்மே.

எ - னின். இதுவுமது.

இ - ள். எல்லாருமென்னும் உயர்திணைப்படர்க்கைப் பெயரோடும் எல்லீருமென்னும் முன்னிலைப் பொதுப்பெய ரோடும் ஆறுருபும் புணருமிடத்து, அவ்விருபெயரினிறுதி களினின்ற முற்றும்மைகளைத் தள்ளி, அந்நிலைக்களங்களிற் படர்க்கைப்பெயர்க்குத் தம்முச்சாரியையும் முன்னிலைப் பெயர்க்கு நும்முச்சாரியையும் பொருந்த, அவற்றாற்றள் ளுண்ட முற்றும்மைகள் உருபின் பின்னே வந்து பொருந்தும். எ - று.

உ - ம். எல்லார்தம்மையும், எல்லாரையும். எ-ம். எல்லீர் நும்மையும், எல்லீரையும். எ-ம். விகற்பித்து வந்தன. ஏனைய வற்றோடும் இவ்வாறே யொட்டுக.

நந்தம்மை நுந்தம்மை எனப் படர்க்கைக்குரிய தம்முச்சாரியை தன்மை முன்னிலைகளின்வருதல் 'ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே' என்னும் வழுவமைதியென்க. (7)

247. தான் தாம் நாம் முதல் குறுகும் யான் யாம்
நீ நீர் என் எம் நின் நு மாம்பிற
குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல.

எ - னின். இதுவுமது.

இ - ள். இங்ஙனங் கூறிய இருதிணைப் பொதுவாய மூவிடப்பெயரேழோடும் ஆறுருபும் புணருமிடத்துத், தான் தாம் நாம் என்னு மூன்று பெயரும் நெடின்முதல் குறுகி, முறையே தன்னை தம்மை நம்மை என வரும்; யான் யாம் நீ நீர் என்னு நான்குபெயரும் முறையே என்னை எம்மை நின்னை நும்மை என வரும்; இவ்வேழு பெயரோடுங் குவ் வுருபு புணருமிடத்து, இடையே தனக்கு என அகரச் சாரியை வரும். குவ்வுருபின் அகரச்சாரியை வரினும், ஆறு முருபுயிர்கள்வரினும், இவ்விகாரமொழிகளின் இறுதியவாய தனிக்குறின் முன்னொற்றுக்கள் இரட்டாவாம். எ - று.

ஒழிந்த உருபுகளோடும் இவ்வாறேயொட்டுக.

பிறவென்ற மிகையானே நீயென்பது உன்னையென்றும், நீரென்பது உம்மையென்றும், வருதல்கொள்க. முன்னும் பின்

னுஞ் சாரியைப்பேறு கூறுவார் சாரியை பெறாது விகாரப்படு மொழிகளை இச்சூத்திரத்தாற்றோன்ற இடையேகூறியது, இப் பொதுப் பெயர்களே இங்ஙனம் தம் நம் நும் எனக் கூறிய சாரியை யிடைச் சொல்லுமாயினவென உய்த்துணர்தற்கென்க. (8)

248. ஆமா கோனவ் வணையவும் பெறுமே.

எ-னின். இதுவுமது.

இ-ள். ஆவென்னும் பெயரும், மாவென்னும் விலங்கின் பொதுப்பெயரும், கோவென்னும் இறைவனை யுணர்த்தி நிற்கும் பெயரும், உருபுகள் புணருமிடத்து, னகரச்சாரியை பொருந்தவும் பெறும். எ-று.

உ-ம். ஆனை, ஆவை; மானை, மாவை; கோனை, கோவை என விகற்பித்து வருதல் காண்க. பிறவற்றோடும் இவ்வாறே யொட்டுக.

எதிரது தழீஇயவெச்சவும்மையானே, குவ்வுருபிற்கு னகரச் சாரியையொன்றுமே அமையாது ஆனுக்கு, மானுக்கு, கோனுக்கு என உகரச்சாரியை உடன்பெறுதலும், ஆவுக்கு, மாவுக்கு, கோவுக்கு என உகரச்சாரியையொன்றுமே பெறுதலும், ஆவினுக்கு மாவினுக்கு, கோவினுக்கு என இன்சாரியையும் உகரச் சாரியையும் உடன்பெறுதலும், ஆவினை, மாவினை, கோவினை என இன்னென வரூஉம் வேற்றுமையுருபொழிந்தவற்றிற்கு இன் சாரியை பெறுதலுங் கொள்க.

இனி, இரட்டுறமொழிதலான் ஆமா எனவொரு சொல்லாய்க் காட்டாவினையுணர்த்திநின்று இவ்விதிகள் பெறுதலும், 'அணையவு மென்றொழியாது பெறுமே யென்றமையானே ஆன் மான் கோன் ஆமான் என னகரச்சாரியை தனிமொழிக்கண்ணும் வருதலுங் கொள்க.

ஆவென்பதனோடு கோவென்பதனைச் சார வையாது மாவென் பதனைச் சார வைத்தமையானே, கோவென்பது இறைவனை யுணர்த்தியதென்பதூஉம், மாவென்பது விலங்கு மாவென்பதூஉம் பெற்றாம். (9)



249. ஒன்று முதலெட் டீறா மெண்ணூர்
பத்தின்முன் னான்வரிற் பவ்வொற் றொழிய
எல்லா மோடு மொன்பது மிற்றே. [மேல்

எ-னின். இதுவுமது.

இ-ள். ஒன்றுமுதலெட்டீறா மெண்களோடு புணர்ந்த பத்தென்னுமெண் முன்னர் உருபுகள் புணருமிடத்து இடையே ஆன்சாரியை வரின், அப்பத்தென்னு மெண்ணினது பகரவொற்றொன்றுமே நிற்க மேனின்றவெல்லாவெழுத் துங்கெடும்; ஒன்பதென்னு மெண்முன்னரும் உருபுகள் புணரு மிடத்து ஆன்சாரியை வரின், அதன் பகரவொற்று நிற்க மேனின்ற வெல்லா வெழுத்துங் கெடும். எ-று.

உ-ம். ஒருபானை, ஒருபதை, ஒருபஃதை; இருபானை, இரு பதை, இருபஃதை. எ-ம். ஒன்பானை, ஒன்பதை, ஒன்பஃதை. எ-ம். விகற்பித்துவரும். பிறவற்றோடும் இவ்வாறேயொட்டுக.

ஒருபது ஒருபஃது என விகாரப்பட்டு வரும் பத்தென்பார், எண்ணூர் பத்தென்றார்.

வரினென்றமையான் வருதற்கும் இதுவே விதியென்பதூஉம், இவ்வாறு ஆன்வருதலைப் பராமுகமாகக் கூறினமையின் உகரச் சாரியை இன்சாரியைகளும் வேண்டுழி வருமென்பதூஉங் கொள்க.

### வகரவீற்றுச் சுட்டுப்பெயர் சிறப்புவிதி.

250. வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.

எ-னின். இதுவுமது.

இ-ள். அஃறிணைப்பன்மையவாய வகரவீற்று மூன்று சுட்டுப்பெயர்க்கும் உருபுகள் புணருமிடத்து, அற்றுச் சாரியை பொருந்தன் முறைமையாம். எ-று.

உ-ம். அவற்றை, இவற்றை, உவற்றை என அற்றுச்சாரியை வேண்டியே வருதல் காண்க.

வழியேயென்ற மிகையானே, அவற்றினை இவற்றினை உவற்றினை என இன்சாரியை வருதலுந் தனிக்குறின் முன்னொற்றுயிர்வரினிரட்டாமையுங் கொள்க. பிறவற்றோடும் இவ்வாறே யொட்டுக. (11)

251. சுட்டின்மு னாய்த மன்வரிற் கெடுமே.

எ-னின். இதுவுமது.

இ-ள். அஃது இஃது உஃது என வருமூன்று சுட்டுப் பெயர்களோடு உருபுகள் புணருமிடத்து இடையே அன் சாரியை வரின், மொழிமுதற் சுட்டெழுத்துக்கண் மூன்றின் முன்னின்ற ஆய்தங் கெடும். எ-று.

உ-ம், அதனை, அஃதை; இதனை, இஃதை; உதனை, உஃதை எனச் சாரியை விகற்பித்து வருதலும், வந்தவழி ஆய்தங் கெடுதலுங் காண்க.

அன்சாரியை வருதனோக்கி ஆய்தங் கெட்டவழி, அது இது உது என ஆய்தமில்லாச் சுட்டுப்பெயர்களாய்ப் பின்னர் அன் சாரியை பெறுதலின், அவற்றிற்கும் இதுவே விதியெனக் கொள்க.

வ-று. அதனை, அதை; இதனை, இதை; உதனை, உதை என விகற்பித்து வருதல் காண்க.

அன்[illegible] வருதலைப் பராமுகமாகக் கூறினமையிற், குவ்வுருபு புணர்வழி, அ[illegible]ற்கு என அன்சாரியை தனித்து வருதலேயன்றி, அதனுக்கு என உகரச்சாரியையுடன் வருதலுங் கொள்க. (12)

252. அத்தி னகர மகர முனை யில்லை.

எ-னின். அத்துச் சாரியைக்கு 'இ ஈ ஐ வழி' என்னுஞ் சூத்திரத்தான் எய்திய[illegible] விலக்கிப் பிறிதுவிதி வகுத்தனுதலிற்று.

இ-ள். அத்துச்சாரியையின் அகரவுயிர், இயல்பினும் விதியினு நின்ற அகரவுயிரீற்றின் முன் வரின், வகரவுடம்படு மெய் பெறாது கெடும். எ-று.

உ-ம். மகத்துக்கை, மரத்துக்குறை என இரண்டகர வீற்றின் முன்னுங் கெட்டது. (13)

---



## புறனடை.

253. இதற்கிது சாரியை யெனினள வின்மையின்
விகுதியும் பதமு முருபும் பகுத்திடை
நின்ற வெழுத்தும் பதமு மியற்கையும்
ஒன்ற வுணர்த்த லுரவோர் நெறியே.

எ-னின். சாரியைக்காவதோர் புறனடையுணர்-ற்று.

இ-ள். விகுதி முதலிய புணர்ச்சிக்கண் இதற்கிது சாரியையென்று வரையறுத்து விதித்தனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளுந் தனித்தனி சொல்லப்புகின் வரையறைப் படாமையின், விகுதிப்புணர்ச்சியினையும் பதப்புணர்ச்சியினையும் உருபுபுணர்ச்சியினையுங் கண்டுழிப் பகுத்து, இடையே நின்ற வகாரம் அகர முதலிய எழுத்துச்சாரியையினையும், அன் ஆன் முதலிய பதச்சாரியையினையும், இவ்விரண்டு சாரியையுந் தோன்றா இயல்பினையுந் தெரியவறிவித்தல் பெரியோரது நெறியாம். எ-று.

உ-ம். "ஆனமணி யியம்புங் கானத் தான." எ-ம். "ஆன நெய் தெளித்து நான நீவி." எ-ம். விதித்த பொருட்புணர்ச்சிக்கண் 'உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.' என்ற மாட்டேற்றான் அமைந்த னகரச்சாரியையன்றி அகரச்சாரியையும் உடன் வந்தன,

இனி, விதியாதொழிந்தனவற்றின்கண், பாட்டின்பொருள் எனக் குற்றியலுகரத்து இன்சாரியையும், மரத்திலை என மஃகான் புள்ளிக்கு அத்துச்சாரியையும் வந்தன. தன்கை, என்கை எனச் சாரியையின்றி இயல்பாய் வந்தன. இவ்வாறே மூவகைப் புணர்ச்சியும் பகுத்துணர்ந்து கொள்க.

எல்லாச்சாரியையும் இடைப்பதமேனும், எழுத்துச்சாரியை பதச்சாரியையெனப் பகுத்தல் வேறறிதற்கிட்ட இலச்சினையாமென்க. (14)

## நான்குபுணர்ச்சி புறனடை.

254. விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினும்
உரைத்த விதியினோர்ந் தொப்பன கொளலே.

எ - னின். இங்ஙனங் கூறிய நான்கின் புணர்ச்சிக்குமாவ தோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். விகுதியே பதமே சாரியையே உருபேயென்னும் நான்கின் புணர்ச்சிக்கண்ணும் விதிகள் பொதுப்படக் கூறப்பட்டனவேனும், அவ்விதிகளுள் இவ்விதி இதற்குப் பொருந்தும் இவ்விதி இதற்குப் பொருந்தாதென உய்த்துணர்ந்து, எவ்விதி எதற்குப் பொருந்துமோ அவ்விதியை அதற்குக் கொள்க. எ - று.

விகுதிப்புணர்ச்சியுள் 'றவ்வொடு கர வும்மைநிகழ் பல்லவும்' எனப் பொதுப்பட விதித்தாரேனும், விதியுளதென்று கருதி, இவ்விகுதி வந்துழியெல்லாம் இவ்விரு காலமும் பொருந்துமென்று கொள்ளற்க. சென்று என்புழி இறந்தகாலமும், சேறு என்புழி எதிர்காலமும் பொருந்துமென்று கொள்க.

பதப்புணர்ச்சியுள் 'அல்வழி இ ஐம் முன்னராயி—னியல்பு மிகலும் விகற்பமு மாகும்.' எனப்பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்று கருதி, ஆடிதிங்கள் என இயல்பாமென்றும், பருத்திக்குறிது என மிகுமென்றுங் கொள்ளற்க. பருத்திகுறிது என எழுவாய்க்கண் இயல்பாமெனவும், ஆடித்திங்கள் எனப் பண்புத்தொகைக்கண் மிகுமெனவுங் கொள்க.

சாரியைப்புணர்ச்சியுள் 'பதமுன் விகுதியும் பதமு முருபும்—புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை—வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்.' எனப் பொதுப்பட விதித்தாரேனும், விதியுளதென்று கருதி, நாட்டினினீங்கினான் என இன்னென வரூஉம் வேற்றுமையுருபிற்கின்சாரியை வருமென்றும், நாட்டுக்கணிருந்தான் எனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வாராதென்றுங் கொள்ளற்க; நாட்டின்கணிருந்தான் எனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வருமென்றும், நாட்டினீங்கினான் என இன்னுருபிற்கு இன்சாரியை வாராதென்றுங் கொள்க.



உருபு புணர்ச்சியுள் 'ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியி—னொக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.' எனப் பொதுப்பட விதித்தாரேனும், விதியுளதென்று கருதி, நம்பிகு என உயிரீற்றுயர்திணைப் பெயர்முன் வந்த குவ்வுருபு மிகாவென்றும், நம்பிக்கண் என மன்னென்றமையாற் கண்ணுருபு மிகுமென்றுங் கொள்ளற்க; நம்பிகண் எனக் கண்ணுருபு மிகாவென்றும், நம்பிக்கு எனக் குவ்வுருபு மன்னென்றமையான் மிகுமென்றுங் கொள்க. பிறவுமன்ன.

சாரியைப்புணர்ச்சி ஏனை மூவகைப் புணர்ச்சியினையுஞ் சார்ந்து இடையே தோன்றல் விகாரமாய் வந்து புணர்தலின், விகுதி பதஞ் சாரியையுருபென உருபிற்கு முற்கூறினார்.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது, இந்நால்வகைப் புணர்ச்சியுள் ஒன்றற்குச் சொன்ன விதி மற்றொன்றற்குங் கொள்கவெனப் பொருள் கொள்வாருமுளர். அப்பொருட்கமைந்த சொல் இச்சூத்திரத்தின்மையானும், 'சாரியை—சந்தி விகார மாறினு மேற்பவை—முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்' என்றும், 'ஈறுபோதல்' என்னுஞ் சூத்திரத்து அவ்விகாரம் விகுதிப்புணர்ச்சிக்கணன்றிப் பதப்புணர்ச்சிக்கண்ணும் வருமென்பது தோன்றப் 'பண்பிற் கியல்பே' என்றும், புணரியல் விதி பெயர் வினையிடையுரி நான்கிற்கும் பொருந்துமென்பது தோன்ற 'மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்' என்றும், விதந்துரைத்த சிறப்பு விதிகளுள் 'உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.' என்றும், 'ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியி—னொக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.' என்றுங் கூறியவாற்றான், அப்பொருள் அமைந்துகிடத்தலானும், அது பொருந்தாதென்க. (15)

## வேற்றுமைப் புணர்ச்சி புறனடை.

255. இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவு மாகுமை யுருபே.

எ-னின். வேற்றுமைப் புணர்ச்சிக்காவதோர் புறனடை யுணர்-ற்று.

இ-ள். வேற்றுமைப்புணர்ச்சிக்கு விதித்த பொது விதியோடு தானும் ஒருங்கு முடிதலேயன்றி, அங்ஙனம் விதித்த இயல்பின்கண் விகாரமாயும் விகாரத்தின்கண் இயல்பாயும், உயர்திணைக்கண் விரிந்துந் தொக்கும், விரவுப்பெயர்க் கண் விரிந்தும் விரிதலொழிந்தும், இவைபோல்வன பிறவேறு பாடாயும், வரும் இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சி. எ-று.

உயிரே ஒற்றே சாரியையே யென்றிவை தோன்றல் திரிதல் கெடுதல் உறழ்ச்சி விகற்பங்களையெல்லாம் உள்ளடக்கி இயல்பின் விகாரமும் விகாரத்தியல்பும் என்றும், எல்லாவேற்றுமையும் விரிந் துந் தொக்கும் வருதல் போலாது இவ்வேற்றுமை உயர்திணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் விரிதலே தகுதியாய்த் தொகுதல் தகுதியாயும் வலிந்துகோடலாயும் வருமென்பது தோன்ற விரிந்துந் தொக்கும் விரிந்தும் விரிதனின்றும் என்றும், நெருநலளவும் வருத்திய பிணி இன்று நின்றது என்பதுபோல ஒழிதற்பொருடோன்ற நின்றென்றுங் கூறினார்.

மேலைச் சூத்திரத்து 'ஒப்பன கொளலே' என்றமையான், இவ் விதிகளை இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சி வந்துழியெல்லாங் கூட்டாது, வேற்றுமைப் பொதுப்புணர்ச்சியோடு ஒருங்கொத்து முடிவன இவை இப்புறனடைச்சிறப்புவிதியான் முடிவன இவை யென உய்த்துணர்ந்து, ஏற்பனவற்றோடு கூட்டுக.

வ-று. "வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" என இயல்பின் விகாரமாயிற்று. மண்கொணர்ந்தான் என விகாரத்தியல்பாயிற்று. நம்பியைக்கொணர்ந்தான் என உயர்திணைக்கண் விரிந்தது. ஆடூஉ வறிசொல், மகடூஉவறிசொல், பல்லோரறியுஞ்சொல், 'நான்முகற் றொழுது' என அதன்கட்டொக்கது. கொற்றனைக் கொணர்ந் தான் என விரவுப்பெயர்க்கண் விரிந்தது. ஆண்பெற்றாள், பெண் பெற்றாள், "தற்கொண்டான் வளத்தக்காள் வாழ்க்கைத் துணை." "வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" என அதன்கட்டொக்கது. இவ்விரண்டிடத்துத் தொகையுட் சில தகுதியாயுஞ் சில வலிந்து கோடலாயும் வருதல் காண்க.



அன்னபிறவுமென்றமையானே, தற்கொண்டான், எற்பணி யாளாய் என உறழப்படுவன திரிந்தே வருதலும், இன்னும் வரு வனவுளவேல் அவையுங்கொள்க.

இங்ஙனம் எண்ணின்கணின்ற இறந்தது தழீஇய இழிவுசிறப் பும்மைகளானே, வேற்றுமைக்கென விதித்த பொதுவிதியோடு ஒருங்கொத்து வரகு கட்டினான் என இயல்பின்கணியல்பாயும், விளக்குறைத்தான் பலாக்குறைத்தான் கடுக்குறைத்தான் என விகாரத்தின்கண் விகாரமாயும், வருதலே பெரும்பாலவென்க.

இனி, விரவுப்பெயர்க்கண் விரிந்துநின்றுமென்பதற்கு, இவ் வாறன்றி, எழுந்திருந்தென்பதற்கு இருந்தென்பதனை அசைநிலை யாக்கி, எழுந்தென ஒருபொருள் கோடல்போல, நின்றென்பதனை அசைநிலையாக்கி விரிந்தென ஒருபொருள் கொள்ளின், வழக்கின் கண்ணுஞ் செய்யுட்கண்ணுந் தொக்கு வரும் இலக்கியங்கட்கு இலக்கணமின்றாமென்க. (16)

256. புள்ளியு முயிரு மாயிறு சொன்முன்
றம்மி னாகிய தொழின்மொழி வரினே
வல்லினம் விகற்பமு மியல்பு மாகும்.

எ-னின். இதுவுமது.

இ-ள். மூன்றாம் வேற்றுமைப் புணர்ச்சியுள் ஒற்று முயிரு மிறுதியாய் நின்ற சொன் முன்னர்க் 'கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்' என்பவற்றுட் கருத்தாவாகிய நிலைமொழிப் பொருள் தம்மாலாகிய தொழிற்சொல் வரின், அங்ஙனம் வரும் வல்லினம், வேற்றுமைப்பொது முடிபே லாது, விகற்பமும் இயல்புமாம். எ-று.

இவ்விதியும் ஒப்பன கொள்க.

வ-று. பேய்கோட்பட்டான், பேய்க்கோட்பட்டான்; சூர் கோட்பட்டான், சூர்க்கோட்பட்டான்; புலிகோட்பட்டான், புலிக் கோட்பட்டான். எ-ம். பேய்பிடிக்கப்பட்டான், புலிகடிக்கப்பட் டான். எ-ம். வரும். உம்மையால், சுறாப்பாயப்பட்டான், அராத்

தீண்டப்பட்டான் என வேற்றுமைப் பொதுவிதியான் மிக்கு முடிவனவே பெரும்பாலவென்க. இவற்றுட்டம்மினுகிய தொழில் பட்டானென்பதாம்; கோளென்பது முதலியவாய் இடைப்பிற வருவன தந்தொழிலாம். இங்ஙனமாயினும், இவ்விரண்டனையும் ஒரு சொல்லாக்கித் தம்மினுகிய தொழின்மொழியென்றார், பட்டானென்புழி இது பட்டானென்னும் பொருடோன்றக் கோளென்பது முதலியன அதனை விசேடித்து நிற்கும் ஒற்றுமை நயங்கருதியென்க. வேற்றுமை நயங் கருதிற் கோட்பட்டானென்பதொழிந்தன எழுவாய்ப் பயனிலையாகிய வினையெச்சம் முற்றுவினை கொண்டதாம். எழுவாய்க்கண்ணும் மூன்றாம் வேற்றுமைக்கண்ணும் கருத்தா வுளவாகலிற் றந்தொழிலையே ஈண்டுத் தம்மினுகிய தொழிலென்றாரெனின்:—பேய்பிடித்தது என்னுமெழுவாய்க்கட் பேயாற்பிடித்தது என மூன்றாமுருபும் விரித்தற்கமையும்; அங்ஙனம் விரித்தல்கூடாமையிற் றந்தொழிலுந் தம்மினுகிய தொழிலும் எழுவாய்க்கட் கருத்தாவும் மூன்றாம் வேற்றுமைக்கட் கருத்தாவுந் தம்முள் வேறுபாடுடையவாம், அவ்வேறுபாடு அவ்விலக்கணங் கூறும்வழிக் காட்டுதும். (17)

## எழுத்ததிகாரப் புறனடை.

257 இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்பளவின்மையின் விதித்தவற்றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.

எ - னின். இவ்வதிகாரத்திற்காவதோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். இதற்கிது முடிபென்று இவ்வதிகாரத்துள் விதிக்கத் தகுவனவற்றையெல்லாந் தனித்தனி வரையறுத்து விதிக்கப்புகின் அதற்கோர் வரையறையின்மையின், வகுத்து விதித்தனவற்றின் இலக்கணங்களை ஏதுவாகக்கொண்டு, வகுத்து விதியுரையாதனவற்றையுங் கருதலளவையான் வகுத்து விதியுரைத்துக் கொள்க. எ - று.

வ - று. எழுத்தியலுள் 'மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி—யெழுத்து' எனவுரைத்தமையானே "கட்புல னில்லாக் கடவுளைக் காட்டுஞ்—சட்டகம் போலச் செவிப்புல வொலியை—யுட்கொளற் கிடுமுரு பாம்வடி வெழுத்தே." எனப் பிறர் கூறியவாறு இவ்வொலிவடிவைக் காட்டுதற்கு ஒரு கருவியாக வரைந்து கொள்ளப்பட்டது வரிவடிவெழுத்தெனவும், பதவியலுள் 'அன் ஆன் அள் ஆள்' என்னுஞ் சூத்திரத்து முறையே அன் ஆன் விகுதி ஆண்பாற்கென உரைத்தமையானே பெருமாளென்னும் பதம் பெருமையை யுடையானென்னும் பொருடோன்ற நின்ற பெருமாளென்னும் பதத்தினிறுதி ஆன்விகுதி ஆள்விகுதியாய் ஒரோவிடங்களிற்றிரிந்து ஆண்பாலையேயுணர்த்தி நின்றதெனவும், உயிரீற்றுப்புணரியலுள், இயல்பினும் விதியினு நின்றவுயிர்முன் க ச த ப மிகும்' எனவுரைத்தமையானே 'ணன வல்லினம் வரட்டறவும்' என்புழி டகரமும் வல்லினமாதலின் மிகுந்ததெனவும், மெய்யீற்றுப்புணரியலுள், 'நுந்தம், எம்நம் மீறா மவ்வரு ஞநவே.' எனவுரைத்தமையானே அம்மென்னுஞ் சொல்லிறுதி மகரமுங் குற்றொற்றாதலிற் றன்னொடு மயங்காத மெல்லினம் வரின் அதுவாய்த் திரிந்து அந்நலம் என அழகினது நலமென்னும் பொருட்டாய் வருமெனவும், உருபுபுணரியலுள் 'வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே' என வுரைத்தமையானே அதுபோலும் வினுவும் எவற்றை என அற்றுச்சாரியை பெறுமெனவும், இரண்டாம் வேற்றுமைக்கும் மூன்றாம் வேற்றுமைக்கும் புறனடை யுரைத்தமையானே ஏழாம்வேற்றுமையும் "மண் புகுந்தும் விண்பறந்து மாலுமயனுங் காணுவொருபொருள்." என வேற்றுமைப் பொதுவிதியேலாது வேறுபான்மை வருமெனவுங் கொள்க. இன்னும் இவ்வைந்தியலுள்ளும் வகுத்துரையாதனவற்றை எல்லாம் இடர்ப்படாது இதுவே நிலனுக வகுத்துரைத்துக் கொள்க. (18)

உருபுபுணரியல் முற்றிற்று.

---

எழுத்ததிகாரம் முற்றுப்பெற்றது.

# 2. சொல்லதிகாரம்

சொல்லதிகாரமென்பது, சொல்லினது அதிகாரத்தை யுடையதென அன்மொழித்தொகையாய், அப்படலத்திற்குக் காரணக்குறியாயிற்று.

சொல்லென்றது, எழுத்தினானாக்கப்பட்டு இருதிணைப் பொருட்டன்மையும் ஒருவனுணர்தற்குக் கருவியாம் ஓசை யாகிய பெயர்வினையிடையுரியென்னு நால்வகைச் சொல்லும் பிறவுமாம். அவை 'இயற்சொற்றிரிசொல்' என்னுஞ் சூத்தி ரத்தாற் பிற்கூறுபவாகலின், ஈண்டெடுத்தோதாது போற்றியாளப் பட்டது.

அதிகாரம் அதிகரித்தல். அதனை மேலையதிகாரமுகத் துரைத்தாங் குரைத்துக்கொள்க. எனவே, சொல்லை நுதலி வரும் பலவோத்தினது தொகுதி சொல்லதிகாரமென்றாரா யிற்று.

எழுத்தினானாக்கப்படுதல் மேலையதிகாரத்திற் போந்த பதவியலுட்காண்க. இருதிணைப்பொருண் முதலியன பின் வருஞ் சூத்திரங்களானுணர்க.

இனிப் பொருட்டன்மையாவது, ஒருபொருட்குக் கேடு பிறந்தாலும் தனக்குக் கேடின்றித் தானொன்றேயாய்ப் பல வகைப்பட்ட பொருடோறு நிற்குமென்றுணர்க.

---

## 1. பெயரியல்.

### கடவுள் வணக்கமும் அதிகாரமும்.

258. முச்சக நிழற்று முழுமதி முக்குடை
அச்சுத னடிதொழு தறைகுவன் சொல்லே.



எ - னின். கடவுள் வணக்கமும் அதிகாரமுமுணர்-ற்று.

இ - ள். மூன்றுலகத்திற்கும் நிழலைச்செய்யு நிறைந்த மதிபோலு மூன்று குடையையுடைய அழியாதவனடிகளை வணங்கிச் சொல்லுவது மேலையதிகாரத்துக் கூறிய எழுத்தி னானாய சொல்லிலக்கணத்தை. எ - று.

தோன்றியழியுமாலையவென்பார் சகமென்றும், உலகமேயுருவ மாயினான் உயிரின்புறுவதே தானின்புறுவதென்பார் அக்கடவுண் முடிமேனிழற்றுங் குடையை முச்சகத்திற்கும் நிழற்றுமென்றும், நிறைந்த தண்ணளியையுடையனென்பார் அதனை உவமை முகத் தாற் குடைமேல் வைத்து முழுமதிமுக்குடையென்றும், சுதந்திர மின்றித் தோன்றியழியுமுயிரும் பிறவுமாகிய சகத்திற்கு அவ்வாறு தோன்றியழியாதானலைவனாக வேண்டுமென்பார் அச்சுதனென் றும், நஞ்செயலன்றென்பார் அடிதொழுதறைகுவனென்றும், வரையறைப்படாத பெருமையையுடையதென்பார் அவ்வாற்ற லோனறச் சொல்லென்றுங் கூறினார்.

ஈண்டுக் காப்பது கருதி அச்சுதனென்றது, மேலையதிகாரத் துப் படைப்பது கருதி நான்முகனென்றதுபோலும்.

சொல்லென்பது ஆகுபெயர். ஏகாரம் ஈற்றசை. (1)

---

### சொல்லின் பொதுவிலக்கணம்.

259. ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி
[யென்றா
இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பதுசொல்லே.

எ - னின். மேற்சொல்லென்றது இஃதென்பதுணர்-ற்று.

இ - ள். ஒருமொழியுந் தொடர்மொழியும் பொது மொழியுமென மூன்று கூற்றினதாய், இருதிணையாகிய

ஐம்பாற்பொருளினையும் அப்பொருளையன்றித் தன்னையும், மூன்றிடத்தினும், வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும், வெளிப்படையானுங் குறிப்பினானும், விளக்குவது சொல்லாம். எ - று.

எனவே, எல்லாச்சொல்லும் பொருளும் ஒருமொழி தொடர்மொழி பொதுமொழியென்னு மூன்றாயும் இருதிணையைம்பாலாயும் அடங்குமென்பதூஉம், இருதிணை முதலிய காரணத்தான் உயர்திணைச்சொல் அஃறிணைச்சொல் ஆண்பாற்சொல் பெண்பாற்சொல் பலர்பாற்சொல் ஒன்றறிசொல் பலவறிசொல் தன்மைச்சொல் முன்னிலைச்சொல் படர்க்கைச்சொல் வழக்குச்சொல் செய்யுட்சொல் வெளிப்படைச்சொல் குறிப்புச்சொல். எ ம். உயர்திணைப்பொருள் அஃறிணைப்பொருள் ஆண்பாற்பொருள் பெண்பாற்பொருள் பலர்பாற்பொருள் ஒருபொருள் பலபொருள் தன்மைப்பொருள் முன்னிலைப்பொருள் படர்க்கைப்பொருள் வழக்குப்பொருள் செய்யுட்பொருள் வெளிப்படைப்பொருள் குறிப்புப்பொருள். எ-ம். வழங்கப்படுமென்பதூஉம், உயிர்க்கு அறிவு கருவியாய் நின்று தன்னையும் பொருளையும் உணர்த்துமாறு போல ஒருவர்க்குச் சொற் கருவியாய் நின்று, தன்னையும், உள்பொருள் இல்பொருள், மெய்ப்பொருள், பொய்ப்பொருள், சித்துப்பொருள் சடப்பொருள், நித்தியப்பொருள் அநித்தியப்பொருள், உருவப்பொருள், அருவப்பொருள், காட்சிப்பொருள், கருத்துப்பொருள், இயற்கைப்பொருள், செயற்கைப்பொருள், முதற்பொருள், சினைப்பொருள், இயங்கியற்பொருள் நிலையியற்பொருள் எனப் பலவாற்றானும் பகுத்துக் கூறப்படும் இருதிணையைம்பாற் பொருளையுமுணர்த்துமென்பதூஉம் பெற்றாம். (2)

## மூவகை மொழி.

260. ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி
பலபொரு ளனபொது விருமையு மேற்பன.



எ - னின். மேலைச்சூத்திரத்து நிறுத்தமுறையானே மூவகை மொழிகளாமா றுணர் - ற்று.

இ - ள். ஒருமொழிகளாவன: பகாப்பதமேனும் பகுபதமேனும் ஒன்றுநின்று தத்தமொருபொருளைத் தருவனவாம்; தொடர்மொழிகளாவன; அவ்விருவகைப் பதங்களுந் தன்னோடும் பிறிதோடும் அல்வழி வேற்றுமைப் பொருணோக்கத்தான் இரண்டு முதலியவாகத் தொடர்ந்து நின்று இரண்டு முதலிய பலபொருளைத் தருவனவாம்; பொதுமொழிகளாவன: ஒன்றாய்நின்று ஒருபொருடந்தும் அதுவே தொடர்ந்து நின்று பலபொருடந்தும் இவ்விரண்டிற்கும் பொதுவாய் நிற்பனவாம். எ - று.

வ - று. நிலம், நிலத்தன், நட, நடந்தான், தில், மன், தவ நனிஎன்றற்றொடக்கத்தன ஒருமொழி. நிலம் வலிது, அது கொல், சாலப்பகை, நிலங்கடந்தான், நிலத்தைக் கடந்தான், நிலங்கடந்த நெடுமால் என்றற்றொடக்கத்தன தொடர்மொழி. எட்டு, கொட்டு, தாமரை, வேங்கை, எழுந்திருந்தான், வாராநின்றான், உரைத்திட்டான் என்றற்றொடக்கத்தன பொதுமொழி. இவை, ஒருமொழிகளாய் ஒருபொருடருவதன்றி, எள்ளைத் து, கொள்ளைத் து, தாவுகின்ற மரை, வேகின்ற கை, எழுந்து பின்னிருந்தான், வந்து நின்றான், உரைத்துப் பின்னிட்டான் எனத் தொடர்மொழிகளாய்ப் பலபொருடருதலுங் காண்க.

மொழிகள், தொடராது யாங்கணுந் தனித்து நில்லாவேனும், இப்பொருட்கு இச்சொல்லென இறைவனாலும் அறிவுடையோராலும் படைக்கும் படைப்புக்காலத்தும், தொடர்மொழிக்கணின்ற இரண்டு முதலிய சொற்களுள் ஒன்று நின்று மற்றைய எஞ்சிய வழியுந் தனித்து நிற்றலின், ஒருமொழியென்றார். எஞ்சியவழித் தனித்துநிற்றல்வருமாறு:—ஒருவனுழை ஒருவன்வந்துழிவாவென்றல் உலகியல்; அவ்வழி வருதற்கு வினைமுதலாகிய நீயென்னுஞ் சொல்லெஞ்சி வாவென்னுஞ் சொற்றனித்து ஒருமொழியாய் நின்றது. இத்தொடக்கத்தனவெல்லாங் கொள்க.

சேனை குழாம் என்றற்றொடக்கத்தன ஒருமொழி பலபொரு
டந்ததென்னையெனின்.—ஈண்டுத் தொடர்மொழி பலபொருளன
வென்றது பலசொல்லிற் பலபொருளையன்றி இப்பொருளையன்
றென்க. இப்பொருளைப் பலபொருளானியைந்த ஒருபொருளென
ஆசிரியர் அகத்தியனார் “பலவி னியைந்தவு மொன்றெனப்படுமே—
யடிசில் புத்தகஞ் சேனை யமைந்த—கதவ மாலை கம்பல மனைய.”
எனக் கூறுமாறு காண்க.

இனி, இவ்வொரு மொழியைத் தனிமொழியெனவும், தனி
மொழியாவது சமயவாற்றலாற் பொருள் விளக்குவதெனவும்,
அது பெயர்ச்சொன் முதலாக நான்கு வகைப்படுமெனவுங் கூறித்,
தொடர்மொழியாவது இருமொழித்தொடரும் பன்மொழித்
தொடருமென இருவகைப்படுமெனவும், அவை தொடருங்காற்
பயனிலைவகையானுந் தொகைநிலைவகையானும் எண்ணுநிலைவகை
யானுந் தொடருமெனவும், அவ்வாறன்றி வடநூலார் கூறியவாறே
அவாய் நிலையானும் அண்மையானுந் தகுதியானுந் தொடருமென
வும், அவற்றிற்குதாரணம் முறையே சாத்தன் வந்தான், யானைக்
கோடு, தீநீர், ஆவைக்கொணு, ஆற்றங்கரைக்கண் ஐந்துகனிகளுள
வாகின்றன, நீரானனை. எ-ம். அறம்வேண்டி யரசனுலகம் புரந்
தான். எ-ம். கூறுப. அவையெல்லாம் இருவகைப் பதத்துள்ளும்
அல்வழி வேற்றுமைப் பொருள்களுள்ளும் அடங்குமாறுய்த்
துணர்க. (3)

## இருதிணை.

261. மக்க டேவர் நரக ருயர்திணை
மற்றுயி ருள்ளவு மில்லவு மஃறிணை

எ - னின். நிறுத்தமுறையானே இருதிணையாமாறுணர்-ற்று.

இ - ள். மக்களுந் தேவரு நரகரும் உயர்திணையாம்;
அவரையொழிந்த விலங்கு முதலிய உயிருள்ளனவும், நில நீர்
முதலிய உயிரில்லனவும் அஃறிணையாம். எ - று.

மக்கடேவர் நரகரெனப்படுதல் அவ்வவ் யாக்கையும் உயிருங்
கூடிநின்றவழியாதலின், அவை பிரிந்தவழியும் வேறு கருதியவழி



வழியும் அவருயிரையும் உடம்பையும் உயிரில்லனவாகிய அஃறிணை
யாகக் கொள்ளப்படுமென்க. விலங்கு முதலியவற்றின் உயிருடம்பு
களும் அன்ன.

மக்களாகப் பிறந்து புண்ணிய பாவமியற்றிப் புண்ணியமிகுதி
யாற் றேவராயும் பாவமிகுதியான் நரகராயும் பிறத்தலின், மக்க
டேவர் நரகரெனச் சாதன சாத்திய முறையே வைத்தாரென்க.
அன்றியும், ஆசிரியர் தொல்காப்பியர் “உயர்திணை யென்மனார்
மக்கட் சுட்டே.” என முன்னர்க் கூறிப், பின்னர் “இவ்வென
வறியுமந்தந் தமக்கில” வாகிய “தெய்வஞ் சுட்டிய பெயர்” முதலி
யனவும் “உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்.” எனக் கூற
லின், உயர்திணைப்பாற்படுத்து, மக்கடேவர் நரகருயர்திணையென
முறை தெரித்தோதினரெனக் கோடலுமாமென்க.

“திணைநிலங் குலனொ ழுக்கம்” என்பவாகலின், திணையென்
னும் பலபொருளொரு சொல் ஈண்டுக் குலத்தினையுணர்த்தி நின்
றது. உயர்திணையல்லாத திணை அஃறிணையெனப்பட்டது. இவ்
விரண்டும் பண்புத்தொகை; உயர்வாகிய குலம், அஃதன்மையாய
குலம் என விரியும். அடையடுத்த இவ்விரண்டு சாதிப் பண்பு
களும், ஆகுபெயராய்ப், பண்பிகளையுணர்த்தி நின்றன. திணை
யென்பதொழுக்கம் அஃது ஆகுபெயராய் ஒழுக்கத்தையுடைய
பொருள்களை யுணர்த்தி நின்றதெனவும், உயர்திணையென்பது
வினைத் தொகையெனவுங் கூறுவாருமுளர். சாதிவேற்றுமை
கருதி உலகப் பொருள்களையெல்லாம் உயர்திணை அஃறிணையென
இரண்டு சாதியாக வகுத்து அவ்வேற்றுமை கருதி அவற்றை ஐம்
பாலாகப் பகுத்தலே எல்லாவாசிரியர்க்குங் கருத்தாவதன்றி, ஈண்
டொழுக்கங் கருத வேண்டுவதின்மையானும், அவ்வொழுக்கமும்
உயிரில்லனவற்றிற்குப் பொருந்தாமையானும், ஈண்டுத் திணை
யென்பதற்கு அது பொருளன்றெனவும், உயர்திணையை உயர்ந்த
திணையென இறந்தகால வினைத்தொகையாக விரிக்கின் மரம்
நாடோறும் உயர்ந்தமை கருதி உயர்மரமெனவுங் கல்வியறிவு
நாடோறுமுயர்ந்தமை கருதி அதனையுடையார்மேலேற்றி உயர்
மக்களெனவுங் கூறும் வினைத்தொகைபோல உயர்திணையென்ப
தற்கு உயரும் புடைபெயர்ச்சிவினை காட்சிவகையானுங் கருத்து

வகையானும் இன்மையின் அது வினைத்தொகையன்றெனவுங் கொள்க. (4)

## ஐம்பால்.

262. ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை.

எ - னின். நிறுத்தமுறையானே ஐம்பாலுட் சிலபாலும் அவற்றிற்குரிய திணையுமுணர்-ற்று.

இ - ள். ஆண் பெண் பலரென்னும் இம்மூன்று பாலினையுமுடைத்து உயர்திணை. எ - று.

ஆடவரென்றற்றொடக்கத்து ஆண்பன்மையும், பெண்டிரென்றற்றொடக்கத்துப் பெண்பன்மையும், மக்களென்றற்றொடக்கத்து இருவர் பன்மையும் அடக்கிப், பலரெனப்பட்டதென்க. மேற்பலவென்பதுமது. (5)

263. ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை.

எ - னின். இதுவுமது.

இ - ள். ஒன்றும் பலவுமென்னும் இரண்டுபாலினையுமுடைத்து அஃறிணை. எ - று.

அஃறிணைக்கண்ணுஞ் சேவலென்றற்றொடக்கத்து ஆண்பாலும் பெடையென்றற்றொடக்கத்துப் பெண்பாலும் உளவேனும், அவ்வாண்பாலும் பெண்பாலும் உயிருள்ளனவற்றுட் சிலவற்றிற்கும் உயிரில்லனவற்றிற்கும் இன்மையின், அப்பகுப்பொழித்து, எல்லாவற்றிற்கும் பொருந்த ஒன்றெனப்பட்டதென்க. (6)

## திணைபால் புறனடை.

264. பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையு மஃறிணை யன்னவு மாகும்.

எ - னின். திணைபால்கட்காவதோர் புறனடையுணர்-ற்று.



இ - ள். பெண்டன்மையினை விட்டு ஆண்டன்மையினை அவாவுவனவாகிய பேடுகள் உயர்திணையாண்பாலாம்; ஆண்டன்மையினைவிட்டு பெண்டன்மையினை அவாவுவனவாகிய பேடுகள் உயர்திணைப்பெண்பாலாம்; இவ்விருவகைப் பேடுகளும் உயர்திணையாமன்றி அஃறிணையை யொப்பனவுமாம். எ - று.

ஆணிலக்கணமும் பெண்ணிலக்கணமும் விரவி ஒருவகையேனும் நிரம்பாது நிற்கும் பேட்டினைப் பாற்பொதுமையினீக்கி உயர்திணையாண்பாலோடும் பெண்பாலோடுஞ் சேர்த்தமையின், அவ்விலக்கணங்களுள் விட்டவிலக்கணமும் அவாவுமிலக்கணமுஞ் சிறந்தனவென்பதூஉம், விடாதவிலக்கணமும் அவாவாதவிலக்கணமும் உள அவை அத்துணைச் சிறப்பினவல்லவென்பதூஉம், விடுதலும் அவாவுதலும் இலக்கணையென்பதூஉம், பேட்டிலக்கணங்களுட் சிறந்த தொன்றையே கருதாது சிறவாதனவற்றையும் உடன் கருதியவழி இருவகைப்பேடும் ஆண்பெண்ணென்னும் இரண்டனுள் ஒன்றன்பாற்படுதல் கூடாமையின் அப்பாலினவாம் உயர்திணையுமன்றி, அஃறிணையிலக்கண மின்மையின் அஃறிணையுமன்றி, உயிருள்ளனவற்றுள் ஆண்பெண்ணென்னும் பகுப்பிலவாகி நின்ற அஃறிணையை யொக்குமென்பதூஉம், பெற்றாம். பேடு, அழிதூஉ, அலி, மகண்மா என்பன ஒருபொருட்கிளவி. அலி, மகண்மா என்பனவற்றை வேறு கூறுவாருமுளர். "பெண்ணவாயாணிழந்த பேடியணியாளோ—கண்ணவாத் தக்க கலம்." எனப் பெண்ணிலக்கணஞ் சிறந்தமையிற் பெண்பாற்பட்டது. ஆண்பாற்பட்டதற்கும் அஃறிணையொத்து நின்றதற்கும் இலக்கியம் வந்தவழிக் காண்க. (7)

## சொல் உணர்த்தல்.

265. படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்
பெறப்படுந் திணைபா லனைத்து மேனை
இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே.

**எ - னின்.** நிறுத்தமுறையானே மூன்றிடத்துஞ் சொற்றன்னையும் பொருளையுமுணர்த்துமாறுணர்-ற்று.

**இ - ள்.** வெளிப்படைச்சொல்லாயுங் குறிப்புச்சொலாயும் வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணு நிற்கும் படர்க்கைவினை முற்றுச் சொல்லையும் படர்க்கைப் பெயர்ச் சொல்லையும் முன் குறித்தால், பின் அவ்விருவகைச் சொலுங் கருவியாக இருதிணையும் ஐம்பாலும் பெறப்படும்; ஒழிந்த தன்மை முன்னிலை வினைமுற்றுச் சொல்லையுந் தன்மை முன்னிலைப் பெயர்ச்சொல்லையும் முன் குறித்தால், பின் அந் நால்வகைச் சொல்லுங் கருவியாக இருதிணையைம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் பெறப்படும். எ - று.

வினைமுற்று நாமம் என்பனவற்றையும், குறிப்பின் என்னும் வினையெச்சத்தையும், பெறப்படும் என்பதனையும் ஏனையிடத்துங் கூட்டுக.

வ - று. நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன. எ - ம். அவன், அவள், அவர், அது, அவை. எ-ம். படர்க்கை வினைமுற்றுச்சொல்லும், படர்க்கைப்பெயர்ச்சொல்லும், முன்பு தம்மையுணர்த்திப், பின் இருதிணையும் ஐம்பாலுமாகிய பொருள் களையுணர்த்தின. நடந்தேன், நடந்தேம். எ-ம். யான், யாம். எ-ம். நடந்தாய், நடந்தீர். எ-ம். நீ, நீர். எ-ம். தன்மை வினை முற்றுச்சொல்லும், தன்மைப் பெயர்ச்சொல்லும், முன்னிலை வினை முற்றுச்சொல்லும், முன்னிலைப் பெயர்ச்சொல்லும், முன்பு தம்மை யுணர்த்திப், பின் இருதிணையைம்பாலுள் ஒருமைப்பாலும் பன் மைப்பாலு முணர்த்தின. பிறவுமன்ன.

வினைமுற்றை முற் கூறினமையான் அவை "இருதிணை மருங் கிணைம்பாலறிய—வீற்றினின்றிசைக்கும்" விகுதிகளோடு பயின்று வருதலின் இருதிணையைம்பாற் பொருள்களையுணர்த்து நெறியிற் பெயர்களிற் சிறந்தனவென்பதூஉம், குறிப்பினென்றமையாற் சொற்றன்னையுணர்த்துமென்பதூஉம், தன்னை முன்னுணர்த்திப் பொருளைப் பின்னுணர்த்துமென்பதூஉம், ஒலியெழுத்தையுணர் தற்கு வரிவடிவு ஓரறிகுறியாய் நின்றாற்போலப் பொருளையுணர் தற்குச் சொல் ஒரு குறியாய் நின்றதென்பதூஉம், அக்குறியினைக் குறித்தாலன்றி இருதிணையைம்பாலாகிய பொருட்பேறின்றென் பதூஉம், பெறப்படுமென்றமையாற் செவிப்புலனாகிய சொல்லை யொழிந்து கட்பொறிமாத்திரையின் இருதிணையைம்பாற் பொருள் களை ஒருவனுணருமுணர்ச்சி விலங்குணர்ச்சி போலுமன்றி அது பொருட்பேறாகாதென்பதூஉம், ஒருமைப் பன்மைப்பாலே யென் றமையாற் றன்மை முன்னிலைகளின் ஆண் பெண் பலர் ஒன்று பல என்னும் பால்விகற்பத்தோடு இருதிணையுந் தோன்றாவென்பதூ உம், மூவிடங்களின் ஒன்றற்குரிய வினைமுற்றும் பெயருந் தம்மை யும் பொருளையுமுணர்த்துமாறு இவ்வாறெனவே இவ்விடங்கட்குப் பொதுவாகிய வினைமுற்றுக்களும் பெயர்களும் பொதுமை நீங்கி ஓரிடத்திற்குரியவாகி இவ்வாறு தம்மையும் பொருளையுமுணர்த்து மென்பதூஉம், பெயரெச்சமும் வினையெச்சமும் வினைத்தொகை யும் பண்புத்தொகையுங் குறைச்சொல்லாதலிற் றம்பயனிலையாகிய வருமொழியோடு புணர்ந்து பொருண் முற்றி இம்மூவிட வினை முற்றுள்ளும் பெயருள்ளும் அடங்குதலின் இவ்வாறு தம்மையும் பொருளையு முணர்த்துமென்பதூஉம், இடைச்சொல்லும் உரிச் சொல்லும் பெயர்வினையுள் அடங்குதலின் அவ்வாறு தம்மையும் பொருளையுமுணர்ததுமென்பதூஉம், இவ்வாறு எல்லாச் சொல்லை யும் வினைமுற்றுள்ளும் பெயருள்ளும் அடக்கி மூவகையிடத்து நின்ற சொல் இருதிணையைம்பாற் பொருளையுந் தன்னையுமுணர்த் துஞ் சிறப்புவிதி கூறினாரென்பதூஉம் பெற்றாம். "வயிர வூசியு மயன்வினை யிரும்புஞ்—செயிரறு பொன்னைச் செம்மைசெய் யாணியுந்—தமக்கமை கருவியுந் தாமா மவைபோ—லுரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே." என்றார் ஆசிரியரகத்தியனாரு மென்க.

இனி, இச்சூத்திரத்திற்கு, இவ்வாறன்றி, இருதிணையைம் பாலைப் பொருளகத்தறிவித்ததன்றிச் சொல்லகத்தறியுமாறு கூறினாரெனப் பொருள் கூறின், "இருதிணை மருங்கி னைம்பா லறிய—வீற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந்—தோற்றந் தாமே வினையொடு வருமே" என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறே படர்க்கை வினைமுற் றொன்றுமே கூறிலமையும்

படர்க்கை நாமமென்றன் மிகைபடக் கூறலாம்; ஏனையிடத்தவற் றொருமைப் பன்மைப்பாலே யென்றல் தன்மை முன்னிலைகள் ஒருமை பன்மை மாத்திரையன்றி இருதிணையைம்பாலை விளக்காமையின் மற்றொன்று விரித்தலாம். இவ்வாறன்றி, மூவிடங்களின் ஒவ்வொன்றற்குரிய முற்றும் பெயருமே இருதிணையைம்பாற் பொருளினை விளக்கும். ஒழிந்தன விளக்காவெனப் பொருள் கூறின், எல்லாச் சொல்லும் மூவகையிடத்து நின்று இருதிணையைம்பாற்பொருளை விளக்குமெனக் கூறிய 'ஒருமொழி தொடர்மொழி' என்னும்பொதுச் சூத்திரத்தோடு மாறுகொளக் கூறலாம்.

இச்சூத்திரத்துட் குறிப்பினென்னுஞ் சொல்லை வினையெச்சமாக்காது குறிப்பினாலும் இருதிணையைம்பாலும் விளங்குமெனப் பொருள் கூறின், வெளிப்படையுங் குறிப்புமாஞ் சொற்கள் இருதிணையைம்பாற் பொருள்களை விளக்குநெறியன்றி மூவிடச்சொற்போலக் குறிப்புச்சொல்லென வேறொன்றின்மையானும், ஒருவர் அறிவு தந்தாரென்றால் "நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்—பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே." என்பவாகலின் அறிவு பெண்பாலாற் பெறுதல் கூடாமையின் அதனையொழித்து ஒருவரென்னும் படர்க்கைப்பெயரும் அதன் பயனிலையாகிய தந்தாரென்னும் படர்க்கைமுற்றும் உயர்திணையினையும் ஆண்பாலினையுங் குறிப்பான் விளக்குதலின் இப்பெயர்வினைகளையொழித்துப் படர்க்கைவினைமுற்று நாமமென்றாரல்லராதலானும், சொற்கள் வெளிப்படையானுங் குறிப்பினானும் இருதிணையைம்பாற் பொருள்களை விளக்குதல் நிறுத்த முறையே 'ஒன்றொழி பொதுச்சொல்' என்னுஞ் சூத்திரத்தாற் பிற்கூறுதலானும், ஈண்டுங்கூறுதல் கூறியது கூறலாமாதலானும், அதுபொருளன்றென்க.

**மூவிடம்.**

266. தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே.

**எ-னின்.** நிறுத்தமுறையானே மூவிடமாமாறுணர்-ற்று.

**இ-ள்.** மூவிடமாவன தன்மையும் முன்னிலையும் படர்க்கையுமாம். எ-று.



வ-று. யான், நீ, அவன். எ-ம். வந்தேன், வந்தாய், வந்தான். எ-ம். வரும்.

சொல்வானுங் கேட்பானுமாகிய இருவர் கூட்டத்துப் பிறந்த சொல், அவ்விருவரிடத்து நில்லாது அயலானிடத்திற் படர்தலின், படர்க்கை யெனப்பட்டது. (9)

வழக்கு.

267. இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகு மூவகை யியல்பும்
இடக்க ரடக்கன் மங்கலங் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.

**எ-னின்.** நிறுத்தமுறையானே வழக்காமாறுணர்-ற்று.

**இ-ள்.** இலக்கணமுடையதென்றும், இலக்கணப் போலியென்றும், மரூஉவென்றும் வழங்கும் மூவகையியல்பு வழக்கும், இடக்கரடக்கலென்றும், மங்கலமென்றும், குழூஉக் குறியென்றும் வழங்கும் மூன்று தகுதி வழக்குடனேகூட, அறுவகைப்படும் வழக்கிலக்கணம். எ-று.

வ-று. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், நன்னிலம், தண்ணீர் என்றற்றொடக்கத்தன இலக்கணமுடையன. இன் முன் என்பதனை முன்றில் என்றும், நகர்ப்புறமென்பதனைப் புறநகரென்றும், புறவுலாவென்பதனை உலாப்புறமென்றும், கண்மீயென்பதனை மீகண்ணென்றும், கோவிலென்பதனைக் கோயிலென்றும், பொதுவிலென்பதனைப் பொதியிலென்றும், வழங்கும் இத்தொடக்கத்தன இலக்கணப்போலி. அருமருந்தன்ன பிள்ளையென்பதனை அருமந்த பிள்ளையென்றும், மலையமானாடென்பதனை மலாடென்றும், சோழனாடென்பதனைச் சோணாடென்றும், பாண்டியனாடென்பதனைப் பாண்டிநாடென்றும், இந்நாடென்பதனை இந்த நாடென்றும், ஆதன்றந்தையென்பதனை ஆந்தையென்றும், பூதன்றந்தையென்பதனைப் பூந்தையென்றும், மரவடியென்பதனை மராடி

யென்றும், குளவாம்பலென்பதனைக் குளாம்பலென்றும், யாவரென்னும் பெயரை யாரென்றும் ஆரென்றும், யாரென்னுங் குறிப்புவினையை ஆரென்றும், எவனென்னுங் குறிப்புவினையை என்னென்றும் என்னவென்றும், ஆற்றூரென்பதனை ஆறையென்றும், வழங்கும் இத்தொடக்கத்தன மரூஉ. கண்கழீஇ வருதும், கால்கழீஇ வருதும், வாய்பூசி வருதும், ஆமுன் பகரவீ, பவ்வீ; புலினின்றிறந்த நீரல்லீரத்து, கருமுகமந்தி, செம்பினேற்றை என்றற்றொடக்கத்தன இடக்கரடக்கல். செத்தாரைத் துஞ்சினாரென்றும், ஓலையைத் திருமுகமென்றும், காராட்டை வெள்ளாடென்றும், இடுகாட்டை நன்காடென்றும், வழங்கும் இத்தொடக்கத்தன மங்கலம். பொற்கொல்லர் பொன்னைப் பறியென்றும், யானைப்பாகர் ஆடையைக் காரையென்றும், வேடர் கள்ளைச் சொல்விளம்பியென்றும், வழங்கும் இத்தொடக்கத்தன குழூஉக்குறி.

இலக்கணநெறியால் வருவதனை இலக்கணமுடையதென்றும், இலக்கணமுடையதன்றிப் படைப்புக்காலத்து இலக்கணமுடையதோடு ஒருங்கு படைக்கப்பட்டதுபோல வருவதனை இலக்கணப்போலியென்றும், தொன்றுதொட்டதன்றி இடையே இலக்கணஞ் சிதைந்து மரீஇயதனை மரூஉவென்றும், இம்மூன்றுந் தகுதிவழக்குப் போலாது எப்பொருட்கு எச்சொல் அமைந்ததோ அப்பொருளை அச்சொல்லாற் கூறுதலின் இயல்புவழக்கென்றும், "இடக்கரென்பது மறைத்துமொழி கிளவி." என்பவாகலின் இடக்கர் தோன்றாது அதனை மறைத்ததை இடக்கரடக்கலென்றும், இடக்கர்போற் கூறத் தகாததன்றேனும் மங்கலமில்லதை யொழித்து மங்கலமாகக் கூறுவதை மங்கலமென்றும், ஒவ்வொரு குழூவினுள்ளோர் யாதானுமொரு காரணத்தான் ஒருபொருளினது சொற்குறியை யொழித்து வேறோர் சொற்குறியாற் கூறுவதை குழூஉக்குறியென்றும், இம்மூன்றும் இப்பொருளை யறிதற்கு அமைந்து கிடந்த இச்சொல்லாற் கூறுதல் தகுதியன்று வேறோர் சொல்லாற் கூறுதல் தகுதியெனக் கருதிக் கூறுதலிற் றகுதிவழக்கென்றும், பெயர் பெற்றன. இலக்கணப் போலியினையும் மரூஉவினையும் வேறறிதற்குச் சான்றோராட்சியே காரணமென்க. அன்றி நிலைமொழி வருமொழிகண் முன்பின்னாக மாறி



நிற்பன இலக்கணப்போலி, ஒழிந்த சிதைவெல்லாம் மரூஉவென்று கோடலுமொன்று.

இவ்வாறுவகை வழக்குந் திரிசொற்கண்ணும் வருதலின், இயற்சொல்லாகிய உலகவழக்கையுந் திரிசொற் றிசைச்சொல் வடசொல்லாகிய செய்யுள் வழக்கையுந் தொகுத்து, இச்சூத்திரத்தான் வழக்கெனப்பட்டதென்க. அங்ஙனமாயிற் செய்யுளென வேறுகூறுவதியாது கருதியெனின்:--இவ்வுலகவழக்குஞ் செய்யுள் வழக்கும் வழக்காய் நில்லாது தொடைப்பட்டமை கருதியென்க. வழக்கென்பது சொன்னடை.

இனி, ஆசிரியர் தொல்காப்பியர், இடக்கரென்பதனை "அவையல் கிளவி." எனவும், அவையல் கிளவியாவது இழிந்தோர் சொல்லும் இழிந்தசொல்லாதலான் அதனை நன்மக்களிடை மறைத்துக் கூறுகவென்பார் "அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்." எனவும், மறைத்துக் கூறுங்கால் மேற்றொட்டு மரீஇ வழங்கியதனை மறைத்தலை நீக்குகவென்பார் "மறைக்குங்காலை மரீஇய தொரால்." எனவுங் கூறுவர். மேற்றொட்டு மரீஇ வழங்கியது "ஆப்பிநீ ரெங்குந் தெளித்துச் சிறுகாலை", யானையிலண்டம், யாட்டுப் பிழுக்கை என வரும். தம்பொருண்மையில்லாது அணிகுறித்து நின்ற "பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி." என்றாற்போல்வன தம்பொருளையுணர்த்துங்கான் மறைத்துக் கூறப்படுமாறுமுணர்க. (10)

## செய்யுள்.

268. பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்.

எ - னின். நிறுத்தமுறையானே செய்யுளாமாறுணர்-ற்று.

இ - ள். தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேத நீரென்னும் எழுவகைத் தாதுக்களினாலும் உயிர்க்கிடனாக இயற்றப்பட்ட உடம்புபோல, இயற்சொற்

றிரிசொற் றிசைச்சொல் வடசொலென்னும் நால்வகைச் சொற்களாற் பொருட்கிடனாகக் கல்வியறிவினாற் செய்யுளி யற்ற வல்லோர் அலங்காரம்பெற இயற்றுவன செய்யுளாம். எ - று.

ஈண்டுப் பொருளென்றது அகமும் புறமுமாகிய பொருள்களை.

இங்ஙனங் கூறவே, எழுத்தாலியன்றது சொல்லாதலின், எழுத்துச் சொற்பொருளணியென்னு நான்கினும் நடப்பதியாப் பென்பதாயிற்று.

வ - று. "வருங்குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல வன்மலயத்—திருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தலெம் மூர்ப்—பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும் மூர்க்—கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங் குழையே." என்னும் இக்கட்டளைக் கலித்துறை, இடமணித் தென்னும் பொருட்கிடனாகித், தன்மையுவமை யுருவகவணிகளும் பிறவும் உடைத்தாய், வருதல் காண்க. பிறவுமன்ன. (11)

## வெளிப்படை குறிப்பு.

269. ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி
ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதறொகை குறிப்போ டின்ன பிறவுங்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை.

எ - னின். நிறுத்தமுறையானே வெளிப்படையுங் குறிப்புமா மாறுணர்-ற்று.

இ - ள். இருதிணையாண்பெணுள் ஒன்றனையொழிக் கும் பொதுச்சொல்லும், வலித்தன்முதலிய ஒன்பது விகாரச் சொல்லும், மூவகைத் தகுதிவழக்குச் சொல்லும், ஆகு பெயர்ச்சொல்லும், அன்மொழித்தொகைச் சொல்லும், வினைக்குறிப்புச் சொல்லும், முதற்குறிப்புச்சொல்லும்,



தொகைக்குறிப்புச் சொல்லும், இம்முதறொகையல்லாத பலவாற்றானும் வரும் குறிப்புச்சொல்லும், இவைபோல்வன பிறவுங், குறிப்பினான் இருதிணையைம்பாற்பொருளைத் தருஞ் சொற்களாம்; இவையல்லனவெல்லாம் வெளிப்படையான் அப்பொருள்களைத் தருஞ் சொற்களாம். எ - று.

வெளிப்படை யல்லன வெல்லாங் குறிப்புச்சொல்லாயினும், அக்குறிப்புச்சொல்லுள்ளும் வேற்றுமை தோன்றற்கு ஏகாரமிடை யிட்டுக் கூறினாரென்க.

வ-று. ஆயிரமக்கள் பொருதார்; பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களிருந்தார் என்புழி, மக்களென்னும் பொதுப்பெயரும், பொருதார் இருந்தார் என்னும் பொதுவினை யும், உயர்திணையாண்பால் பெண்பாலுள் ஒன்றனையொழித்து ஒன்றனைக் குறிப்பாலுணர்த்தின. இப்பெற்றமுழவொழிந்தன; இப்பெற்றமறத்திற்கே கறக்கும் என்புழிப், பெற்றமென்னும் பொதுப்பெயரும், ஒழிந்தன கறக்குமென்னும் பொதுவினைகளும், அஃறிணையாண்பால் பெண்பாலுள் ஒன்றனையொழித்து ஒன்ற னைக் குறிப்பாலுணர்த்தின. இவற்றுட் பொருதார் கறக்கும் என் னும் வினைகள் விகுதிமாத்திரையிற் பொதுவினையாயின. குறுத் தாட்பூதம், மரைமலர், குவிகமொடிகலியவங்கை என்புழி, இவ் விகாரச்சொற்கள், குறுந்தாள் தாமரை இங்குலிகம் என்பனவற் றைக் குறிப்பாலுணர்த்தின. கால் கழீஇ வருதும், நன்காடு, பறி என்புழி, இத்தகுதிகள் தத்தம் பொருளைக் குறிப்பாலுணர்த்தின. புளிதின்றான், கடுத்தின்றான், என்புழி இவ்வாகுபெயர்கள் அவற் றின் பழத்தினைக் குறிப்பாலுணர்த்தின. பொற்றொடி தந்த புனை மடல், அறற்கூந்தற்கில்லையருள் என்புழி, இவ்வன்மொழித் தொகை அவற்றையுடைய மகளிரைக் குறிப்பாலுணர்த்தின. "சொலல் வல்லன் சோர்வில னஞ்சா னவனை—யிகல்வெல்லல் யார்க்கு மரிது." என்புழி வல்லன் இலன் என்னுஞ் சொற்கள் பெயர்ப்பொருளையொழித்து வினைக்குறிப்புப்பொருளைக் குறிப்பா லுணர்த்தின. "அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபு" என்புழி இம்முதற்குறிப்புச் சொற்கள் "அறத்தா றிதுவென வேண்டா

சிவிகை—பொறுத்தானோ டூர்ந்தா னிடை.” என்னும் பாட்டைக் குறிப்பாலுணர்த்தின. “அலங்கு லைப்புரவி யைவரொடு சினைஇ-நிலைந்தலைக் கொண்ட.” என்புழி ஐவரென்னுந் தொகைக்குறிப்புச்சொற் பாண்டவரைக் குறிப்பாலுணர்த்திற்று. “ஒன்றி னிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்—வென்று களங்கொண்ட வேல்வேந்தே - சென்றுலா—மாழ்கடல்சூழ் வையகத்து லைந்துவென்றாறகற்றி—யேழ்கடிந் தின்புற் றிரு.” என்பதுமது.

இனிப் பலவாற்றானும் வரும் குறிப்புச்சொற்கள் பொருளைக் குறிப்பாலுணர்த்துமாறு:—கற்கறித்து நன்கட்டாய், நீயிர்பெரிது மறிதிர், பறவாக்குளவி, பாயாவேங்கை. “உவர்க்கடலன்ன செல்வரு முளரே - கிணற்றூற் றன்ன நீயுமா ருளையே.” “செல்வர் தம்பெருந்திரு வுறுகபல்பக—னீவா ழியரோ நெடிதே—யியாச் சிறுவிலைக் காலத் தாயினு—முறுபொரு டந்தெஞ் சொற்கொள் வோயே.” “பல்சான் றீரே பல்சான் றீரே—கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்—பயனின் மூப்பிற் பல்சான் றீரே.” “அறனோ மற்றிது விறன்மாண் குடுமி—யின்னா வாகப் பிறர்தம் மண்கொண்-டினியசெய் திநின்னார்வலர் முகத்தே.” “நீயுந்தவறிலை நின்னைப் புறங்கடைப்—போதர விட்ட நுமருந் தவறிலர்—நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்—பறையறைந் தல்லது செல்லற்க வென்னா—விறையே தவறுடை யான்.” “மையார் தடங்கண் மயிலன்னாய் தீத்தீண்டு—கையார் பிரிவித்தல் காண்.” “சோலையை யோரெழுத்தா லென்சொல்லுந் தொக்க தன்மே—னீலப்பே ரெவ்வெழுத்தினா னிரம்பு - மாலைக்—குடைவேந்தன் சென்னி குலநதியின் பேரைக்—கடைசேர்ந்த வோரெழுத்தாற் காண்.” கா, காவி, காவிரி என்பது பொருள். இஃதெழுத்துப் பெருக்கம். “ஆற்றின்பே ரீற்றி னெழுத்தொழிய வின்பஞ் சேர்—நாற்கால தாமீற் றுயிர்நடப்ப-வேற்புடைய—வுண்பயனா மாங்கதனி னீற்றொழிந்தா லோது நூற்—கின்பஞ்சேர் செய்யுளா மின்று.” பாலாறு, பாலா, பால், பா என்பது பொருள். இஃதெழுத்துச் சுருக்கம் “வாம மணிமே கலையார் மயிர்குறுகி—னாமவர் பெய்யு மணிகுழை-யேம—மயிர் நிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பிற்-செயிர்தீர் மரமாகுஞ் சென்று.” கூழை, குழை,



ஓதி, ஒதி என்பதுபொருள். இது மாத்திரைச்சுருக்கம். “பூமேலா ளாரென்பர் பூம்போர்வை யென்செய்யுந்—தீமேற்படிற் கொடுத் தாற் கொள்வதெவ-னாமே—நலந்திகழுஞ் செங்கை நயதீரனெங் கோன்—சிலம்பன் றிருவேங் கடன்.” இது வினாவுத்தரம். “நீத் தொழிந்த வாறைந் தடக்கிப்பின் னிச்சயமே—வாய்த்தமைந்த வாயில்பெண் ணானையுங்-கூத்தற்கு—வாளேறா டோசை விளை நில மிவ்வல்லாற்—கேளா யுடன் வருவ தில்.” நிலையாமை கடைப் பிடி சிவபுண்ணியஞ் செய் என்பது பொருள். இத்தொடக்கத்தன வெல்லாங் குறிப்பினாற் றத்தம் பொருள்களையுணர்த்தின.

இன்னபிறவு மென்றமையானே, தெரிநிலைவினை குறிப்பு வினையாலணையும் பெயரும், வினைமுற்றானுங் குறிப்புமுற்றானும் வருமெச்சங்களும், செய்யுமென்னுமுற்றும், அன்று இன்று என்னும் வினையெச்சக்குறிப்பும், ‘கேட்குந போலவுங் கிளக்குந போலவு—மியங்குந போலவு மியற்றுந போலவு—மஃறிணை மருங்கினு மறையப்படு’ தன் முதலிய இலக்கணைகளும் இவைபோல் வன பிறவுங் கொள்க.

இவ்வாறன்றி நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்றற்றொடக் கத்தனவெல்லாம் வெளிப்படையிற் பொருளுணர்த்தின.

வடநூலார் சொற்பொருளை வாச்சியம் வியங்கியம் இலக்கணை என மூன்றெனவும் இலக்கணையை வியங்கியத்துள்ளடக்கி இரண் டெனவுங் கூறுப. இவற்றுள் வாச்சியமென்பது வெளிப்படை. வியங்கியமென்பது குறிப்பு. இலக்கணையென்பது ஒருபொருளின திலக்கணத்தை மற்றொருபொருட்குத் தந்துரைப்பது. அதுவிட்ட விலக்கணை, விடாத விலக்கணை, விட்டும் விடாத விலக்கணை என மூவகைப்படும். அவை வருமாறு:—“சென்றதுகொல் போந்தது கொல் செவ்விபெறுந் துணையு—நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி - முன்றின்—முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்—குழந்துபின் சென்றவென் னெஞ்சு.” என்புழி மருங்குங் கையும் ஊன்றுதலு முதலிய இலக்கணங்கள் நெஞ்சிற்கின்மையின் விட்டவிலக்கணை. கங்கையின்கணிடைச்சேரி புளிதின்றான் என்புழி இடைச்சேரி கங்கைக்கரைக்க ணிருத்தலும் புளியினது

பழத்தைத்தின்றலு முண்மையின் விடாதவிலக்கணை. "பாயிருள் பருகிப்—பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி." என்புழி இருளைப் பருகுதலும் பகலைக் காலுதலும் பரிதிக்கின்மையானும் இருளைப் போக்குதலும் பகலைத் தருதலும் அதற்குண்மையானும் விட்டும் விடாத விலக்கணை. இவையுங் குறிப்பினுள் அடங்குமாதலின் "வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே." எனத் தொகுத்தும் இவ்வாறு வகுத்துங் கூறினரென்க. (12)

---

## சொற்பாகுபாடு.

270. அதுவே,—
இயற்சொற் றிரிசொ லியல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகு மிடையுரி யடுத்து
நான்கு மாந்திசை வடசொல னுகாவழி.

எ - னின். மேலைச் சூத்திரங்காறுஞ் சொல்லாவது இஃதெனக் காட்டக் கண்ட சொல் இத்துணையாமென்பதுணர்-ற்று.

இ - ள். மேற்காட்டிய சொல் இயற்சொற் றிரிசொல்லென்னும் இயல்பினையுடைய பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுமென இரண்டாம்; இவற்றுடன் இடைச்சொல்லும் உரிச்சொல்லு மடுத்து நான்குமாம்; இவற்றுடன் இடைச்சொல்லும் வடசொல்லும் அணுகாவிடத்து. எ - று.

'செய்யுட்குரியன வுரிச்சொல்' எனக் கூறுதலானும், வருஞ் சூத்திரஞ் 'செந்தமிழாகி' எனக் கூறுதலானும், இயற்சொலென்றதைப் பெயர்வினையிடையினுந் திரிசொலென்றதை எல்லாவற்றினும் பிரித்துரைத்துக்கொள்க. எனவே, அதுவேயெனச் சுட்டிய சொல், பெயரியற்சொல் பெயர்த்திரிசொல் வினையியற்சொல் வினைத்திரிசொல் இடையியற்சொல் இடைத்திரிசொல் உரித்திரிசொல் என வெழுவகைப்படுமென்பதூஉம், திசைச்சொல்லும் வடசொல்லும் அணுகியவழி ஒன்பது வகைப்படுமென்பதூஉம்



பெற்றும். உரியியற்சொலின்றாகவும் உரித்திரிசொலென்றது இயற்சொற்றிரிசொலென்னும் பொதுவிலக்கண நோக்கியென்க.

இச்சொற்களை யொருங்கோதாது முறைதெரித்தோதிய தென்னையெனின்:—ஒருவன் ஒருத்தியென்ற மாத்திரையின் அவர் கைகான் முதலிய அகத்துறுப்பும் ஆடையணி முதலிய புறத்துறுப்பும் அடங்குதல்போலப் பெயர்வினையென்ற மாத்திரையின் அவற்றின் அகத்துறுப்பாகிய விகுதியுருபு முதலிய இடைச்சொற்களும் புறத்துறுப்பாகிய வேற்றுமையுருபு முதலிய இடைச்சொற்களும் அடங்குதலானும், உரிச்சொற் 'பல்வகைப் பண்பும் பகர்பெயராகி, என்பவாகலிற் பெயருளடங்குதலானும், திசைச்சொல்லும்வடசொல்லும் இவற்றுள் யாதானுமொன்றாய் அடங்குதலானும், திசைச்சொல்லும் வடசொல்லும் இவற்றுள் யாதானுமொன்றாய் அடங்குதலானும், இவற்றையடக்கி நின்ற தலைமையுஞ் சிறப்புந் தோன்றப் பெயர்வினையென விரண்டாகுமென வரையறுத்தும் பெயர்வினையுள் அடங்கி நின்றவற்றையே வேறுபாடறிதற்கு வேறுபடுத்துத் தொகைகோடலின் இடையுரிக்கு அத்தலைமையுஞ் சிறப்புமின்றென்பதுதோன்ற அடுத்து நான்குமாமென்றும், கொடுந்தமிழ் முதலிய சொற் செந்தமிழோடு விராயவழி அவற்றைத் திசைச்சொல்லென்றும் ஆரியச்சொற்றமிழ் நடைபெற்றுச் செந்தமிழோடு விராயவழி அதனை வடசொல்லென்றுந் தமிழோடு தழுவப்படுமாயினும் செந்தமிழ்ச்சொல்லோடு தொகைகோடல் ஒருதலையன்றென்பது தோன்ற அணுகாவழியென்றும் முறை தெரித்தோதினரென்க.

வடக்கும் ஒரு திசையன்றே திசைச்சொல்லன்றி வடசொல்லென வேறு கூறுவதென்னையெனின்:—தமிழ்நாட்டிற்கு வடதிசைக்கட் பதினெண்மொழிகளுள் ஆரியமுதலிய பலமொழியுமுளவேனுந் தென்றமிழ்க்கெதிரியது கடவுட்சொல்லாகிய ஆரியமொன்றுமே யென்பது தோன்ற அவற்றுட்டமிழ்நடை பெற்றதை வடசொலென்றும் ஏனையவற்றுட் டமிழ்நடை பெற்றதைத் திசைச்சொலென்றுஞ் சான்றோராணியமிக்கப்பட்டனவென்க. அன்றியும் ஆரியச்சொல் எல்லாத்தேயத்திற்கும் விண்ணுலக முதலியவற்றிற்கும் பொதுவாகலான் அவ்வாரியச்சொற் றமிழ்

நடைபெற்றதைத் திசைச்சொலென்றல் கூடாதெனக் கோடலு மாம். அங்ஙனமாயின் வடசொலென்றதென்னையெனின் ஆண்டுப் பயிற்சி மிகுதிபற்றியெனக் கொள்க.

இச்சொற்களைப் பெயர் முதலியவாக வைத்ததென்னை யெனின்:—பெயர்ச்சொற் பொருளை விளக்குதலானும், வினைச் சொற் பொருளது புடைபெயர்ச்சியை விளக்குதலானும், இடைச் சொற் பொருளையும் பொருளது புடைபெயர்ச்சியையுந் தம்மா லன்றித் தத்தங் குறிப்பான் விளக்குதலிற் பெயர்ச்சொல் வினைச் சொற்களுமாகாது அவற்றின் வேறுமாகாது இடைநிகரனவாய் நிற்றலானும், உரிச்சொற் பொருட்பண்பாகிய இசைக்குறிப்புப் பண்பு மூன்றனையும் விளக்கிப் பொருட்குரிமை பூண்டு நிற்ற லானும், திசைச்சொற் கொடுந்தமிழ் மொழியாயும் அன்னிய மொழியாயும் வருதலானும், வடசொல் அன்னிய மொழியேயாய் வருதலானும், இம்முறை வைக்கப்பட்டனவென்க.

“சொல்லெனப் படுப பெயரே வினையென்—றாயிரண் டென்ப வறிந்திசி னோரே.” “இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு—மவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப.” என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாருமென்க. (13)

## இயற்சொல்.

271. செந்தமி ழாகித் திரியா தியார்க்குந்
தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல்.

எ - னின். மேலைச்சூத்திரத்து நிறுத்த முறையானே இயற் சொல்லாமாறுணர்-ற்று.

இ - ள். செந்தமிழ்நிலத்து மொழியாகி அந்நிலத்து மொழியுண் மேற்கூறப்படுந் திரிசொற் போலாது கற்றார்க் குங் கல்லாதார்க்கும் ஒப்பத் தம்பொருளை விளக்குந் தன்மை யினையுடைய உலகவழக்கு இயற்சொல்லாம். எ - று.

யார்க்குமென்றதனால் உலகவழக்கென்பது பெற்றாம்.

வ - று. மண், பொன் என்றற்றொடக்கத்தன பெயரியற் சொல். நடந்தான், வந்தான் என்றற்றொடக்கத்தன வினையியற்



சொல். அவனை, அவனால் என்றற்றொடக்கத்து வரும் வேற்றுமை யுருபு முதலியன இடையியற்சொல்.

செந்தமிழ் நிலமாவதியாதெனின்:—சந்தனப்பொதியச் செந் தமிழ் முனியுஞ்—சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனுஞ்— சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கு—மங்கலப் பாண்டி வளநா டென்ப. இவ்வாறன்றிச் செந்தமிழ்நிலம் வைகையாற்றின் வடக் கெனக் கூறுவாருமுளர். கொடுந்தமிழ் நிலத்துப் புனனாடெனப் படுவது சோணாடாதலானும், பாண்டியனையே தமிழ்நாடனெனச் சான்றோர் கூறுதலானும் அஃதுரையன்றென்க. (14)

## திரிசொல்.

272. ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த வொருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.

எ - னின். நிறுத்தமுறையானே திரிசொல்லாமாறுணர்-ற்று.

இ - ள். ஒரு பொருளைக் கருதிய பலசொல்லாகியும், பலபொருளைக் கருதிய ஒருசொல்லாகியும், கற்றால் உணரும் பொருளாய் வருவன திரிசொல்லாம். எ - று.

அரிதுணர் பொருளனவென்றமையான் ஒருபொருள் குறித்த பலசொல்லுள்ளும் பலபொருள் குறித்த ஒருசொல்லுள்ளும் வரும் இயற்சொலொழியக் கொள்க.

வ - று. கிள்ளை, சுகம், தத்தை என்றற்றொடக்கத்தன ஒரு பொருள் குறித்த பலபெயர்த்திரிசொல். யானையுங் கோழியுஞ் சங்கும் வாரணம் என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த ஒருபெயர்த்திரிசொல். படர்ந்தான், சென்றான் என்றற்றொடக்கத் தன ஒருபொருள் குறித்த பலவினைத்திரிசொல். வரைந்தான் ஆர்த்தான் என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த ஒருவினைத் திரிசொல். சேறும் வருதும் என்றற்றொடக்கத்து விகுதிகள் ஒரு பொருள் குறித்த பலவிடைத் திரிசொல். ‘கொல்லே யையமசை நிலைக் கூற்றே.’ என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த

ஓரிடைத்திரிசொல். 'சாலவுறுதவ நனிகூர் கழியிகல்.' என்றற்றொடக்கத்தன ஒருபொருள் குறித்த பலவுரித்திரிசொல். 'கடியென் கிளவி காப்பே கூர்மை.' என்றற்றொடக்கத்தன பலபொருள் குறித்த ஒருரித்திரிசொல். திசைச்சொல்லும் வடசொல்லும் ஒருபொருள் பலபொருளென்னும் விகற்பத்தான் வந்தனவேற் காண்க.

ஈண்டு இயற்சொற்றிரிசொலென்றது அவற்றின் எழுத்துக்கள் திரியாமையுந் திரிந்தமையுங் கருதியன்று, வானரத்தின் முகந் தன்னியல்பா யிருந்ததேனும் நார்முகச் செவ்விக்கு மறுதலைப்பட்டமை கருதி வலிமுக மெனப்பட்டதுபோலக் கல்வியேதுவானன்றி இயல்பாகத் தம்பொருளையுணர நிற்றலின் இயற்சொலென்றும் அவ்வியல்பிற்கு மறுதலைப்பட்டுக் கல்வியேதுவாற் றம்பொருளையுணர நிற்றலிற் றிரிசொலென்றுங் கூறப்பட்டதென்க. (15)

### திசைச்சொல்.

273. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தி
னுந் தங்குறிப் பினவே திசைச்சொ லென்ப.

*எ - னின். நிறுத்த முறையானே இயற்சொற்றிரிசொலென்றவற்றின் பின்னின்ற அவ்வியல்பினவாய பெயர் வினையிடையுரிகளை இவ்வியலுள் 'இடுகுறி காரணம்' என்னுஞ் சூத்திரந் தொட்டு இவ்வதிகாரத்தைந்தியலானும் உணர்த்த நிறீஇ ஒழிந்த திசை வடசொற்களுட்டிசைச் சொல்லாமாறுணர்-ற்று.

இ - ள். செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலத்தின்கண்ணும் பதினெண் மொழியுட்டமிழும் மேற்கூறும் வடசொற்குக் காரணமாகிய ஆரிய மொழிந்த பதினாறுமொழியும் வழங்கும் பதினாறு நிலத்தின் கண்ணுமுள்ளோர் தங்குறிப்பினவாய்ச் செந்தமிழோர் குறிப்பினவன்றி அத்திசைகளினின்றுஞ் செந்தமிழ்நிலத்து வந்து வழங்குவன திசைச்சொலென்று கூறுவர் புலவர். எ - று.



செந்தமிழென்றமையாற் கொடுந்தமிழென்பதூஉம், ஆரியத்தின் காரியமாய வடசொல்லை வேறு கூறுதலிற் றமிழொழிநிலம் பதினாறென்பதூஉம், கற்றோரையும் மற்றோரையுந் தழீஇத் தங்குறிப்பினவெனப் பொதுமையிற் கூறினமையின் இத்திசைச் சொற்கள் அந்நிலத்தோர்க்கு இயற்சொல்லாய்ச் செந்தமிழோர்க்கு அவ்வாறு குறிக்கப்படாத திரிசொல்லாய் நிற்குமென்பதூஉம், பெற்றாம்.

* கொடுந்தமிழ்நிலம் பன்னிரண்டாவன:—"தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி—பன்றி யருவா வதன்வடக்கு—நன்றாய—சீத மலாடு புனனாடு செந்தமிழ்சே—ரேதமில் பன்னிருநாட்டெண்." என்பனவாம். இவற்றுள், செந்தமிழ்ப்பாண்டி நாட்டின் றென்றிசைக்கண்ணதாகிய தென்பாண்டிநாட்டார் ஆவினைப் பெற்றமென்றுஞ் சோற்றைச் சொன்றியென்றும், குட்டநாட்டார் தாயைத் தள்ளையென்றும், குடநாட்டார் தந்தையை அச்சனென்றும், கற்காநாட்டார் வஞ்சரைக் கையரென்றும், வேணாட்டார் தோட்டத்தைக் கிழாரென்றும், பூழிநாட்டார் சிறுகுளத்தைப் பாழியென்றும், அருவாநாட்டார் செறுவைச் செய்யென்றுஞ் சிறுகுளத்தைக் கேணியென்றும், அருவாவடதலையார் புளியை எகினென்றும், சீதநாட்டார் தோழனை எலுவனென்றுந் தோழியை இகுளையென்றும், வழங்குவர். இவை முதலியனவுந் தமிழொழிந்த பதினாறுநிலத்து மொழிகளுள் ஏற்பனவுஞ் செந்தமிழோடு விரவி வருதல் காண்க. (16)

### வடசொல்.

274. பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல்.

எ - னின். வடசொல்லாமாறுணர்-ற்று.

இ - ள். ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொதுவெழுத்தானும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்துத் திரிந்தவெழுத்தானும் இவ்விரண்டானும் செந்தமிழ்ச் சொல்லை யொப்பனவாகி வடதிசைக்கணின்றுஞ் செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன வடசொல்லாம். எ - று.

பதவியலுள் 'பொதுவெழுத் தொழிந்த நாலேழுந் திரியும்' எனக் கூறினமையிற் சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்தானுமென் பது பெற்றும்.

அவ்வடசொற்கு ஆரியச்சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்து ஆதிகாரணமாயும் அச்சிறப்பெழுத்து அநாதிகாரணமாயும் நிற்ற லிற் சிறப்பெழுத்தானுமென்றார். அது பருத்தியானின்ற படா மென்றாற்போலும்.

ஆரியச்சொற் சிதைந்து வடசொல்லாதலின் இவை சொல் லாற் செந்தமிழ்ச் சொல்லை யொவ்வாமை கருதி எழுத்தானுக்கு மென்பார் எழுத்தானியைவனவென்றார்.

வ - று. அமலம், உருவம், கமலம், காரணம், காரியம் என்றற் றொடக்கத்தன பொதுவெழுத்தானியைந்தன. சுகி, போகி, சத்தி என்றற்றொடக்கத்தன சிறப்பெழுத்தானியைந்தன. அரன், அரி, கடினம், சலம் என்றற்றொடக்கத்தன ஈரெழுத்தானுமியைந்தன.

அரன் என்புழித் தமிழின் சிறப்பாகிய னகரவீறு பதவியலுள் 'உவ்வுமாம் பிற' என்றமையான் அமைந்தமையின், ஈண்டு விதந்து கூறாராயினர். பிறவுமன்ன,

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ—யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே." "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்." என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாருமென்க. (17)

---

## பெயர்ச்சொல்.

275. இடுகுறி காரண மரபோ டாக்கந்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்று
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொ
ரேற்பவும் பொதுவு மாவன பெயரே. [ன்

இவ்வதிகாரத்தைந்தியலானும் உணர்த்த நிறீஇயபெயர்வினை யிடையுரியென்னு நான்கனுட் பெயரிலக்கண முணர்த்துவான் றொடங்கி அதன் பொதுவிலக்கணமுணர்-ற்று.



இ - ள். இடுகுறியுங் காரணக்குறியும் மரபினையும் ஆக்கப்பாட்டினையுந் தொடர்ந்து வினையாலணையுங் காரணக் குறியொன்றுங் காலந்தோற்ற அல்லன காலந்தோற்றுவாய் எட்டு வேற்றுமையுஞ் சார்தற்கிடமாய் இருதிணையைம்பான் மூவிடத்துள் ஒன்றனை யேற்பவும் பலவற்றினை யேற்பவு மாய் வருவன பெயர்களாம். எ - று.

வ - று. ஆண், பெண், மரம், தெங்கு, கமுகு, என்றற்றொடக் கத்தன இடுகுறிமரபு தொடர்ந்தன. அவன், அவள், காளை, காரிகை, விலங்கு, பறவை என்றற்றொடக்கத்தன காரணக்குறி மரபுதொடர்ந்து வந்தன. "பொன்போலுங் கள்ளிப்பொறிபறக்குங் கானலிலே — யென்பேதை செல்லற் கியைந்தனளே - மின் போலு—மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்— கானவேன் முட்டைக்குங் காடு." என்னும் பொய்யாமொழிப் புல வன்பாடலில்வேட்டுக்குமரன் தன்பெயர்முட்டையென்றற்றொடக் கத்தன இடுகுறியாக்கந் தொடர்ந்தன. பொன்னன், பூணன், "மலை மகன் மகனே மாற்றோர் கூற்றே." என்றற்றொடக்கத்தன கார ணக்குறியாக்கந் தொடர்ந்தன. நடந்தவனை, நடந்தானை என்றற் றொடக்கத்தன வினையாலணையுங் காரணக்குறி காலங் காட்டின. ஏனையிலக்கணங்கண் முன்னும் பின்னும் பெறப்படுதலின் ஈண்டுக் காட்டிற்றிலம்.

ஆண் பெண் முதலிய இடுகுறிப்பெயரும் அவன் அவள் முதலிய காரணப்பெயரும் இடையே ஒருவராலாக்கப்பட்டன வன்றி அவ்விலக்கணங்களோடு தோன்றிய பொருள்கட்கெல்லாந் தொன்றுதொட்டு மரபு பற்றி வருதலானும், முட்டை யென்றற் றொடக்கத்து இடுகுறிப்பெயரும்பொன்னனென்றற்றொடக்கத்துக் காரணப்பெயரும் மரபுபோலத் தொன்றுதொட்டனவன்றி அப் பொருள்கட்கு இடையேயொருவராலாக்கப்பட்டு வருதலானும், இடு குறிகாரணமிரண்டும் மரபையும் ஆக்கத்தையுந் தொடர்ந்தென் றார். இதற்கு இவ்வாறன்றி, இடுகுறிப்பெயர் காரணப்பெயரி ரண்டுமொழிய இடையன்பாகன் என்னும் மரபுப்பெயர் தெங்குகடு வென்னும் ஆகுபெயர் எனப் பொருள்கொள்வாருமுளர். எல்லாப்

பெயரும் இடுகுறிப்பெயர் காரணப்பெயரென்னும் இரண்டா யடங்குவதன்றி வேறின்மையானும், 'இடுகுறிகாரணப் பெயர் பொதுச் சிறப்பின.' என வரையறை கூறிப் போந்தமையானும் அது பொருந்தாதென்க. (18)

### உயர்திணை ஆண்பாற் பெயர்.

**277.** அவற்றுள்,—
கிளையெண் குழூஉமுதற் பல்பொருடிணைதேம்
ஊர்வா னகம்புற முதல நிலன்யாண்
டிருது மதிநா ளாதிக் காலந்
தோள்குழன் மார்புகண் காது முதலுறுப்
பளவறி வொப்பு வடிவு நிறங்கதி
சாதி குடிசிறப் பாதிப் பல்குணம்
ஓத வீத லாதிப் பல்வினை
இவையடை சுட்டு வினாப்பிற மற்றோ
டுற்ற னவ்வீறு நம்பி யாடூஉ
விடலை கோவேள் குரிசி றோன்றல்
இன்னன வாண்பெய ராகு மென்ப.

**எ - னின்.** மேல் 'திணைபா லிடத்தொன் றேற்பவும்' என்றவற்றுள் உயர்திணையாண்பாற்குரிய பெயர்களுணர்-ற்று.

**இ - ள்.** மேற் 'பெயரே' என்றவற்றுள் இங்ஙனம் பகுத்துக் கூறிய பொருளாதியாறனோடும் இவற்றையடையுஞ் சுட்டினோடும் வினாவினோடும் பிறவென்பதனோடும் மற்றென்பதனோடும் பொருந்திய னகர வீற்றுப் பெயர்களும் நம்பி முதலாக வெடுத்தோதிய பெயர்களும் இவைபோல்வன பிறவும் உயர்திணையாண்பாற் பெயர்களாமென்று சொல்லுவர் புலவர். எ - று.

"த ந நு எம்முதன் மகரமிடையிட்டு—ன ள ர வா மீற்றன சுற்றப் பெயரே." என்பவாகலிற் கிளைப்பெயரறிக.



சுட்டு முதலிய நான்கிடைச்சொற்குந் தமக்கெனவோர் பொருளின்றிப் பொருளாதியாறனுள் யாதானுமொன்றைக் கூறுவான் குறிப்பின்வழி அடைந்துணர்த்தலின் இவையடைசுட்டு வினாப் பிறமற்றென்றார். 'வினாச் சுட்டுடனும் வேறுமாம்' என்பதுமது.

வ - று. தமன், நமன், நுமன், எமன் என்பன கிளையான் வருபெயர். ஒருவன் என்பது எண்ணான் வருபெயர். அவையத்தான், அத்திகோசத்தான் என்பன குழூஉவான் வருபெயர். பொருளன், பொன்னன், முடியன் என்றற்றொடக்கத்தன முதலென்பவற்றான் வருபெயர். இவை பொருளான் வருபெயர். வெற்பன், பொருப்பன், சிலம்பன். எ-ம். மறவன், எயினன், எ-ம். இடையன், ஆயன், எ-ம். ஊரன், மகிழ்நன். எ-ம். சேர்ப்பன், துறைவன். எ-ம். வருவன குறிஞ்சி முதலியவைந்திணையானும் வருபெயர். சோழியன், கொங்கன் என்பன தேயத்தான் வருபெயர். கருவூரான், மருவூரான் என்பன ஊரான் வருபெயர். வானத்தான், அகத்தான், புறத்தான் என்பன வான் முதலிய மூன்றானும் வருபெயர். மண்ணகத்தான் பாதலத்தான் என்றற்றொடக்கத்தன முதலவென்பவற்றான் வருபெயர். இவை இடத்தான் வருபெயர். மூவாட்டையான், வேனிலான், தையான், ஆதிரையான் என்பன யாண்டு முதலிய நான்கானும் வருபெயர். நெருநலான், காலையான், மாலையான் என்றற்றொடக்கத்தன ஆதியென்பவற்றான் வருபெயர். இவை காலத்தான் வருபெயர். திணிதோளன், செங்குஞ்சியன், வரைமார்பன், செங்கண்ணன், குழைக்காதன் என்பன தோண் முதலியவைந்தானும் வருபெயர். குறுந்தாளன், நெடுங்கையன் என்றற்றொடக்கத்தன முதலென்பவற்றான் வருபெயர். இவை சினையான் வருபெயர். பெரியன், புலவன், பொன்னொப்பான், கூனன், கரியன், மானுடவன், பார்ப்பான், சேரன், ஆசிரியன் என்பன அளவு முதலிய ஒன்பதானும் வருபெயர். நல்லன், தீயன் என்றற்றொடக்கத்தன ஆதியென்பவற்றான் வருபெயர். இவை குணத்தான் வருபெயர், ஓதுவான், ஈவான் என்பன அவ்விரண்டானும் வருபெயர். கணக்கன், பிணக்கன் என்றற்றொடக்கத்தன ஆதியென்பவற்றான் வருபெயர். இவை தொழிலான் வருபெயர். அவன், இவன், உவன், எவன், யாவன், ஏவன், பிறன், மற்றையான் என்பன சுட்டு முதலிய நான்கானும் வருபெயர். நம்பி முதலிய பெயர்களேழும் உரைக்கிடையிற் காண்க.

இன்னனவென்றமையான், வில்லி, வாளி, சென்னி, கிள்ளி என்றற்றொடக்கத்துயர்திணை யாண்பாற்பொருள் குறித்து வருவனவெல்லாங் கொள்க.

இவையடைசுட்டு வினாப்பிற மற்றோடுற்ற னவ்வீறு என்பவற்றிற்கு அப்பொருளன், இப்பொருளன், உப்பொருளன் எப்பொருளன், பிறபொருளன், மற்றப்பொருளன் என உதாரணங்காட்டுவாருமுளர். சுட்டு முதலிய நான்கனோடும் னகரவீறுறுதலின்மையான் அவற்றிற்கு அவை காட்டாகாவென்க. (19)

### உயர்திணைப் பெண்பாற் பெயர்.

277. கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவுந்
தோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே.

எ - னின். உயர்திணைப் பெண்பாற்குரிய பெயருணர்-ற்று.

இ - ள். மேலைச் சூத்திரத்துக் கிளைமுதலாகப் பகுத்துக் கூறிய அறுவகைப் பொருள்களுள் ளகரவொற்றும் இகரவுயிருமுறுதற்கேற்ற அவ்விரண்டீற்றவாய் வரும் பெயர்களுந் தோழி முதலாக வெடுத்தோதிய பெயர்களும் இவற்றுடனே இவைபோல்வன பிறவும் உயர்திணைப் பெண்பாற் பெயர்களாம். எ - று.

வ - று. தமள், நமள், நுமள், எமள், அவையத்தாள், அத்திகோசத்தாள், பொருளாள், பொன்னாள். எ-ம். ஒருத்தி, அவையத்தி. அத்திகோசத்தி, பொன்னி. எ-ம். பொருளாதியாறனுள்ளும் ளகரவொற்றிற்கும் இகரவுயிர்க்கும் ஏற்பனவறிந் தொட்டிக் கொள்க.

ஏற்றவீற்றவென்றமையாற் கிளைப்பெயர் இகரவீறேலாமையும் எண்ணுப்பெயர் ளகரவொற்றீறேலாமையுங் காண்க. பிறவுமன்ன. தோழி முதலியவைந்து பெயரும் உரைக்கிடையிற் காண்க.



இன்னனவென்றமையான் இகுளை மாது அங்கனை என்றற்றொடக்கத்து உயர்திணைப் பெண்பால் குறித்து வருவனவெல்லாங் கொள்க. (20)

### உயர்திணைப் பலர்பாற் பெயர்.

278. கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவுங்
கள்ளெ னீற்றி னேற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி யாகும்.

எ - னின். பலர்பாற்குரிய பெயருணர்-ற்று.

இ - ள். மேற்கூறப்பட்ட கிளைமுதலிய அறுவகைப் பொருளையும் பொருந்திய ரகரவொற்றீற்றுப் பெயர்களும் கள்ளென்னும் விகுதியையீறாகவுடைய பெயர்களுள் ஈண்டைக்குப் பொருந்தி வருவனவும் இவைபோல்வன பிறவும் பலர்பாலின் பெயர்களாம். எ - று.

கள்ளீறு பகுதிப்பொருள் விகுதியாயும் விகுதிமேல் விகுதியாயும் வருதலின் உம்மையிடையிட்டு வேறோதினார்.

கள்ளெனீற்றினேற்பவுமென்றார் அஃறிணைக்கண்ணுங் கள்ளீற்றுப்பெயர் வருதலின்.

பல்லோர் பகுதியின் பெயராமெனக் கூட்டுக. பகுதியென்பது பால். தொகுப்புத் தொகுதியென நின்றாற்போலப் பகுப்புப் பகுதியென நின்றது. பகுப்புப் பல்லோர் பெயரின் பகுப்பாகுமெனினும் அமையும்.

வ - று. தமர், நமர், நுமர், எமர், இருவர், மூவர் எனப் பொருளாதியாறனோடு மொட்டுக. கோக்கள், மனுக்கள் என்றற்றொடக்கத்தன பகுதிப்பொருள் விகுதியீற்றுப் பெயர்கள். தமர்கள், நமர்கள், அரசர்கள், மறவர்கள் என்றற்றொடக்கத்தன விகுதிமேல் விகுதியீற்றுப் பெயர்கள். இவ்விகுதிமேல் விகுதி இடைச்சொல்லாதலின் ‘ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா.’ என்னுஞ் சூத்திரத்தாற் கூறும் வழுவமைதியாய் வந்தன.

பிறவுமென்றமையான், மாந்தர், மக்கள் என்றற்றொடக்கத்துப் பலர்பால் குறித்து வருவனவெல்லாங் கொள்க. (21)

### அஃறிணை ஒன்றன்பாற் பெயர்.

279. வினாச்சுட் டுடனும் வேறு மாம்பொருள்
ஆதி யுறுதுச் சுட்டணை யாய்தம் [ரே.
ஒன்றெனெண் ணின்னன வொன்றன் பெய

**எ - னின்.** அஃறிணை யொருமைப்பாற்குரிய பெயருணர்-ற்று.

**இ - ள்.** வினாவின்கண்ணுஞ் சுட்டின்கண்ணுங் கரந்து அவற்றினுடனாயும் வினாவவுஞ் சுட்டவும் படாது வேறாயும் வரும் பொருளாதியாறனையும் பொருந்திய துவ்விகுதியீற்றுப் பெயரும், சுட்டோடு கூடிய ஆய்தத்தைப் பொருந்திய துவ் விகுதியீற்றுப்பெயரும், ஒன்றென்னு மெண்ணாகுபெயரும், இவைபோல்வன பிறவும் அஃறிணை யொருமைப் பெயராம். எ - று.

வ - று. எது, யாது, எது. எ-ம். அது, இது, உது. எ-ம். குழையது, நிலத்தது, மூலத்தது, கோட்டது, குறியாது, ஆடலது. எ-ம். அஃது, இஃது, உஃது, எ-ம். ஒன்று எ-ம். வரும்.

இன்னனவென்றமையால், பிறிது, மற்றையது என்றற்றொடக்கத்து அஃறிணையொருமைப் பொருள் குறித்து வருவனவெல்லாங் கொள்க.

சுட்டணையாய்தம் இப்பகுதிவிகுதிப் புணர்ச்சிக்கட் சந்திவகையான் வந்ததன்மையின் இச்சுட்டுப்பெயர்கள் வேறோதப்பட்டன வென்பதூஉம், இவைபோலெடுத்தோதாமையின் ஆய்தமணையாச் சுட்டுப்பெயர்களே வினாச்சுட்டுடனும் என்றவற்றுள் அமைந்து கிடந்தனவென்பதூஉம், வினாச்சுட்டுடனுமென்பதற்கு எக்குழையது, அக்குழையது என உதாரணங் காட்டுவது பொருந்தாதென்பதூஉம், பெற்றாம். (22)



### அஃறிணைப் பலவின்பாற் பெயர்.

280. முன்ன ரவ்வொடு வருவை யவ்வுஞ்
சுட்டிறு வவ்வுங் கள்ளிறு மொழியும்
ஒன்றலெண்ணு முள்ள வில்ல
பல்ல சில்ல வுளவில பலசில
இன்னவும் பலவின் பெயரா கும்மே.

**எ - னின்.** அஃறிணைப் பன்மைப்பாற்குரிய பெயருணர்-ற்று.

**இ - ள்.** முன்னர்க் கூறிய 'வினாச்சுட்டுடனும் வேறு மாம்பொருளாதி' யாறனோடும் ஏற்ற பெற்றி வரும் வகரவைகாரவீற்றுப் பெயர்களும் அகரவீற்றுப் பெயர்களும் வகரவொற்றீற்றுச் சுட்டுப்பெயர்களும் கள்ளென்னும் பகுதிப்பொருள் விகுதிபிறுதியாகிய பெயர்களும் ஒன்றலாத இரண்டு முதலிய எண்ணாகு பெயர்களும் உள்ளவென்பது முதலிய குறிப்பு வினையாலணைந்த எட்டுப்பெயர்களும் இவைபோல்வன பிறவும் அஃறிணைப் பன்மைப் பெயர்களாம். எ - று.

மேலைச் சூத்திரங்களுட் கூறியவாறே உறுதி கூறாது வருவை யென்றதனால் ஏற்ற பெற்றியென்பதூஉம், உள்ளவில்ல முதலிய பண்பொடும் வரும் அகரவீற்றுப் பெயர்கள் முன்னரவ்வொடு வருவையவ்வும் என்பவற்றுள் அடங்குதலிற் பின்னர்க்கூறிய உள்ளவில்ல முதலியவெட்டுங் குறிப்புவினையாலணையும் பெயரென்பதூஉம், பெற்றாம்.

வ - று. எவை, யாவை. எ-ம். அவை, இவை, உவை. எ-ம். நெடியவை, கரியவை, நல்லவை, தீயவை, உள்ளவை, இல்லவை. எ-ம். பொருள, பொருளன, அகத்த, அகத்தன, மூலத்த, மூலத்தன, கோட்ட, கோட்டன, கரிய, கரியன, உள்ள, உள்ளன, இல்ல, இல்லன, ஓதுவ, ஓதுவன, ஈவ, ஈவன. எ-ம். அவ், இவ், உவ். எ-ம். யானைகள், குதிரைகள். எ-ம். இரண்டு, மூன்று, பத்து,

நூறு, ஆயிரம். எ ம். வரும். உள்ளமுதலிய வெட்டும் உரைக்கிடையிற் காண்க.

இன்னவுமென்றமையான், யா, பிற, மற்றைய என்றற்றொடக்கத்து அஃறிணைப்பன்மைப் பொருள்குறித்து வருவனவெல்லாங் கொள்க. (23)

### அஃறிணை இருபாற் பொதுப்பெயர்.

281. பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொது [மைய.

எ - னின். மேல் 'பொதுவுமாவன பெயரே' என்றார். அவற்றுள் அஃறிணையிருபாற்கு முரிய பொதுப்பெயருணர்-ற்று.

இ - ள். அஃறிணைப் பெயர்களுள் இங்ஙனம் பால் பகுத்தலையொழிந்து நின்ற பெயர்களனைத்தும் அத்திணையிருபாற்குமுரிய பொதுப்பெயர்களாம்.

வ - று. யானை வந்தது, யானை வந்தன, குதிரை வந்தது, குதிரை வந்தன, மரம் வளர்ந்தது, மரம் வளர்ந்தன, கண்சிவந்தது, கண் சிவந்தன என வரும்.

இச்சூத்திரந் திணைப்பொதுப்பெயரின் பிற்கூறாது ஈண்டுக் கூறிய தென்னையெனின்:—விளங்குதற்பொருட்டு ஒன்றின முடித்த றன்னின முடித்தலென்னு முத்தியாற் கூறப்பட்டதென்க. (24)

### இருதிணைப் பொதுப்பெயர்.

282. முதற்பெயர்நான்குஞ் சினைப்பெயர்நான்குஞ்
சினைமுதற்பெயரொருநான்குமுறையிரண்டுந்
தன்மை நான்கு முன்னிலை யைந்தும்
எல்லாந் தாந்தா னின்னன பொதுப்பெயர்.

எ - னின். இருதிணைக்குமுரிய பொதுப்பெயர்களைத் தொகுத்துணர்-ற்று.



இ - ள். முதற்பெயர் முதலான ஒன்பது கூற்றுப் பெயர்களும் இவைபோல்வன பிறவும் இருதிணைக்குமுரிய பொதுப்பெயர்களாம். எ - று.

பெயரென்பதனை முறை முதலியவற்றினோடுங் கூட்டுக.

எல்லாமென்பது முதல் இன்னனவென்பதீறாக நின்ற செவ்வெண்ணினிறுதிக்கண் நான்குமென்னுந் தொகையோடு உம்மை தொக்கன.

எல்லாம், தாம், தான் என விதந்த மூன்று பெயருமொழிய இன்னனவென்றமையால், சூரியனுதித்தான் சூரியனுதித்தது என ஒரு பொருளையே உயர்திணைப்பொருளாக்கியும் அஃறிணைப் பொருளாக்கியுங் கூறப்படும் பொதுப்பெயர் முதலியனவும், ஊமை வந்தான் ஊமை வந்தாள் என உயர்திணையிருபாலையுமுரைக்கும் பொதுப்பெயர் முதலியனவும், தன்மை முன்னிலை வினையாலணையும் பெயரும் பிறவுங் கொள்க.

முதற்பெயர் முதலாக முன்னிலைப் பெயரீறாகக் கூறிய அறுவகைப் பெயர்கட்கும் உதாரணம் பின்வருந் தத்தம் வகைச் சூத்திரங்களுட் காண்க.

உயர்திணைக்குச் சிறந்த பெயர் அஃறிணைக்கண் விரவியும், அஃறிணைக்குச் சிறந்த பெயர் உயர்திணைக்கண் விரவியும், வருதலின் இவற்றை விரவுப்பெயரென்றுங் கூறுப. அங்ஙனம் வருதல் காட்டு முதாரணங்களுட் காண்க. (25)

283. ஆண்மை பெண்மை யொருமை பன்மையின்
ஆமந்நான்மைக ளாண்பெண் முறைப்பெயர்.

எ - னின் மேற்றொகுத்துணர்த்தியவற்றுண் முதற்பெயர் முதன் முறைப்பெயரீறாகக் கிடந்தவற்றை வகுத்துணர்-ற்று.

இ - ள். ஆண்மை முதலிய இந்நான்கு பாலுங் காரணமாக முற்கூறிய முதற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரென்னு மூன்றும் ஒவ்வொன்று நந்நான்காம்; ஆண்மை பெண்மையென்னு மிருபாலுங் காரணமாக முறைப்பெயர் இரண்டாம். எ - று.

மேலைச்சூத்திரத்து இரண்டென்பதனையும் இச்சூத்திரத்து ஆமென்பதனையுங் கூட்டி முறைப்பெயரிரண்டாமென உரைத்துக் கொள்க.

உயர்திணைக்கேயுரிய பலர்பாலையும் அஃறிணைக்கேயுரிய ஒன்றுபலவென்னும் இருபாலையுமொழித்து இருதிணைக்கும் பொதுவாகிய ஆண்மை பெண்மையொருமை பன்மையென்னு நான்குபாலினையும் இவற்றுண் முறை கூறுதற்குரிய ஆண்மை பெண்மையென்னும் இருபாலினையுங் காரணமாக இச்சூத்திரத்துட் கூறினார் இவற்றின் காரியங்களை இனைத்தென்றறிபொருளாக மேலைச்சூத்திரத்துட் கூறியவாறு உய்த்துணர்தற்கென்க. எனவே, ஆண்மை முதற்பெயர் பெண்மை முதற்பெயர் ஒருமை முதற்பெயர் பன்மை முதற்பெயர். எ-ம். ஆண்மைச்சினைப்பெயர், பெண்மைச்சினைப்பெயர் ஒருமைச்சினைப்பெயர் பன்மைச்சினைப் பெயர். எ-ம். ஆண்மைச்சினை முதற்பெயர் பெண்மைச்சினை முதற்பெயர் ஒருமைச்சினை முதற்பெயர் பன்மைச்சினை முதற் பெயர். எ-ம். ஆண்மை முறைப்பெயர் பெண்மை முறைப்பெயர். எ-ம். பெயர் பெறுமென்பதாயிற்று.

வ-று. சாத்தன், சாத்தி, கோதை, கோதைகள் இவை முதற்பெயர் நான்கு. முடவன், முடத்தி, செவியிலி, செவியிலிகள் இவை சினைப்பெயர் நான்கு. முடக்கொற்றன், முடக்கொற்றி, கொடும்புறமருதி, கொடும்புறமருதிகள் இவை சினைமுதற்பெயர் நான்கு. தந்தை, தாய் இவை முறைப்பெயரிரண்டு. கள்விகுதி அஃறிணைப்பன்மைக்குச் சிறந்ததாய் உயர்திணைப் பன்மைக்கண்ணும் விரவி வருதலின் ஒருமைப்பொதுப்பெயரோடு கள்விகுதி புணர்ந்ததுணையானே அவை பன்மைப் பொதுப்பெயராயின. ()

## திணைப் பொதுப்பெயர்.

284. அவற்றுள்,
ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்.

எ-னின். திணைப்பொதுவாய் நின்ற பெயர்கள் பாற்பொதுவாய் நிற்குமாறுணர்-ற்று.



இ-ள். முதற்பெயர் முதலவாகக் கூறப்படும் இருபத்தாறும் பிறவுமாகிய பொதுப்பெயர்களுள் ஒவ்வொன்று இருதிணைக்கண்ணுந் தன்றன் பால்களையேற்கும். எ-று.

எனவே, ஆண்மைப் பொதுப்பெயர் உயர்திணையாண்பாலினையும் அஃறிணையாண்பாலினையும் பெண்மைப்பொதுப்பெயர் உயர்திணைப் பெண்பாலினையும் அஃறிணைப்பெண்பாலினையும் ஒருமைப்பொதுப்பெயர் உயர்திணையாணொருமை பெண்ணொருமையினையும் அஃறிணையொருமையினையும் பன்மைப்பொதுப்பெயர் உயர்திணைப் பன்மையினையும் அஃறிணைப்பன்மையினையும் எற்குமென்பதாயிற்று.

வ-று. சாத்தனிவன், சாத்தனிவ்வெருது. எ-ம். சாத்தியிவள், சாத்தியிப்பசு. எ-ம். கோதையிவன், கோதையிவள், கோதையிது. எ-ம். கோதைகளிவர், கோதைகளிவை. எ-ம். தந்தையிவன், தந்தை யிவ்வெருது. எ-ம். தாயிவள், தாயிப்பசு. எ-ம். யானம்பி, யானங்கை, யான்பூதம். எ-ம். யாமக்கள், யாம்பூதங்கள். எ-ம். நீ நம்பி, நீ நங்கை, நீ பூதம். எ-ம். நீயிர் மக்கள், நீயிர் பூதங்கள். எ-ம். அவரெல்லாம், அவையெல்லாம். எ-ம். அவர்தாம், அவைதாம். எ-ம். அவன்றான், அவட்டான், அதுதான். எ-ம். வரும். இவற்றுட் காட்டாதொழிந்தனவும் பிறவும் இவ்வாறே யொட்டிக் காண்க.

ஆண்மைப்பொதுப்பெயர் பெண்மைப்பொதுப் பெயர்கட்கு ஆண்மக்கள் ஆண்விலங்கு பெண்மக்கள் பெண்விலங்கு காளை வந்தான் காளைவந்தது மான் வந்தாள் மான் வந்தது என இக்காலத்துப் பயின்றுவருவன காட்டலுமொன்று பிறவுமன்ன.

செஞ்ஞாயிறு என்றாற்போலத் தன்னோடியைபின்மை நீக்கிய விசேடணத்தான் விசேடிக்கப்பட்டனவன்றிச் செந்தாமரை என்றாற்போலப் பிறிதோடியைபு நீக்கிய விசேடணத்தான் விசேடிக்கப்பட்டனவாகி ஆண்மைப்பொதுப்பெயர் பன்மைப்பொதுப் பெயர் என்றும் இனச்சுட்டிலவாய் வருதலின் தன்பாலேற்கு மெனக் கூறினாரென்க.

இனி, ஆசிரியர் தொல்காப்பியர் பன்மைசுட்டிய பெயரென்றது பலபாலையுஞ் சுட்டி நிற்றலிற் பிறிதினியைபு நீக்கிய விசேடண மடுத்து நின்றதென்பார் "பன்மை சுட்டிய வெல்லாப்பெயரு—மொன்றே பலவே யொருவ ரென்னு—மென்றிப் பாற்கு மோரன்னவ்வே." எனக் கூறித் தன்பாலேற்றலை உம்மையாற்றழீஇயினார். அவ்வாசிரியர் கருத்தறியாது, பன்மைப் பொதுப் பெயருட் பன்மை யென்பது பிறிதோடியையபு நீக்கிய விசேடணமன்றெனத் தோன்றியவாறே விசேடண விலக்கணஞ் சிதைந்து இடர்ப்பட்டு உரை கூறுவாருமுளர். அதனைத் தோன்றக்கூறிற் பெருகும். அவ்வாசிரியர் கூறியவாறே பன்மைப் பொதுப்பெயர்க்கு உதாரணம் யானை வந்தது யானை வந்தன யானை வந்தான் யானைவந்தாள் எனவருமாறும், இங்ஙனம் யானையென்னும் பால்பகாவஃறிணைப்பெயர்க்குக் கள்விகுதியின்மையின் அஃறிணையொருமைக்கே சிறந்ததாய் அதன் பன்மைக்கண்ணும் விரவி ஆகுபெயராய் உயர்திணையாணொருமை பெண்ணொருமையினும் விரவி வருமாறுங் காண்க. பலபாலையுஞ் சுட்டி நிற்றலிற் பன்மைசுட்டிய பெயரெனின் ஆண்மை சுட்டியபெயர் முதலியனவும் பலபாலையுஞ் சுட்டி நிற்றலின் அவற்றையும் பன்மைசுட்டிய பெயரெனல் வேண்டுமாலெனின் அது பொருந்தாது, நான்கு பாலுஞ் சுட்டி நிற்குந் தன்னை நோக்க ஏனை மூன்றுபாலுஞ் இரண்டுபாலுஞ் சுட்டி நிற்கும் பெயர்கள் சின்மை சுட்டிய பெயரெனப்படுவனவல்லது பன்மைசுட்டிய பெயரெனப்படாவாகலானென்க. அற்றேல் அவற்றைச் சின்மைசுட்டிய பெயரெனவேயமையும் பிறவெனின், அவற்றுள் ஆண்மை சுட்டுதன் முதலிய பகுப்புண்மையின் அவற்றைப் பகுத்துக் கூறவேண்டுதலான் அமையாவென்க. இக்கருத்தேபற்றியன்றே, பஃறொடைவெண்பாவென்றாற்போல ஏனையவற்றையும் பஃறொடைவெண்பா வெனக் கூறாததூஉம், பகுப்புண்மையிற் சிஃறொடைவெண்பா வென்றொழியாததூஉம், பஃறாழிசைக் கொச்சக மென்றதனை நோக்கி அதிற் குறைந்ததனைப் பகுப்பின்மையாற் சிஃறாழிசைக் கொச்சகமென்றே போந்ததூஉமென்க. இனி இவ்வாறன்றி ஆணொருமை பெண்ணொருமை அஃறணையொருமையென்ற மூன்றும் ஒருமைப்



பாலென ஒன்றாயடங்குதலிற் பல பால்களையுஞ் சுட்டி நின்றனவல்லவாகலான் அம்மூன்றொருமையுஞ் சுட்டிய பெயர்களை ஒருமைசுட்டிய பெயரெனவும், இஃதொருமையும் பன்மையுமென்னும் இருபால் சுட்டி நிற்றலாற் பன்மை சுட்டிய பெயரெனவுங் கொள்ளினும் இழுக்காது. (27)

## மூவிடப் பெயர்.

285. ✓ தன்மை யானான் யாநா முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை யெல்லா மெனல்பொது.

எ - னின். 'தன்மை நான்கு முன்னிலை யைந்து' என்றார் அவையிவையென்பதூஉம் 'இடத்தொன்றேற்பவும் பொதுவும்' என்றார் அவையிவையென்பதூஉமுணர்-ற்று.

இ - ள். தன்மைப்பெயர் நான்காவன: யான் நான் யாம் நாம் என்பனவாம்; முன்னிலைப்பெயரைந்தாவன: எல்லீர் நீயிர் நீவிர் நீர் என்பனவாம்; திணைபாலுள் ஒன்றற்கேற்பவும் பொதுவுமாகிய பெயர்களுள் இவ்விரண்டிடத்து ஒன்பதுபெயருமல்லாதபெயர்களனைத்தும் படர்க்கை யிடத்திற்குரியவாம் அவற்றுள் எல்லாமென்னும் பெயரொன்று மூவிடத்திற்கு முரித்தாம். எ - று.

எல்லாமென்னும் பெயர் மூவிடத்தும் வருமாறு: யாமெல்லாம் நீயிரெல்லாம் அவரெல்லாம் அவையெல்லாம் என வரும்.

இத்தன்மை முன்னிலைப்பெயர்களை உரைத்தலுங் கேட்டலுமில்லா அஃறிணைக்கண் இவ்வொன்பது பெயரும் விரவிப்பொதுப் பெயராமாறென்னையெனின்:—ஆசிரியர் தொல்காப்பியர் "அவ்வழி—அவனிவ னுவனென வரூஉம் பெயரும்" என்னுஞ் சூத்திரத்து யான் யாம் நாமென வரூஉம் பெயரும் உயர்திணைப்பெயரெனக் கூறினாரேனும் மரபியலுள் "மக்கடாமே யாறறி வுயிரே—பிறவு முளவே வக்கிளைப் பிறப்பே." "ஒருசார் விலங்கு முளவென மொழிப." என்னுஞ் சூத்திரங்களின் விலங்கினுள் ஒருசாரன

கிளியுங் குரங்கும் யானையு முதலாயினவும் மனவுணர்வுடையன வாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்குமெனக் கூறலின் அம்மரபுபற்றிப் பொதுப்பெயரெனப் பட்டனவென்க. மேல் வருந் தன்மை முன்னிலை வினைகளும் அவ்வினையாலணையும் பெயர்களுமன்ன. அங்ஙனமாகவே 'கேட்குந போலவுங் கிளக்குந போலவு—மியங்குந போலவு மியற்றுந போலவு—மஃறிணைமருங் கினு மறையப் படுமே.' என்பது புனைந்துரைவகையால் வழுவமை தியாகக் கூறப்பட்டனவேயாமாதலின் அவைபற்றிப் பொதுப் பெயரெனப் பட்டனவெனக் கோடல் பொருந்தாமையுமறிக. (23)

## தொழிற்பெயருக்கும் வினையாலணையும் பெயருக்கும் இடம் வகுத்தல்.

286. வினையின் பெயரே படர்க்கை வினையால்
அணையும் பெயரே யாண்டு மாகும்.

எ - னின். சில வினையின்பெயர்க்கு 'அல்லனபடர்க்கை' என்பதனான் எய்தியவிடம் யாண்டுமாகும் என்பதனான் இகந்துபடாமற் படர்க்கையென்பதனாற் காத்தலும் வினையாலணையும் பெயர்க்கு அதனை விலக்கி இடம் வகுத்தலுநுதலிற்று.

இ - ள். யானுணல் நீயுணல் அவனுணல் என மூவிடத்து வினையாயினும் அவ்வுணல் தினல் என்றற்றொடக் கத்து வினையின்பெயர் படர்க்கைக்கே யுரியவாம்; அவ்வினையா லணையும்பெயர் அவ்வினையின் பெயர்போற் படர்க்கைக்கே யுரியவாகாது உண்டேனை உண்டாயை உண்டானையெனத் தனித்தனி மூவிடத்திற்குமுரியவாம். எ - று.

யானுண்டேன், நீயுண்டாய், அவனுண்டான் என இடத்தான் ஒன்றுபட நின்ற நிலைமொழி வருமொழிபோல அம்மூவிடமுற்றின் கட் டொழில்பயனிலையாகி யானுணல் நீயுணல் அவனுணல் என ஒன்றுபட நிற்பனவற்றிற்கன்றி, எனதுணல் நினதுணல் அவன துணல் என்றும் உணல் என்றும் வேறுபட்டு நிற்கும் வினையின் பெயர்கட்கு எய்தியவிடம் இகந்துபடுதலின்றெனவுணர்க.



இவ்வாறன்றி வினையின்பெயரே படர்க்கையென்பதற்கு வினையின்பெயரனைத்தும் படர்க்கையெனப் பொருள்கொள்ளிற் கூறியது கூறலாம் அது பொருந்தாதென்க. (29)

## 12 பொதுப் பெயர்.

287. தான்யா னானீ யொருமை பன்மைதாம்
யாநா மெலாமெலீர் நீயிர்நீர் நீவிர்.

எ - னின். இப்பன்னிரண்டு பொதுப்பெயர்களும் இருதிணைக்கும் பொதுவாகிய ஆண்மை பெண்மை ஒருமை பன்மையென்னு நான்கு பொதுப்பால்களுள் இப்பாலுள் அமைந்து கிடந்தன வென்பதுணர்-ற்று.

இ - ள். தான் யான் நான் நீ என்னு நான்கும் இருதிணைமுக்கூற்றொருமைப் பெயராம்; தாம் யாம் நாம் எல்லாம் எல்லீர் நீயிர் நீர் நீவிர் என்னும் எட்டும் இருதிணையிரு கூற்றுப் பன்மைப்பெயராம். எ - று.

இதனை 'அவற்றுள்—ஒன்றே இருதிணைத் தன்பா லேற்கும்.' என்னுஞ் சூத்திரத்தின் முற்கூறாது ஈண்டுக் கூறியதென்னை யெனின்:—தன்மைமுன்னிலைப் பெயர்களின் வகையுணர்ந்தன்றி ஒருமை பன்மை தோன்றாமையின் ஈண்டுக் கூறி, அவற்றின்பின் னின்றவாகலின் எல்லாம் தாம் தான் என்பனவற்றிற்கும் ஈண் டொருமை பன்மை உடன்கூறினாரென்க. (30)

288. ஒருவ னொருத்திப் பெயர்மே லெண்ணில.

எ - னின். எண்ணான் வரும் உயர்திணைப் பெயர்க்காவதோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். எண்ணான் உயர்திணையாண்பாற் பெயரும் பெண்பாற்பெயரும் வருங்காலத்து ஒன்றென்னுமெண் ணானே ஒருவன் ஒருத்தி என வருவனவன்றி இவற்றின் மேல் இரண்டு முதலியவெண்களான் இப்பெயர்கள் வருவன விலவாம். எ - று.

இருவன் இருத்தியென்றற் றொடக்கத்தனவாகி வரிற் பன்மைப்பகுதியோடு ஒருமைவிகுதி புணர்ந்து பால்வழுவாமாதலின் எண்ணிலவென்றார். (31)

289. ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.

எ - னின். இதுவுமது.

இ - ள். ஒருவரென வழங்குஞ் சொல் உயர்திணையாண்பால் பெண்பாலிரண்டற்கும் பொதுவாய் அத்திணைப்பன்மை வாய்பாட்டு வினையைக்கொண்டு முடியும் பாங்கினையுடைத்தென்று சொல்லுவர் புலவர். எ - று.

வ - று. ஆடவருளொருவரறத்தின்வழி நிற்பார், ஒருவர் நில்லார், பெண்டிருளொருவர் கொழுநன்வழி நிற்பார், ஒருவர் நில்லார். எ-ம். யாஅரொருவருலகத்தோர் சொல்லில்லார். எ-ம். வரும்.

இவ்வொருவரென்னுஞ் சொற் பொதுவியலுட் கூறும் உவப்புயர்வு முதலியவற்றான் வரும் ஒருவரென்னுஞ் சொல்லன்றித் தன்னியல்பாய் வந்ததாகலின் ஈண்டுக் கூறப்பட்டதென்றுணர்க. இச்சொல்லின்கட் பகுதிக்கேற்ப இருபாற்றாயென்றும், விகுதிக்கேற்பப் பன்மைவினைகொளுமென்றும், உயர்திணை முப்பாலுட் பன்மையைப் பின் விதத்தலின் ஆண் பெண்ணென விதவாது உயரிருபாற்றாயென்றும், உயரென முன் விதத்தலின் உயர்திணைப் பன்மையென விதவாது பன்மையென்றும், ஒருவர் வந்தார், ஒருவரவர் என வினையும் பெயருங் கொள வருவது உவப்புயர்வு முதலியவற்றான் வருவதாம்; இங்ஙனந் தன்னியல்பாய் வரும் ஒருவரென்பது வினையும் வினைக்குறிப்புமே கொள்ளுமென்பார் பெயரையொழித்து வினைகொளுமென்றும், இச்சொல் ஒருமைப் பகுதியோடு பன்மை விகுதி மயங்கிப் பால்வழுவாய் நின்றதேனுந் தன்னியல்பாய் மயங்கி நின்றமையின் வழாநிலைபோலுமென்பதூஉம் பன்மைவினையென்றது சொன்மாத்திரையிற் பன்மைவினையன்றிப் பொருண்மாத்திரையின் ஒருமைவினையாமாதலின்



இப்பயனிலையை ஒருவரென்னுஞ்சொற் கொள்ளுதல் வழுவன்றென்பதூஉந் தோன்றப் பாங்கிற்றென்றும், இங்ஙனமாதல் சான்றோர்க்கு ஒப்பமுடிந்ததென்பார் என்பவென்றுங் கூறினார். (32)

## ஆகு பெயர்.

290. பொருண் முத லாறோ டளவைசொற் றானி
கருவி காரியங் கருத்த னதியுள்
ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன வாகு பெயரே.

எ - னின். மேற் கூறிய ஒன்றற்கேற்பவும் பொதுவுமாகிய பெயர்க்கண் வருங் காரணப்பெயர்களுள் ஆகுபெயராமாறுணர்-ற்று.

இ - ள். பொருளே இடமே காலமே சினையே குணமே தொழிலேயென்னும் ஆறுடனே இவற்றின் பகுதியவாகிய எண்ணலை யளவையே சொல்லே தானியே கருவியே காரியமே கருத்தாவே என்னும் ஆறுமாதியாக வரும் பொருள்களுள் ஒருபொருளின் இயற்பெயரானே அப்பொருளினுக்கியைந்த பிறிதொரு பொருளைத் தொன்று தொட்டு வருமுறையே கூறிவருவன ஆகுபெயர்களாம். எ - று.

பொருளாதியாறனுள் வேறுபொருளின்றேனும் அவற்றுட் பயின்று வருவனவற்றைப் பிரித்து அளவை முதலாக விதந்தமையிற் பொருண் முதலாறென்பன இவையொழிந்தனவற்றையென்பதூஉம், அதற்கியை பிறிதையென்றமையான் இயையாதனவற்றிற்கு வருவன பலபொருளொரு சொல்லன்றி ஆகுபெயராகாவென்பதூஉம், தொன்முறையுரைப்பன வென்றமையான் ஆகுபெயர் மேலாகுபெயராயும் அடையடுத்தும் இருபெயரொட்டாயும் வழக்கின் கண்ணுஞ் செய்யுட்கண்ணும் பயின்று பலபொருளொருசொற்போல வருவனவன்றி இடையே தோன்றியவாறாக்கப்படுவன வல்லவென்பதூஉம் பெற்றாம்.

வ-று. "தாமரை புரையுங் காமர் சேவடி." "ஆம்ப லூறுந் தேம்பொதி கிளவி." என முதற்பொருளின் பெயர் சினைப்பொருளுக்காயின. "அகனமர்ந்து செய்யாளுறையும்." "புறங்கொடையறியா மறந்திகழ் வேலோன்." என இடப்பெயர் சித்தத்திற்கும் முதுகிற்குமாயின. காரறுத்தது கார்த்திகை பூத்தது எனக் காலப்பெயர் பைங்கூழிற்குந் தோன்றிக்குமாயின. இவற்றுட் காரென்பது நிறத்தின் பெயர் மேகத்திற்காய் மேகத்தின்பெயர் பருவத்திற்காய்ப் பருவத்தின் பெயர் பைங்கூழிற்கானமையின், மும்மடியாகுபெயர். அறுபதமுரலும் மருக்கொழுந்து நட்டான் வெற்றிலை நட்டான் புளி முளைத்தது என அடையடுத்துந் தனித்தும் வந்த சினைப்பெயர் முதலுக்காயின. இவற்றுட் புளியென்பது, சுவைப்பெயர் பழத்திற்காய்ப் பழத்தின்பெயர் மரத்திற்கானமையின் இருமடியாகுபெயர். "நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள்" "கார்நிகர் வண்கை" "புளி தின்றான்" என நிறமுஞ் சுவையுமாகிய குணப்பெயர்கள் குவளைக்கும் மேகத்திற்கும் பழத்திற்குமாயின. வற்றலோடுண்டான் என வற்றலென்னுந்தொழிற்பெயர் அதனையுடைய உணவிற்காயிற்று. ஒன்று இரண்டு அரை கால் என எண்ணலளவைப்பெயர் அஃறிணையொருமைக்கும் பன்மைக்கும் யாக்கையின்க ணுறுப்பிற்குமாயின. துலாக்கோல் துலாபாரந் தூக்கினான் தூலாவிறைத்தான் என எடுத்தலளவைப்பெயர் நிறைகோலிற்குந் தராசிற்குங் கிணற்றிறைவை மரத்திற்குமாயிற்று. இவற்றுட் டுலாக்கோலென்பது இருபெயரொட்டு முன்மொழியாகுபெயர். நாழி உழக்கு ஆழாக்கு என முகத்தலளவைப்பெயர் அளவுகருவிகட்காயின. கீழைத்தடி மேலைத்தடி எ[illegible]தடியென்னு நீட்டலளவைப்பெயர் விளைநிலத்திற்காயிற்று. அவன் மொழியுணர்ந்தான் இந்நூற்குரைசெய்தான் என மொழி உரையென்னுஞ் சொல்லின் பெயர் அதன்பொருட்காயின. விளக்கு முரிந்தது நெஞ்சு நொந்தது என விளக்குமொளியையுடைய பிழம்பும் உணர்வுமாகிய தானிகளின்பெயர் அவற்றிற்குத் தானமாகிய விளக்குத்தண்டினுக்கும் மார்பினுக்குமாயின. திருவாசகம் திருவாய்மொழி என அடையடுத்த வாசகம் மொழியென்னு முதற்கருவியின் பெயர் அவற்றின் காரியமாகிய யாப்பிற்காயின. இந்நூலலங்காரம்



இந்நூல் பாட்டியல் என இவ்விலக்கணங்களாகிய காரியத்தின் பெயர் இவற்றைத் தருதற்குக் கருவியாகிய நூல்கட்காயின. இந்நூறிரு வள்ளுவர் எனக் கருத்தாவின் பெயர் காரியத்திற்காயிற்று.

ஆதியென்றமையானே, காளை வந்தான் என்றற்றொடக்கத்து உவமையான் வருவனவும், தேவர் முதலியோர் பெயரை மக்கட்கிட்டு வழங்குவனவும், பிறவுங்கொள்க.

அறுபதமுதலியனவற்றைப் பொற்றொடி முதலியனபோல அன்மொழித்தொகைப்பெயரென்றா லென்னையெனின்:—அன்மொழித்தொகைப்பெயர் செய்யுளியற்றுவோன் ஒருவரை வியப்பு முதலியவற்றாற்றன் கூற்றாயும் பிறர்கூற்றாயுமுரைப்புழி ஆங்காங்கு வருவதன்றி இதுபோல நியதிப்பெயராய் வருவதன்றென்க. அங்ஙனமாயினும் ஆகுபெயரும் அன்மொழித்தொகையுந் தம் பொருளுணர்த்தாது பிறிது பொருளுணர்த்துதலான் ஒக்குமாதலின் அவை தம்முள் வேற்றுமை யாதோவெனின்:—ஆகுபெயர் ஒன்றன்பெயரான் அதனோடியைபுபற்றிய பிறிதொன்றனையுணர்த்தி ஒருமொழிக்கண்ணதாம்; அன்மொழித்தொகை இயைபு வேண்டாது இருமொழியுந் தொக்க தொகையாற்றலாற் பிறிது பொருளுணர்த்தி இருமொழிக்கண்ணதாம்; இவை தம்முள் வேற்றுமையென்க.

இருபெயரொட்டாகுபெயர் இருமொழிக்கண் வந்ததன்றோவெனின் அன்று: என்னை வகரக்கிளவி அதுவாகு கிளவி மக்கட்சுட்டு என்னும் இருபெயரொட்டாகுபெயருள் வகரமும் அதுவாகலும் மக்களுமாகிய அடைமொழிகள் கிளவி சுட்டென்னும் இயற்பெயர்ப்பொருளை விசேடித்து நில்லாது எழுத்துஞ் சொற்பொருளும் பொருளுமாகிய ஆகுபெயர்ப்பொருளை விசேடித்து நிற்பக் கிளவி சுட்டென்பனவே ஆகுபெயர்ப்பொருளையுணர்த்த இருபெயரும் ஒட்டி நிற்குமாகலின். இனிப் பொற்றொடியென்னும் அன்மொழித்தொகையிற் பொன்னென்பது அவ்வாறு அன்மொழித்தொகைப்பொருளை விசேடித்து நில்லாது தொடியினையே விசேடித்து நிற்ப அவ்விரண்டன் றொகையாற்றலான் அன்மொழித்தொகைப்பொருளை யுணர்த்துமாறுமறிக. இக்கருத்தே

பற்றி மக்கட்சுட்டு முதலியவற்றைப் பின்மொழியாகுபெயரென் பாரு முளரெனவறிக.

இப்பட்டுச்சீனம் இப்பொன்கழஞ்சு இந்நெனழி இம்மனை யைங்கோல் இப்புண்ணேரம்பு இந்நெலவல் இவ்வாடை கோலிகன் என வருவனவற்றுள் சீனம் கழஞ்சு நாழி கோல் அம்பு அவல் கோலிகன் என்பனவற்றை ஆகுபெயரெனவும், எழுத்துச்சொற் பொருள் யாப்பலங்காரம் என ஐந்ததிகாரங்கட்கும் வருங்காரிய வாகுபெயரைச் சொல்லாகுபெயரெனவும் அகத்தியந் தொல் காப்பிய மென்பனவற்றை ஆகுபெயர்த் திரிபெனவுங் கூறுவாரு முளர். இப்பட்டுச் சீனத்துள்ளதென்பார் இசையெச்சமாக்கி இப்பட்டுச்சீனமெனக் குறைத்துக் கூறலான் இப்பட்டென்னும் எழுவாய்க்கு உள்ளதென்பது பயனிலையன்றிச் சீனமென்பது பயனிலையன்றாதலானும் சுட்டிக்கூறாது சீனமென வாளாகூறின் அது பலபொருளொருசொற்போல் அவ்விடத்தினையும் பட்டினையு முணர்த்தாமையானும் இத்தொடக்கத்தனவாகிய இசையெச்சங் களை ஆகுபெயரென்பார்க்கு "திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர் தில்லைக்—குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ—மருவளர் மாலை." என வரும் உருவகங்களையும் ஆகுபெயரெனக் கூறல்வேண்டுமாதலானும் இவையெல்லாம் ஆகுபெயரிலக்கணத்தான் வந்தனவல்லவெனவும், சொல்லாகு பெயர்க்கு அவர் காட்டியவற்றுட் சொல்லினது பெயர் அவற்றிற் கான தின்மையின் அவை சொல்லாகுபெயராகாவெனவும், வெளிப்படைச்சொல் குறிப்புச்சொல்லென்னும் இரண்டனுள் ஆகுபெயர் குறிப்புச்சொல்லாதலானும் அகத்தியந் தொல்காப்பி யம் என்பன கருத்தாவோ காரியமோவென ஐயமுற்று ஒன்றனைக் குறிப்பானுணரவேண்டாது காரியமாகிய நூல்களை வெளிப்படை யானுணர்த்தலானும் கருத்தாவின்மேற் செல்லாமையானும் விகுதிச்சூத்திரத்துப்பிற என்பதனான் வரும் அவ்விகுதியோடு பகுதி புணர்ந்து இந்திரனாற் செய்யப்பட்ட நூலுக்கு ஐந்திரமென வந்த ஆசிரியச்சொற்போல வந்தனவன்றி ஈறு திரிந்தனவல்ல வெனவுமுணர்க. இவற்றுள், எழுத்துச் சொற்பொருள் யாப்பலங் காரமென்பன காரியவாகுபெயரெனக் கோடலன்றி அப்பெயர்



களான் அவ்விலக்கணங்களைக் கூறுதற்குத் தானமாகிய படலங் களைக் கூறினமையான் இவை தானியாகுபெயரெனக் கோடலு மாமென்க. இனித் திருவாசகந் திருவாய்மொழியென்பன உண்மையானோக்குவார்க்கு அன்மொழித்தொகையாவனவன்றி ஆகுபெயராகாமையுமுணர்க.

இனி ஆகுபெயர்கடாந் தத்தம் பொருளை நீங்காது நின்று தம் பொருளின் வேறல்லாத பொருளோடு புணர்தலும் பொருத்தமில் லாத கூற்றானின்று பிறிது பொருளையுணர்த்தலுமாகிய அவ்வி ரண்டிலக்கணத்தையுடைய விடாதவாகுபெயரும் விட்டவாகு பெயருமென இருவகையவெனவும் அவற்றிற்குதாரணம் முறையே கடுத்தின்றான் குழிப்பாடி நேரிது எனவுங் கூறுவர். அவ்வாறு ஆகுபெயர்கள் வருமாறும் உய்த்துணர்ந்துகொள்க. (33)

---

## வேற்றுமை.

291\. ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன வெட்டே வேற்றுமை.

**எ - னின்.** மேல் வேற்றுமைக்கிடனாயென்றார் அவ்வேற்றுமை இனையவெனவும் இத்துணையவெனவுமுணர்-ற்று.

**இ - ள்.** தம்மை யேற்றுக்கோடற்குரிய எவ்வகைப் பட்ட பெயர்கட்கும் இறுதியாய் அப்பெயர்ப்பொருளை வேற்றுமைப்படுத்துவனவான வேற்றுமைகள் எட்டேயாம். எ - று.

வேற்றுமை செய்வன வேற்றுமையெட்டேயெனக் கூட்டுக.

எல்லாப்பெயரும் எல்லாவேற்றுமையு மேலாதென்பார் ஏற்கு மென்றும், வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொற்களுட் பெயர் பட நின்றனவுந் தழீஇக்கோடற்கு எவ்வகையென்றும், வினைமுத லிய மூன்றும் வேற்றுமை கொள்ளாதென்பார் பெயரென்றும், ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீறாயென எய்தியதனை விலக்கி 'எழுவா யுருபு திரிபில் பெயரே' எனப் பிறிதுவிதி வகுத்தலிற்

பெயர் முழுவதூஉமுருபாம் எழுவாயுருபினை யொழித்து விளியுருபிற்குப் பெயரிறுதியாகிய அகப்பாட்டெல்லையினையும் ஏனையாறுருபிற்கும் அதனிறுதியாகிய புறப்பாட்டெல்லையினையுந் தழீஇக் கோடற்குப் பொதுமையின் ஈறுயென்றும், பொருளையேயன்றிச் சொல்லையும் ஒரோவழி வேறுபடுப்பது ஐம்முதலிய வேழுருபிற்குமேயன்றி எழுவாய்க்கு ஒவ்வாமையானும் பொருளொன்றனையும் வேறுபடுத்தல் எட்டுருபிற்குமொப்ப முடிந்தமையானும் சொல்லையுடன் கூறாது பொருளென்றும், வேற்றுமையென்னுங் காரியத்தைச் செய்யுங் கருத்தாவாகிய எட்டு வேற்றுமையுருபிற்கும் வேற்றுமையெனவும் பெயர்போந்தது காரியவாகு பெயராகிய காரணக்குறியென்பார் வேற்றுமை செய்வன வேற்றுமையென்றும், "எழியன் முறைய தெதிர்முக வேற்றுமை—வேறெனவிளம்பான் பெயரது விகாரமென்—றோதிய புலவனு முளனொருவகையா—னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்." என ஆசிரியர் அகத்தியனார் கூறுபவாகலின் விளியுருபு படர்க்கைச் சொல்லையும் பொருளையும் முன்னிலைச் சொல்லும் பொருளுமாக வேற்றுமை செய்தலின் அதனை எழுவாயுள் அடக்காது வேறுகோடலே தந்துணி பென்பார் எட்டேயென்றுங் கூறினார். வேற்றுமையென்னும் பண்புப்பெயர் பண்பிக்காகாமையிற் பண்பாகுபெயரன்றாயிற்று.

இனி இரட்டுற மொழிதலான் வேற்றுமை செய்வன வேற்றுமையெட்டேயெனக் கொண்டு கூட்டாது ஆற்றொழுக்காக நிறீஇ ஏகாரத்தை தேற்றமாக்காது பிரிநிலையாக்கி இங்ஙனம் வருவனவாகிய எட்டுருபும் வேற்றுமை அவையன்றி ஒருசாரார் கூறும் உருபடைந்த பெயரும் உருபின் பயனிலையும் வேற்றுமையல்லவெனவும் பொருளுரைத்துக்கொள்க. (34).

## வேற்றுமையின் பெயர்முறை.

**292.✓ பெயரே ஐ ஆல் கு இன் அது கண்**
**விளியென் றாகு மவற்றின் பெயர்முறை.**

**எ-னின்.** வேற்றுமைகடம் பெயரு முறையுமுணர்-ற்று.



**இ-ள்.** மேல் 'எட்டே வேற்றுமை' என்றவற்றின் பெயரென்னை கிடக்கை முறையென்னையெனிற் பெயர்முதலாக விளியீறாக இங்ஙனங் கூறிய பெயருமுறையுமாம். எ-று.

ஏகாரமெண். மேல் 'எட்டே' என்ற தொகைக்கு வகை தோன்றப் பெயர் கூறினார் அன்றி இவ்வேற்றுமைகளின் பெயர் விகற்பமெல்லாங் கூறப் புகுந்தாரல்லராதலின் அவையெல்லாம் வருஞ் சிறப்புச்சூத்திரங்களானுணர்க. இவை இம்முறை நிற்றற்குக்காரணமும் அங்ஙனங் காட்டுதும். அன்றியும், "நாரா யணன்பூவோரா யிரத்தைக்—கரத்தாற் கொய்தோ ரற்கே கொடுத்துச்—சக்கரச் சிறுமைய னீங்கி நற்சுவைப்—பாற்கடற் கண்ணே பள்ளிகொண்டான்" என்பதனானுமறிக. (35)

## எழுவாயுருபின் ஏற்றல்.

**293.✓ ஆற னுருபு மேற்குமவ் வுருபே.**

**எ-னின்.** மேற்கூறிய வேற்றுமையுருபெட்டனுள் எழுவாயுருபே ஏனையுருபுகளையு மேற்குமென்பதுணர்-ற்று.

**இ-ள்.** எழுவாய்வேற்றுமையாவது பெயர்மாத்திரையாய்த் தோன்றி நிற்கு நிலையென்பவாகலின் அவ்வெழுவாய்நின்ற உருபே ஐம்முதலிய ஆறு வேற்றுமைகளினுருபு மேற்கும். எ-று.

எனவே, விளியுருபாவது பெயரது விகாரமேயாகலின் அவ்வெழுவாயுருபின் வேறல்லவெனவும் படுமென்பதுபற்றி ஆறனுருபுமேற்குமவ்வுருபே யென்றார். இங்ஙனம் ஆறனுருபும் என அன்சாரியை தவிர்வழி வந்தமையாற் செய்யுள் விகாரம்.

இனி இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது பெயரேயன்றி ஆறும்வேற்றுமையுருபும் அவ்வுருபுகளையேற்குமெனப் பொருள்கொண்டு சாத்தனது, சாத்தனதை, சாத்தனதால், சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்தனதனது, சாத்தனதன்கண், சாத்தனதே என உதாரணங் காட்டுவாருமுளர். உரு

பேற்றல் பெயர்க்கேயுரிய இலக்கணமன்றி வினைமுதலியவற்றிற் குரிய இலக்கணமன்றுமாதலானும், 'பெயர்வழித் தம்பொருடரவரு முருபே.' என்றும் 'ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கு மீறாய்' என்றும் வரையறை கூறிப்போந்தமையானும் ஈண்டிடைச் சொல்லுரு பேற்குமெனின் மாறுகொளக் கூறலாமாதலானும், சாத்தனை சாத்தனால் என்புழிச் சாத்தனது என்பது குழையது கோட்டது என்றாற்போலத் துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று உரு பேற்றுநின்ற வினைக்குறிப்புப் பெயராமாதலானும், அன்றியும் உரு பேற்புழிப் பெயர்போலத் தனித்துநின்றுருபேற்றல் வேண்டுமாத லானும், அதனை அதனால் என உருபேற்குமெனிற் சுட்டுப்பெயர் உருபேற்றதாமன்றி உருபுருபேற்றதன்றுமாதலானும் அது பொருந்தாதென்க. (36)

## உருபு ஏலாப் பெயர்கள்.

294. நீயிர் நீவிர் நா னெழுவா யலபெறா.

எ - னின். மேல் 'ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கும்' என்றமை யின் ஏலாப்பெயரு முளவென்றாராதலின் அவற்றுள் இரண்டா வது முதலிய ஏழுருபுமேலாதன இவையெனவுணர்-ற்று.

இ - ள். இம்மூன்று பெயரும் எழுவாய் வேற்றுமை யினையன்றி ஏனையேழு வேற்றுமையினையுமேலா. எ - று.

எனவே, நீரென்னும் ஈரெழுத்தொருமொழி, அதுபோல ஈரெழுத் தொருமொழியாகிய நும்மெனவும், யானென்னும் யகர முதன்மொழி யகரத்தோடு பிறப்பொத்த எகர முதன்மொழி யாகிய என்னெனவுந் திரிந்து ஐம்முதலிய ஆறுருபுமேற்றாற்போல, நீயிர் நீவிர் நானென்னு மூன்றும் அங்ஙனம் வாராமையின் நும் என் எனத் திரிதலும் அவ்வுருபுகளையேற்றலும் இலவென்ப தாயிற்று. (37)

## முதல் வேற்றுமை.

295. அவற்றுள்,—
எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே.



எ - னின். நிறுத்தமுறையானே பெயர் வேற்றுமைய திலக் கணமுணர்-ற்று.

இ - ள். மேற்கூறிப்போந்த எட்டு வேற்றுமையுள், முதல் வேற்றுமையின் உருபாவது திரிபில்லாத பெயரே யாம்; அதன் பொருணிலையாவது வினையையும் பெயரையும் வினாவையுங்கொள வருதலாம். எ - று.

திரிபில்லாமையாவது, உருபும் விளியும் ஏலாது முடிக்குஞ் சொல்லும் நோக்காது ஆ|என்றாற்போலத் தன்னிலையினிற்றலாம்.

பயனிலையென்றது ஈண்டுமுடிக்குஞ் சொல்லன்று, பொரு ணிலையெனவுணர்க. பொருணிலையெனினும், பயனிலையெனினு மொக்கும்.

பொருள் என வாளா கூறாது பொருணிலை யென்றதென்னை யெனின்:—ஏனைவேற்றுமையின் பொருள்கட்கெல்லாம் அப் பொருண் முதற்கண் நிலைபெறுதலினென்க. கொள வருதலாவது முடிக்குஞ்சொற் கொளவருந் தன்மை.

எனவே, எழுவாய் வேற்றுமையுருபாவது தன்னிலையினிற் கும் பெயரேயென்பதூஉம், பெயரேயென்றமையான் இதற்கிதென வேறுருபின்றென்பதூஉம், அதன் பொருளாவது வினைமுதற் பொருண்மையாகத் தன்னைத்தானே வேற்றுமை செய்தலென் பதூஉம் பெற்றாம்.

தன்னைத்தானே வேற்றுமைசெய்தல் "தன்னிலைக்கட்டன்னை நிறுப்பானுந் தன்னை—நிலைகலக்கிக் கீழிடு வானு நிலையினு— மேன்மே லுயர்த்தி நிறுப்பானுந் தன்னைத்—தலையாகச் செய் வானுந் தான்." என்பதனானுமுணர்க.

வினையெனப் பொதுப்படக் கூறினமையின், வினையும் வினைக் குறிப்புமாகிய விகற்பமெல்லாங் கொள்க.

இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும் "எழுவாய் வேற் றுமை பெயர்தோன்று நிலையே." எ-ம். "பொருண்மை சுட்டல் வியங்கோள் வருதல்—வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்— பண்புகொளவருதல் பெயர்கொள வருதலென்—றன்றி யனைத்தும்

பெயர்ப்ப னிலையே." எ-ம். கூறிய முறைமையும், பொருண்மை சுட்டன் முதலியவாகக் கூறிய ஆறும் இம்மூன்றுள் அடங்கு மாறுங் காண்க.

வ - று. ஆவுண்டு என்பது ஒருபொருளின்பண்பு முதலாயின சுட்டாது, அப்பொருட்டன்மையது உண்மைத் தன்மையே சுட்டி நிற்க வருதலாம். ஆசெல்க என்பது தானேவலைக்கொள்ள வருதலாம். ஆகிடந்தது என்பது தனது தொழிலினைச் சொல்ல வருதலாம். ஆகரிது என்பது தனது பண்பினைத் தான் கொள வருதலாம். வினைக்குறிப்பாதலொப்புமையான் ஆவில்லை ஆவல்ல என்னுந் தொடக்கத்துக் குணப்பொருளவல்லா வினைக்குறிப்புக் கொள வருதலுங்கொள்க. இவையெல்லாம் வினைப்பாற்பட்டன. ஆ பல என்பதுதான் பெயரைக்கொண்டு முடிய வருதலாம், ஆயாது ஆவெவன் என்பன தான் வினாவுதற்குப் பொருந்தி வருதலாம் எனப் பகுத்துக் காண்க. அங்ஙனம் பகுத்துக் காண்புழி அவிகாரியாய் நின்றபெயர் இம்முடிக்குஞ் சொற்களை யவாவிய காலத்து அவிகாரியினின்றும் விகாரியாகத் தன்னைத் தானே வேற்றுமை செய்து நின்றமையுங் காண்க. இதனை முதல் வேற்றுமையென்றதென்னையெனிற் பெயரேயாய் நிற்றலானும் வினைமுதற் பொருண்மையைத் தருதலானுமென்க.

இனிப் பயனிலையென்றது முடிக்குஞ் சொல்லெனக் கூறு' வாருமுளர். வினைபெயர் வினாக்கொளுமென முற்றுச்சொல்லாற் கூறாது வினைபெயர் வினாக்கொளலெனத் தொழிற்பண்புச் சொல்லாற் கூறுதலானும், இரண்டாம் வேற்றுமை முதலியவற்றிற்கு உருபும் பொருளுங் கூறுதலான் இம்முதல் வேற்றுமைக்கும் உருபும் பொருளுங் கூறவேண்டுமாதலானும், இவ்வெட்டு வேற்றுமைக்கும் முடிக்குஞ் சொல் 'எல்லை யின்னு மதுவும் பெயர் கொளும்—அல்ல வினைகொளும்' என்னுஞ் சூத்திரத்தாற் பிற் கூறுதலானும், ஈண்டுங் கூறிற் கூறியது கூறலாமாதலானும், அது பொருந்தாதென்க.

இன்னும் அவருட் சிலர் வினாக்கொளலென்பதற்குச் சாத்தனோ என வினாவிடைச் சொற்களைக் கொள்ளுமென உதாரணங் காட்டுவர். அங்ஙனமாயிற் றெரிநிலை தேற்றமுதலிய பொருடரும்



இடைச்சொற்களையுங் கொள்ளுமெனக் கூறல் வேண்டுமாதலானும், இஃதிடைச்சொற் சந்தியன்றி எழுவாய்ச்சந்தியன்றாமாதலானும், அவர்க்கது கருத்தன்றென்க.

இவ்வினைமுதற்பொருள் "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா—பிற்பகற் றாமேவரும்." "பெரியவர் கேண்மை பிறை போல நாளும்—வரிசை வரிசையா நந்தும்—வரிசையா—வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே—தானே சிறியார் தொடர்பு." என்பவற்றுள் இன்னா தாமே வரும் கேண்மை தானே நந்தும் தொடர்பு தானே தேயும் எனச் செயப்படு பொருட்கண்ணும், ஆதித்தன் கற்றீப் பிறப்பித்தான் காற்றுப்பழமுதிர்த்தது என ஏதுவின்கண்ணும், சாத்தனுண்டான் எனத் தன்வசமென்பதன் கண்ணும், மாடஞ் செயப்பட்டது என வினைமுதலென்று தெரியப் படாமல் வினைமுதலாயே நிற்பதாகிய தெரியாநிலைக்கண்ணும், "ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப"என ஓர்பொருளே ஒருகால் வினை முதலாயும் ஒருகாற் செயப்படுபொருளாயுநிற்குந் தடுமாற்றத்தின் கண்ணும், "அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்—பிறவினை யெல்லாந் தரும்."என்பதனுட் கொல்லாமை அறவினை யெல்லாந்தரும் கோறல் பிறவினையெல்லாந் தரும் எனத் தொழிற் பெயர்க்கண்ணும், கண்காணும் செவிகேட்கும் எனக் கருவியின் கண்ணும், குன்று குவட்டைத் தாங்கும் தூண் போதிகையைத் தொட்டது என இடத்தின்கண்ணும், 'இரப்பவ ரென்பெறினுங் கொள்வர்' எனக் கொள்பவன்கண்ணும் வருமெனவும், தாய் மகவுக்கூட்டினாள், ஆரியன் மாணாக்கனைப் படிப்பித்தான், தலைவன் றலைவியைப் புல்லினான் என "இருவினைமுதலா லொருவினையும் முள" எனவும், அரசன் றேர்செய்தான் தச்சன் றேர்செய்தான் சாத்தனுறங்கினான் என "ஏவுதலியற்றுதலிவை யின்வேறாதல் என—வினைமுதன் மூவகையாம்" எனவுங் கொள்க. இவையெல்லாம் உரையிற் கோடலென்னுந் தந்திரவுத்தி. இவ்வாறு பிறவருவனவுமன்ன. (38)

### இரண்டாம் வேற்றுமை.

296 இரண்டா வதனுரு பையே யதன்பொருள்
ஆக்க லழித்த லடைத லீத்தல்
ஒத்த லுடைமை யாதி யாகும்.

**எ - னின்.** இரண்டாம் வேற்றுமையதிலக்கணமுணர்-ற்று.

**இ - ள்.** இரண்டாம் வேற்றுமையினதுருபு மேற்கூறிய ஐயுருபொன்றுமே; அதன் பொருள்களாவன தன்னையேற்ற பெயர்ப்பொருளை ஆக்கப்படு பொருளாகவும் அழிக்கப்படு பொருளாகவும் அடையப்படு பொருளாகவுந் துறக்கப்படு பொருளாகவும் ஒக்கப்படு பொருளாகவும் உடைமைப் பொருளாகவும் இவைபோல்வன பிறவாகவும் வேற்றுமை செய்தலாம். எ - று.

ஈண்டுத் தந்துரைத்தனவெல்லாம் மேற்போந்த 'எற்குமெவ்வகை' என்னுஞ் சூத்திரத்திற்கியைய வந்தவிசையெச்சம். மேல் வருவனவுமன்ன.

வ - று. குடத்தை வனைந்தான், உடைத்தான், அடைந்தான், துறந்தான், ஒத்தான், உடையான் எனவரும். குடத்தையொத்தான் என்புழிச் சுதந்திரமின்றி யொழுகினுனென்பது பொருள்.

ஆதியென்றமையான் இவ்வாறு செயப்படுபொருள்ளாக வேற்றுமை செய்தவெல்லாங் கொள்க.

ஒருவன் ஓர்வினை செய்ய அதனாற்றோன்றிய பொருள் யாது அது செயப்படு பொருளென்பதாம். ஒருவன் ஓர்வினை செய்யத் தொழிற்படு பொருள் யாது அது செயப்படு பொருளெனினும் அமையும். செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒருபொருட் கிளவி.

அழித்தன் முதலிய வினை செய்தவழித் தோன்றிய காரியங்கள் என்னையெனின்:—அழிபொருளாதன் முதலியனவுங் குறிப்பு வினையுள் ஒன்றனையுடையனாகிய காலத்து அஃதுடைமையாதலுமாம். பிறவுமன்ன.

இச்செயப்படுபொருள் கருத்துண்டாதல், கருத்தின்றாதல், இருமையுமாதல், ஈருருபிணைதல், கருத்தாவாதல், அகநிலையாதல், தெரிநிலை என இவை முதலியனவாகியும் வருமெனக்கொள்க. இவற்றிற்கு உதாரணம்: சோற்றையுண்டான். எ-ம். சோற்றைக் குழைத்தான். எ-ம். எறும்பை மிதித்து வழியைச் சென்றான், பசும்புல்லை மிதித்துப் பலவூரையடைந்தான், தூளொடு கூழையுண்டான், நஞ்சினைக் கலந்த பாலைக் குடித்தான், கத்தரிக்காயையும் புழுவையுங் கறித்தான், பதரையு நெல்லையும் பணத்திற்குக் கொண்டான். எ-ம். ஆரியனை ஐயுற்ற பொருளை வினவினான். எ-ம். பசுவினைப் பாலினைக் கறந்தான், யானையைக் கோட்டைக் குறைத்தான். [பசுவினது யானையது என்பனபோல ஆரியனது என வாராமைபற்றி இங்ஙனம் ஈருருபிணைதல் இருவகைப்பட்டன.] எ-ம். தன்னைப் புகழ்ந்தான், தன்னைக் குத்தினான், தன்னைப்பேணினான், தன்னைக் காதலித்தான். எ-ம். வருதலைச் செய்தான். எ-ம். மாடஞ் செயப்பட்டது. எ-ம். முறையே காண்க.



தெரிநிலையாவது வினைமுதலுருபேற்றுஞ் செயப்படுபொருளேயெனத் தெரியநிற்றல். எயிலையிழைத்தான், பொருளைப் பெற்றான், கயிற்றை யறுத்தான் என முறையே இயற்றப்படுதலும் எய்தப்படுதலும் வேறுபடுக்கப்படுதலு முதலியன அவற்றுள்ளே அடங்கும். முதலியனவென்றதனால், ஆரியன் மாணாக்கனையூர்க்குப் போக்கினான், தாய் மகளையூர்க்குப் போக்கினாள் என்புழி, மாணாக்கன் மகள் என்னும் இருவரும், போதலாலே வினைமுதலாயும், ஏவப்படுதலாற் செயப்படுபொருளாயும், ஏவுவித்துக்கொள்ளுதலால் ஏவுதற்கருத்தாவாயும், ஏவப்போதலால் இயற்றுதற்கருத்தாவாயும் வந்தன.

இவ்வேற்றுமை தன்பெயர்ப்பொருளை மேற்போந்த கருத்தனலாகிய காரியமாக்குதலின் இரண்டாம் வேற்றுமையெனப் பட்டது. (39)

## மூன்றும் வேற்றுமை.

297. மூன்றா வதனுரு பாலா னொடு
கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்.

**எ - னின்.** மூன்றும் வேற்றுமையதிலக்கணமுணர்-ற்று.

**இ - ள்.** மூன்றும் வேற்றுமையினுருபு மேற்கூறிய ஆலையன்றி ஆனும் ஒடும் ஓடுவுமாம்; அவற்றின் பொருள்க

ளாவன தம்மையேற்ற பெயர்ப்பொருளைக், கருவியாகவும் ஏதுப்பொருட்டாகிய கருத்தாவாகவும் உடனிகழ்வதாகவும் வேற்றுமை செய்தலாம். எ - று.

மூன்றும் வேற்றுமைப் பொருளாதலின் ஏதுப்பொருட்டாகிய கருத்தாவென்றும், அதன் பொருளென்பது தொகுதியொருமையாதலின் அதற்கு அவற்றின் பொருளென்றும், பொருள் கூறினும்.

கருவி காரணம் ஏது நிமித்தமென்பன வேறுபொருட்கிளவியாயும் ஒருபொருட்கிளவியாயும் வருதலின், காரணமூன்றனுண் முதற்காரணந் துணைக்காரணமென்னும் இரண்டனையுங் கருவியென்றும், ஏவுதற்கருத்தாவும் இயற்றுதற் கருத்தாவுமாகிய நிமித்த காரணமிரண்டனையுங் கருத்தாவென்றுங் கூறினார். வனைந்தானென்புழிக் குடமாகிய காரியத்திற்கு அதுவதுவாகிய மண் முதற்காரணம். குலாலனதறிவும் அந்தக்கரணமும் முதலிய ஞாபகக் கருவியுந் தண்டசக்கர முதலியகாரகக்கருவியும் அம்முதற்காரணத்துக்குத் துணையாய் நின்று காரியத்தைத் தருதலிற் றுணைக்காரணம். குலாலனிமித்தமாக அக்காரியந் தோன்றுதலின் அவனிமித்தகாரணம். ஞாபகக்கருவியென்பது அறிதற்கருவி, காரகக்கருவியென்பது செய்தற்கருவி. நடந்தான் என்புழிக் குடம் போல்வதோர் காரியமின்றேனும் நடத்தலைச் செய்தானென்பது பொருளாதலின் நடத்தல் காரியம். அவயவத்தாற் பல வேறு வகைப்பட்ட குடமுதலிய கலன்களிற் பொதுமையினிற்கும் மண்போலப் பல வேறுவகைப்பட்ட வினைகளிற் பொதுமையினிற்குந் தொழில் நடத்தற்கு முதற்காரணம். அறிவுங் காலுமுதலியன துணைக்காரணம். வினைமுதல் நிமித்தகாரணம். பிறவுமன்ன.

வ - று. அறிவாலாக்கிய காட்சி அறிவாலாகிய காட்சி என்புழி ஆலுருபு பெயர்ப்பொருளை ஞாபகமுதற்கருவியாக வேற்றுமை செய்தது. கண்ணாலாக்கிய காட்சி கண்ணாலாகிய காட்சி என்புழி ஞாபகத்துணைக்கருவியாக வேற்றுமைசெய்தது. காட்சியென்றது காட்சியுணர்வை; மண்ணாலாக்கிய குடம் மண்ணாலாகிய குடம் என்புழிக் காரகமுதற்கருவியாக வேற்றுமை செய்தது.



திரிகையாலாக்கிய குடம் திரிகையாலாகிய குடம் என்புழிக் காரகத்துணைக்கருவியாக வேற்றுமைசெய்தது. இங்ஙனம் ஆக்குதற்கு வினைமுதல் அறிவனுங் குலாலனுமாம். ஆதற்கு வினைமுதல் காட்சியுணர்வுங் குடமுமாம். இக்காட்சியுணர்வுங் குடமும் வினைமுதலாகிய காலத்து இக்கருவிகள் ஏதுப்பொருளவாய் நின்றன. அரசனாலாகிய தேவகுலம் தச்சனாலாகிய தேவகுலம் என்புழி முறையே ஏதுப்பொருளவாகிய ஏவுதற் கருத்தாவாகவும் இயற்றுதற் கருத்தாவாகவும் வேற்றுமை செய்தது. ஆக்கிய தேவகுலமென வரின் மூன்றாமுருபேலாவாய் அரசனுந் தச்சனும் எழுவாயாம். இஃது எழுவாய்க்கண்வருங் கருத்தாவிற்கும் இவ்வேற்றுமைக்கண் வருங் கருத்தாவிற்குந் தம்முள் வேற்றுமையென்க. "தாங்கு கையா லோங்குநடைய" "உறழ்மணியா லுயர்மருப்பின" "பண்டறியேன் கூற்றென்பதனை யினியறிந்தேன்-பெண்டகையாற் பேரமர்க் கட்டு" என்புழி உடனிகழ்வதாக வேற்றுமை செய்தது. ஆனுருபையும் இவ்வாறேயொட்டிக்காண்க. "நாவீற் றிருந்த கலைமா மகளோடு நன்பொற்—பூவிற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்" எ-ம். "மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு—தானஞ்செய் வாரிற் றலை." எ-ம். முறையே ஓடும் ஒடுவும் உடனிகழ்வதாக்கின. எற்புழிக்கோடலான் இவ்விரண்டுருபிற்கும் உடனிகழ்ச்சிப் பொருளொன்றுமே கொள்க.

இங்ஙனம் வருங் கருத்தா ஏதுப்பொருட்டாய் வருதலின் விதந்துகூறாது கருவியின்பாற் படுத்தினும் அமையுமென்பது தோன்ற, இவ்வுருபிற்குச் சிறந்த கருவிப்பொருளை முற்கூறினார்

இக்கருவிப்பொருள் அகக்கருவி புறக்கருவி ஒற்றுமைக்கருவியென மூன்றாயும் வருமெனக் கொள்க. அவையாவன மனத்தானினைத்தான் வாளால்வெட்டினான் அறிவாலறிந்தான் என முறையே காண்க.

இரண்டாம்வேற்றுமைப் பொருளாகிய காரியத்திற்கு வேண்டுங் கருவிப்பொருளைத் தருதலின் இது மூன்றாம்வேற்றுமையெனப்பட்டது. "ஆலு மானு மோடு மொடுவுஞ்—சாலு மூன்றாம் வேற்றுமைக் கதுவே—செய்வோன் காரணஞ் செயத்தகு கருவி—யெய்திய தொழின்முத லியைபுட னதன் பொருள்." என்றார்

ஆசிரியரகத்தியனுருமென்க. முதற்காரணத்தைக் காரணமென்றும் ஏவற்கருத்தாவைத் தொழின்முதலென்றும் விதந்து கூறினாராதலின் இங்ஙனம் பொருள் ஐந்தாயின. (40)

## நான்காம் வேற்றுமை.

298. நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது வாதல் [ருளே.
பொருட்டுமுறை யாதியி னிதற்கிதெனல் பொ

எ - னின். நான்காம் வேற்றுமையதிலக்கணமுணர்-ற்று.

இ - ள். நான்காம்வேற்றுமைக்குருபு மேற்கூறிய குவ்வொன்றுமேயாம்; அதன்பொருளாவது கொடையும், பகையும், நேர்ச்சியும், தகவும், அதுவாதலும், பொருட்டும், முறையும் முதலான பொருடோன்றப் புணரும் புணர்ச்சிக்கண் இதற்கிதென அங்ஙனம் வருதற்குரிய எப்பொருளினையும் ஏற்றுக்கொள்ளும் பொருளாகத் தன்னையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம். எ - று.

இதற்கிதென்றமையான் ஏற்றுக்கொள்ளும் பொருளென்பது பெற்றாம்.

வ-று. "இரப்பார்க்கொன் றீவார்மே னிற்கும் புகழ்" என்பது கொடை. பிணிக்கு மருந்து என்பது பகை. விளக்கிற்கெண்ணெய் என்பது நேர்ச்சி. நட்பென்பதுமிது. அருங்கலமூலகின் மிக்கவரசர்க்கேயுரிய என்பது தகுதி. ஆடைக்கு நூல் என்பது அதுவாதல். கூழிற்குக் குற்றேவல் செய்யும் என்பது பொருட்டு. சாத்தற்கு மகன் என்பது முறை.

ஆதியென்றமையானே கைக்கியாப்புடையது கடகம் என்னும் யாப்புடைமை முதலியவாய் இதற்கிதென்பது பட வருவனவெல்லாங் கொள்க. இவற்றுள் ஏற்றுக்கொள்ளும் பொருளாக வேற்றுமை செய்தல் காண்க. இவ்வேற்றுக்கோடற்பொருள் கேளாதேற்றல், கேட்டேயேற்றல், ஏலாதேற்றல், ஈவோனேற்றல், உயர்ந்தோனேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போனேற்றல், உணர்வின்றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல் என இவை முதலாகப் பலவுமாமெனக் கொள்க.



வ - று. ஆவிற்கு நீர் விட்டான். எ-ம். வறியார்க்கீந்தான். எ-ம். மாணாக்கனுக்கறிவைக் கொடுத்தான். எ-ம். தனக்குச் சோறிட்டான் தனக் கரிசிகொடுத்தான். "அருமறை சோருமறிவிலான் செய்யும்—பெருமிறை தானே தனக்கு." எ-ம். அரசனுக்குக் கண்ணலர் கொடுத்தானரி. எ-ம். அரிக்குச் சக்கரங் கொடுத்தானரன் எ-ம். சோழற்கு விருந்து கொடுத்தான் சேரன். எ-ம். சோற்றிற்குநெய் விட்டான் நீர்க்கு வாசமூட்டினான் வாளிற்குறை வழங்கினான் தண்டிற்குத் தங்கங் கட்டினான் சுவர்க்குச் சித்திரமெழுதினான். எ-ம். மாணாக்கனுக்குக்கசையடி கொடுத்தானாரியன். எ-ம். கள்ளனுக்குக் கசையடி கொடுத்தானரசன் எ-ம். முறையே காண்க.

முதலென்றதனால், மருகனுக்கு மகட்கொடுத்தான் என்பது வழக்கு. மகனுக்கரசு கொடுத்தான் என்பது உரிமை. அரசர்க்குத் திறை கொடுத்தான் என்பது அச்சம். தந்தைதாய்க்குத் திதி கொடுத்தான் என்பது பாவனை எனவும் வரும்.

ஒருவன் ஓர்காரியத்தை ஒருகருவியாற் செய்தல் அக்காரியந் தனக்கேனும்பிறர்க்கேனும் உதவுதற்பொருட்டன்றி வீண்காரியஞ் செய்யானாதலின், இஃதிம்முறையானே நான்காம் வேற்றுமையெனப்பட்டது. (41)

## ஐந்தாம் வேற்றுமை.

299. ஐந்தா வதனுரு பில்லு மின்னும்
நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே.

எ - னின். ஐந்தாம் வேற்றுமையதிலக்கணமுணர்-ற்று.

இ - ள். ஐந்தாம் வேற்றுமையினுருபாவன இல்லும் மேற்கூறிய இன்னுமாம்; அவற்றின் பொருளாவன நீங்கற்பொருளாகவும் உவமைப்பொருளாகவும் எல்லைப்பொருளாகவும் ஏதுப்பொருளாகவும் தம்மையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம். எ - று.

ஏதுப்பொருள் மூன்றும் வேற்றுமைக்கன்றி இதற்கு அ[illegible] துணைச்சிறப்பின்மையிற் பிற்கூறப்பட்டது.

வ-று. தமரிற்றீர்ந்தானிவன் வரையின் வீழருவி "தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்—நிலையி னிழிந்தக் கடை." எ-ம். அரசரிற் பெரியரந்தணர் ஆவினிழிந்தது மேதி எ-ம். வருவழி இன்னுருபு நீங்குதற்பொருளவாக வேற்றுமை செய்தது. பாலின் வெளிது கொக்கு காக்கையிற்கரிது களம்பழம் நாயிற் கடைப் பட்ட நம்மை என்பனவும் ஒப்புமை கருதாது உயர்வுந் தாழ்வுங் கருதியவழி நீங்குதற்பொருளவாம்.

இந்நீக்கப்பொருள் நிலைத்திணை இயங்குதிணை பண்பாதியின் வருமெனவுங் கொள்க. அவையாவன மலையினிழிந்தான். எ-ம். யானையினிழிந்தான். எ-ம். சிறுமையினீங்கிய. எ-ம். வரும். ஆதி யென்றமையால், "குடிப்பிறந்து குற்றத்தினீங்கி" "ஐயத்தினீங்கி" என வருமெனவுங் கொள்க. இவ்விலக்கணத்தான் முன்னர்க் காட்டிய உதாரணங்களையும் உய்த்துணர்ந்து கொள்க. "திறல்வே லுதியிற் பூத்த கேணி" "பொன்னிற் பிதிர்ந்த பொறிசுணங் கிள முலை" என்புழி உவமைப்பொருளாக வேற்றுமை செய்தது. கரு வூரின் கிழக்கு மருவூரின் மேற்குச் சோணாடு என்புழி எல்லைப் பொருளாக வேற்றுமை செய்தது. கோட்டிற்செய்த கொடிஞ்சி நெடுந்தேர் அறிவிற் பெரியன் என்புழி ஏதுப்பொருளாக வேற் றுமை செய்தது. இல்லுருபினையும் இவ்வாறேயொட்டிக்காண்க.

இங்ஙனங் கூறவே எல்லாப்பொருளையும் இதனினிற்றிதென விகற்பித்துணர்தற்கு வருவன இவ்வுருபென்பதாயிற்று. ஆகவே நான்காம்வேற்றுமைப்பொருளாகிய கொள்வோனையுங் கொடைப் பொருளினையும் இவ்வாறு விகற்பித்துணர்ந்தல்லது கொடுத்தல் கூடாமையின் இஃதைந்தாம் வேற்றுமையெனப்பட்டது. (42)

### ஆறும் வேற்றுமை.

300. ஆற னொருமைக் கதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னக்க மாந்தற் கிழமையுஞ்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.



எ-னின். ஆறும் வேற்றுமையதிலக்கணமுணர்-ற்று.

இ-ள். ஆறும்வேற்றுமையினது ஒருமைப்பொருண் மைக்கு மேற்கூறிய அதுவென்பதேயன்றி ஆது வென்பதும் பன்மைப் பொருண்மைக்கு அகரமும் உருபாம்; அவற்றின் பொருளாவன குணமுந் தொழிலுமாகிய பண்புஞ் சினையும் ஒருபொருட்கூட்டமும் பலபொருட் கூட்டமும் ஒன்றுதிரிந் தொன்றானதுமாகிய ஐந்து தற்கிழமைப் பொருளினையும் பிறிதின்கிழமைப்பொருளினையுமுடையதாகத் தம்மையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம். எ-று.

கிழமையென்பது ஆகுபெயர்.

வ-று. நிலத்ததகலம் சாத்தனதியல்பு சாத்தனது நன்மை சாத்தனதிருக்கை சாத்தனது நிலை சாத்தனது வரவு கபிலரது பாட்டு. எ-ம். சாத்தனது கை சாத்தனது கால். எ-ம். மாந்தரது தொகுதி நெல்லது குப்பை. எ-ம். படையது தொகை விலங்கினதீட்டம். எ-ம். நெல்லினது பொரி கோட்டது நூறு. எ-ம். ஐவகைத் தற்கிழமையும் முறையே வந்தன. ஒன்றன் கூட்டத் தற்கிழமை மாறிக் குப்பையது நெல் என வரின் உறுப்புத் தற்கிழமை. பலவினீட்டம் மாறி நிற்பினுமது. சாத்தனதாடை சாத்தனது பிள்ளையெனப் பிறிதின் கிழமை வந்தன. பாட்டென் பது வரிவடிவை நோக்கிய காலத்துப் பிறிதின்கிழமையாம். எனதுகை தனதுதாள் எனதுநிலம் தனதெயில் என ஆதுரு போடும் என கைகள் தனதாள்கள் என யானைகள் தனதானைகள் என அகர வுருபோடுமொட்டுக.

சாத்தனதாடை என்புழிச் சாத்தனது கையென்றாற் போலாது ஆடைக்குச் சாத்தன் பிறிதாதலின் அப்பிறிதினது கிழமை பிறிதின்கிழமை யெனப்பட்டது.

அஃறிணையொருமை பன்மைகட்கு இயைந்த உருபு இங்ஙனங் கூறவே, உயர்திணையொருமை பன்மையாகிய கிழமைப்பொருட்கு இவ்வுருபுகளேலாவென்பது பெற்றும். அவை வருங்கால்

அவனுடைய விறலி அவனுடைய விறலியர்என மூன்றுசொல்லாய் இரண்டு சந்தியாய் முன்னது எழுவாய்ச்சந்தியும் பின்னது பெயரெச்சக்குறிப்புச் சந்தியுமாமென்க. அவன் விறலி என்புழி உடையவென்பது இசையெச்சம். சாத்தனுடையவியல்பு சாத்தனுடைய கை என்றற்றொடக்கத்தனவுமன்ன. இவற்றை ஆறும் வேற்றுமைச் சந்தியென்றும் உடையவென்பதனைச் சொல்லுருபென்றும் கூறுவாருமுளர். ஆசிரியர் தொல்காப்பியனாரும் உயர்திணையொருமை பன்மைக்கு இவ்வுருபுகளேலாவென்பது கருதி "அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயி—னதுவெ னுருபுகெடக் குகரம் வருமே." என்றார்.

இவ்வாறும், வேற்றுமைப்பொருளாகிய குறைப்பொருள் ஒற்றுமை வேற்றுமையெனவுரைக்கப்படும் எனவும், அவற்றுள் ஒற்றுமையாவதோர் பொருளேயாகும் எனவும், வேற்றுமையாவது ஒன்றாய்த் தோன்றல் உரிமையாய்த் தோன்றல் வேறாய்த் தோன்றல்என மூவகைப்படும்எனவும், அம்மூவகையுள் ஒன்றாய்த்தோன்றல் ஒன்றன் கூட்டம் பலவினீட்டம் திரிபினாக்கம் சினை, குணம் தொழில் என அறுவகைப்படும் எனவும், உரிமையாய்த்தோன்றல் பொருள் இடம் காலம் இருவகைநூல் என ஐவகைப்படும் எனவும், வேறாய்த் தோன்றல் வேறிடத்துஞ் செலு நிலைமையிலுடைமைகள் பலவுமாகும் எனவுங் கொள்ளப்படும்.

உ-ம். என்னுயிர் இராகுத்தலை என்றாற்போல்வன ஒற்றுமை. வேற்றுமை வகையுள் ஒன்றாய்த் தோன்றுறலுக்குதாரணம் முன்னர் ஐவகைத் தற்கிழமைக்குக் காட்டியனவேயாம். உரிமையாய்த் தோன்றலுக்குதாரணம்: முருகனது வேல் முருகனது குறிஞ்சி வெள்ளியதாட்சி சம்பந்தனது தமிழ் சம்பந்தனது பிள்ளைத்தமிழ் என முறையே காண்க. வேறாய்த் தோன்றலுக்குதாரணம்: சாத்தனது பசு சாத்தனது சோறு சாத்தனது பொன் என வரும். இவை முன்னொருவர்க் குரிமையாயும் பின் வேறொருவர்க்குரிமையாயும் வருதலின் நிலைமையிலுடைமையாயின. இம்மூவகை வேற்றுமையை வடநூலார் நூற்றொரு பேதமாக்குவர்.



மேற்போந்த கொள்வோனையுங் கொடைப்பொருளினையும் இதனினிற்றிதுவென விகற்பித்துணர்ந்துகொடுத்தல் இவ்விரு கிழமைப்பொருளுடையோர் செயலென்பது தோன்ற இஃதாறும் வேற்றுமையெனப்பட்டது. "ஆற னுருபே யதுவா தவ்வும்—வேறொன் றுடையதைத் தனக்குரி யதையென—விருபாற் கிழமையின் மருவுற வருமே." என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. ()

## ஏழாம் வேற்றுமை.

301. ஏழ னுருபுகண் ணாதி யாகும்
பொருண்முத லாறு மோரிரு கிழமையின்
இடனாய் நிற்ற லிதன்பொரு ளென்ப.

எ-னின். ஏழாம் வேற்றுமையதிலக்கணமுணர்-ற்று.

இ-ள். ஏழாம் வேற்றுமையினுருபு மேற்கூறிய கண்ணேயன்றி அஃதாதியாய பிறவுமாம்; இவற்றின் பொருளாவன தம்மையேற்ற பெயர்ப்பொருளாகிய பொருளாதியாறும் மேற்போந்த இருகிழமைப் பொருட்கும் இடமாகி நிற்க அவற்றினை வேற்றுமை செய்தலாமென்று சொல்லுவர் புலவர். எ-று.

இடப்பொருளேயன்றி ஏனையைந்து பொருளும் ஈண்டிடனாய் நிற்றலிற் பொருண்முதலாறுமென்றும், வினை வரினும் அவ்வினை முதல் இவ்விருகிழமையின் பாற்படுமாதலிற் கிழமையினிடனென்றுங் கூறினார்.

ஈண்டு இதுவென்றதூஉந் தொகுதியொருமை.

வ-று. மணியின்கணொளி மணியின்கணிருந்தவொளி. எ-ம். பனையின்கணன்றில் பனையின்கணிருந்தஅன்றில். எ-ம். இருகிழமைக்கும் பொருளிடமாயிற்று. ஊரின்கணில்லம் ஊரின்கணிருந்ததில்லம். எ-ம். ஆகாயத்தின்கட்பருந்து, ஆகாயத்தின்கட் பறந்தது பருந்து. எ-ம். இடமிடமாயிற்று. நாளின்கணாழிகை நாளின்கண் வந்தது நாழிகை. எ-ம். வேனிற்கட்பாதிரி, வேனிற்

கட் பூத்தது பாதிரி. எ-ம். காலமிடமாயிற்று. கையின்கண் விரல்கையின்கணிருந்ததுவிரல். எ-ம். கையின்கட் கடகம் கையின்கட்கிடந்தது கடகம். எ-ம். சினையிடமாயிற்று. கறுப்பின் கணழகு கறுப்பின்கணிருந்ததழகு. எ-ம். இளமையின்கட்செல்வம் இளமையின்கணிருந்தது செல்வம். எ-ம். குணமிடமாயிற்று. ஆடற்கட்சதி ஆடற்கணிகழ்ந்தது சதி. எ-ம். ஆடற்கட்பாட்டு ஆடற்கட் பாடப்பட்டது பாட்டு. எ-ம். தொழிலிடமாயிற்று. ஆதியென்றமையான் வருமுருபுகள் வருஞ் சூத்திரத்தாற் கூறுப வாகலின், அவையங்ஙனங் காட்டுதும்.

இது பெயர்ப்பொருளை மேற்போந்த இருகிழமைப்பொருள் கட்கும் இடமாக வேற்றுமை செய்தலின் ஏழாம் வேற்றுமை யெனப்பட்டது.

இவ்விடவேற்றுமைப்பொருள் உரிமை இருவகையோரிடம் எங்கும் என நான்கென்றே சிலர் இயம்புவர். அவற்றிற்கு உதா ரணம்: நிலத்தின்கட்டேரோடுகின்றது கடற்கணாவாயோடுகின் றது ஆகாயத்தின்கட் பருந்துபறந்தது காட்டின்கட் புலி வாழ்ந் தது. எ-ம். மதிக்கண் மறு கையின்கண் விரல் குன்றின்கட் குவடு நெற்றியின்கண் விழி ஆண்டின்கணிருது நாளின்கண் வைகறை. எ-ம். ஊர்க்கணிருந்தான் தேர்க்கணிருந்தான். எ-ம். மணியின்கணொளி உயிரின்கணுணர்வுபாலின்கட்சுவை நெய் தீயின் கட்சூடு நீரின்கட்சீதம். எ-ம். முறையே காண்க. இவையெல்லாம் முற்கூறியவற்றுள் அடங்கும்.

இனி இடமல்லாவிடம் மூவகைப்படும், கூட்டிப்பிரித்தல், பிரித்துக்கூட்டல், இருவரின் முடியும் ஒருவினைத்தொழிற்பெயர் என. அவையாவன 'உடையானரசருளேறு' 'அவற்றுள், அ இ உ எ ஒக்குறில்' எ-ம். 'வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்' 'மற்றையான் செத்தாருள் வைக்கப் படும்' எ-ம். 'புல்லிவிடா அப் புலவியுட்டோன்றும்' தட்டுப்புடைக்கண் வந்தான் புல்லுதற்கண் வேர்வை வந்தது பொருதற்கண் மழைபெய்தது சூதாடற்கட்டுேக் கம் வந்தது. எ-ம். முறையே காண்க.





302. கண்கால் கடையிடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலமிட மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதே முறைவழி யுழியுளி
உள்ளகம் புறமில் லிடப்பொரு ளுருபே.

எ - னின். மேற் 'கண்ணாதி' என்றார் அவை இவையென்ப துணர்-ற்று.

இ - ள். இங்ஙனங் கண் முதலாக இல்லீறாக எண்ணப் பட்ட இருபத்தெட்டும் இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம். எ - று.

தொடர்பு தோன்றக் கண்ணுருபை ஈண்டும் அநுவதித்தார்.

வ - று. ஊர்க்காணிவந்த பொதும்பருள், வேலின்கடை மணி போற் றிண்ணியான், நல்லாரிடைப் புக்கு, வலைத்தலை மானன்ன நோக்கியர், குரைகடல்வாயமுதென்கோ, தேர்த்திசையிருந்தான், அவர்வயிற் செல்லாய், கற்றார்முற்றோன்றா கழிவிரக்கம், காட்டுச் சாரோடுங் குறுமுயால், காழ்வரை நில்லாக் களிறன்றான் கைவலத் தியாழ் வரை நின்றது, இல்விடப்பரத்தை, தன்மேற் கடுவரை நீரிற் கடுத்துவரக்கண்டும், பிண்டிக்கண்ணார் நிழற்கீ ழெழுந்தமடி கள், கடைப்புடை கொள்ளிய நீர், சுரன்முதல் வந்தவுரன்மாய் மாலை, காதலிபின் சென்றதம்ம, நம்பாடணையாதநாள், கல்லளைச் சுனைநீர் கையிலுண்மையான், தோழிக்குரியவை கோடாய்தேத்து, அவனுழை வந்தான், நின்றதோர் நறவேங்கை நிழல்வழியசைந் தன்ன, உறையுழியோலைபோல, குயில்சேர் குளிர்காவுளிசேர் புறையும், முல்லையங்குவட்டுள் வாழும், பயன்சாராப் பண்பில் சொற் பல்லாரகத்து, செல்லுமென்னுயிர்ப்புறத்திறுத்த மருண் மாலை, ஊரிலிருந்தார் என இவை, பலதிறத்தனபோலுமேனும் அவையாகாது ஒரு திறத்தனவாய்க் கண்ணுருபின் பரியாயவுரு பாய் வருதல் காண்க.

இனிக் கண் கான் முதலியன இடவிகற்பங்களையுணர்த்தின் ஒருதிறத்தவாகிய உருபாகாது பலதிறத்தவாகிய இடங்களை யுணர்த்தும் பெயராகி, கண்ணகன் ஞாலம் கடைநாள் இடைச்சுரம்

தலையாயர் தென்றிசை என்றற்றொடக்கத்தனவாய் வருதல் காண்க. மணியின்கணொளி என்புழிக் கண்ணென்பது பெயராயின் மணியினிடத்தொளியென்பது பொருளாய் மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாமென்க. ஏனையவுமன்ன.

இனிப் பெயர்முதலாகக் கூறிய எழுருபுகளுந் தமக்குரிய பொருளல்லனவற்றையும் உணர்த்துமெனக் கொள்வர். அவை யாவன மாடஞ்செயப்பட்டது என்புழி வினைமுதலன்றிச் செயப் படுபொருளுமுணர்த்திற்று. வீட்டை விரும்பினான் என்புழிச் செயப்படுபொருளையன்றி வேறுபொருளை விளக்கிற்று. மலையொடு பொருத மால்யானை தொடியொடு தொல்கவின் வாடிய தோள் பாலொடு தேன்கலந்தற்றே மதியோடொக்கு முகம் விலங்கொடு மக்களனையர் எழுத்தொடு புணர்ந்த சொல் என்புழிக் கருவி கருத்தா உடனிகழ்வதன்றி, வினையின்மை வேறுவினை மயக்கம் ஒப்பு ஒப்பலொப்பு ஒற்றுமை எனப் பல பொருளுமுணர்த்தின. சோற்றிற்கரிசி கூழிற்குக் குற்றேவல் பூவிற்குப் போனான் உணற்கு வந்தான் பிணிக்கு மருந்து உணற்குக் கருவி கை என் புழிக் கொள்வோனை விட்டு ஆதிகாரணகாரியம் நிமித்தகாரண காரியம் இருவகைப் பெயர்ப்பின் வினையெச்சம் இருவகைப்பெயர்ப் பின் பெயரெச்சம் எனப் பலபொருளுமுணர்த்தின. பித்தரிற் பேதையாரில் வேங்கடத்தின் தெற்கு குமரியின் வடக்கு வாணி கத்தினாயினான் காக்கையிற் கரிது களம்பழம் என்புழி ஒப்பு எல்லை ஏது ஒப்பின்மை எனப் பலபொருளுமுணர்த்தின. வாளது வெட்டு என்புழிக் குறையேயன்றி வேறுபொருளு முணர்த்திற்று. அறிவின்கட்டிரிபு என்புழி இடமேயன்றி வேறுபொருளுமுணர்த் திற்று எனக் கூறுவர். அவையெல்லாம் இவ்வாசிரியர் கூறியவற் றுட் சில வருமாறும் ஏனையவற்றை இலக்கியங்களுள்ளுங் காண்க.

**303.** எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்
றிரிபு குன்றன் மிகுத லியல்பயற்
றிரிபு மாம் பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே.

**எ - னின்** எட்டாம் வேற்றுமையதிலக்கணமுணர்-ற்று.



**இ - ள்.** எட்டாம் வேற்றுமையாகிய விளிக்கு வேறுருபின்று. அவ்விளியடைந்த பெயரீற்றின்றிரிபும், கேடும், மிகுதலும், இயல்பும், ஈற்றயனின்றதன்றிரிபுமே உருபாம்; இவற்றின் பொருளாவன இவற்றினையேற்ற படர்க் கைப் பெயர்ப்பொருளை ஒருவன் தனக்கெதிர்முகமாக அழைக்கப்படுவதாக வேற்றுமை செய்தலாம். எ - று.

எய்துபெயரீற்றி னென்றமையான் வேறுருபின்றென்பது இசையெச்சமாய் நின்றது.

இயல்பென்றமையான் இவ்வியல்பாய விளியுருபிற்கும் எழு வாயுருபிற்குஞ் சொல்லான் வேற்றுமையின்றேனும் பொருளான் வேற்றுமையுண்டென்பதூஉம், படர்க்கையோரையெனவே 'ஒரு மொழியொழிதன் னினங்கொளற் குரித்து' ஆகலிற் படர்க்கை யைம்பாலும் விளியேற்குமென்பதூஉம், ஏனைத் தன்மை முன் னிலைகள் ஏலாவென்பதூஉம் பெற்றாம்.

தானென்பது அசைநிலை.

ஈறு திரிதன் முதலிய ஐவகையுருபும் பொருளும் பின் வருஞ் சிறப்புச் சூத்திரங்களானுணர்க.

இஃது எழுவாயினின்றும் ஒருவாற்றான் வேறுபட்டமையின் இறுதிக்கட்டந்து எட்டாம் வேற்றுமையெனப்பட்டது. (46)

**304.** இ உ ஊ வோ டையோ ன ள ர ல
யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு
ணஃகா னாவீ றாகும் பொதுப்பெயர்
ஞ நவொழி யனைத்தீற் றஃறிணை விளிப்பன.

**எ - னின்.** பெயருள் விளிக்கப்படுவன இவையென்பது ணர்-ற்று.

**இ - ள்.** இ உ ஊ ஐ ஓ ன ள ர ல ய என்னும் பத்தீற் றுயர் திணைப்பெயரும், இவற்றுள் ஓகாரமும் ரகாரமுமான இரண்டு மொழித்து நின்ற எட்டுடனே ணகாரமும் ஆகாரமு

மான இரண்டுங் கூடிய பத்தீற்றுப் பொதுப்பெயரும், 'நாலாறுமீறே' என்றவற்றுள் ஞகரமும் நகரமும் இன்னோ ரன்னவிடங்களின் ஈறாகாதென மேலையதிகாரத்து விலக்கிய எகரமுமொழிந்த இருபத்தோ ரீற்றஃறிணைப்பெயரும் விளிக்கப்படுவனவாம். எ - று.

இ உ ஊவோடென்புழிக் குற்றுகர முற்றுகரமென உகரத்தை விதவாமையின் இரண்டுங் கொள்க.

பெயரென்பதனை இருதிணைக்கண்ணுங் கூட்டுக.

விளிப்பனவென்பது வினைமுதல்வினையைச் செயப்படுபொருண்மேலேற்றப்பட்டது.

இவ்வீற்றுப்பெயர்கள் விளிக்கப்படுமெனவே, ஏனையீற்றுப் பெயர்கள் விளிக்கப்படாவென்பது பெற்றாம். (47)

305. இம்மூப் பெயர்க்க ணியல்பு மேயும்
இகர நீட்சியு முருபா மன்னே.

எ - னின். மூவகைப்பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு தொகுத்துணர்-ற்று.

இ - ள். மேல் விளிக்கப்படுமென்ற மூவகைப் பெயர்க்கண்ணும் இயல்பாதலும் ஏகாரமிகுதலும் இகரவீறீகார வீறாய்த் திரிதலும் விளியுருபாம் பெரும்பாலும். எ - று.

வ - று. முனி கூறாய், வேந்து கூறாய், ஆடூஉக் கூறாய், விடலை கூறாய், கோக்கூறாய், கோன்கூறாய், வேள்கூறாய், மாந்தர் கூறீர், தோன்றல் கூறாய், சேய் கூறாய்; முனியே, வேந்தே, நம்பீ என உயர்திணைக்கண் மூன்றுருபும் வந்தன. பிதாக்கூறாய், ஆண் கூறாய், பிதாவே, ஆணே, சாத்தீ எனப் பொதுப்பெயர்க்கண் மூன்றுருபும் வந்தன. விளக்கொடியை, புறாக்கொடியை, புல்வாய் கொடியை, விளவே, புறாவே, புல்வாயே, மந்தீ என அஃறிணைக் கண் மூன்றுருபும் வந்தன. பிறவுமன்ன.



மன்னேயென்றமையான் இவ்வுருபுகள் சிலவற்றிற்கு ஏலாமையும் இப்பொதுவிதியினும் மேல்வருஞ் சிறப்பு விதியினும் அடங்காது வருமுருபுகள் சிலவுளவேல் அவையுங் கொள்க. (48)

306. ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவும்
உருபா மல்லவற் றாயு மாகும்.

எ - னின். ஐகாரவீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்-ற்று.

இ - ள். ஐகாரவீற்றுப் பொதுப்பெயர்க்கு இயல்பும் ஏகாரமிகுதலுமன்றி ஐகாரம் ஆயும் ஆவுமாய்த் திரிதலும் உயர்திணையஃறிணைப் பெயர்க்கு அவ்வுருபுகளன்றி ஐகாரம் ஆயெனத் திரிதலும் உருபாம். எ - று.

வ - று. அன்னாய் தந்தாய். எ-ம். 'ஆவன்னாவலந்தே னெழுந்திராய்.' எ-ம். விரவுப்பெயர்க்கண் இரண்டுருபும் வந்தன. விடலாய் மடந்தாய். எ-ம். சிறுமீன்கவுட்கொண்ட செந்தூவிநாராய்' "கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய்" எ-ம். இருதிணைப் பெயர்க்கண்ணும் ஆயுருபு வந்தது. (49)

307. ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவய னீட்சி யதனோ
டீறு போத லவற்றோ டோவுறல்
ஈறழிந் தோவுற லிறுதியவ் வாதல்
அதனோ டயறிரிந் தேயுற லீறழிந்
தயலே யாதலும் விளியுரு பாகும்.

எ - னின். னகரவீற்றுயர்திணைப் பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். பொதுவிதியன்றி னகரவீற்றுயர் திணைப் பெயர்களுட் சில அளபெழுதலும், சில ஈறு கெடுதலும், சில ஈற்றயனீடலும், சில ஈற்றயனீண்டு ஈறு கெடுதலும், சில ஈற்றயனீண்டு ஈறுகெட்டு ஓகாரமிகுதலும்; சில ஈறு

கெட்டு ஓகாரமிகுதலும், சில இறுதி னகரவொற்று யகரவொற்றாய்த் திரிதலும், சில இறுதி னகரவொற்று யகரவொற்றாய்த்திரிந்து அயலி லாகாரம் ஓகாரமாய் ஏகாரமிகுதலும், சில ஈறுகெட்டு அயலிலகரம் ஏகாரமாதலும் விளியுருபாம். எ - று.

ஒருசாரென்பதனை விளியதிகாரமனைத்தினுங் கூட்டுக.

வ - று. அம்பர்கிழாஅன் வல்லங்கிழாஅன் என அளபாயின. எலுவ சிறாஅ ரெம்முறு நண்ப புலவ தோழ என ஈறழிந்தன. நம்பான் பெருமான் என ஈற்றயனீண்டன. இறைவா, மன்னா என அயனீண்டு ஈறு கெட்டன. ஐயாவோ, அப்பாவோ என ஈறுகெட்டு அயனீண்டு ஓகாரமிக்கன. திரையவோ, ஐயவோ என ஈறழிந்து ஓகாரமிக்கன. வாயிலாய், ஆதிரையாய் என இறுதி யவ்வாயின. வாயிலோயே என இறுதி யவ்வொற்றாய் ஈற்றயலாகாரம் ஓகாரமாய் ஏகாரமிக்கது. ஐயேயெமக்கருண் மடவை மன்ற வாழிய முருகே என ஈறழிந்து அயலிலகரம் ஏகாரமாயின. (50)

308. ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல்
நீட்சி யிறுதி யவ்வொற் றாதல்
அயலி லகரமே யாதலும் விளித்தனு.

எ - னின். ளகரவீற்றுயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். ளகரவீற்றுயர்திணைப்பெயர்க்குப் பொதுவிதியன்றி அளபெழலும் ஈறுகெடலும் அயனீடலும் இறுதி ளகரவொற்று யகரவொற்றாதலும் ஈற்றயலகரம் ஏகாரமாதலும் விளியுருபாம். எ - று.

வ - று. 'மேவார்த்தொலைத்த விறன்மிகு வேஎள்' என அளபாயிற்று. 'துனிகொள்ளலெல்லா நீ' என ஈறுகெட்டது. நமர்காள் எமர்காள் என ஈற்றயனீண்டன. குழையாய் வாயிலாய் என இறுதி ளகரவொற்று யகரவொற்றாயின. 'தலைமீது கொள்வமடிகேள்.' என ஈற்றயலகரம் ஏகாரமாயிற்று.



எல்லாவென்பது தோழிமுன்னிலைப்பெயரன்றோ விளியேலாதென விலக்கப்பட்ட அம்முன்னிலைப்பெயரை ஈண்டுக் காட்டியதென்னையெனின்:—'முன்னிலை யெல்லீர் நீயிர் நீவிர் நீர் நீயல்லன படர்க்கை' என வரையறுக்கப்பட்டமையின் தோழனென்னும் பொருட்டாகிய ஏடனென்னும் படர்க்கைப்பெயர் விளியேற்றமையின் ஏடாவென்பது தோழன்முன்னிலைப்பெயரென்றும் தோழியென்னும் பொருட்டாகிய எல்லாள் ஏடியென்னும் படர்க்கைப்பெயர்கள் விளியேற்றமையின் 'எல்லாவு மேடியுந் தோழி முன்னிலைப்பெயர்' என்றுங் கூறப்பட்டனவன்றி அவை இயல்பாய் நின்ற முன்னிலைப்பெயரல்லவென்க. (51)

309. ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றயல்
அகரம் இ ஈ யாத லாண்டையா
ஈயாத லதனோ டேயுற லீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனய னீடல்
ஈற்றி னீருற லிவையுமீண் டுருபே.

எ - னின். ரகாரவீற்றுயர்திணைப் பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். பொதுவிதியின்றி ரகாரவீற்றுயர் திணைப் பெயர்க்கு அளபெழலும் ஈற்றயலகரம் இகரமாதலும் ஈகாரமாதலும் அவ்விடத்தாகாரம் ஈகாரமாதலும் அதனோடேகாரமேற்றலும் ஈற்றிலேகாரமிக்கு அயலில் யாக்கெட்டு அதனயலிகரம் ஈகாரமாதலும் ஈற்றின் ஈராதலும் விளியுருபாம். எ - று.

வ - று. சிறாஅர் மகாஅர் என அளபாயின. 'என்னைமுன்னில்லன் மின்றெவ்விர்' என ஈற்றயலகரம் இகரமாயிற்று. வேந்தீர் நாய்கீர் என அகரம் ஈகாரமாயின. சான்றீர் மடவீர் என ஈற்றயலாகாரம் ஈகாரமாயின. 'பல்சான்றீரே பல்சான்றீரே' கணியீரே என ஈற்றயலாகாரம் ஈகாரமாய் ஏகாரமேற்றன. நம்பீரே தம்

ழீரே தோழீரே தொழும்பீரே என ஈற்றிலேகாரமிக்கு அயல் யாக்கெட்டு அதனயலிகரம் ஈகாரமாயின. எமரீர் தமரீர் என ஈரேற்றன.

ஈண்டென்றமிகையானே கடலாரே கடலீரே கழியாரே கழியீரே சாத்தியாரே சாத்தியீரே கொற்றியாரே கொற்றியீரே என அஃறிணைப் பெயர் விரவுப்பெயர்களைச் சிறப்பித்து ரகரவீற்றுயர் திணைப்பெயர் போலக் கூறியவழியும் இவ்வுருபேற்றல் கொள்க.()

310 லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்சியும்
யகார வீற்றிற் களபுமா முருபே.

எ - னின். லகார யகாரவீற்றுயர்திணைப் பெயர்க்கு எய்திய தன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். பொதுவிதியன்றி லகார வீற்றுயர்திணைப் பெயர்க்கு அளபெழலும் ஈற்றயனீடலும் யகார வீற்றுயர் திணைப் பெயர்க்கு அளபெழலும் உருபாம். எ - று.

உயர்திணைப்பெயரென்பதனை யகாரவீற்றின்கண்ணும் உம்மையை அளபென்பதன்கண்ணுங் கூட்டுக.

வ - று. 'வலம்புரித்தடக்கை மாஅனின்னிறம்.' எ-ம். தோன்றல் மடவரால் தாழ்குழால். எ-ம். சேஎய். எ-ம். வரும். (53)

311. னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்
இறுதி யழிவத னொடய னீட்சி.

எ - னின். னகரவீற்றஃறிணைபெயர்க்கும் விரவுப்பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். பொதுவிதியன்றி னகரவீற்றஃறிணைப் பெயர்க் கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் இறுதி கெடுதலும் அத னோடு ஈற்றயனீடலும் விளியுருபாம். எ - று.

இறந்தது தழீஇயவெச்சவும்மைகளும் விளியுருபாமென்பது உந் தொக்கு நின்றன.



வ - று. அலவ இகல கலுழ. எ-ம். அலவா இகலா கலுழா. எ-ம். சாத்த கொற்ற. எ-ம். சாத்தா கொற்றா. எ-ம். வரும். (54)

312. லளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்
ஈற்றய னீட்சியு முருபா கும்மே. [கண்

எ - னின். லகார ளகாரவீற்றஃறிணைப்பெயர்க்கும் விரவுப் பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ - ள். பொதுவிதியன்றி லகாரவீற்றஃறிணைப் பெயர்க்கண்ணும் ளகாரவீற்றஃறிணைப் பெயர்க்கண்ணும் விரவுப் பெயர்க்கண்ணும் ஈற்றயனீடலும் விளியுருபாம். எ - று.

வ - று. 'காட்டுச்சாரோடுங் குறுமுயால்' கிளிகாள். எ-ம். தூங்கால் மக்காள். எ-ம். வரும். (55)

313. அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையின்
அளபும் புலம்பி னோவு மாகும்.

எ - னின். மேல் விதந்த விளியுருபுகட் காவதோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். மேற்போந்த விளியுருபுகளுள் இயல்புகளும் ஈறழிவுகளும் அண்மை விளிக்கண்ணும் அளபுகள் சேய்மை விளிக்கண்ணும் ஓகாரங்கள் புலம்பல் விளிக்கண்ணும் வரும். எ - று.

எனவே, ஏனைவிளியுருபுகள் அண்மை சேய்மை புலம்பென்னு மூன்றிடத்தும் விராய் வருமென்பது பெற்றாம். (56)

314. நுவ்வொடு வினைச்சுட் டுற்ற ன ள ர
வைதுத் தாந்தா னின்னன விளியா.

எ - னின். இ உ ஊ வோடென்னுஞ் சூத்திரத்திற்காவதோர் புறனடையுணர்-ற்று.

**இ - ள்.** மேல் விளிக்கப்படுமென்றவற்றுள், நுவ்வுடனே மூன்று முதல்வினாவையும் மூன்றுசுட்டையும் வரன் முறையே பொருந்திய ன ள ர வென்னு மூன்றீற்றுயர் திணைப் பெயர்களும், வைது வென்னும் இரண்டீற்றஃறிணைப் பெயர்களும், தானென்னும் பொதுப்பெயரும் விளிக்கப்படா. எ - று.

இங்ஙனம் விதந்த கிளைப்பெயர் வினாப்பெயர் சுட்டுப்பெயர் களிடை நிற்கும் எழுத்தையொழித்து முதலெழுத்தோடுற்றதாக இறுதி ன ள ரக்களைக் கூறினமையின் வரன் முறையென்றாம்.

நுவ்வொடு வைது என்னும் ஈறிரண்டும் பொருந்தாவென் பார் அதனை ஒடுக்கொடுத்துப் பிரித்தார்.

மகரவீற்றுப் பொதுப்பெயர் முன்னரே விலக்கப்பட்டமை யின் ஈண்டுத் தாமென்றது அசைநிலை.

வ - று. நுமன் நுமள் நுமர், எ-ம். எவன் எவள் எவர் எவை எது. எ-ம், யாவன் யாவள் யாவர் யாவை யாது. எ-ம். ஏவன் ஏவள் ஏவர் ஏவை ஏது. எ-ம். அவன் அவள் அவர் அவை அது. எ-ம். இவன் இவள் இவர் இவை இது. எ-ம். உவன் உவள் உவர் உவை உது. எ-ம். தான் எ-ம். வரும்.

இன்னனவென்றமையானே, பிறன் மற்றையான் என்றற் றொடக்கத்தனவுங் கொள்க. (57)

## 315. முதலை யையுறிற் சினையைக் கண்ணுறும் அதுமுதற் காயிற் சினைக்கை யாகும்.

எ - னின். முதல்சினைத் தொடர்பின்கண் இரண்டாமுருபு வரின் முதல் சினையிரண்டன்பாலும் வாராது தடுமாறி வருதலே மரபெனப் புறனடையுணர்-ற்று.

**இ - ள்.** முதலினை ஐயுருபுபொருந்திற் சினையினைக் கண்ணுருபு பொருந்தும்; அதுவுருபு முதலுக்குவரிற் சினைக்கு ஐயுருபு வரும். எ - று.



'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே.' என்பத னான் ஆருவதன் பன்மையுருபுங் கொள்க.

இனி இரட்டுறமொழிதலென்னுமுத்தியான் அது வென் பதனைச் சுட்டாக்கிக், கண்ணுருபு முதற்காயிற்சினைக்கு ஐயாகு மெனவும் பொருளுரைத்துக்கொள்க.

வ - று. யானையைக் காலின்கண் வெட்டினான் யானையது காலைவெட்டினான். யானையினகால்களை வெட்டினான் யானையின் கட் காலைவெட்டினான். எ-ம். கையினை விரலின்கட் பிடித்தான் கையது விரலைப்பிடித்தான் கையின விரல்களைப் பிடித்தான். கையின்கண் விரலைப்பிடித்தான். வரும்.

இங்ஙனம் கூறவே யானையைக் காலைவெட்டினான் என இரண் டன்பாலும் ஐயுருபு வாராதென்றாராயிற்று. வரிற் செயப்படு பொருள் இரண்டாய் முதல் சினைகள் ஒருபொருட்பகுதியவல்ல வாமாதலின் இங்ஙனஞ் செயப்பட்டது ஒருபொருளே முதல் சினைகள் ஒருபொருட்பகுதியவேயென்பது தோன்றக் கண்ணுரு பும் அதுவுருபும் வருமென்பதாயிற்று.

இவ்வாறன்றி ஒரோவழி முதல்சினையிரண்டன்பாலும் ஐயு ருபுவரின், 'யாத னுருபிற் கூறிற் றாயினும்' என்னுஞ் சூத்திரத் தான் முதலின்பால் ஐயுருபை அதுவுருபாயேனுஞ் சினையின்பால் ஐயுருபைக் கண்ணுருபாயேனுந் திரிக்கப்படுமென்க. (58)

## 316. முதலிவை சினையிவை யெனவே றுளவில உரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும்.

எ - னின். மேன் முதல்சினையிரண்டன்பாலும் ஐயுருபு வாரா தென அருத்தாபத்தியாற் கூறினார் அங்ஙனம் வாராமைக்கேது வும் மேலைச்சூத்திரப்பொருளோடு இப்பொருளைப் பிண்டப்பொரு ளுக்கும் ஏற்பித்தலுமுணர்-ற்று.

**இ - ள்.** கூடங்களிவை படங்களிவை யென்றாற்போல முதற்பொருள்களிவை சினைப்பொருள்களிவையென இரண் டாக வேறுள்ளனவில்லவாம் ஒருபொருளையே இரண்டாகப் பகுத்துக் கூறுவார் குறிப்பின்மாத்திரையவேயாம் பிண்டப் பொருளும் அத்தன்மைத்தாம். எ - று.

யானையைக் குறித்தவழி யானையுண்டாய்க் கால் கை கோடு முதலியன வேறில்லையாய்க் கால் கை கோடு முதலியவற்றைக் குறித்தவழி அவையுண்டாய் யானைவேறில்லையாய் நிற்கும் ஒரு பொருட் பகுதியவாதலின் இவ்வாறு கூறப்பட்டன.

வேறுளவிலவென்றமையான் யானையைக் காலை வெட்டினான் என ஐயுருபு முதல் சினை யிரண்டன்பாலும் வாராமைக்கேது கூறினாராயிற்று.

இனி ஒருபொருட்கண் முதலைக் கருதிச் சினையெனவுஞ் சினையைக் கருதி முதலெனவுங் கூறுதல் போலப் பிண்டித்த பொருள்களைக் கருதியல்லது பிண்டமெனல் கூடாமையிற் பிண்டமுமற்றேயென்ற துணையானே பிண்டித்த பொருள்களுமனையவேயென்பது தாமேபோதருமென்க. அவை வருமாறு நெல்லைப் பொலியின்கண் வாரினான் நெல்லினது பொலியை வாரினான் என வரும். நெல்லைப் பொலியை வாரினான் என இரண்டன்பாலும் ஐயுருபுவாரா.இப்பிண்டப்பொருளாகிய பொலிக்குப்பையும் பிண்டித்த பொருள்களாகிய நெல்லும் முதல்சினை யனையவாய் வேறுளவிலவாமாதலினென்க.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி யானையது கோடு கோட்டது நுனி என ஒன்றற்குச் சினைமற்றொன்றற்கு முதலாயும் ஒன்றற்கு முதன் மற்றொன்றற்குச் சினையாயும் நியதியின்றி வருதலின், இவையே முதல் இவையேசினையென வேறறியக் கிடப்பனவில்லை அவை சொல்லுவோர் குறிப்பின் ஆங்காங்கு முதல் சினை யென வுணரப்படுவனவாம் நெல்லினது குப்பை குப்பையினது நெல் எனப் பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாய்க் கிழமையாய் நின்றது கிழமைத்தாயுங் கிழமைத்தாய் நின்றது கிழமையாயும் நியதியின்றிச் சொல்லுவோர் குறிப்பினான் அறிய வரும் எனப்பொருள் கூறுவாருமுளர். இப்பொருள் முதல் சினையிரண்டன்பாலும் ஐயுருபு வாராமைக்கு ஏதுவாகாமையானும் இவ்வாறு முதலுஞ் சினையும் வருதல் வெளிப்படையாதலின் இவற்றையுரைப்போர் குறிப்பினவெனக் கூற வேண்டாமையானும் ஆசிரியர் தொல்காப்பியரும் முதல்சினைகள் ஒருபொருட்பகுதியவென்பதுதோன்ற



'முதலுஞ் சினையும் பொருள்வேறு படாஅ' என்றமையானும் இப்பொருளும் இதனோடுமாட்டெறிந்த பொருளும் பொருந்தாவென்க. (59)

317. யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.

எ - னின். வேற்றுமையுருபுகண் மயங்கி ஒன்று நிற்குநிலைக் களத்து மற்றொன்று வரினும் அமையுமெனப் புறனடையுணர்-ற்று.

இ - ள். ஒரு வேற்றுமைப்பொருண் மற்றொரு வேற்றுமையுருபாற் கூறப்பட்டதாயினும் அவ்வுருபு மயங்கி வந்தமையின் அவ்வுருபு சென்றவழியே பொருள்சாராது பொருள் சென்ற வழியே அவ்வுருபு சாரும். எ - று.

எனவே அங்ஙனமயங்கி வந்தவுருபைப் பொருளுக்கியைந்த வுருபாகத் திரித்துப் பொருள் கொள்கவென்பதாயிற்று.

வ - று. 'நாகு வேயொடு நக்கு வீங்குதோள்' என்புழி நாகு வேய் உடனிகழ்ச்சிப் பொருளாகாது செயப்படுபொருளாய் நிற்றலின் ஒடுவுருபை ஐயுருபாகத் திரித்துக்கொள்க. 'கிளையரி நாணற் கிழங்குமணற் கீன்ற—முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்' என்புழி மணல் ஏற்றுக்கோடற்பொருளாகாது இடப்பொருளாய் நிற்றலிற் குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக்கொள்க பிறவுமன்ன. வேற்றுமையுருபு மயங்கிவரிற் பொருளோடுக்கித் திரித்துக்கொள்ள வேண்டுமென்பதாயிற்று.

இனி இவ்வாறு மாறுபட நிற்றலன்றி, உரையிற்கோடலென்பதனால் தடுமாறுருபுகடாஞ் சிலவுளவெனவும் ஒருபொருட்கே தத்தமுருபுகள்போல வேறுருபுகள் வருவனவுளவெனவுங்கொள்க.

தடுமாறுருபுகடாஞ் சிலவுளவாதற்குதாரணம்: 'அவ்வித் தழுக் காறுடையானைச் செய்யவ—டவ்வையைக் காட்டி விடும்.' என வரும். இதனுள் ஐயுங் குவ்வுந் தடுமாறி வருமாறு காண்க.

ஒருபொருட்கே தத்தமுருபுகள்போல வேறுருபுகள் வருவன வினைமுதன் முதலாக முறையேயுரைக்கின்றாம்.

இவ்வாறு பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய எவனென்னும் உயர்திணையாண்பாற்சொல்லுமல்லவென்பது பெற்றும்.) (31)

### வினைமுற்றிற்குப் புறனடை.

351. வினைமுற் றேவினை யெச்ச மாகலுங்
குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே.

எ - னின். இருவகை முற்றிற்குமாவதோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். வினைமுற்றே வினையெச்சமாகி வருதலும் வினைக்குறிப்புமுற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம். எ - று.

ஏகாரத்தைப் பின்னுங் கூட்டுக.

குறைச்சொல்லாகாது பால் காட்டி நிற்றலின் முற்றேயென்றும், வினையெச்சப்பயனிலையினையும் பெயரெச்சப்பயனிலையினையும் அவாவி நிற்றலின் எச்சமென்றும், இவை சிறுபான்மையவாகலின் ஆகலுமென்றும் கூறினார்.

வ - று. (‘காணான் கழிந்த வைகலுமுண் டென்றொருநாள்.’ ‘மோயினளுயிர்த்தகாலை’) ‘முகந்தனர் கொடுப்ப’ ‘விளிப்பது பயிலுங் குறும்பர் துந்துபியொடு.’ ‘எருவை நுண்டாது குடைவன வாடி.’ ‘பெயர்த்தனென் முயங்க யான்.’ ‘மக்களுளிரட்டையாய் மாறினும் பிறந்தியாம்.’ எ-ம். ‘சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப.’ ‘கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்.’ எ-ம். மூவிடத்தைம்பாலினும் வினைமுற்றுவினை யெச்சமாயின. ‘வரிபுனைவில்லனொரு கணைதெரிந்துகொண்டு.’ ‘அளிநிலைபெறா தமரியமுகத்தாள்—விளிநிலைகொள்ளாள்.’ ‘உச்சிக்கூப்பிய கையினர் தற்புகழ்ந்து.’ ‘விழுமிது கழிவதாயினும்.’ ‘நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்து.’ எ-ம். துணையினெஞ்சினேன் றுயருழந்தினையேன்.’ ‘நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சி.’ எ-ம். நீர்வார் கண்ணை நீயிவணொழிய.’ ‘வெள்வேல் வலத்தினிர் பொருடரல் வேட்கையினுள்ளினீர்.’ எ-ம். மூவிடத்தைம்பாலினும் வினைக்



குறிப்புமுற்று வினையெச்சக் குறிப்பாயின. ‘வெந்திறலினன் விறல் வழுதியொடு.’ ‘அஞ்சாயலளாயிழைமுன்’ ‘கட்றானையர் கழல் வேந்தரை.’ பெருவரைமிசையது நெடுவெள்ளருவி.’ புன்றாளோ மைய சுரனிறந்தோரே.’ எ-ம். ‘பெருவேட்கையேனெற்பிரிந்து.’ ‘கண்புரை காதலே மெம்முள்ளான்.’ எ-ம். ‘உலங்கொடோளினை யொரு நின்னால்.’ ‘வினைவேட்கையிர் வீரர் வம்மின்.’ எ-ம். மூவிடத்தைம்பாலினும் வினைக்குறிப்புமுற்றுப் பெயரெச்சக் குறிப்பாயின. இவற்றுள் வரும் பெயர்கண் முற்றுப்பயனிலையாகாது பெயரெச்சப் பயனிலையாமாறு காண்க.

இனி வினைமுற்றுக்கள் சொற்றிரியினும் பொருடிரியா வினையெச்சமாய் வருமாறு:—‘விண்ணிற்றாவியிட்டான் வந்து வீழ்ந்தன.’ ‘பாயுமாரிபோற் பகழி சிந்தினா—ராயர் மத்தெறி தயிரினாயினார்.’ ‘கானவ ரிரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடு—மானிரை பெயர்ந்த தாய ரார்த்தன ரணிந்த திண்டோ—டானென்று முடங்கிற் றொன்று நிமிர்ந்தது சரம்பெய்மாரி—போனின்றதென்ப மற்றப் பொருவருஞ் சிலையினாற்கே.’ ‘செய்யோன் செழும்பொற் சரஞ்சென்றது சென்றதாவி.’ என வரும். பிறவுமன்ன.

இனி எண்ணின்கணின்ற எதிரது தழீஇயவெச்சவும்மையானே, உண்டான் சாத்தன் ஊர்க்குப் போனான் என்புழி உண்ட சாத்தன் ஊர்க்குப் போனான் எனப் பொருள்படுதலின் வினைமுற்றுப் பெயரெச்சமாதலு முளவெனவும், வெறுத்த ஞானி வீட்டையடைந்தான் சாத்தனுழுது வந்தான் என்புழி வெறுத்தான் ஞானி சாத்தனுழுதான் எனப் பொருள்பட்டு ஈரெச்சமுற்றாதலுளவெனவும், ‘பெறுவது கொள்வாருங் கள்வரு நேர்.’ என்புழி நேர் நேர்வரென முதனிலைத் தனிவினையும் வினைமுற்றாதலுளவெனவும், ‘வரிப்புனை பந்து.’ ‘அறுவேறு வகையின்.’ ‘செய்தக்க வல்ல செயக்கெடும்.’ ‘மண்மாண் புனைபாவை யற்று.’ என்புழி வரிந்து அற்று செய்ய மாட்சிமைப்பட என்று பொருள்பட்டு முதனிலைத் தனிவினைகள் வினையெச்சமாதலுளவெனவுங் கொள்க. (32)

### வினையியல் முற்றிற்று.

# 3. பொதுவியல்.

பெயரும் வினையும் பாற் பொதுமை நீங்குதல்.

352. இருதிணை யாண்பெணு ளொன்றனை யொழிக்
பெயரும் வினையுங் குறிப்பி னானே. [கும்

எ - னின். முன் வந்த பெயர்க்கும் வினைக்கும், பின் வரும் இடைக்கும் உரிக்கும், பொதுவிலக்கணங்களைச் சிங்கநோக்காக இவ்வியலாலுணர்த்துவான் இடைநிறீஇக் கூறலின், இது பெயர்க்கும் வினைக்குமுரியதோரிலக்கணமுணர்-ற்று.

இ - ள். உயர்திணை யாண்பால் பெண்பாலென்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும், அஃறிணையாண்பால் பெண்பால் என்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும், அவ்விரு பாலுள் ஒருபாலை ஒழிக்குங் குறிப்பினான். எ - று.

வ - று. ஆயிரமக்கடாவடி போயினர் என்புழி, மக்களென்னும் உயர்திணையிருபாற்கும் பொதுப்பெயரும் போயினரென்னும் உயர்திணையிருபாற்கும் பொதுவினையுந் தாவடியென்னுங் குறிப்பினாற் பெண்பாலை யொழித்தன. பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுளர் என்புழி, மக்களென்னும் பொதுப்பெயரும் உளரென்னும் பொதுவினைக்குறிப்பும் பொறையுயிர்த்தவென்னுங் குறிப்பினான் உயர்திணையாண்பாலை யொழித்தன. இப்பெற்றங்களுழவொழிந்தன என்புழிப், பெற்றங்களென்னும் அஃறிணையாண்பெணிருபாற்கும் பொதுப்பெயரும் ஒழிந்தனவென்னும் அஃறிணையாண்பெணிருபாற்கும் பொதுவினையும் உழவென்னுங் குறிப்பினாற் பெண்பாலையொழித்தன. இப்பெற்றங்கள்பால் சொரிந்தன என்புழிப், பெற்றங்களென்னும் பொதுப்பெயருஞ் சொரிந்தனவென்னும் பொதுவினையும் பாலென்னுங் குறிப்பினான் ஆண்பாலையொழித்தன. பிறவுமன்ன. (1)



பெயரும் வினையும் செய்யுளில் ஈற்றயல் திரிதல்.

353. பெயர்வினை யிடத்து ன ள ர ய வீற்றயல்
ஆவோ வாகலுஞ் செய்யுளு ளுரித்தே.

எ - னின். பெயர்க்கும் வினைக்குஞ் செய்யுட்கணுவதோரிலக்கணமுணர்-ற்று.

இ - ள். பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் னகார ளகார, ரகார யகாரவீற்றயனின்ற விகுதிமுதல் ஆகாரம் ஓகார மாதலுஞ் செய்யுளிடத்துரித்தாம். எ - று.

வ - று. 'வில்லோன் காலன கழலே.' 'தொடியோண் மெல்லடி மேல்வருஞ் சிலம்பே.' 'நல்லோர் யார்கொ லளியர் தாமே.' 'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்.' எ - ம். 'படைத்தோன் மன்றவப் பண்பிலாளன்.' 'நல்லோண் மன்ற கூப்பெயர்த்தோளே.' 'சென்றோ ரன்பிலர் தோழி.' 'வந்தோய் மன்ற தெண்கடற் சேர்ப்ப.' எ-ம். பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் வந்தது.

வினையாலணையும் பெயர்க்கணன்றி வினைக்கண்ணும் ஒரோவழி ஆ ஓவாதலின், அதனையுமுடன் கூறினார்.

உம்மையை எதிர்மறையும்மையாக்கி வில்லோன் வில்லான் என ஒன்றே ஆதலும் ஆகாமையும் இன்னும் அவ்வும்மையானே செக்கான் வண்ணான் என மற்றொன்று ஆகாமையும் அதனை ஆக்கவும்மையாக்கி, 'பழமுதிர் சோலை மலைகிழவோனே.' என ஆகாரமேயன்றி அகாரமும் ஓகாரமாதலுங் கொள்க. (2)

உருபும் வினையும் எதிர்மறையினுந் திரியாமை.

354. உருபும் வினையு மெதிர்மறுத் துரைப்பினுந்
திரியா தத்தமீற் றுருபி னென்ப.

எ - னின். வேற்றுமையுருபுகட்கும் வினைச்சொற்கட்குமாவதோரிலக்கணமுணர்-ற்று.

இ - ள். எட்டுவேற்றுமையுருபுகளும் மூவகை வினைச்சொற்களும், எதிர்மறுத்துச் சொல்லுமிடத்தும், தத்தமீற்றினின்றும் அவ்வவ்வுருபினின்றும் வேறுபடா என்று சொல்லுவர் புலவர். எ - று.

இன்னுருபை ஈற்றெறன்பதன்கண்ணுங் கூட்டி, எதிர்நிரனிறையாகப் பொருள் கொள்க.

உருபின்கண் எதிர்மறுத்தல் அவற்றின் பயனிலைகளையென்க.

வ - று. சாத்தன் வாரான், குடத்தை வனையான், வாளாலெறியான், புல்லர்க்கு நல்கான், நிலையினிழியான், பொருளினதின்மை, தீயர்கட்சாரான், சாத்தா சாயல். எ-ம். நடவான், நடவாத, நடவாது. எ-ம். வரும்.

'சொற்றொறுமிற்றிதன்பெற்றி' என்னுஞ் சூத்திரத்தானே உண்மைக்கு மறைவாகிய இன்மையென்னும் பெயர்க்கண்ணும் ஈறு திரியாமை காண்க.

நடத்தல், நடவாமை என்றற்றொடக்கத்தன ஈறு திரிந்தனவன்றோவெனின்.—அவை தொழிற் பெயராதலிற் றிரிந்தனவென்க. ஓடாக்குதிரை ஆணுவறிவு என்றற்றொடக்கத்தன, ஓடாத ஆணுத என்பனவற்றைக் குறைத்து வழங்கினவன்றி, ஈறு வேறுபட்டனவல்லவென்க.

ஒருவினை நிகழ்வழி அவ்வினைக்குக் கருத்தாவுஞ் செயப்படுபொருளு முதலியவாகப் பெயர்ப்பொருளை வேற்றுமை செய்து நின்ற உருபுகள் அவ்வினை நிகழாவழியும் அவ்வாறு நிற்றலானும், வினைவிகுதிகளும் அவ்வினை நிகழ்வழி முற்றின்கட் கருத்தாவையும் எச்சங்களிற் பெயரொழிபையும் வினையொழிபையுந் தந்து நின்றாற்போல வினை நிகழாவழியும் நிற்றலானும், இங்ஙனங் கூறப்பட்டதென்க. (3)

### உருபும் வினையும் அடுக்கி முடிதல்.

355. உருபுபல வடுக்கினும் வினைவே றடுக்கினும்
ஒருதம் மெச்ச மீறுற முடியும்.



எ - னின். இதுவுமது.

இ - ள். வேற்றுமையுருபுகள் விரிந்துந் தொக்குந் தம்முள் விரவிப் பலவடுக்கி வரினும், வெவ்வேறு பலவடுக்கி வரினும், மூவகை வினைச்சொற்களுந் தம்முள் விரவியடுக்குந் தன்மையவன்றி வெவ்வேறு பலவடுக்கி வரினுந், தத்தமெச்சம் இறுதியிலொன்று வர அதனோடு அனைத்தும் முடிவனவாம். எ - று.

பலவென்பதனை வேறென்பதனோடுங் கூட்டுக.

இவ்விருவகையடுக்கும் படைபடையென்றாற்போல அடுக்கியவல்லவென்பார் பலவடுக்கினுமென்றார்.

வினைவேறு பலவடுக்கினுமென விதந்தாற்போல உருபிற்கு விதவாமையின் அவை விரவியும் வெவ்வேறு பலவடுக்குமென்பது பெற்றாம்.

வ - று. சாத்தன் யானையது கோட்டை நுனிக்கட் பொருட்குவாளாற் குறைத்தான் என்பன உருபுகள் விரவிப் பலவடுக்கிக் குறைத்தானென்னும் ஒருவினை கொண்டன. இவற்றுள் ஆறனுருபடுக்கன்று, வினை அதற்கெச்சமன்றாதலானுங் கோடென்னும் பெயர்கொண்டமையானுமென்க. சாத்தனென்னும் பெயர்வேற்றுமை குறைத்தற்கு வினைமுதலைக் காட்ட வந்தது; அன்றி அடுக்கென்று கோடலுமொன்று. சாத்தனையுங் கொற்றனையுந் தேவனையும் பூதனையும் வாழ்த்தினான். எ-ம். சாத்தனுக்குங் கொற்றனுக்குந் தேவனுக்கும் பூதனுக்குந் தந்தை. எ-ம். இரண்டாமுருபும் நான்காமுருபும் வேறு பலவடுக்கி வாழ்த்தினானென்னும் ஒருவினையுந் தந்தையென்னும் ஒருபெயரும் முறையே கொண்டன. வான் கைக்கொண்டான் அருளறமுடையான். எ-ம். உருபுதொக்கு அவ்வாறு வந்தன. உண்டான்றின்றானோடினான் பாடினான் சாத்தன் 'வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்—பொருதி புலம்புதி நீயுங்—கருதுங்காற் —பண்டினை யல்லையாற் பாழித்தோட் கோதையைக் — கண்டனையோ வாழி கடல்,' எ-ம். 'இளையண் மெல்லியண் மடந்தை.' 'அரிய சேய பெருங்கான் யாறே.' எ-ம்.

வினைமுற்றுங் குறிப்புமுற்றும் பெயரெச்சங்களோடு விரவாது வேறுபல வடுக்கிச் சாத்தன் நீ மடந்தை யாரென்னும் ஒரு பெயர் முறையே கொண்டன. கற்ற கேட்ட பெரியோர். எ-ம். சிறிய பெரிய நிகர்மலர்க் கோதை. எ-ம். பெயரெச்சவினையுங் குறிப்பும் வினை வினைக்குறிப்பு முற்றோடு விரவாது வேறு பலவடுக்கிப் பெரியோர் மலர்க்கோதையென்னும் ஒருபெயர்முறையே கொண்டன. கற்றுக் கேட்டறிந்தார். எ-ம். விருப்பின்றி வெறுப்பின்றியிருந்தார். எ-ம். வினையெச்ச வினையுங் குறிப்பும் வினையோடு முடியுமென விதந்த வினைமுற்றுக்களோடு விரவாது வேறு பல வடுக்கி அறிந்தார் இருந்தாரென்னும் ஒருவினை முறையே கொண்டன. பிறவுமன்ன.

'சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன்—மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்—செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்—கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.' என்னும் வினையெச்சங்கள் கருவிருந் தீனறென்பதன்றிக் கருவிருந்து தலை நிறுவியென முடியாதாகலான் அவற்றுள் ஒன்றற்கொன்று முடிபாய்த் தொடர்தலானும் 'நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்—பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்—வறிது பெயர்குந ரல்லர் நெறிகொள' என்னும் வினையெச்சக் குறிப்புக்கள் ஆங்காங்கு முடிதலானும் இவை அடுக்காகாவென்க. (4)

## இடைப்பிறவரல்.

356. உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்
பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன.

**எ - னின்.** இதுவுமது.

**இ - ள்.** வேற்றுமையுருபுகளும் முற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் கொண்டு முடியும் பெயர்க்கும் வினைக்கும் இடையே பிறசொற்கள் வருதலுமாம் ஆண்டைக்குப் பொருந்துவன. எ - று.



பிறவெனப் பன்மை கூறினரேனும் 'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே.' என்பதனான் ஒருசொல் வருதலுங் கொள்க.

உம்மை, உருபுமுற்றீரெச்சங்களும் அவை கொள்ளும் பெயர் வினையுமாத்திரையாய் நிற்றலேயன்றியென, இறந்தது தழீஇ நின்றது.

வ - று. சாத்தன் வயிறாரவுண்டான்; அறத்தையழகு பெறச் செய்தான்; வாளான் மருவாரை மாய வெட்டினான்; [இதனுண் மாயவென்ப தொன்றுமே இடைவந்தது, மருவாரை யென்பது அற்றன்று, இவ்விரண்டனுருபும் வாளாலென்னும் மூன்றனுருபும் அடுக்காய் நிற்றலின்.] தேவர்க்குச் செல்வம் வேண்டிச் சிறப்பெடுத்தான்; மலையினின் றுருண்டு வீழ்ந்தான்; சாத்தனதித் தடக்கை யானை; ஊர்க்கணுயர்ந்த வொளிமாடம்; சாத்தா விரைந் தோடிவா. எ-ம். வந்தானவ்வூர்க்குப் போன சாத்தன்; வந்தவவ் வூர்ச் சாத்தன்; வந்து சாத்தனிற்றைநாளவனூர்க்குப் போயினான். எ-ம். வரும். குறிப்புவினை முதலிய பிறவுமன்ன.

'கருதலர்ச் சீறிய கடுங்கொல் யானை' என்புழிச், சீறியவென்னும் பெயரெச்சத்திற்கும் அது கொண்டயானையென்னும் பெயர்க்கும் இடையே கொல்லென்னும் வினைத்தொகைச்சொல் இடைப்பிறவரலாய் வந்ததன்று, வினைத்தொகை காலங் கரந்த பெயரெச்சமாதலாற் பெயரெச்ச வினையிரண்டடுக்கி யானையென்னும் ஒரு பெயர் கொண்டனவாமென்க. இவ்வாறே அடுக்காய் வந்தனவும், இடைப்பிற வந்தனவும், உய்த்துணர்ந்து கொள்க.

இனி ஏற்பனவென்றமையான் 'வல்லெறிந்தநல் விளங்கோசர் தந்தை—மல்லல் யானைப்பெருவழுதி' என்புழி, வல்லெறிதல் பெருவழுதிமேற்றேயெனின், நல்லிளங்கோசர் தந்தையென்பதனை இடைநிறுவின் ஏலாதாம், வல்லெறிதல் நல்லிளங்கோசர் மேற்றாகப் பொருள்படுமாதலினென்க. (5)

## முடிக்குஞ் சொல் நிற்குமிடம்.

357. எச்சப் பெயர்வினை யெய்து மீற்றினும்.

**எ-னின்.** இதுவுமது.

**இ-ள்.** உருபுகளும் முற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களுங் கொண்டு முடியும் எச்சமாகிய பெயரும் வினையும் அவற்றிற்கு ஈற்றினும் வரும். எ-று.

ஈற்றினுமென்னுமும்மையான் முதலினும் வருதல் கொள்க.

வ-று. சாத்தன் வந்தான்; மரத்தைக் குறைத்தான்; சாத்தனால் வந்தான்; சாத்தற்குக் கொடுத்தான்; சாத்தனினீங்கினான்; சாத்தனதாடை; சாத்தன்கட்சென்றான்; சாத்தா வா. எ-ம். வந்தான் சாத்தன்; வந்த சாத்தன்; வந்துபோயினான். எ-ம். இறுதிக்கண் வந்தன. வந்தான்சாத்தன்; குறைத்தான் மரத்தை; வந்தான் சாத்தனால்; கொடுத்தான் சாத்தற்கு; நீங்கினான் சாத்தனின்; சென்றான் சாத்தன்கண்; வா, சாத்தா. எ-ம். சாத்தன் வந்தான்; போயினான் வந்து. எ-ம். முதற்கண் வந்தன.

எய்துமீற்றின் என்றாற்போல முதற்கண் வருதலை எடுத்தோதாது உம்மையாற் றழீஇக் கொண்டார், ஆறனுருபினெச்சமும் ஏழனுருபினெச்சப் பெயரும் பெயரெச்சத்தினெச்சமும் முதற்கண் வாராவென்பதூஉம், ஏனைய வரினும் இறுதிக்கண் வருதல் போற் சிறப்பினவல்லவென்பதூஉந், தோன்றுதற்கென்க.

எழுவாயுருபு வினைமுற்றுப் பயனிலையை இறுதிக்கட்கொண்டதூஉம், வினைமுற்றுப் பெயர்ப்பயனிலையை முதற்கட்கொண்டதூஉம், சாத்தன் வந்தான் என வரும். தம்முள் வேற்றுமையாதோவெனின்:—கேட்போர்க்குச் சாத்தன் இது செய்தான் என வினையை யுணர்த்துவதூஉம், இது செய்தான் சாத்தன் என வினைமுதலையுணர்த்துவதூஉமாமென்க. வந்தான் சாத்தன் என வருவனவும்அன்ன. (6)

358. ஒருமொழியொழிதன்னினங்கொளற்குரித்தே.

**எ-னின்.** நால்வகைச் சொற்குமாவதோரிலக்கணமுணர்-ற்று. மொழியெனப் பொதுப்படக் கூறினமையின், நால்வகைச் சொற்குமென்பது பெற்றாம்.



**இ-ள்.** பெயர்வினை யிடையுரியென்னு நால்வகைச் சொற்களுள், ஒவ்வொன்று எஞ்சி நின்ற தன்றனினங்களைக் கொள்ளுதற்கு உரித்தாம். எ-று.

வ-று. (சோற்றை நனியுண்டான் என்றவழிக் கறியை நனி தின்றான் என்றற்றொடக்கத்தனவும், பாக்கை நனி தின்றான் என்றவழி வெற்றிலையை நனிதின்றான் சுண்ணம்பை நனிதின்றான் என்பனவும், நஞ்சுண்டான் சாவான் என்றவழி நஞ்சுண்டாள் சாவாள் நஞ்சுண்டது சாம் என்பனவும், பார்ப்பான் கள்ளுண்ணான் என்றவழிப் பார்ப்பனி கள்ளுண்ணாள் என்பனவுங் கூறாதே அமைந்து கிடத்தலின், இனங்களாய் எஞ்சி நின்றன. இவற்றுள், சோற்றையென்னும் பெயர்ச்சொல்லும் உருபிடைச்சொல்லும் கறியையென்னும் பெயர்ச்சொல்லையும் உருபிடைச்சொல்லையும், நனியுண்டானென்னும் உரிச்சொல்லும் வினைச்சொல்லும் நனி தின்றானென்னும் உரிச்சொல்லையும் வினைச்சொல்லையுங் கொள்ளுதற்கு, உரியவாய் நிற்றல் காண்க. பிறவுமன்ன.) (7)

## திணைபால் இடப்பொதுமை நீங்கல்.

359. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்
மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே.

**எ-னின்.** பெயர் வினைகட்காவதோரிலக்கணமுணர்-ற்று.

**இ-ள்.** திணை பாலிடங் காலங்கட்குப் பொதுவாகிய பெயர் வினைகளினுடைய பொதுத்தன்மையினை நீக்கி, ஒன்றற்குரிமை செய்யும் மேல்வருஞ் சிறப்புப்பெயர் வினைகளாமே. எ-று.

ஒன்றற்கு இருமருங்கினையும் மேலென்பவாகலிற் சிறப்புப் பெயர் வினை யாண்டு வரினுங் கொள்க.

தாமேயென்னும் பிரிநிலையேகாரம்; குறிப்பினான் உற்றுணர்ந்து இடர்ப்படவேண்டாவென்னும் பொருடந்து நின்றது.

வ - று. சாத்தனிவன்; சாத்தனிது. எ-ம். சாத்தன் வந்தான்; சாத்தன் வந்தது. எ-ம். பெயர்த்திணைப் பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. ஒருவரென்னையர்; ஒருவரென்றாயர். எ-ம். மரம் வளர்ந்தது; மரம் வளர்ந்தன. எ-ம். பெயர்ப்பாற்பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. அவரெல்லாமிருந்தார்; யாமெல்லாம் வருவம்; நீவிரெல்லாம் போமின் எனப் பெயரிடப்பொதுமையினைச் சிறப்புப்பெயரும், வினையும் வந்து நீக்கின. வாழ்க அவன், அவள், அவர், அது, அவை, யான், யாம், நீ, நீர். எ-ம். உண்டு வந்தான், வந்தாள், வந்தார், வந்தது, வந்தன, வந்தேன், வந்தேம், வந்தாய், வந்தீர், வருகின்றான், வருவான். எ-ம் வினைத்திணைபாலிடங்காலப் பொதுமையினைச் சிறப்புப்பெயரும் வினையும் வந்து நீக்கின. பிறவுமன்ன. உண்டென்பது, இறந்தகாலவினையெச்சமாயினும், முக்கால வினைகளையுங் கொண்டு முடிதற்குரிய பொதுமையினை யுடைத்தாதலின் அதனை மேல்வருஞ் சிறப்பு வினை நீக்கின.

(8)

### எச்சங்களின் முடிபு.

360. பெயர்வினை யும்மைசொற் பிரிப்பென வொழி
[யிசை
எதிர்மறையிசையெனுஞ் சொல்லொழிபொன்
குறிப்புந் தத்த மெச்சங் கொள்ளும். [பதுங்

**எ - னின்.** நால்வகைச் சொற்குமாவதோ ரிலக்கணமுணர்த்தும் வழிச் சிலவற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுஞ் சிலவற்றிற்கு எய்தாததெய்துவித்தலுமுணர்-ற்று.

**இ - ள்.** பெயரெச்சமும், வினையெச்சமும், உம்மையெச்சமும், சொல்லெச்சமும், பிரிநிலையெச்சமும், எனவெச்சமும், ஒழியிசை யெச்சமும், எதிர்மறை யெச்சமும், இசையெச்சமுமாகிய சொல்லெச்சமொன்பதும் குறிப்பெச்சமொன்றும், தத்தமெச்சங்களைக் கொள்ளும். எ - று.



சொல்லொழிபென்பதனை முற்கூறிய ஒன்பதனோடும், அதனுள் ஒழிபென்பதனைப் பிற்கூறிய குறிப்போடுங் கூட்டுக. குறிப்புச் சொல்லொழிபெனக் கூட்டியுரைத்தால் என்னையெனின்:— அது பின்னர்க் கூறுதும். எனவே, எச்சங்கள் சொல்லெச்சங் குறிப்பெச்சமென இருவகையனவென்பதூஉம், சொல்லெச்சம்ஒன்பதெனத் தொகை கூறினார் வகையுள் ஒன்றனையுஞ் சொல்லெச்சமென்றமையான், அவ்வகையுள் ஒன்றாகிய சொல்லெச்சமென்பது சொல் விகற்பங்களின்றிச் சொல்லென்னுஞ் சொல் எஞ்சி நிற்பதென்பதூஉம், பெற்றாம். 'சொல்லெ னெச்ச முன்னும் பின்னுஞ்—சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே.' என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரென்க. இவ்வாசிரிய வசனத்திற்கு இப்பொருளன்றி வேறு பொருள் கூறுவாருமுளர். அதுநிற்க.

வ - று. செய்த சாத்தன்; செய்கின்ற சாத்தன்; செய்யுஞ் சாத்தன். எ-ம். நல்ல சாத்தன். எ-ம். பெயரெச்சங்கள் தம்மெச்சமாகிய செய்பவனது பெயர்கொண்டன. ஏனைக் கருவி முதலைந்தோடுமொட்டுக. வினைத்தொகைகளும் பெயரெச்சமாய் அடங்குதலின், அவையும் முற்றெச்சங்களுமன்ன. செய்து வந்தான்; செய்து நல்லனாயினான்; செய்து நல்லன்; செய்து வருதல். எ-ம். விருந்தின்றியுண்ட பகல். எ-ம். வினையெச்சங்கள் தம்மெச்சமாகிய வினை வினைக்குறிப்புந் தொழிற்பெயருங் கொண்டன. காட்டாதொழிந்த வினையெச்சங்களும் முற்றெச்சங்களுமன்ன. இவ்வெச்சத்திற்கு முடிபாகிய வினைக்குறிப்பு ஆக்கமொடு வருதலும் அது தொக வருதலும் 'ஆக்க வினைக்குறிப்பு' என்னுஞ் சூத்திரத்துள் அமைந்து கிடந்தன. சாத்தனும் வந்தான் என்னும் உம்மையெச்சம் முன்னர்க் கொற்றன் வந்தான் எனத் தன்னெச்சங்கொண்டது. 'மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே—கடியென்றார் கற்றறிந்தார்;' 'இசையா வொருபொருளில்லென்றல் யார்க்கும் —வசையன்று' என்பன சொல்லெச்சம். கடியென்று சொன்னார் இல்லென்று சொல்லுதல் எனச் சொல்லென்னுந் தம்மெச்சங் கொண்டன. இவை பெயரெச்சம் வினையெச்சமென்றாற்போலச் சொல்லென்னு மெச்சத்தையுடைய இடைச்சொல்லைச் சொல்லெச்சமென்றலின் ஆகுபெயர். மேனவரும் எனவெனெச்ச மொழிந்தனவும் அன்ன. சாத்தனே கொண்

டான், சாத்தனே கொண்டான் என்பன பிரிநிலையெச்சம். இவை பிறர் கொண்டில ரெனத் தம்மெச்சங்கொண்டன. கோடற்றொழி லாற் சாத்தனி னின்றும்பிரிக்கப்பட்டார் பிறராதலிற் பிரிநிலை யென்க. கடலொல் லெனவொலித்தது; நரம்பு விண்ணென விசைத்தது; தலையிடி யென விடித்தது என்பன எனவெச்சம். இவை தம்மெச்சமாகிய வினை கொண்டன. மிகவுமொலித்தது மிகவுமிசைத்தது மிகவுமிடித்தது என்பன இவற்றிற்குப் பொரு ளாமாதலின், இவ்வென வெச்சம் மிகுதிப்பொருட்டருவதோரிடைச் சொல்லாமென்க. 'தெய்வந் தொழா அள் கொழுநற்றொழுதெழு வாள்—பெய்யெனப்பெய்யு மழை' என்பதனுள் எனவென்பது, பெய்யெனச் சொல்ல என வினைப்பொருட்டருதலின், இடைச் சொல்லடியாகப் பிறந்த செய வெனெச்சமாய் முன்னர்ப் போந்த வினையெச்சத்துள் அடங்குமென்க. கூரியதோர் வாண்மன், வரு கதில்லம்ம, கொளலோகொண்டான் என்பன ஒழியிசையெச்சம். இவை முறையே கோடிற்று வந்தால் இன்னது செய்வல் கொண் டுய்யப் போயினனல்லன் எனத் தம்மெச்சங்கொண்டன. வரலு முரியன், யானே செய்தேன் என்பன எதிர்மறையெச்சம். இவை முறையானே வாராமைக்கு முரியன், யான் செய்கிலன் எனத் தம்மெச்சங்கொண்டன.

இதுகாறும் வினையியலின் ஒழிபாகிய பெயரெச்ச வினை யெச்ச முடிபும் இடையியலின் ஒழிபாகிய ஏனையறுவகையெச்ச முடிபும் எடுத்து விதந்தார். இவ்வாறெடுத்து விதத்தற்கு வரையறைப் படாது வருஞ் சொல்லெச்சங்களையெல்லாந் தொகுத்து இசை யெச்சமென இறுதிக்கட் கூறினார். இசையென்பது சொல். இசை யெச்சமெனப் பொதுபடக் கூறினமையின் இவ்வெச்சமும் இதுகொள்வதும் பெயர் வினையிடையுரியென்னு நால்வகைச் சொல்லுள் ஒன்றும் பலவுந் தனித்துந் தொடர்ந்தும் வருமென் பது பெற்றாம். அவற்றுட்சில விசை யெச்சங்கள் வருமாறு: 'இண ரெரி தோய்வன்ன வின்னா செயினும்—புணரின் வெகுளாமை நன்று.' என்புழிப் பிறவுயிர்க்கு இன்னாசெயின் அவை பிழையாது தமக்கு வருதல் கருதித் தம்மாட்டன்பும், பிறவுயிர்கண்மாட் டருளும், இன்னா செய்தலான் மேன்மேல் வளரும் பிறப்பிறப்



பினச்சமும் நம்மாலின்னா செயப்பட்டாரை நாமடைந்திரத்தல் கூடினுங்கூடும் அதனால் யார்மட்டுமின்னா செயக்கடவமல்லமென் னும் வருங்கால வுணர்ச்சியும் இலராய், ஒருவர் தன்னாலாற்றல் கூடாத இன்னாதனவற்றைத் தன்கட்செய்தாராயினும், அவர் தமக்கு வேண்டுவதோர் குறை முடித்தல் கருதிநாணாது தன்னை யடைந்தாராயின் அவர் செய்தலின்னாமை கருதி அவரை வெகு ளாது அவற்றை மறந்து அவர் வேண்டுங் குறை முடித்து முன் செய்த இன்னாமையால் அவர் கூசியொழுகுதறவிர்தற்குக் காரணமாகிய மெய்ப்பாடு முதலியன தன்கட்குறிப்பின்றி நிகழ, அவர்க்கினியனாகியிருத்தல், தன்சால்புக்கு நன்று என நால்வகைச் சொற்களுள் வேண்டுவனவெல்லாந் தந்து அகலங் கூறவேண்டி நிற்பன இசையெச்சமாமென்க. பிறவுமன்ன.

இனிக் குறிப்பெச்சங்களாவன ஒன்றொழி பொதுச்சொன் முதலிய குறிப்புச்சொற்களாம், குறிப்பானுணரப்படுவன முறையே எஞ்சி நிற்றலின். அவை அவ்வெச்சங்கொள்ளுமாறு:—பெருந் தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுளர் என்புழி மக்களென்னும் பொதுப்பெயர் பெண்மக்களெனப் பெண்ணென் னுஞ் சிறப்புப் பெயர்கொண்டது. 'குறுத்தாட்பூதம்.' என்புழித் தகரவல்லொற்று அதற்கினமாகிய மெல்லொற்றையும் 'மரையிதழ் புரையும்' என்புழிமரையென்பது தாவென்னு முதலெழுத்தையுங் கொண்டன. வாய்பூசி வருதும் என்பது எச்சில் கழித்து வருது மென்பது கொண்டது. புளி தின்றான் என்பது பழமாகிய புளி யெனப் பழமென்பது கொண்டது. பொற்றொடி என்பது பொற் றொடியையுடையாளென இரண்டாமுருபும் அதன் பயனிலையுங் கொண்டது. நல்லனிவன் என்பது பெயர்ப்பொருள் கொள்ளாது வினைக்குறிப்புப் பொருளோடு நல்லனாயினானிவன் என ஆக்கங் கொண்டது. 'அறத்தாறிதுவென வெள்ளைக்கிழிபு' என்பது 'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை—பொறுத்தானோ டூர்ந்தா னிடை.' என்பது கொண்டது. 'அலங்குளைப்புரவி யைவரொடு சினைஇ' என்பது தருமன் வீமன் அருச்சுனன் நகுலன் சகாதேவன் என்பன கொண்டது. 'பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்—சால மிகுத்துப் பெயின்.' என்பதூஉம் உண்ணாநின்றான்

(கற்கறித்துழி அட்டோன் முகநோக்கி நன்கட்டாய்)என்பதூஉம் மெலியராயினும் பலர் தொகின் வலியரையும் வெல்வர் என்பதனையும் நன்கட்டாயல்லை என்பதனையும் முறையே கொண்டன. பிறவுமன்ன. இவை ஒன்றொழி பொதுச்சொன் முதலிய குறிப்பெச்சங்கள் தம்மெச்சங் கொண்டன. இதனைக் குறிப்புச் சொல்லெச்சமென்னாது குறிப்பெச்சமென்றார், சொல்லேயன்றிப் பொருண் மாத்திரையும் எழுத்தும் எஞ்ச வருவனவும் உளவாதலினென்க. இப்பத்தெச்சங்கட்கும் வேறு பொருள் கூறுவாருமுளர். அவையெல்லாம் இசையெச்சமாயுங் குறிப்பெச்சமாயும் அடங்குமாதலானும் பெயரெச்ச வினையெச்ச முதலியவற்றிற்கு ஆங்காங்கு முடிபு கூறாராயினார் ஈண்டெச்சங்களையெல்லாந் தொகுத்துக் கூறும்வழி முடிபுகூறாராயிற் குன்றக்கூறலென்னுங் குற்றமாமாதலானும் அது பொருந்தாதென்க. (9)

## தொகை நிலைத்தொடர்மொழி.

361. பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளி னவற்றி னுருபிடை
ஒழியவிரண்டுமுதலாத்தொடர்ந்தொரு[சொல்.
மொழிபோனடப்பன தொகைநிலைத்தொடர்ச்

எ - னின். பெயர்க்கும் வினைக்குமாவதோர் விதியுணர்-ற்று.

இ - ள். பெயர்ச்சொல்லோடு பெயர்ச்சொல்லும் பெயர்ச்சொல்லோடு வினைச்சொல்லும் 'வேற்றுமை வினை பண்பு' எனப் பின்னர் வகுத்துக்கூறும் அறுவகைப்பொருட் புணர்ச்சிக்கண் அவற்றினுருபுகள் இடையே தொக்கு நிற்ப இரண்டு முதலிய பல சொற்கடொடர்ந்து ஒருமொழி போனடப்பன யாவை அவை தொகை நிலைத்தொடர்ச்சொற்களாம். எ - று.

தொகையென்னும் பலபொருளொருசொல் ஈண்டு உருபு மறைதலையுணர்த்தி நின்றது, "ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்—மெய்யுருபு தொகா விறுதியான." என்பவாகலின்.



வினையொடுவினை தொகைநிலைத்தொடராகாமையின் அதனையொழித்தும் நிலத்தைக்கடந்தான் நிலங்கடந்தான் என உருபிடை விரியற் பிளவுபட்டுந் தொக்கதேற் பிளவுபடாதுந் தொடருமாதலின் ஒருமொழிபோலென்றுங் கூறினார்.

ஒருமொழிபோனடத்தலாவது கொல்யானை வந்தது நிலங்கடந்தான் சாத்தன் என இரண்டு முதலிய பலசொற்றொடர்ந்து ஒரு பெயராயும் வினையாயும் நின்று தம்முடிபேற்றலெனப் பொருள் கூறின்:—அவ்வாறு தொகாநிலைத்தொடருங் கொன்றயானை வந்தது நிலத்தைக் கடந்தான் சாத்தன் என நடக்குமாதலின் அது பொருந்தாதென்க. (10)

### வேற்றுமைத் தொகை.

362. வேற்றுமை வினைபண் புவமையும்மை
அன்மொழி யெனவத் தொகையா றாகும்.

எ - னின். மேல் 'வேற்றுமை முதலிய' என்றார் அவை இவையென்பதுணர்-ற்று.

இ - ள். வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் உவமைத்தொயையும் உம்மைத்தொகையும் அன்மொழித்தொகையுமென மேற்கூறிய தொகை நிலைத் தொடர்ச்சொல் அறுவகைப்படும். எ - று. (11)

363. இரண்டு முதலா மிடையா றுருபும்
வெளிப்பட வில்லது வேற்றுமைத் தொகை
[யே.

எ - னின். நிறுத்தமுறையானே வேற்றுமைத்தொகையாமாறுணர்-ற்று.

இ - ள். எழுவாய்க்கும் விளிக்குமிடையே நின்ற இரண்டாவது முதலிய ஆறுவேற்றுமையுருபுந் தொக்க தொடர்ச்சொற்கள் வேற்றுமைத்தொகைகளாம். எ - று.

வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கட் பெயரொடு பெயரும் வினையுங் கூடிய கூட்டத்தை வேற்றுமைத்தொகையென்றதன்றென்பார் ஆறுருபும் வெளிப்படவில்லதென்றார். ஏனைத்தொகைகளும் அன்ன.

வ-று. நிலங்கடந்தான், தலைவணங்கினான், சாத்தன்மகன், ஊர் நீங்கினான், சாத்தன்கை, குன்றக்கூகை, யானைக்கோட்டு நுனிகுறைத்தான் என ஆறுருபும் இடையே தொக்கவாறு காண்க.

இடையே தொக்கதனைத் தொகைநிலைத்தொடரென்றமையானே, கடந்தானிலம் இருந்தான் குன்றத்து என இறுதிக்கட்டொக்குப் பிளவுபட்டு நின்றன. தொகாநிலைத்தொடராகாவோவெனின்:—நிலங்கடந்தான் குன்றத்திருந்தான் என்பனவற்றை ஒரோவழி மாறிக் கூறுதலிற் பிளவுபட்டு நின்றனவன்றி அவையும் இடைக்கட்டொக்க தொகைநிலைத் தொடரேயாமென்க.

இனி ஆறுருபுமென்னு முற்றும்மையை எச்சவும்மையாக்கிப் பொற்குடம் என ஒரோவழி உருபும் பொருளும் உடன்றொக்கதூஉம் வேற்றுமைத்தொகையெனக் கொள்க அது விரியுழிப் பொன்னாற்செய்த குடம் என விரியும். பிறவுமன்ன. (12)

## வினைத்தொகை.

364. காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

எ-னின். வினைத்தொகையாமாறுணர்-ற்று.

இ-ள். காலம் பற்றிப் புடைபெயர் வினையுருபாகிய தம்மிறுதிகள் தொக்கு நிற்பச், செய்வதாதியறுபொருட் பெயராகிய தம்மெச்சங்கொண்ட பெயரெச்சங்கள் வினைத் தொகைகளாம். எ-று.

முதனிலை வினையுருபு தொகாது நிற்பப் புடைபெயர்ச்சி வினையுருபு தொக்கனவற்றை வினைத்தொகையெனப்படுமென்பார் காலங் கரந்தவென ஆகுபெயராற் கூறினார். புடைபெயர்ச்சி வினைகளை முதனிலையொழிந்த இறுதிகள் காட்டி நிற்றலின் அவ்வினைகட்கு அவையுருபாயின.



வ-று. நெருநலடுகளிறு, இன்றடுகளிறு, நாளையடுகளிறு, வெல்களம், தொழில், பொழுது, கந்து என வரும். இவை விரியுழி நெருநலட்டகளிறு இன்றடாநின்றகளிறு நாளையடுங்களிறு என விரியும். இவை முறையே இறந்தகால வினைத்தொகை நிகழ்கால வினைத்தொகை எதிர்கால வினைத்தொகையெனப்படும். இஃது ஒவ்வொரு காலத்தையே பற்றாது முக்காலமும் பற்றி நெருநலுமட்டகளிறு இன்றுமடாநின்ற களிறு நாளையுமடுங்களிறு என விரியவரின் முக்கால வினைத்தொகையெனப்படும். இங்ஙனங் காலவிகற்பம் பற்றிப் புடைபெயர்வினை கருதாது அரிவாள் ஆவுரிஞ்சுதறி என்றாற்போல அடுகளிறென்பது இத்தொழிற்குரியது இஃதென்னும் பொருள்படவருமாயின், வினைத்தொகைக் குறிப்பெனப்படுமென்க. இவ்வாறே ஏனை வினைத்தொகைகளையெல்லாம் உய்த்துணர்ந்துகொள்க. இதற்கு வருமொழி பெயராகலின் இத்தொகை நிலைபாயே தொடரும் இரண்டிறந்த மொழிகளிலவென்க. அட்டது களிறு அடாநின்றது களிறு அடுவது களிறு என முற்றுக்களிறுதி தொகுதலின் அடுகளிறென வினைத்தொகையாயிற்றெனின்:—அடுகளிறிது அடுகளிறு வந்தது எனப் பின்னுமோர் பெயர் வினைகளையேற்றலின் அவையன்றெனவும், அடுவென்னு முதனிலைவினையாகிய காரணத்தின்கண் முக்காலவினையாகிய காரியங்கடொக்கு நிற்றலின் அடுகளிறென வினைத்தொகையாயிற்றெனிற் காரணத்தின்கட் காரியந் தொக்கு நிற்றற்குக் களிறென்னு முடிக்குஞ்சொல் வேண்டாமையின் அஃதொருமொழி யிலக்கணமன்றி இங்ஙனம் அதிகரித்த தொடர்மொழியிலக்கணமன்மையின் அஃதன்றெனவும், விலக்கிப், பெயரெச்சத்திறுதி தொக்கது வினைத்தொகையென்றார். (13)

## பண்புத்தொகை.

365. பண்பை விளக்கு மொழிதொக் கனவும்
ஒருபொருட்கிருபெயர்வந் தவுங்குணத்தொகை.

எ-னின். பண்புத்தொகையாமாறுணர்-ற்று.

இ-ள். குணப்பெயரோடு குணிப்பெயர் புணருங்கால் அக்குணியோடுகுணத்துக்குண்டாகிய ஒற்றுமை நயத்தை

விளக்குதற்கு ஆண்டுவரும் ஆகியவென்னு மொழியாகிய பண்புருபு தொக்கு நிற்பனவும் அப்பண்புருபு தொக்குநிற்பப் பொதுப் பெயருஞ் சிறப்புப் பெயருமாய் ஒரு பொருட்கு இருபெயர் வந்தனவுமாகிய இவ்விரண்டும் பண்புத் தொகைகளாம். எ - று.

குணத்தொகையென்றமையான் ஒரு பொருட்கிருபெயர் வந்தனவற்றின்கண்ணும் பண்புருபு தொகுமென்பது பெற்றாம்.

வ - று. செந்தாமரை, கருங்குவளை, வட்டக்கல், சதுரப் பலகை, ஒரு பொருள், இருபொருள், தீங்கனி, துவர்க்காய். எ-ம். ஆயன் சாத்தன், வேழக்கரும்பு, அகரமுதல, சகரக்கிளவி. எ-ம். செந்நிறக் குவளை, கரும்புருவச்சிலை. எ-ம். வரும். இவை விரியுழிச் செம்மையாகிய தாமரை ஆயனாகிய சாத்தன் செம்மையாகிய நிறமாகிய குவளை என விரியும். இவ்வாகியவென்னும் உருபின் கண் ஆக்கவினையின்மையின் இலக்கணையாற் செய்தவென்னும் வாய்பாட்டின்பாற் படுவதோர் வினையிடைச்சொல். ஆ யென்னும் பொதுப்பெயர் சாத்தனென்னுஞ் சிறப்புப்பெயரை விசேடித்தும் வேழமென்னுஞ் சிறப்புப்பெயர் கரும்பென்னும் பொதுப்பெயரை விசேடித்தும் வந்தன. பிறவுமன்ன.

முற்றெச்சமாகிய காலத்து முற்றுப்பொருளை யொழித்து எச்சப்பொருளை யுணர்த்தி நின்றாற்போல, ஆயன் வேழமென்றற் றொடக்கத்து நிலைமொழிகள் பண்பிச்சொல்லாயினும் அப்பண்பி களை யொழித்துப் பொதுப்பண்பினையுஞ் சிறப்புப்பண்பினையு முணர்த்தி வருமொழிக்கு அடையாய் நிற்றலின் அவையும் பண்புத் தொகையாயின.

ஆகியவென்பதன்று பண்பை விளக்குமொழியென்பது மைவிகுதியென்றாலென்னையெனின்:—ஒரு மொழிக்குறுப்பாகிய விகுதியை மொழியென்றல் கூடாமையானும் வட்டஞ் சதுர முதலிய பண்பிற்கு அவ்விகுதியின்மையானும் வட்டக்கல் என்புழி மகரவீறு கெட்டுப் புணர்ந்தாற்போல மையீறு கெட்டுப் புணர்ந்த தென்பது 'ஈறுபோதல்' என்னுஞ் சூத்திரத்தாற் பெறுதலானும் அஃதன்றென்க.



செய்யதாமரை என்னுமெச்சவிறுதி தொக்கது இத்தொகை யென்பாரும், 'செய்யது தாமரையென்னு முற்றிறுதிதொக்கது இத்தொகையென்பாருமுளர். இவையும் மொழியன்மையானும் வட்டக்கல் முதலிய பண்புத்தொகைக்கு அவ்வெச்சவிறுதி விரித்தல் கூடாமையானும் அவ்வெச்சவிறுதி தொக்கதேல் அதனை வினைத்தொகைக் குறிப்பென்றல் கூடுமன்றிப் பண்புத் தொகையென்றல் கூடாமையானும் முற்றிறுதி தொக்கதேற் பண்புத்தொகையென்றல் கூடாமையேயன்றிச் செந்தாமரையிது செந்தாமரை விரிந்தது என மேற்பெயர் வினையேற்றல் கூடாமை யானும் அது பொருந்தாதென்க.

இனிக் குணியோடு குணத்துக்குண்டாகிய ஒற்றுமைநயங் கருதாது ஒருபொருளைக் குணகுணியாகப்பிரித்து அவ்வேற்றுமை நயங் கருதிச் செம்மையையுடைய தாமரையென விரிக்கின் இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளும் உடன்றொக்க தொகை யாமென்க. பிறவுமன்ன. (14)

---

## உவமத்தொகை.

366. உவம வுருபில துவமத் தொகையே.

எ - னின். உவமத்தொகையர்மா றுணர்-ற்று.

இ - ள். வினைப்பான் மெய்யுருவென்பனபற்றி வரும் உவமவுருபுகள் தொக்க தொடர்ச்சொற்கள் உவமத்தொகைகளாம். எ - று.

வ - று. புலிக்கொற்றன், மழைக்கை, துடியிடை, பொற் சுணங்கு. எ-ம். குருவி கூப்பிட்டான் சக்கரஞ்சுற்றிவந்தான். எ-ம். மரகதக் கிளிமொழி, இருண்மழைக்கை. எ-ம். வரும். இவை விரியுழிப் புலியைப்போலுங் கொற்றன் குருவியைப்போலுங் கூப்பிட்டான் மரகதத்தைப்போலுங் கிளியைப்போலுமொழி. என விரியும். இறுதிக்கட் காட்டிய இரண்டிறந்த தொடர் உவமைக்குவமையன்று, முன்னது உருவுவமையும் பின்னதுபயனு வமையுமாதலினென்க.

இவை இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளும் உடன்றொக்க தொகையன்றே உவமைத்தொகையென்ற தென்னையெனின்:—செயப்படுபொருள் கருதிக் கூறியவழி இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளும் உடன்றொக்க தொகையாகவும், உவமைப்பொருள் கருதிக் கூறியவழி அதனையே உவமத்தொகையாகவும் கொள்ளப்படுமென்க. (15)

---

## உவமவுருபுகள்.

367\. போலப் புரைய வொப்ப வுறழ
மானக் கடுப்ப வியைய வேய்ப்ப
நேர நிகர வன்ன வின்ன
என்பவும் பிறவு முவமத் துருபே.

**எ - னின்.** உவமவுருபு இயற்சொன் மாத்திரையாய் நில்லாது திரிசொல்லாற் பலவாதலின் அவை இவையெனவுணர்-ற்று.

**இ - ள்.** போலவென்பது முதலிய செயவெனெச்சம் பத்தும், அன்ன இன்னவென்னும் பெயரெச்சக் குறிப்பிரண்டும், இவைபோல்வன பிறவும் உவமவுருபுகளாம். எ - று.

இன்னவென்பது அருகியன்றி வாராமையிற் பிற்கூறினர்.

பிறவென்றமையானே போலப் புரையவென்றற்றொடக்கத்து வினையடியாகப் பிறத்தற்குரிய ஏனை வினையெச்ச விகற்பங்களும் பெயரெச்ச விகற்பங்களும் பொருவ ஏற்ப அனையவென்றற்றொடக்கத்தனவுங் கொள்க.

வ - று. குருவிபோலக் கூப்பிட்டான், குருவி புரையக் கூப்பிட்டான், புலியன்ன கொற்றன் எனப் பெயரொடு வினை புணருங்கால் வினையெச்ச வுருபுகளனைத்தினையும், பெயரொடு பெயர் புணருங்காற் பெயரெச்ச வுருபுகளனைத்தினையும் விரித்துக் கொள்க.

பெயரொடு பெயர் புணரினும் புலியைப்போலப் பாயுஞ்சாத்தன், மழையைப்போலக் கொடுக்குங்கை, துடியைப்போலச் சுருங்



கிய விடை, பொன்னைப்போல விளங்கிய சுணங்கு என வினையெச்சவுருபு விரிந்தல்லது நால்வகையுவமையும் விளங்காமையின் அவ்வுருபை முன்னரெடுத்து விதந்தாரென்க. (16)

---

## உம்மைத்தொகை.

368\. எண்ண லெடுத்தன் முகத்த னீட்டல்
எனுநான் களவையு ளும்மில தத்தொகை.

**எ - னின்.** உம்மைத்தொகையாமாறுணர்-ற்று.

**இ - ள்.** எண்ணலளவை எடுத்தலளவை முகத்தலளவை நீட்டலளவை என்னு நால்வகையளவைகளாற் பொருள்களை யளக்குங்காற்றொடரும் அவ்வளவைப் பெயர்களுள் உம்மையாகிய உருபு தொக்கு நிற்பன உம்மைத் தொகைகளாம். எ - று.

எண்ணலளவையான் அளத்தலேயன்றி அவ்வளவையை எடுத்தன் முதலிய கருவியின்பாற்படுத்தளத்தலின் அளவை நான்கென்றதன்றி எண்ணலளவையே அளவையாதலின் அஃது முற்கூறப்பட்டது.

வ - று. கபிலபரணர், இராப்பகல், புலிவிற்கெண்டை, அறுபத்து மூவர், ஆயிரத்தைஞ்ஞூற்றைம்பத்தொன்றே காலேயரைக் காலரை மாகாணி முந்திரி. எ-ம். கழஞ்சேகால், கழஞ்சரையேயரைமாவரைக்காணி முந்திரி. எ-ம். நாழியாழாக்கு, கலனே முக்குறுணி நாழியாழேக்கே முச்செவிடு. எ-ம். சாணரை, சாணரையேயரைக்கால். எ-ம். வரும். இவை விரியுழிக் கபிலனும் பரணனும் இராவும் பகலும் புலியும் வில்லுங் கெண்டையும் அறுபதின்மரு மூவரும் என விரியும். பிறவுமன்ன. இவற்றுள் அறுபதென்பது எண்ணலளவையாய்த் தொடராது எண்ணுறழ்ச்சியாய்த்தொடர்ந்தமையின் உம்மைத் தொகையன்று பண்புத்தொகையாமென்க. கபிலபரணர் என்பது எண்ணுப்பெயராகிய தென்னையெனின்:—கபிலபரணரிருவரும் வந்தார் எனத் தொகை பெறுதலினென்க.

இவை போல்வன பிறவுமன்ன. கபிலபரணர்ப் பரவினன் என வரும் வழிக் கபிலனையும் பரணனையும் பரவினனென்ன வேற்றுமை யுருபும் உடன் விரியுமாலோவெனின்:—பரவினனென்னும் வருமொழி நோக்கி வேற்றுமைத் தொகையாகவுங் கபில பரணரென்னும் நிலைமொழி யிரண்டனையும் நோக்கி உம்மைத் தொகையாகவுங் கொள்ளப்படுமென்க. இவ்வும்மை இடையினும் இறுதியினும் ஒருங்கு தொகுமென்பார் அதிகரித்த முறையானே இடைக்கட்டொகும் வேற்றுமைத்தொகை முதலிய நான்கிற்கும் இடையே தொகுமென்ற பொதுவிதி மாற்றி இறுதிக்கட்டொகுமெனக் கூறும் அன்மொழித் தொகைக்கும் இடையே இத்தொகை வைத்தாரென்க. எண்ணிடைச்சொற்கள் உம்மையேயன்றிப் பிறவுமுளவேனும் அஃதியற்சொல்லாதலின் உம்மைத் தொகையெனப் பட்டது. (17)

### அன்மொழித்தொகை.

**369. ஐந்தொகைமொழிமேற்பிறதொகலன்மொழி.**

எ - னின். அன்மொழித்தொகையாமாறுணர்-ற்று.

இ - ள். வேற்றுமைத் தொகை முதலிய ஐவகைத் தொகைநிலைத் தொடர்மொழிகட்கும் புறத்து அவையல்லாத பிறமொழிகளாகிய உருபுகடொகுதல் அன்மொழித் தொகையாம். எ - று.

மேலென்றமையான் 'அவற்றினுருபிடையொழிய' என்ற பொதுவிதியை விலக்கினரென்பது பெற்றாம்.

வ - று. பூங்குழல், பொற்றொடி, கவியிலக்கணம், பொற்றாலி, கிள்ளிகுடி, கீழ்வயிற்றுக்கழலை எ-ம். தாழ்குழல், கருங்குழல், துடியிடை, தகரஞாழல். எ-ம். தகரஞாழன்முலை. எ-ம். வரும். இவை விரியுழிப் பூவையுடைய குழலினையுடையாள் பொன்னாலாகிய தொடியினையுடையாள் கவிக்கிலக்கணஞ் சொன்ன நூல் பொன்னினாகிய தாலியினையுடையாள் கிள்ளியது குடியிருக்குமூர் கீழ்வயிற்றின்கணெழுந்த கழலைபோல்வான். எ-ம். தாழ்ந்த குழலினை யுடையாள் கருமையாகிய குழலினையுடையாள் துடியன்ன



இடையினை யுடையாள் தகரமுஞாழலும் விராய்ச் சமைந்த சாந்து. எ-ம். தகரமுஞாழலும் விராய்ச் சமைந்த சாந்தையணிந்த முலையினையுடையாள். எ-ம். விரியும்.

இனி இரண்டிறந்த மொழிகளின் அறுவகைத் தொகையும் விரவித் தொகுமாறு:—திகழ்செய்வான் மதித் திருமுகப்பூங்குழல் என வரும். இவை விரியுழித் திகழ்ந்த செம்மையாகிய வானத்தின்கண் மதிபோலுந் திருமுகத்தினையும் பூவையுடைய குழலினையுமுடையாள் என விரியும். (18)

### தொடர்மொழிகளுள் பொருள் சிறக்கும் இடம்.

**370. முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி**
**எனுநான் கிடத்துஞ் சிறக்குந் தொகைப்**
**[பொருள்.**

எ - னின். தொகைநிலைத் தொடர்ச்சொற்கள் ஒன்றுபடத் தொடர்ந்தனவேனும் அப்பொருளும் ஒன்றுபடத் தொடராது பிளவுபட்டு ஓரிடத்துச் சிறந்தும் ஓரிடத்துச் சிறவாதும் நிற்குமென்பதுணர்-ற்று.

இ - ள். தொகைநிலைத் தொடர்மொழிகளின் முன்மொழிக் கண்ணேனும் பின்மொழிக் கண்ணேனும் அனைத்துமொழிக்கண்ணுமேனும் அனைத்துமொழிக்கும் புறமொழிக் கண்ணேனுஞ் சிறந்து நிற்குந் தொகைநிலைத் தொடர்ப் பொருள். எ - று.

இவ்விடங்களிற் சிறக்குமெனவே ஏனையிடங்களிற் சிறவாது நிற்குமென்பது பெற்றாம்.

தன்னியல் பிறவாமற் பன்மொழியென்றார்.

வ - று. குடம் வனைந்தான், குழிசி வனைந்தான், வேங்கைப்பூ சண்பகப்பூ, முண்மரம், முள்ளின்மரம், விரிபூ, குவிபூ, செந்தாமரை, வெண்டாமரை, வேற்கண், கயற்கண் என்பனவற்றுட் குட முதலிய முன்மொழிகள் இனம் விலக்கி நிற்றலின் அம்முன்

மொழிக்கட் பொருள் சிறந்தும் வளைந்தான் முதலிய பின்மொழிக்கட் சிறப்பின்றியும் நின்றன. நிலமுழுதான், கண்ணிமை, நீர்க்குவளை, முட்டாட்டாமரை, சுடுதீ, செஞ்ஞாயிறு, தாய்தலையன்பன் என்பனவற்றுள் நிலமுதலிய முன்மொழிகள் இனமும் இனத்தை விலக்குதலுமின்றி வாராநின்றமையின் அம்முன்மொழிக்கட் பொருள் சிறப்பின்றியும், உழுதான் முதலிய பின்மொழிக்கட் பொருள் சிறந்தும் நின்றன. உழுதானென்ற துணையானே நிலத்தையென்பது தாமே போதருமாதலிற் பின்மொழிக்கட் பொருள் சிறந்தனவாயின. ஏனையவுமன்ன. கபிலபரணர் புலி விற்கெண்டை என்றற்றொடக்கத்து உம்மைத் தொகைகள் அனைத்துமொழிக்கண்ணும் பொருள் சிறந்தன. பூங்குழல், தாழ்குழல், என்றற்றொடக்கத்து அன்மொழித் தொகைகள் அனைத்து மொழிக்கண்ணும் பொருள் சிறப்பின்றி அனைத்து மொழிக்கும் புறமொழிக்கட் பொருள் சிறந்து நின்றன.

தொகைநிலைத்தொடர்கள் உருபு தொகுதலிற் சொல்லாற் பிள்வுபடாதும் பொருளாற் பிளவுபட்டும் இவ்வாறு வருமெனவே தொகாநிலைத் தொடர்கள் உருபு தொகாமையின் இவ்விரு திறத்தானும் பிளவுபட்டுப் புறமொழியொழிந்த மூன்றிடத்தும் இவ்வாறு பொருள் சிறந்து நிற்குமென்பது தாமே போதருமென்க. அவையும் இவ்வாறே காண்க. அங்ஙனமாயிற்றொகைநிலை தொகாநிலையிரண்டற்கும் இறுதிக்கண் இவ்விலக்கணங் கூறாது ஈண்டுக் கூறியதென்னையெனின்:—புறமொழிக்கட் பொருள் சிறத்தல் தொகாநிலைத்தொடர்க்கு இன்மையினென்க.

இனி முன்மொழி பின்மொழிகளுட் பொருள் சிறந்தனவற்றிற்கு ஒருவர்க்கொருவர் மலைந்து பொருள் கூறுவாருமுளர். அம்மலைவு அவர் காட்டு முதாரணங்களுட் காண்க. (19)

## இடத்தொகை பெயர்த்தொகை வேறுபாடு.

371. வல்லொற்று வரினே யிடத்தொகை யாகும்
மெல்லொற்று வரினே பெயர்த்தொகை
[யாகும்



எ - னின். இடத்தின்கட்டொக்க தொகையோ பெயரின்கட்டொக்க தொகையோவென்றை யுறற்பாலனவற்றுட் சிலவற்றைத் துணிதற்காவதோர் குறியுணர்-ற்று.

இ - ள். வல்லொற்று இடையே வந்துழி இடத்தின் கட்டொக்க தொகையாம்; மெல்லொற்று இடையே வந்துழிப் பெயரின்கட்டொக்க தொகையாம். எ - று.

மெல்லொற்றருகி வருதலிற் பிற்கூறினார்.

வ - று. வடுகக்கண்ணன், வடுகங்கண்ணன்; கன்னடக் கொற்றன், கன்னடங்கொற்றன், துளுவச்சாத்தன், துளுவஞ் சாத்தன் என வரும். பிறவுமன்ன இவை விரிப்பு, வல்லொற்று வரின் வடுகநாட்டிற் பிறந்த கண்ணன் எனவும், மெல்லொற்று, வரின் வடுகனாகிய கண்ணன் எனவும் விரியும். வடுகனென்பது தந்தை பெயராய் மெல்லொற்று வரின் வடுகற்கு மகனாகிய கண்ணன் என விரியும். ஏனையவுமன்ன.

வல்லொற்றுவரின் மெல்லொற்று வரினென்றமையான் 'இயல்பினும் விதியினு நின்றவுயி'ரீற்று மொழிமுன் வல்லின முதன்மொழிவந்து இடத்தொகையும் பெயர்த்தொகையுமாய் ஐயுற நிற்கின் இக்குறியாற்றுணியப்படு மென்பதூஉம் வடுக நாகன் வடுக வணிகன் வடுக வரசன் என வரிற் சொல்லுவான் குறிப்பானன்றி இவ்வாறு துணியப்படாவென்பதூஉந் தாமே போதருமென்க. (20)

## உம்மைத்தொகைப் புறனடை.

372. உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே.

எ - னின். உம்மைத்தொகைக்காவதோர் விதியுணர்-ற்று.

இ - ள். உயர்திணை பொருமைப்பாலின்கண் வரும் உம்மைத்தொகைகள் ரவ்வீறுங் கள்ளீறுமாகிய பலரீற்றனவே யாம். எ - று.

பலரீறேயென்றமையான் ஒருமைப்பாலென்பது பெற்றாம்.

வ - று. கபிலபரணர் கல்லாடமாமூலர் சேரசோழபாண்டியர் தேவன்றேவிகள் பார்ப்பான் பார்ப்பனிகள் வில்லிவாளிகள் என வரும்.

இவ்வொருமைகள் இத்துணையரென்னும் பொருள்பட நிற்றலிற் பலரீற்றவாயின.

னகரவீறு இடையே கெடுதல் 'சில விகாரமா முயர்திணை' என்பதனானும், இறுதிக்கட் கெடுதல் இதனுட் பலரீறேயென்பதனானுங் கொள்க.

பலரீறேயென்னுந் தேற்றத்தான் அஃறிணையொருமை யும்மைத்தொகைகளும் பொதுவொருமையும்மைத்தொகைகளும் தத்தம் பன்மையீற்றனவேயாமென்னும் நியதியவல்லவென்றாராயிற்று. அவை வருமாறு: உண்மையின்மைகள் உண்மையின்மை; நன்மைதீமைகள் நன்மைதீமை; இராப்பகல்கள் இராப்பகல்; நிலநீர்தீக் காற்றாகாயங்கள், நிலநீர்தீக்காற்றாகாயம். எ-ம். தந்தைதாயர், தந்தைதாய்கள், தந்தைதாய், சாத்தன் சாத்தியர், சாத்தன்சாத்திகள், சாத்தன்சாத்தி. எ-ம். பன்மையீற்றானும் இயல்பாய ஒருமையீற்றானும் வந்தன. இயல்பாகிய ஒருமையீற்றான் வந்தனவேல் உம்மைத்தொகையன்றிக்கபிலன் பரணனிருவரும்வந்தார் என்றாற்போலச் செவ்வெண்ணும் பிறவெனின்:—பலமொழிகளையுந் திரட்டி ஒருபிண்டமாகக் கூறியவழி உம்மைத்தொகையாகவும் பிளவுபடக் கூறியவழிச் செவ்வெண்ணாகவுங் கொள்ளப்படுமென்க. (21)

## தொகைநிலைத் தொடர்கள் பலபொருள்படுதல்.

373\. தொக்குழி மயங்குந விரண்டு முதலேழ்
எல்லைப் பொருளின் மயங்கு மென்ப.

**எ - னின்.** தொகைநிலைத்தொடர்ச்சொற்கள் உருபு தொக்கு நின்றமையிற் சில பொருளான் மயங்குமாறுணர்-ற்று.

**இ - ள்.** வேற்றுமையுருபு முதலிய வுருபுகள் தொக்கு நின்றவழிப் பொருள்களான் மயங்குமியல்பினவாகிய தொடர்ச்சொற்கள் இரண்டு முதல் எழீறாகிய பொருள்களான் மயங்கும் என்று சொல்லுவர் புலவர். எ - று.



தொக்குழியெனவே தொகாவிடத்து மயங்காவென்பதூஉம், மயங்குவன மயங்குமெனவே மயங்குமியல்பில்லன மயங்காவென்பதூஉம், பொருளெனப் பொதுப்படக் கூறினமையிற் றொகைநிலைப்பொருளானுந் தொகாநிலைப்பொருளானுந் தொகைநிலைத் தொடர்ச்சொன் மயங்குமென்பதூஉம் பெற்றாம்.

வ - று. தெய்வவணக்கம், தாழ்குழல் என்பன, தெய்வத்தை வணங்கும் வணக்கம், தெய்வத்துக்கு வணக்கம், தாழ்ந்தகுழல், தாழ்ந்த குழலினையுடையாள் என இருபொருளான் மயங்கிய ஒரு தொடர்த்தொகைச்சொல். தற்சேர்ந்தார் கடிப்பகை என்பன தன்னைச்சேர்ந்தார், தன்னொடு சேர்ந்தார், தன்கட்சேர்ந்தார், கடிக்குப்பகை கடியினதுபகை, கடியாகியபகை என மூன்று பொருளான் மயங்கிய ஒருதொடர்த் தொகைச்சொல். சொல்லிலக்கணம் என்பது சொல்லினதிலக்கணம், சொற்கிலக்கணம், சொல்லின்கணிலக்கணம், சொல்லிலக்கணஞ்சொன்ன நூல் என நான்கு பொருளான் மயங்கிய ஒரு தொடர்த்தொகைச்சொல். பொன்மணி என்பது பொன்னானாகிய மணி, பொன்னாகிய மணி, பொன்னின்கண்மணி, பொன்னொடு சேர்ந்த மணி, பொன்னு மணியும் என ஐந்துபொருளான் மயங்கிய ஒரு தொடர்த்தொகைச்சொல். மரவேலி என்பது மரத்தைக்காக்கும் வேலி, மரத்துக்கு வேலி, மரத்தினது வேலி, மரத்தின் புறத்துவேலி, மரத்தானாகியவேலி, மரமாகியவேலி என ஆறுபொருளான் மயங்கிய ஒரு தொடர்த்தொகைச்சொல். சொற்பொருள் என்பது: சொல்லானறியப்படும் பொருள், சொல்லினதுபொருள், சொற்குப்பொருள், சொல்லின்கட்பொருள், சொல்லும்பொருளும், சொல்லாகிய பொருள், சொல்லானது பொருள் என எழு பொருளான் மயங்கிய ஒரு தொடர்த்தொகைச்சொல், சொல்லானதுபொருளென்றதுதொகாநிலைப்பொருளாகிய எழுவாய். சொல்லான் அறியப்படும் பொருள் சொல்லின் அறியப்படும் பொருள் என மூன்றாவதனோடு ஐந்தாவதும் விரிப்பாருமுளர். அவையிரண்டற்கும் எதுப்பொருளொன்றேயாதலின் அது வேற்றுப் பொருளான் மயங்கியதன்றென்க. 'வாளைமீனுள்ள றலைப்படல்' என்பது வாளைமீனை உள்ள றலைப்படல்' வாளைமீன் உள்ளத்தலைப்படல் என இரண்டாவதும்

எழுவாயுமாகிய இருபொருளான் மயங்கிய பலதொடர்த்தொகைச் சொல். புலிகொல் யானைகுரங்கெறி விளங்காய்என்பன: புலியைக் கொன்றயானை, புலியானது கொன்ற யானை, புலியாற்கொல்லப் பட்ட யானை, குரங்கையெறிந்த விளங்காய், குரங்கான தெறிந்த விளங்காய், குரங்காலெறியப்பட்ட விளங்காய்என இரண்டாவதும் எழுவாயும் மூன்றாவதுமாகிய மூன்று பொருளான் மயங்கிய பல தொடர்த்தொகைச்சொல். பிறவுமன்ன.

இவ்வாறு செம்பொருள் கொள்ளாது வலிந்து பொருள் கொள்ளப்புகின் எழெல்லையென்னும் வரையறையின்றில்லாது பலவாமாதலின் அதுதொன்னெறியன்றென்பார் என்பவென்றார்.

இனி அலர்முல்லை என்னும் வினைத்தொகை முதலியன மயங் காதனவாம். அலரையுடைய முல்லையென மயங்குமாலோ வெனின்:—அலரென்பது வினைத்தொகைக்கண் வினையாயும் வேற்றுமைத்தொகைக்கட் பெயராயுஞ் சொல் வேறுபட்டமையின் அது பொருளான் மயங்கியதன்றென்க. (22)

---

## தொகாநிலைத்தொடர்மொழி.

374. முற்றீ ரெச்ச மெழுவாய் விளிப்பொருள்
ஆறுரு பிடையுரி யடுக்கிவை தொகாநிலை.

**எ - னின்.** நால்வகைச் சொற்குமாவதோர் விதியுணர்-ற்று.

**இ - ள்.** முற்றும் பெயரெச்சமும் வினையெச்சமும் எழுவாயும் விளியுமாகிய ஐவகைப்பொருளின்கட் பெயர் வினைகள் புணரும் புணர்ச்சியும் வேற்றுமைப் பொருளின் கண் அவற்றின் உருபாகிய இரண்டாவது முதலிய ஆறும் இடையே விரிந்து நிற்பப் பெயர் வினைகள் புணரும் புணர்ச்சி யும் ஏனை இடைச்சொற் புணர்ச்சியும் உரிச்சொற் புணர்ச்சி யும் ஒரு சொல்லடுக்கிவரும் புணர்ச்சியுமாகிய ஒன்பதுந் தொகாநிலைத்தொடராம். எ-று.

தொகாநிலையென்றமையாற் காலங் கரவாத பெயரெச்சம் ஈண்டுக் கொள்க.



வ - று. உண்டான் சாத்தன், குழையன் கொற்றன், உண்ட சாத்தன், நல்ல சாத்தன், உண்டு வந்தான், உழுதன்றி யுண்ணான், சாத்தன் வந்தான், கொற்றா கொள், குடத்தை வனைந்தான், வாளாலெறிந்தான், இரப்போர்க்கீந்தான், மலையினிழிந்தான், சாத்தனது கை, மணியின்கணொளி, அது கொறோழி காமநோயே, நனிபேதையே நயனில் கூற்றம், பாம்புபாம்பு என முறையே காண்க.

வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் விரிந்தவழி வேற்றுமைத்தொகாநிலையும் பெயரெச்சத்தொகாநிலையுமாமென் றார் ஏனை நான்குதொகையும் விரிந்தவழித் தொகாநிலையென்பத னுள் எவையாம் பிறவெனின்:—பண்புத்தொகையும் உவமைத் தொகையும் உம்மைத்தொகையும் விரிந்தவழி இடைச்சொற் புணர்ச்சியும், அதன்மொழித்தொகை விரிந்தவழி வேற்றுமைத் தொகாநிலைமுதல் ஏற்பனவுமாமென்க. (23)

---

## வழாநிலை வழுவமைதி.

375. திணையே பாலிடம் பொழுது வினாவிறை
மரபா மேழு மயங்கினும் வழுவே.

**எ - னின்.** வழுவறிந்தல்லது அவற்றைக் களைதல் கூடாமை யின் அவை இவையென வுணர்-ற்று.

**இ - ள்.** திணைமுதலாக மரபீறாக வருமேழுந் தத்தநெறி மயங்கின் வழுவாம். எ - று.

திணை முதலியவனைத்தும் மரபாமாயினும் இங்ஙனம் விதவா தொழிந்தனவற்றை மரபெனக் கொள்கவென்பார் அதனை இறுதிக்கட் கூறினார்.

வ - று. அவன் வந்தது என்பது திணைவழு. அவன் வந்தாள் என்பது பால்வழு. யான் வந்தான் என்பது இடவழு. நாளை வந்தான் என்பதுகாலவழு. கறக்கின்றவெருமை பாலோசினையோ ஒருவிரல் காட்டிச் சிறிதோ பெரிதோ என்பது வினாவழு. கடம்

பூர்க்கு வழி யாதெனின் இடம்பூணியென்னுவின் கன்றன்று, கருவூர்க்கு வழியாதெனிற் பருநூல் பன்னிருதொடி என்பது விடைவழு. யானை மேய்ப்பானை இடையன், ஆடுமேய்ப்பானைப் பாகன். யானைச்சாணி, எருமையிலத்தி என்பது மரபுவழு. இவ்வாறே இவ்வெழுவகை வழுவிகற்பங்களெல்லாம் உணர்ந்துகொள்க. (24)

### வினுவிடைகள் வழுவாமற் காத்தல்.

**376.** ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்
மெய்தெரிபொருண்மே லன்மையும்விளம்புப.

**எ - னின்.** திணையொடு, வினுவிடையும் பாலொடு வினுவிடையும் வழுவாது காத்தலுணர்-ற்று.

**இ - ள்.** திணையயத்தினை அவற்றின் பொதுச்சொல்லானும் பாலையத்தினை அவற்றின் பொதுச்சொல்லானுந் துணிந்த பொருண்மேல் அல்லாத தன்மையினைவைத்துங் கூறுவர் புலவர். எ - று.

வ - று. குற்றியோ மகனோவெனத் திணையயந் தோன்றிய வழிக் குற்றியோ மகனோ அங்ஙனந் தோன்றுநின்றது தோன்றுநின்றான் எனச் சிறப்புச்சொல்லாற் கூறிற் றிணைவழுவும் வினுவழுவுமாம். அவையொழித்துக் குற்றியோ மகனோ அங்ஙனந் தோன்றுநின்றவுரு எனப் பொதுச்சொல்லாற் கூறுக. உருவென்பது பொதுச்சொல்லாய் வழாநிலையாயதென்னையெனின், குற்றிக்கும் மகனுக்கும் உருப்பொதுப்பட நின்றமையினென்க. ஆண்மகனோ பெண்மகளோ என உயர்திணைப்பாலையந் தோன்றிய வழி ஆண்மகனோ பெண்மகளோ அங்ஙனந் தோன்றுநின்றான் தோன்றுநின்றாள் எனச் சிறப்புச் சொல்லாற் கூறிற் பால்வழுவும் வினுவழுவுமாம், அவையொழித்து ஆண்மகனோ பெண்மகளோ அங்ஙனந் தோன்றுநின்றார் எனப்பொதுச்சொல்லாற் கூறுக. தோன்றுநின்றாரென்பது பொதுச்சொல்லாய் வழாநிலையாயதென்னையெனின் ஆண்பெண்ணிரண்டல்லது பலர்பாலென வேறொன்றின்றி அவ்விருபாற்கும் பொதுமையினிற்றலினென்க. ஒன்றோ பலவோ என அஃறிணைப் பாலையந் தோன்றியவழி



ஒன்றோ பலவோ இச்செய் புந்கது புக்கன எனச் சிறப்புச் சொல்லாற் கூறிற் பால்வழுவும் வினுவழுவுமாம். அவையொழித்து ஒன்றோ பலவோ இச்செய்புக்க பெற்றம் எனப் பொதுசொல்லாற் கூறுக.

இனி மெய் தெரிந்த பொருள் குற்றியெனின் மகனன்று எ-ம். மகனெனிற் குற்றியல்லன். எ-ம். ஆண்மகனெனிற் பெண் மகளல்லன். எ-ம். பெண்மகளெனின் ஆண்மகனல்லள். எ-ம். கூறுக. மகனன்று குற்றியெனக் கூறிற் குற்றியோ மகனோவென வினுவினுர்க்கு மகனன்றெனினமையும்; குற்றியென மேல்வைத்துக் கூறல் வேண்டாகூறலாம். மகனன்றென்பதனை மகனினன்றென ஐந்தாம் வேற்றுமைப் புணர்ச்சியென்பாருமுளர். அது போல்வரு நீயல்லனென்பதும் அங்ஙனம் விரித்தல் கூடாமையின் அல்வழிப் புணர்ச்சியுள் எடுத்து விதந்த பதினுன்கின் புறத்ததாய் அடங்குமென்க. ஏனைமூன்று காட்டுமன்ன.

மெய்தெரியாப் பொருண்மேல் அல்லாத தன்மையினை வைத்து மகனல்லன் குற்றியெனிற் குற்றியென்னும் பயனிலைக்கு எழுவாய் தந்து மகனல்லன் அவ்வுருக்குற்றியெனக் கூறல்வேண்டும், அங்ஙனங் கூறவே சொற்பல்குதலென்னும் விடைவழுவுமாம். அவ்வழு வாராது மெய்தெரிபொருண்மேலன்மையும் விளம்புப வென்றார். (25)

### திணைவழு வமைதி.

**377.** உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்
அதனொடு சார்த்தி னத்திணை முடிபின.

**எ - னின்.** திணை வழுவமைப்புணர்-ற்று.

**இ - ள்.** உயர்திணையைத் தொடர்ந்த அஃறிணைப் பொருளாதியவாறும் உயர்திணையோடு சார்த்தி முடிப்பின் உயர்திணை முடிபினவாம். எ - று.

தொடர்தலாவது அஃறிணைப்பொருளாதியாறும் உயர்திணைக்குக் கிழமைப்பொருள்களாய் நிற்றல்.

சார்த்தலாவது உயர்திணையெழுவாயின் பயனிலையோடு அஃறிணையெழுவாயினையும் உடன்முடித்தல்.

உயர்திணை தொடர்ந்த பொருண்முதலாறென்றமையிற் பொருளென்பது உயர்திணைப்பொருளன்றென்பதாம்.

வ-று. நம்பி பொன்பெரியன், நாடுபெரியன், வாணாள்பெரியன், மூக்குக் கூரியன், குடிமை நல்லன், நடைகடியன் எனவரும்.

'சொற்றொறு மிற்றிதன்பெற்றி' என்பதனானே கிணறு நீருற்று மாடு கோடு கூரிது என அஃறிணையோடு சார்த்தின் அஃறிணை முடிபினவாதலுங் கொள்க. சார்த்தினெனவே சார்த்தாவிடின் வழாநிலையாய்ப் பொன் பெரிது, மூக்குக் கூரிது எனத் தம் முடிபு கொள்ளுமென்க. பொன்னென்னும் அஃறிணையெழுவாய், நம்பியென்னும் உயர்திணையெழுவாயினது பயனிலையாகிய பெரியனென்னும் உயர்திணைவினைக்குறிப்பைக் கொண்டுமுடிதலின் வழுவாய், தொடர்புண்மை கருதிச் சார்த்தி முடித்தலின் அமைதியாயிற்றென்க. பொன்னினது பெருமையையுடையன் என ஆறுருபு விரித்து வழாநிலையென்றாலென்னையெனின்:—வேற்றுமைப் புணர்ச்சிக்குரிய எழுத்துச்சந்தியின்மையின் அது பொருந்தாதென்க. பிறவுமன்ன. (26)

## திணைபால் மரபு வழுவமைதி.

378. திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினு மிழிபினு மொருமுடி பினவே.

எ-னின். திணைபான் மரபு வழுவமைப்புணர்-ற்று.

இ-ள். திணையும் பாலும் வேறுவினைப் பல பொருள்களும் விரவி நின்றவழி அவை பலவும் ஒரு முடிபினவாஞ் சிறப்பினானும் மிகுதியினானும் இழிபினானும். எ-று.

வ-று. 'அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந்—திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்-றிங்கண்—மறுவாற்றுஞ் சான்றோ ரஃதாற்றார் தெருமந்து—தேய்வ ரொருமா சுறின்.' எ-ம். 'பழியஞ்சான் வாழும் பசுவு மழிவினாற்—கொண்ட வருந்தவம் விட்டானுங்-கொண்டிருந்—தில்லஞ்சி வாழு மெருது மிவர்மூவர்—நெல்லுண்ட நெஞ்சிற்கோர் நோய்.' எ-ம். இவை திணை விரவிச் சிறப்பினான் உயர்திணைமுடிபேற்றன. இழிந்தோரையெண்ணியபின் அதனுட் சிறப்பென்னையெனின்:—பசு விட்டான் எருது என்னு மூன்றனுள் விட்டானென்பது உயர்திணையாண் சிறப்பு. பசு எருது என்பன உயர்திணைப்பொருளவேனும் அஃறிணையாக உருவகப்படுத்தினமையின் இங்ஙனம் அமைக்கப்பட்டன; 'தன்பான் மனையா ளயலான்றலைக் கண்டுபின்னு—மின்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலா—நன்பாற் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பா—ரென்பாரை யோம்பே னெனின்யா னவனாகவென்றான். எ-ம். 'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்—மூத்தார் குழவி யெனுமிவர்கட்—காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்—போற்றி யெனப்படுவார்.' எ-ம். இவை திணை விரவி மிகுதியினான் உயர்திணை முடிபேற்றன. 'நசைதரவந்தோர் நசை பிறக்கொழிய வசைபட வாழ்ந்தோர் பலர்கொல்—புரையினற் பனுவனூஅல் வேதத் தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை நெய்ம்மலி யாகுதி பொங்கப்—பன்மாண்வீயாச் சிறப்பின்வேள்விமுற்றியூப நட்டவியன்களம் பலகொல்யா பல கொல்லோ பெரும' என இவை சிறப்பினான் அஃறிணை முடிபேற்றன. 'எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தெய்வ—முச்சந் தலையோ டிவையென்ப யாவருந்—திட்பத்தாற் றீண்டாப் பொருள்.' என இவை மிகுதியினான் அஃறிணைமுடிபேற்றன. 'வடுக ரரிவாளர் வான்கரு நாடர்—சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்—குறுகா ரறிவுடையார்.' எ-ம். 'மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா.' எ-ம். இவை இழிபினான் அஃறிணைமுடிபேற்றன. பன்மை யொருமுடிபினவென்னாது ஒருமுடிபினவென வாளா கூறினமையின் 'தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்.' எனத் திணைவிரவிச் சிறப்பினான் ஆண்பான் முடிபேற்றலும் 'தொல்லை நால்வகைத் தோழருந் துணைமணி நெடுந்தேர்—மல்லற்றம்பியு மாமனு மதுவிரி கமழ்தார்ச்—செல்வன் றாதையுஞ் செழுநக ரொடுவள நாடும்—வல்லை தொக்கது வளங்கெழு கோயிலு ளொருங்கே.' எனத் திணை விரவிச் சிறப்பினான் ஒருமை முடிபேற்றலுங் கொள்க. 'நானுமென்

சிந்தையு நாயகனுக் கெவ்விடத்தோந்—தானுந்தன் னையலுந் தாழ் சடையோ னாண்டிலனேல்.' என வாண்பாலும் பெண்பாலும் விரவிச் சிறப்பினானொருமுடிபேற்றன.

'சொற்றொறு மியற்றிதன்பெற்றி' என்பதனானே விரவாதெண்ணித் தோழனுந் தானும் வந்தான், தோழியுந்தானும்வந்தாள் என முடிதலுங்கொள்க. கறியுஞ்சோறு முண்டான், மாலையுமுடியுங் கவித்தான், குஞ்சமுங் குடையுங் கவித்தான், சாந்தமு மாலையுந் தழுவினான் என வேறுவினைப்பல்பொருள் விரவிச் சிறப்பினான் ஒருமுடிபேற்றன. பிறவுமன்ன.

இங்ஙனம் இறுதிக்கட் கூறிய மரபுவழுவமைதி 'வேறுவினைப் பல்பொருடழுவிய பொதுச்சொலும்' என்னுஞ் சூத்திரத்தோடு மாறுகொளக் கூறலாம் பிறவெனின்:—சிறப்பு முதலிய கருதாது ஒத்தநிலைமையினெண்ணியவழி முடியுமரபு அங்ஙனங் கூறுதலின் அது மாறுகொளக் கூறலன்றென்க. 'பாணன் பறையன் கடம்பன் றுடியனென்—றந்நான் கல்லது குடியுமில்லை.' என உயர்திணை யெண்ணி அஃறிணை முடிபினவாய வழு யாண்டமைக்கப்படுமெனின் குடியென்பதனைப் பாணன் முதனான்கோடுங் கூட்டி உரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க.

இனிப்பால் விரவி ஒரு முடிபேற்பனவற்றிற்கு ஒருவன் கொல்லோ பலர் கொல்லோ இச்செய் புக்கார் என உதாரணங் காட்டின், 'ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்' என்பதனான் வந்தனவன்றி ஈண்டைக் காகாமையானும் இங்ஙனங்காட்டிய இலக் கியங்கட்கு இலக்கணமின்மையானும் அது காட்டன்றென்க. ()

## பால்திணை வழுவமைதி.

379. உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினு
இழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே. [ம்

எ - னின். திணைபால் வழுவமைப்புணர்-ற்று.

இ - ள். உவப்புமுதலிய ஐந்தினும் பாலுந் திணையும் வழுவி வரினும் இயல்பாம். எ - று.



பாலை முற்கூறினார் அவ்வழுவமைதி பயின்று வருதலின். இழுக்கினுமென்னுமும்மை உவப்பு முதலியவற்றின் இழுக்கியே வருமென்னு நியதியவல்லவென்னும் பொருட்டு நின்றது.

வ - று. தன்புதல்வனை என்னம்மை வந்தாளென்பது உவப்பின் ஆண்பால் பெண்பாலாயிற்று. ஒருவனை அவர் வந்தாரென்பது உயர்வினொருமைப்பால் பலர்பாலாயிற்று. 'தாதாய் மூவே ழுலகுக்குந் தாயே' என்பது சிறப்பின் ஆண்பால் பெண்பாலாயிற்று. 'எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்—தேரான் பிறனில் புகல்.' என்பது செறலிற் பலர்பாலொருமைப் பாலாயிற்று. பெண்வழிச் செல்வானை நோக்கி இவன் பெண்ணென்பது இழிவினாண்பால் பெண்பாலாயிற்று. ஓராவினை என்னம்மைவந்தாள் என்பதுஉவப்பின் அஃறிணைஉயர்திணையாயிற்று. 'செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோ ரின்னுரை—தந்தாரேற் றந்தாரென் னின்னுயிர்.' என்பது உயர்வின் அஃறிணையுயர்திணையாயிற்று. 'தம்பொரு ளென்பதம் மக்கள்' என்பது சிறப்பின் உயர்திணை யஃறிணையாயிற்று. 'எவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்—போஒ மளவுமோர் நோய்.' என்பது செறலின் உயர்திணை யஃறிணையாயிற்று. நாமரனுடைமை என்பது இழிப்பின் உயர்திணையஃறிணையாயிற்று. பிறவுமன்ன. (28)

'சொற்றொறுமியற்றிதன் பெற்றி' என்பதனானே புதல்வனை அப்பன் வந்தான் என்றும் புதல்வியை அம்மைவந்தாள் என்றும் வரு மரபுவழுவமைதிகளுங் கொள்க. இவ்வழுவமைதி உருவகவுவமைகளின் வழுவியமைவனவொழியக் கொள்க.

## பால் இட வழுவமைதி.

380. ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமை
ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே. [யும்

எ - னின். முற்கூறிய உவப்பு முதலிய காரணத்தானன்றி அமைந்த பால்வழுவமைப்பும் அவ்வாறமைந்த இடவழுவமைப்புமுணர்-ற்று.

இ - ள். ஒருமைப்பாலின்கட் பன்மைச்சொல்லைத் தழுவிக் கூறுதலும் பன்மைப் பாலின்கண் ஒருமைச் சொல்லைத் தழுவிக் கூறுதலும் ஓரிடத்தின்கட் பிறவிடச் சொல்லைத் தழுவிக் கூறுதலும் உளவாம். எ - று.

வ - று. வெயிலெல்லா மறைத்தது மேகம், இக்குளத்து நீரெல்லாங் கொண்டுய்த்தானிவன். எ-ம். இரண்டுகண்ணுஞ் சிவந்தது. 'இருநோக்கிவளுண்கணுள்ளது' எ-ம். அஃறிணைக்கண் ஒருமையிற் பன்மையும் பன்மையினொருமையும் வந்தன. 'அஃதை தந்தையண்ணல் யானை யடுபோர்ச் செழியர்.' எ-ம். 'புலையனை றிந்த பூசற் றண்ணுமை—யேவ விளையர் தாய்வயிறு கரிப்ப.' எ-ம். உயர்திணையொருமையிற் பன்மையும் பன்மையினொருமையும் வந்தன. 'சாத்தன்ருயிவை செய்வலோ' 'கல்விய னென்னும் வல்லான் சிறுஅ—ரொல்வே னல்ல தய்வா யாகுதல்.' என்பது தன்மையின்கட் படர்க்கை வந்தது. 'திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செருக்க லாகு— நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ண லாகு—மொண்பொரு ளாவ தையா வுடன்பிறப் பாக்கலாகா—வெம்பியை யீங்குப் பெற்றேனென்னெனக் கரியதென்ருன்.' என்பது முன்னிலைக்கட் படர்க்கை வந்தது. நீயோ வவனே யாரிதுசெய்தார், யானேவவனே யாரிது செய்தார். நீயோ யானே யாரிதுசெய்தார், நீயோ வவனே யானே யாரிது செய்தார், என விரவி ஓரிடத்தின்கட் பிறவிடம் வருதலுங் கொள்க. பிறவுமன்ன.

ஒருபாற்பொருளை மற்ருெருபாற் சொல்லானும் ஓரிடப் பொருளை மற்ருெரிடச் சொல்லானுங் கூறுதலின் வழுவாய் அவை சான்ருேர்க்கொப்ப முடிந்தமையின் அமைதியாயின.

'ஒருவீ ரொருவீ ரொப்பினிர் கழிமின்.' யானெம்மூர் புகுவன் என்பன ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதியெனின்:—ஒருவீ ரொருவீ ரொப்பினை கழிவை யெனின் வழாநிலையாக வேண்டும். அங்ஙனமாகாமையின் 'ஒருவரென்பதுயரிருபாற்ருய்' என்னுஞ் சூத்திரத்துள் 'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே.' என்பதனான் அமைந்த வழாநிலையாம். யானெம்மூர் புகுவன் என்புழித் தன் கிளையினைத் தன்னொடு படுத்து எம்மூரென்ருனதலின் வழாநிலையாம். இத்தொடக்கத்து வழாநிலைகளை



இவ்வழுவமைதியாக உதாரணங் கூறுவார் கூற்றையெல்லாம் உய்த்துணர்ந்து களைக. (29)

### இடம் வழுவாமற் காத்தல்.

381. தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை
எழுவா யிரண்டு மெஞ்சிய வேற்கும்.

எ - னின். இடம்வழுவற்கவெனக் காத்தலுணர்-ற்று.

இ - ள். இந்நால்வகைச் சொற்களையும் படர்க்கைசாரும் இவற்றுண் முதற்கணின்ற தரல் வரலென்னும் இருவகைச் சொற்களையும் தன்மை முன்னிலைகளேற்கும். எ - று.

தரல் வரல் கொடை செலலென்பன அப்பகுதிகளையுணர்த்தி நின்றன.

வ - று அவனுக்குத்தந்தான், அவன்பால் வந்தான், அவனுக்குக் கொடுத்தான், அவன்பாற் சென்ருன். எ-ம். எனக்குத் தந்தான், என்பால் வந்தான். எ-ம். நினக்குத்தந்தான், நின்பால் வந்தான். எ-ம். வரும். இப்பகுதியிற் பிறந்த ஏனை வினைவிகற்பங்களோடுந் தொழிற்பெயரோடும் இவ்வாறே ஒட்டுக.

இவைபடர்க்கை இவை தன்மைமுன்னிலையென்னுது சாரும் ஏற்கும் என்றமையான், இடவிகுதிகள் போல் இவையிடப்பகுதிகளாகாது அவ்விடங்கட்கியைந்த மரபினவாமென்பதூஉம், தரல் வரலென்னு மிரண்டனையுந் தன்மை முன்னிலைக்குங் கூட்டினமையிற் படர்க்கைக்கே சிறந்தன கொடைசெலலென்னும் இரண்டுமென்பதூஉம், ஏனைத் தரலும் வரலும் அதத்துணைச்சிறப்பினவல்லவென்பதூஉம், இந்நெறி மயங்கி எனக்குக் கொடுத்தான் என்பாற் சென்ருன் நினக்குக் கொடுத்தான் நின்பாற் சென்ருன் எனவரின் முன்னர்க் கூறிய இடவழுவமைதியின் பாற்படுமென்பதூஉம் பெற்ரும். படர்க்கைக்குப் பின்னைய விரண்டுஞ் சிறந்தும் முன்னைய விரண்டும் அத்துணைச் சிறப்பின்றியும் வருதல் காட்டிய வுதாரணங்களுட் காண்க. (30)

### காலம்.

382. இறப்பெதிர்வு நிகழ்வெனக் கால மூன்றே.

**எ - னின்.** முன்னர் வழுவுணர்த்துஞ் சூத்திரத்துண் முதற்கணின்ற திணைபாலிடங்களின் பெயருமுறையுந் தொகையும் பெயரியலுட் போந்தமையின் அவற்றையொழித்து, இறுதிக்கணின்ற காலமுதனான் கினையுமுணர்த்தினல்லது அவற்றின் வழுவும் வழாநிலையும் வழுவமைதியுந் தோன்றாமையின் அவற்றுட் காலத்தின் பெயரும் முறையுந் தொகையுமுணர்-ற்று. பிறிதோரிலக்கணங் கூறியமுகத்தான் முன்னர் விளங்கிக் கிடந்த கால விகற்பங்களை ஈண்டுத் தொகுத்துணர்த்தினமையின் இது முடிந்தது முடித்தலென்னுமுத்திக்கினம்

**இ - ள்.** முன்னர்க் கூறிய காலம் இறந்த காலமும் எதிர்காலமும் நிகழ்காலமுமென மூன்றும். எ - று.

யாதொரு பொருளுந் தோன்றுமளவிற் றோன்றி வளருமளவின் வளர்ந்து முதிருமளவின் முதிர்ந்து அழியுமளவி னழியுமன்றி உயிர்கள் வேண்டியவாறாகாமையின் அவற்றை அவ்வளவின் அவ்வாறியற்றுவது காலமெனவும் அதனாலியலும் பொருள்களின்றொழில் இறந்ததும் எதிர்வதும் நிகழ்வதுமாதலின் அவ்வாறியற்றுங் காலமும் மூன்று கூற்றதாமெனவும் உய்த்துணர்தலின், இங்ஙன முணராது காலமின்றெனவும் நிகழ்காலமொன்றுமே யெனவும் இறந்தகாலம் எதிர்கால மிரண்டுமே யெனவுங் கூறுவார் கூற்றைவிலக்கிக் காலமூன்றே யென்றார். இதன் றிறம் இன்னும் விரித்துரைப்பிற் பெருகும். நிகழ்காலம்போல வெள்ளிடைப் பொருளன்றி இறந்தகாலம் எதிர்காலமிரண்டும் மறைபொருளாய் நிற்றலின் இறப்பு நிகழ்வென்னாது இறப்பெதிர்வென்றார். (31)

### காலவழுவமைதி.

383. முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே.

**எ - னின்.** காலவழுவமைப்புணர்-ற்று.

**இ - ள்** தங்தொழில் இடையறாது முக்காலத்தினும் ஒருதன்மையவாய் இயலும்பொருள்களை நிகழ்காலத்தாற் கூறுவர் புலவர். எ - று.



வ - று. அவனியைத்தாங்கி யரசரிருக்கின்றார், நினக்குத் துணையானிருக்கின்றேன், எனக்குத் துணை நீயிருக்கின்றாய், தெய்வமிருக்கிறது, நிலங்கிடக்கிறது, மலைநிற்கிறது, யாறொழுகுகிறது என வரும்.

இதற்குச் செய்யுமென்னுமுற்றை உதாரணங் காட்டுவாருமுளர். அது பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையாகவரு முக்காலத்தினு மொத்தியல் பொருட்கு இயையாமையானும் அவ்வழக்கின்மையானும் அது பொருந்தாதென்க. யாறொழுகும் தீச்சுடும் என வழங்குமாலோவெனின் அது ஒழுகுந் தன்மையையுடையது சுடுந்தன்மையையுடையது என்னும் பொருட்டாய் நிற்றலின் 'இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்' என்னுஞ் சூத்திரத்தின்பாற்படுமென்க. யாறொழுகுவது தீச்சுடுவதென்பதுமது. (32)

384. விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்
பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி.

**எ - னின்.** இதுவுமது.

**இ - ள்.** விரைவு மிகுதி தெளிவென்னு மூன்றுகாரணத்தினானும் இக்காரணமின்றியும் முக்காலங்களையும் ஒன்றையொன்றாகக் கூறப்படும் ஏற்குமிடத்து. எ - று.

காரணமின்றியென்பார் இயல்பினுமென்றும், பிறழ்தல் ஒருதலையன்றென்பார் பிறழவுமென்றும், விரைவு முதலிய நான்கினுந் தனித்தனி முக்காலங்களும் முறையே பிறழாவென்பார் ஏற்புழியென்றுங் கூறினார்.

வ - று. சோறு வேவாநிற்ப அஃதுண்டுபோதற்பொருட்டாக விருந்தோனொருவனைப்புறத்து நின்றானொருவன் இருவரும்போக வேண்டுங் குறையுடைமையின் இன்னுமுண்டிலையோவென்றால் உண்டே னுண்டேனென்னும், உண்ணாநின்றானும் உண்டேனுண்டேனென்னும் இவைவிரைவின் எதிர்காலமும்நிகழ்காலமும் இறந்தகாலமாயின. அக்காட்டிற் புகிற் கூறைகோட்பட்டான், கள்வா னினையிற் கையறுப்புண்டான். இது மிகுதியின் எதிர்

காலம் இறந்தகாலமாயிற்று. கூறைகோட்படுதலுங் கையறப்புண்ணுதலுந் தவறினுந் தவறுமாதலின் இது மிகுதியர்யிற்று; அறஞ்செயிற் சுவர்க்கம் புக்கான், எறும்பு முட்டைகொண்டு திட்டையேறின் மழை பெய்தது. இது தெளிவின் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. உரையளவையானுங் காட்சியளவையானும் இவற்றிற் கிவைகாரணமாகத் தெளிந்தமையின் இது தெளிவாயிற்று. யாம் பண்டு விளையாடுவதிக்கா, யாம் பண்டு விளையாடுகிறதிக்கா. இது காரணமின்றி இயல்பினான் இறந்தகாலம் எதிர்காலமும் நிகழ் காலமுமாயிற்று. பிறவுமன்ன. இவ்வுதாரணங்களுட் சிலவற்றை மாறிக் காட்டுவாருமுளர். அவை பொருந்தாமை அப்பொருள்களானுணர்க. உழுதுவருக உண்டு வருக என்புழி உழுது உண்டு என்பனவற்றையும் இயல்பின் எதிர்காலம் இறந்தகாலமாய் மயங்கினவென்பாருமுளர். வருதலை நோக்குங்கால் அவை இறந்தகாலமேயாதலின் வழாநிலையாமென்க. (33)

## அறுவகைவினா.

385. அறிவறி யாமை யையுறல் கொளல்கொடை
ஏவ றரும்வினா வாறு மிழுக்கார்.

எ - னின். வினாவின் பெயரு முறையுந் தொகையுமுணர்-ற்று.

இ - ள். அறிவு முதலியன தருதலான் வரும் வினாவாறனையுங்களையாது கொள்வர் புலவர். எ - று.

வ - று. ஆசிரியன் இச்சூத்திரத்திற்குப் பொருள்யாதென்பது அறிவினா. மாணக்கன் அவ்வாறு கூறுவது அறியாவினா. குற்றியோமகனோவென்பது ஐயவினா. பொன்னுளவோ மணியுளவோ வென்பது கொளல் வினா. சாத்தற்காடையில்லையோவென்பது கொடைவினா. சாத்தா வுண்டாயோவென்பது ஏவல்வினா இவற்றுள் அறிவுமறியாமையும் இவ்விரண்டும் விரவிய ஐயமுமன்றி வினாவைத் தருவதொன்றின்மையின் அவற்றை முற்கூறி ஏனையவும் அவற்றின்கணடங்குமேனும் கொளல் கொடை ஏவலென்னும் பொருள் விசேடத்தான் வேறு விதந்து பிற்கூறி மூன்றாகற் பாலனவற்றை ஆறாகக் கூறுதல் தொன்றுதொடு நெறியென்பார்



ஆறுமிழுக்காரென்றுங் கூறினர். "அறியான் வினவ லறிவொப்புக்காண்டலையமறுத்த லவனறிவு தான்கோடன்—மெய்யவற்குக் காட்டலோ டைவகை வினாவே" என்னும் ஒருசாராசிரியர் கூற்றினுள்ளும் பின்னையவிரண்டும் முன்னைய மூன்றனுள் அடங்குமென்பதுதோன்ற அவற்றை முற்கூறுதல் காண்க. (34)

## எண்வகை விடை.

386. சுட்டு மறைநே ரேவல் வினாதல்
உற்ற துரைத்த லுறுவது கூறல்
இனமொழி யெனுமெண் ணிறையு ளிறுதி
நிலவிய வைந்துமப் பொருண்மையி னேர்ப.

எ - னின். இறையின் பெயரும் முறையுந் தொகையும் வழுவமைதியுமுணர்-ற்று.

இ - ள். இவ்விறையெட்டனுள், முன்னைய மூன்றுஞ் செவ்வனிறையாம்; பின்னைய ஐந்தும் இறைப்பொருள் பயத்தலின் இறையாகத் தழீஇக்கொள்வர் புலவர். எ - று.

எனவே இறையாவது செவ்வனிறையும்; இறை பயப்பதுமென இருகூற்றதாமென்க.

வ - று. வஞ்சிக்கு வழியாதென்றவழி இதுவென்றும் மாவீந்நொச்சியென்பதற்குப் பொருள் யாதென்றவழி வண்டு வீழ்ந்து தேனுண்ணு நொச்சிப்பூவென்றுங் கருதிக் கூறுந் தொடக்கத்தனவெல்லாஞ் சுட்டு. சாத்தாவிது செய்வாயோவென்றவழிச் செய்யேனென்பது மறை. செய்வேனென்பது நேர். நீ செய்யென்பதேவல், செய்வனோவென்பது வினாதல். இவ்வோகாரவிடைச் சொற்கு எதிர்மறை முதலிய பொருள் விலக்கி ஆற்றலான் வினாப்பொருளே கொள்க உடம்பு நொந்தது நோவாநின்றது என்பது உற்றதுரைத்தல். நோவாநின்றதென்பது நிகழ்காலமாயினும் நோவெழுந்த காலங் கருதி உற்றதுரைத்தலாயிற்று. உடம்புநோமென்பது உறுவது கூறல் மற்றையது செய்வேனென்பது இனமொழி. இறைபயப்பனவற்றுள் வினாவெதிர் வினாதலொன்

னும் நோதற் பொருளையும் ஏனைய நான்கும் மறைப்பொருளையும் பயத்தல் காண்க.

இறை பயப்பனவற்றை நிலவியவென விசேடித்தமையின் நிலவாதனவுஞ் சிலவுளவெனப் பொருளுரைத்துச் செய்வேனோ வென எதிர்மறையோகாரமாயும் யானோ செய்வேன் எனச் சிறப் போகாரமாயும்நின்று செய்யேனென்னும் இறைப்பொருள் பயந்து வருதலும் பிறவுங் கங்கையாடிப் போந்தேனொருகூறையீகவென வினாவில்வழி இறை நிகழ்தலுங் கொள்க. (35)

387. வினாவினுஞ் செப்பினும் விரவா சினைமுதல்.

எ-னின். வினாவுஞ் செப்பும் முதல்சினை யொற்றுமை கருதி வழுவக் கூறின் அமையாவெனக் காத்தலுணர்-ற்று.

இ-ள். வினாவுதற்கண்ணுஞ் செப்புதற்கண்ணுஞ் சினைமுதல்கள் ஒற்றுமை கருதி மயங்கக் கூறப்படா. எ-று.

வ-று. கண் பிறழ்ந்ததோ கயல் பிறழ்ந்ததோ, சாத்தனல்லனோ கொற்றனல்லனோ. எ-ம். இவ்வாறு வினாவினார்க்குக் கண் பிறழ்ந்தது கயல் பிறழ்ந்தது சாத்தனல்லன் கொற்றனல்லன். எ-ம். வரும். பிறவுமன்ன. எனவே கண் பிறழ்ந்ததோவெனச் சினையை வினவுவான் அதனையொழித்து அதனையுடையாளைக் கருதி இவள்பிறழ்ந்தாளோ கயல்பிறழ்ந்ததோவென வினவுதலும் இவள் பிறழ்ந்தாளெனச் செப்புதலும் இவ்வாறு முதலை வினவுவானுஞ் செப்புவானும் அதனையொழித்துச் சினையை வினவுதலுஞ் செப்புதலும் வழுவாமென்பதாயிற்று. இங்ஙனமாயிற் குயிலோ கிளவியென வினவுவான் குயிலிசையைக் குயிலோவென்று வினவுதல் வழுவாம் பிறவெனின்:—அவ்வாறு கூறுவான் குயிலைக் கருதாது அதனிசையையே கருதிக் கூறுதலானுங் குயிலிசையோ கிளவியென இசையென்னுஞ் சொல் எஞ்சி நிற்றலானும் இத் தொடக்கத்தன வழுவாகாவென்க. (36)

மரபு.

388. எப்பொருளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே.

எ-னின். மரபாமாறுணர்-ற்று.



இ-ள். யாதொரு பொருளை யாதொரு சொல்லான் யாதொரு நெறியானறிவுடையோர் சொன்னார்களோ அப் பொருளையச்சொல்லானந்நெறியாற் சொல்லுதன் மரபாம். எ-று.

எவ்வாறென்பது ஒரு பொருளைப் பலசொல்லானும் பலபொருளை ஒரு சொல்லானுங் கூறுதன் முதலியவற்றையென்க. அவற்றுட் சில வருமாறு. குதிரைக்குட்டி, யானைக்குட்டி. எ-ம். யானைக் கன்று, பசுவின்கன்று, மான்கன்று. எ-ம். வரும். பிறவுமன்ன. இவ்வாறன்றிப் பசுவின்குட்டி குதிரைக்கன்று எனக்கூறின் வழுவாமாதலிற் சான்றோர் வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் பயின்று வரு மரபறிந்துகொள்க. (37)

மரபு வழாநிலை.

389. வேறுவினைப் பல்பொரு டழுவியபொதுச்
சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை
வேண்டும்.

எ-னின். மரபு வழுவற்கவென்பதுணர்-ற்று.

இ-ள். வெவ்வேறு வினைகட்குரிய பல பொருள்களையும் ஒருங்குதழுவி நிற்குமோர் பொதுச்சொல்லும் அவற்றின் சிறப்புச்சொற்களாயெண்ணி நிற்கும் பலசொல்லும் ஒன்றற்குரிய சிறப்புவினை வேண்டாது எல்லாவற்றிற்குமுரியதோர் பொதுவினை வேண்டுவனவாம். எ-று.

வ-று. அடிசிலென்பது உண்பன தின்பன நக்குவன பருகுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாகலான் அதனை அயின்றார் மிசைந்தாரென்க. அணியென்பது கவிப்பன கட்டுவன இடுவன மதாடுவனவற்றிற்கெல்லாம்பொதுச்சொல்லாதலின் அதனை அணிந்தார் தாங்கினாரென்க. இயமென்பது கொட்டுவன ஊதுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலின் அதனையியம்பினார்

படுத்தாரென்க. படையென்பது எய்வன வெட்டுவன குத்துவன வற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலின் அதனை வழங்கினார் தொட்டாரென்க. இனி எண்ணியவழியுஞ் சிலநாட்சோறுஞ் சிலநாளிடியுஞ் சிலநாட் பாலுஞ் சிலநாணீருஞ் சிலநாட் சருகும் அயின்றார் மிசைந்தாரென்க. கறியுஞ்சோறு முண்டானென எண்ணிக் கறியோடு விராய சோற்றையுண்டானென்னும் பொருட்டாய்ச் சிறப்பினொருமுடிபேற்றனவற்றிற்கு மிவற்றிற்கும் வேற்றுமை யுணர்க. குழையு நெடுநாணுமணிந்தார் பறையுங் குழலு மியம்பினார் வாளும் வேலும் வழங்கினார் என்க. பிறவுமன்ன. ()

390. வினைசார் பினமிட மேவி விளங்காப் [தே.
பலபொருளொருசொற் பணிப்பர்சிறப் பெடுத்

எ - னின். இதுவுமது.

இ - ள். குறித்த பொருளை விளக்கும் வினையினையுஞ் சார்பும் இனமும் இடமுமுதலிய பெயரினையும் பலபொருளொருசொற் பொருந்தி விளங்கிக் கிடந்ததேல் அதனை வாளா கூறி, அவ்வினைப் பெயர்களைப் பொருந்தாமையால் விளங்காது கிடந்ததனைச் சிறப்போடு கூட்டிக் கூறுவர் புலவர். எ - று.

பாக்கு வெற்றிலை தின்றான் என்றாற் சுண்ணாம்புங் கர்ப்பூரமும் உடன்றின்றானென்பது தழீஇக்கோடல்போற் சார்பினமிடமெனச் சிறந்தன எடுத்தோதி ஏனைய பெயர்களையுந் தழீஇக்கோடலின் முதலியவென்றாம். அன்றிஇனைத்தென் றறிபொருளெனக் கூறுதலுமொன்று.

மேவியென்னும் வினையெச்சம் விளங்காவென்பதன்கண் முதனிலையோடு முடிந்தது.

வ - று. மாவென்பது மாமரத்திற்கும் வண்டிற்கும் ஒருசார் விலங்கிற்கும் திருவிற்கும் பொதுவான பலபொருளொருசொல். இப்பொருள்களுள் மாப்பூத்தது காய்த்தது என்ற துணையானே



மரமென்பது வினையான் விளங்கிற்று. மாவீழ்நொச்சி மணிக்குரலூழ்த்தது என்ற துணையானே வண்டென்பது சார்பான் விளங்கிற்று. சேனை யானை தேர் மாச்சதுரங்கம்என்ற துணையானேகுதிரையென்பது இனத்தான் விளங்கிற்று. 'சொற்றொறு மிற்றிதன் பெற்றி' என்பதனானே இதனுட் சேனையென்பது யானை முதலிய மூன்றுறுப்பினையு மொழித்துக் காலாண்மேற்சேறலும் இவ்விதியின் பாற்படுத்துக. மாமறுத்த மலர்மார்பு என்ற துணையானே திருவென்பது இடத்தான் விளங்கிற்று. இவை வாளா கூறப்பட்டன. இனி மாவேறினான் மா யாது என்றவழிக் குறித்த பொருள் விளங்காமையின் விளங்குதற்பொருட்டுப் பாய்மாவேறினான் மாமரத்தின்கணேறினான் பாய்மா யாது மாமரம் யாது எனச் சிறப்போடு கூட்டிக் கூறுக. பிறவுமன்ன. (39)

391. எழுத்திய றிரியாப் பொருடிரி புணர்மொழி
இசைத்திரி பாற்றெளி வெய்து மென்ப.

எ - னின். இதுவுமது.

இ - ள். எழுத்தினதியல்பு வேறுபடாது பொருள் வேறுபட்டுச் சொல்லும் பொருளும் ஐயுற நிற்குந் தொடர்மொழிகள் அங்ஙனங் குறித்துக் கூறுஞ் சொற்களின் இறுதியு முதலுந் தோன்ற இசையறுத்துக் கூறும் வேறுபட்டாற் றுணியப்படும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

எனவே அவ்வாறிசையறுத்துக்கூறுதன் மரபென்பதாயிற்று.

வ - று. செம்பொன்பதின்றொடி நாகன்றேவன்போத்து தாமரைக்கணியார் குன்றேறாமா குறும்பரம்பு ஆற்றுக்கரை செம்பருத்தி என்றற்றொடக்கத்தனவற்றை அவ்வாறிசையறுத்து உச்சரித்துக் காண்க. (40)

## மரபுவழாநிலையும் வழுவமைதியும்.

392. ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி
ஒருவினை கொடுப்ப தனியு மோரோவழி.

எ-னின். மரபு வழுவற்கவெனக் காத்தலும் அதன் வழுவமைப்புமுணர்-ற்று.

இ-ள். ஒருபொருண்மேற் பல பெயர் வருமாயிற் பொருளொன்றேயென்பது தோன்ற இறுதிக்கண் ஒருவினை கொடுத்துக் கூறுவர், ஒரு பொருளாதல் தவறுதவழிப் பெயர்தோறுங் கொடுத்துக் கூறுவர் புலவர். எ-று.

ஒரு பொருட்கு ஒருமுடிபென்பார் ஒருவினை கொடுப்பவென்றாரன்றி ஒருபெயர் கொடுத்தலை யொழித்தாரல்லரென்க.

வ-று. ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான். எ-ம். பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியிவன். எ-ம். 'குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான்—கயிலைச் சிலம்பிற்பைப் பூம்புனங் காக்குங் கருங்கட்செவ்வாய்—மயிலைச் சிலம்பகண் டியான்போய் வருவன்வண் பூங்கொடிகள்—பயிலச் சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறைக்கே." எ-ம். 'பொருப்பர்க் கியாமொன்று மாட்டேம் புகலப் புகலெமக்காம்—விருப்பர்க் கியாவர்க்கு மேலர்க்கு மேல்வருமூரெரித்த—நெருப்பர்க்கு நீடம் பலவருக் கன்பர் குலநிலத்துக்—கருப்பற்று விட்டெனக் கொய்தற்ற தின்றிக் கடிப்புனமே.' எ-ம். இவை இறுதிக்கண் ஒருவினையும் பெயருங் கொடுக்கப்பட்டன. இனிப் பெயர்தோறுங் கொடுக்குமாறு: 'மின்றோய் வரைகொன்ற வேலோன் புகுதக—வின்றேன் கமழ்தா ரியக்கன் புகுதக—வென்றோன் புகுதக வேலோன் புகுதக—வென்றே நகரமெதிர் கொண்டதுவே.' என வரும். பிறவுமன்ன. (41)

393. திணைநிலஞ் சாதி குடியே யுடைமை
குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ
டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே.

எ-னின். இதுவுமது.

இ-ள். திணைமுதலாகக் கல்வியீறாகவிதந்தன முதலிய பற்றி வருஞ் சிறப்புப் பெயருடனே இயற்பெயரை ஒரு



பொருள் ஒருங்கேற்குமாயின் அவ்வியற்பெயர் பின்வருதல் சிறந்த மரபாம். எ-று.

ஏற்றற்கு வினைமுதல் ஒருபொருளென்பது மேலைச் சூத்திரத்தாற் பெற்றும்.

சிறப்பேயென்றமையான் முன் வருமென்பதூஉம் அது வழுவமைதியென்பதூஉம் பெற்றும்.

வ-று. குன்றவன் கொற்றன், அரிவாளனழகன், பார்ப்பான் பாராயணன், ஊர்கிழானேணன், பொன்னன் பொறையன், கரியன் கம்பன், நாடகி நம்பி, ஆசிரியனமிழ்தன் எனவரும். இவை இயற்பெயர் பின்வந்தன. இனிக் கொற்றன் குன்றவன் அழகனரிவாளன் என முறையே இயற்பெயர் முன்னும் வருதல் காண்க. இன்னும் இயற்பெயர் முன்னும்வருங்கால் வெண்கொற்றப்படைத் தலைவன் வெள்ளேறக்காவிதி என இறுதி விகாரமாய் வருதலுங் காண்க. (42)

394. படர்க்கைமுப் பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை யெனிற்பெயர்க் கெங்கு
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி. [ம்

எ-னின். இதுவுமது.

இ-ள். படர்க்கையிடத்தவாகிய உயர்திணைப்பெயர் அஃறிணைப்பெயர் விரவுப்பெயர் என்னு மூவகைப் பெயரோடு சுட்டுப்பெயர் சாரின் அச்சுட்டுப்பெயர் அம்மூவகைப் பெயர்க்கும் பின் வரும் அவ்வழி வினை நிகழ்வழியெனின், வினைநிகழ்ச்சியின்றேல் அப்பெயர்க்குப் பின்னும் முன்னும் வரும். இம்மரபு வழக்கின்கண்ணவாம்; செய்யுட்கண்ணேயெனின் நியதியின்றி வேண்டியவாறே வரப்பெறும். எ-று.

வ-று. நம்பி வந்தானவற்குச் சோறிடுக, எருது வந்ததற்குப் புல்லிடுக, சாத்தன்றெய்வ மவற்குப் பலியிடுக. சாத்தன் வந்ததற்குப் புல்லிடுக என வினை நிகழ்வழிச் சுட்டுப்பெயர் பின்

வந்தன. வந்தானம்பியவற்குச் சோறிடுக எனவுமுறையே யொட்டுக இவற்றுட் சாத்தன்றெய்வம் என்புழி வினையின்றிப் பெயர் வந்ததாலோவெனின்:—படர்க்கைமுப்பெயரும் தனித்து நில்லாது பெயர் வினைகளைக்கொண்டு முடிந்தும் பெயர்வினைகட்குப் பயனிலையாயும் புடைபெயரும் புடைபெயர்ச்சியை வினையென்றும் அப்புடை பெயர்ச்சியுள்வழிச் சுட்டுப்பெயர் வரிற் பின் வருமென்றுங் கூறினாரன்றி இவ்வினையை வினையென்றாரல்லரென்க. மைந்தன் பிறந்தானதனாற்றந்தையுவக்கும் என்புழி அதுவென்னுஞ்சுட்டு மைந்தனையணைந்ததில்லையாலோவெனின்:- அவன்றற்கிழமையாகிய பிறத்தலையணைதலின் அவனையணைந்ததே யாமென்க. அன்றிச் சொற்றொறுமிற்றிதன் பெற்றி என்னுஞ் சூத்திரத்தான் அமைத்தலுமொன்று. நம்பியவன் அவனம்பி எனப் பெயர்க்குப் பின்னுமுன்னுஞ் சுட்டுப்பெயர் வந்தன. ஏனைப் பெயர்களோடும் ஒட்டுக. பெயர்க்குப் பின்னுமுன்னுஞ் சுட்டுப் பெயர்வருதன் மரபாமன்றே இதனை வழுவற்கவெனக் காத்தல் எவ்வழு வாராமை கருதியெனின்:—சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனிலெனக் கூறினமையின் வினையில்வழிச் சுட்டுப்பெயர் படர்க்கை முப்பெயர்க்கும் பின்வருமோ முன்வருமோ இருமருங்கும் வருமோ வாராதொழியுமோ யாங்ஙனமாங்கொலென்னும் ஐயமறுத்தற்குக் கூறினாரன்றி இது வழுவற்கவெனக் காத்தாரல்லர். அக்கருத்துச் சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனிலென்றதற்கே கொள்க. அதனை அவ்வாறு காத்தலெவ்வழு வாராமை கருதியெனின், நம்பி வந்தான் அவற்குச் சோறிடுகவென்பான் அவற்குச் சோறிடுக நம்பி வந்தானென்றேனும் அவன் வந்தானம்பிக்குச் சோறிடுகவென்றேனுஞ் சுட்டுப் பெயரை முன் வைத்துக் கூறின் அஃதொரு பொருண்மேல் இருபெயர் வந்ததாகாது நம்பிவேறு அவன் வேறாய் முடியும், அவ்வழுவாராமை கருதியென்க.

இனிச் செய்யுட்கேற்புழி வருமாறு: "அவனணங்கு நோய் செய்தானாயிழாய் வேலன்—விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி-முகனமர்ந்--தன்னையலர்கடப்பந் தாரணியினென்னை கொல்-பின்னையதன்கண் விழைவு." என வரும். செய்யுட்கட்



பின்வருதல் வழுவற்கவெனக் காத்தலும் இப்பாட்டின்கண் முன்வருதல் வழுவமைதியுமாமென்க. பிறவுமன்ன. (43)

அடுக்குத்தொடர்.

395. அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொரு
சொல்
இரண்டு மூன்று நான் கெல்லைமுறை யடுக்கும்.

எ - னின். இதுவுமது.

இ - ள். அசைநிலைக்கும் விரைவு வெகுளி உவகை அச்சம் அவலமுதலிய பொருணிலைக்கும் இசை நிறைக்கும் ஒரு சொல் இரண்டு மூன்று நான்களவு முறையே அடுக்கும். எ - று.

எனவே, அசைநிலைக்கிரண்டும் பொருணிலைக் கிரண்டு மூன்றும் இசைநிறைக் கிரண்டு மூன்று நான்கும் அடுக்குமென்பதாயிற்று.

வ - று. ஒக்குமொக்கும், அன்றேயன்றே என்பன அசைநிலை. உண்டேனுண்டேன், போபோபோ என்பன விரைவு. எய்யெய், எறியெறியெறி என்பன வெகுளி. வருக வருக, பொலிக பொலிக பொலிக என்பன உவகை. பாம்பு பாம்பு, தீத்தீத்தீ என்பன அச்சம். உய்யேனுய்யேன், வாழேன் வாழேன் வாழேன் என்பன அவலம். இவை முதலியன பொருணிலை. 'ஏஏ யம்பன் மொழிந்தனளாயே' 'நல்குமே நல்குமே நல்குமே நாமகள்' 'பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ' என்பன இசைநிறை. பிறவுமன்ன.

ஒருசொல்லைப் பலகாற் கூறுதல் வழுவாயினும் இவ்விடத்தா மென்றல் வழுவமைதியும் இதற்கிவ்வெல்லை பிறவாதென்றல் வழுவற்கவெனக் காத்தலுமாமென்க. (44)

மரபுவழாநிலை.

396. இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந் திசையா.

எ - னின். மரபு வழுவற்கவெனக் காத்தலுணர்-ற்று.

**இ - ள்.** இரட்டைச்சொற்கள் அவ்விரட்டிப்பிற் பிரிந்து தனித்தொலியா. எ - று.

எனவே, வலிந்து பிரித்துக் கூறிற் பொருள்படாதென்பதூஉம், இரட்டித்துக் கூறுதலே மரபென்பதூஉ மாயிற்று.

வ - று. 'சலசலமும்மதம்பொழிய' 'கலகலகூந் துணையல்லால்' 'குறுகுறு நடந்துஞ் சிறுகை நீட்டியும்' 'வற்றியவோலை கலகலக்கும்' 'துடிதுடித்துத் துள்ளிவரும்' என வரும். துடிதுடித்து என்புழிப் பின்னையது பிரிந்திசைக்குமேனும் முன்னையது பிரிந்திசையாமையின் இரட்டைச்சொல்லேயாமென்க. பிறவுமன்ன. (45)

397 ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார்.

**எ - னின்** இதுவுமது.

**இ - ள்.** ஒருபொருண்மேற் பலபெயர் கூறுங்கால் அப்பொருளினின்றும் பிரிதலில்லாதனவற்றை நீக்காது கூறுவர் புலவர். எ - று.

எனவே பிரிவுள்ளனவற்றைக் கூறாரென்பதாயிற்று.

வ - று. ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான் என்பன, பிரிவிலவாய்ப் பலபெயரும் ஒருபொருண்மேற் சென்று கேட்போர்க்குக் கூறுவோன் கருதிய பொருள் விளக்கிநின்றன. 'வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந்—தையலாய் நீயின்று நல்கினை நல்காயேற்—கூடலார் கோவோடு நீயும் படுதியே—நாடறியக் கவ்வையொருங்கு.' எ-ம். 'கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்—வைகலு மேறும் வயக்களிறே-கைதொழுவல்—காலேக வண்ணனைக் கண்ணுறக் காணவெஞ்—சாலேகஞ் சாரநட.' எ-ம். சுட்டின் பொருளவாய் வரும் பெயரொடு தொக்க ஒருபொருட் பலபெயர்களும் அன்ன.

பிரிவென்றதற்கு இவ்வாறு பொருள் கூறாது 'கொய்தளிர்த் தண்டலை' என்னும் பாட்டினுட் காலேகவண்ணஞ் சேந்தனுக்கும் பிறர்க்குமுண்டாதலைப் பிரிவென்று கருதி இது வழுவென்பாருமுளர். காலேகவண்ணம் பொதுவியல்பன்றிச் சேந்தனிற் பிரிந்ததன்றாதலானும், சேந்தனைக் களிற்றின்மேற் செய்மைக்கண் வரக்கண்டாள் அவனைக் கண்ணுறக் காணவேண்டும் பெரு வேட்கை தந்தது அவனது காலேகவண்ணமென்பாள் அவ்வாறு கூறவேண்டுமாதலானும், இது சான்றோரிலக்கியமாதலானும் அது பொருளன்றென்க.

இனிப் பிரிவுளதாய் வழுவியதியாதோவெனின்:—'பகையியல் பாயிலி படைக்கை மறவன்' என வரிற் பகையியல்பாயிலியைப் படைக்கை மறவனென்றல் கூடாமையிற் பிரிந்து வழுவாமென்க.



மரபு வழுவமைதி.

398. ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா.

**எ - னின்.** மரபுவழுவமைப்புணர்-ற்று.

**இ - ள்.** ஒரு பொருளைக் குறித்து வரும் பல சொற்கள் அவ்வாறு வருதற்கு ஓர் காரணமின்றேனும் சிறந்து நிற்றலின் அவை வழுவென்று நீக்கப்படா. எ - று.

சிறந்து நிற்றல் செவிக்குச் சொல்லின்பந் தோன்ற நிற்றல்.

சிறப்பினினென்றமையாற் காரணமின்றி வந்தனவென்பது பெற்றாம்.

வ - று. 'மீமிசை ஞாயிறு கடற்பாய்ந் தாங்கு' 'புனிற்றிளங் கன்று' 'நாகிளங்கமுகு' 'அடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கல்' 'உயர்ந்தோங்கு பெருவரை' குழிந்தாழ்ந்தகண்ண வாய்த்தோன்றி என வரும். பிறவுமன்ன.

இனிச் சிறப்பினென்றதற்கு அப்பொருளைச் சிறப்பித்தலினெனப் பொருள் கூறுவாருமுளர். அச்சொற்கு அப்பொருள் இயையாமையானும், அக்காரணத்தான் வந்தனவேல் ஈண்டு ஒருபொருட் பன்மொழியாய் வரும் பெயர்கள் ஒருபொருட் பலபெயருள் அடங்குமாதலானும், மீமிசையென்றான் மேலென்றே பொருளன்றி விசேடித்ததோர் சிறப்பின்மையானும், உண்டேல் அஃதிஃதென விதந்து கூறுவராதலானும், அது பொருளன்றென்க.

### மரபுவழுவாமற் காத்தல்.

399. இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப் [பொருள்
வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்.

**எ - னின்.** மரபு வழுவற்கவெனக் காத்தலுணர்-ற்று.

**இ - ள்.** இத்துணைத்தென்று வரையறையுணரப்படும் பொருளும் எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும் அவற்றை வினைப்படுத்துக் கூறுங்கால், முற்றும்மை வேண்டிநிற்கும். எ - று.

பொருளென வேறு விதந்தமையின் உலகென்றது ஒழிந்த காலமனைத்தினையும் இடமனைத்தினையுமென்பதூஉம், இனைத்தென் றறிபொருளென்றமையானும் உலகெனக் காலமனைத்தினையும் இடமனைத்தினையுங் கூறுதலானும் உம்மையென்றது முற்றும்மையையென்பதூஉம், பெற்றும்.

வ - று. தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், உலகமூன்றினையுமொருங்குணர்ந்தான், நின் கண் வைத்த பொருணூற்றினையுமவ்விருவருக்குங்கொடு' இறைவற்குக் கண்மூன் றுமுச்சுடர், இறைவற்குடை போர்வையிரண்டுந் தோல் என இனைத்தென் றறிபொருள் வினைப்படுத்துரைப்பின் உம்மை வேண்டிநின்றன. இவற்றுண் முச்சுடர் தோலென்பன பெயராலோவெனின், ஈண்டுவினையென்றதூஉம் 'சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனின்' என்றதுபோலும். பவளக்கோட்டு நீலயானையென்றுமில்லை, முயற்கோடாகாயப்பூ வென்றுமில்லை, மண்ணிற் படமென்றுமில்லை, நாவிற்கடமென்றுமில்லை, ஒளிமுன்னிருளென்றுமில்லை என உலகினில்லாத பொருள் வினைப்படுத்துரைப்பின் உம்மை வேண்டி நின்றன. எவ்விடத்துமில்லையெனவுமொட்டுக.

உம்மை வருமென்னாது உம்மை வேண்டுமென்றமையான், அஃதிசையெச்சமாய் நிற்க அதனை வேண்டுவனவாய் 'வன்பறழ்க் குமரியிருதோ டோழர்பற்ற' 'எருமைநாற்கா னீர்க்கீழவ்வே'



எ-ம். மண்ணிற் படமில்லை நாவிற் கடமில்லை ஒளிமுன்னிருளில்லை. எ-ம். வரும்.

இவ்வில்பொருளின்கட் காலப்பெயர் இடப்பெயர்களும் உடனெஞ்சி நின்றன. இவ்வாறு வருதல் கருதாது செய்யுள்விகாரமாக உம்மை தொக்கதென்பாருமுளர். (உலகினில்லாப்பொருள் உள்பொருள்போற் காலத்தோடு பட்டதன்றென்பது தோன்ற என்றுமில்லையென்னாது காலத்தோடு பட்டதுபோல வைத்துப் பவளக்கோட்டு நீலயானை பண்டுமில்லையென எச்சவும்மை தந்து உதாரணங் காட்டுவார். அது யானை குடத்தினுமில்லை குழிசியினுமில்லை என்றது போலுமென்க.

இரட்டுறமொழிதலான், உலகின்கணிலையில்பொருள் வினைப்படுத்துரைப்பின் எச்சவும்மை வேண்டுமெனவும், பொருளுரைத்துக்கொள்க. அவை வருமாறு. செல்வமுநில்லாது, செல்வமும் பொய் எனவரும். செல்வநில்லாது செல்வம் பொய் என எச்சவும்மை கொடாது வாளாகூறின், இளமை யாக்கை முதலியன நிலைபெறுமெனவும் மெய்ப்பொருளெனவும் பொருள்படுமென்க. உம்மை வேண்டுமென்றதனல், செல்வநில்லாது செல்வம் பொய் என உம்மை எஞ்சி நிற்றலுங் கொள்க. (48)

### மரபு வழுவமைதி.

400. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித் [தே.

**எ - னின்.** மரபுவழுவமைப்புணர்-ற்று.

**இ - ள்.** செயப்படு பொருளைக் கருத்தாவைப்போல வைத்து அதன்மேல் வினைமுதல் வினையேற்றிக் கூறுதலும் வழக்கின்கண் உரித்தாம். எ - று.

வ - று. இம்மாடியான் கொண்டது, இச்சோறியான் கொடுத்தது, இவ்வெழுத்தியா னெழுதியது என வரும்.

உம்மையாற் கருமத்தைக் கருத்தாவாக இவ்வாறு கூறுதலே யன்றிக் கருவி நிலஞ் செயல் காலங்களை கருத்தாவாகக் கூறுத லும் அமையுமென்பது பெற்றாம். அவை வருமாறு: இவ்வெழுத் தாணி யானெழுதியது, இவ்வீடியானிருந்தது, இத்தொழிலியான் செய்தது, இந்நாளியான் பிறந்தது என வரும். இனி இல்லமெழு கிற்று எழுத்தாணியெழுதிற்று என உதாரணங்காட்டுவாருமுளர். இல்லமெழுகிற்றென்பதோர் வழக்கின்மையானும், நடத்த நடந்த தேரினைப்போல ஒருவனெழுதவெழுதியது எழுத்தாணியாதலின் அது தன்றொழிலேயன்றி ஒருவன்றொழிலன்றாதலானும், அவை காட்டாகாவென்க. (49)

### மரபு வழுவாமற் காத்தலும் வழுவமைதியும்.

401 பொருண்முத லாறா மடைசேர் மொழியினம்
உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்.

**எ-னின்.** மரபு வழுவற்கவெனக் காத்தலும் மரபு வழு வமைப்பு முணர்-ற்று.

**இ-ள்.** பொருளாதியாறாகிய அடைகள் அடுத்து வருமொழிகள் இனமுள்ளனவேயாமன்றி இனமில்லனவுமாம் உலகவழக்கினுள்ளுஞ் செய்யுள்வழக்கினுள்ளும். எ-று.

உள்ளவுமென்னும் உயர்வு சிறப்பும்மையும் இல்லவுமென்னும் இழிவுசிறப்பும்மையும் எண்ணி நின்றன.

வ-று. நெய்க்குடம், குளநெல், கார்த்திகைவிளக்கு, பூமரம், செந்தாமரை, குறுங்கூலி. எ-ம். உப்பளம், ஊர்மன்று, நாளரும்பு, இலைமரம், செம்போத்து, தோய்தயிர். எ-ம். வழக்கின்கண் இன முள்ளனவும் இல்லனவும் வந்தன. 'பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்' 'கான்யாற் றடைகரை' 'முந்நாட் பிறையின் முனி யாது வளர்ந்தது' 'கலவமா மயிலெருத்திற் கடிமலரவிழ்ந்தன காயா' 'சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்' 'ஆடுபாம் பெனப் புடையகன்ற வல்குன்மேல்' எ-ம். 'பொற்கோட்டிமய மும் பொதியமும்போன்றே' 'வடவேங்கடந் தென்குமரி' 'வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன' 'சிறகர் வண்டு செவ்வழி பாட'



'செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும் வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்' 'முழங்கு கடலோத மூழ்கிப் போக' எ-ம். செய் யுட்கண் இனமுள்ளனவும் இல்லனவும் வந்தன.

இனமுள்ளனவற்றை வாளா கூறிற் குறித்த பொருடோன்றா மையின் அடை கொடுத்து விதந்து கூறுகவெனவும் இனமில்லன வற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதன் மிகையாமாயினும் அமையு மெனவும் பொருள் போந்தமையின், முன்னையது வழுவற்க வெனக் காத்தலும் பின்னையது வழுவமைப்புமாமென்க.

ஆசிரியர் தொல்காப்பியனார் "இனச்சுட் டில்லாப் பண்பு கொள் பெயர்க் கொடை—வழக்கா றல்ல செய்யு ளாறே." என்றமையிற் பொருண்முதலாறாமடையென்றும், இருவழக்கினு மென்றும், இவ்வமைதியும் பயின்று வருமென்பது தோன்ற உள்ளவு மில்லவுமாமென இனமுள்ளவற்றோடு ஒருங்கெண்ணியுங் கூறினாரென்க. (50)

### அடைமொழி மரபு வழுவாமற் காத்தல்.

402 அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின்.

**எ-னின்.** மரபு வழுவற்கவெனக் காத்தலுணர்-ற்று. பொருந்து வன கொள்கவென்பார் ஆண்டுறினென்றமையான்.

**இ-ள்** மேற்கூறிய அடைசேர் மொழி இனத்தைத் தருதலேயன்றி அதனோடினமல்லதனையுந் தரும் அவ்விடத் திற்குப் பொருந்துமாயின். எ-று.

வ-று. பாவஞ்செய்தான் நரகம் புகும் என்றதுணையானே புண்ணியஞ் செய்தான் சுவர்க்கம் புகும் என இனத்தைத் தருத லேயன்றி, அவனிது செய்யினிது வருமென்னும் அறிவிலியென் னும் இனமல்லதனையுந் தந்தது. மேலைச்சேரிச் சேவலலைத்தது என்ற துணையானே, கீழைச்சேரிச் சேவலலைப்புண்டது என இனத்தைத் தருதலேயன்றி, அச்சேவலுடையார்க்கு வெற்றியா யிற்று என்னும் இனமல்லதனையுந் தந்தது.

இனி இரட்டுறமொழிதலான் இனமல்லதுந்தரும் என்பதற்கு இனத்தைத் தருதலையொழித்து இனமல்லதனையுந் தருமெனவும்

பொருளுரைத்துக் கொள்க. அவை வருமாறு; சுமந்தான் வீழ்ந்தான் என்றாற் சுமவாதான் வீழ்ந்தானல்லன் என்னுங் கருத்துச் சொல்லு வார்க்கின்றாதலின் அவ்வினத்தை யொழித்துச் சுமையும் வீழ்ந்தது என்னும் இனமல்லதனையுந்தந்தது. காலையெழுந்து கருமத்திற் செல்வான் கோழிகூவிற்று என்றால் ஏனைப்புட்கள் கூவுகில என்னும் கருத்து அவற்கின்றாதலின் அவ்வினத்தை யொழித்துப் பொழுது புலர்ந்தது என்னும் இனமல்லதனைத்தந்தது. பெய்முகிலனையான் என்றாற் கைம்மாறு கருதாத பெருங்கொடையாளன் என்னும் இனமல்லதனை இனமிலதாகிய அடைமொழி தந்தது. இவ்வடை கொடாது முகிலனையானென வாளா கூறினும் இக்கொடைப் பொருடருமாலோவெனின்:—அவ்வாறு கூறின் முகில்வண்ணன் எனவும் பொருள்படுமாதலின் அதனை யொழித்துக் கொடைப்பொருட்கு உரிமைசெய்தது அவ்வடையே யாமென்க. பிறவுமன்ன. ஆண்டுறியென்றமையான் இவ்வாறு பொருந்துவன கொள்க. (51)

403\. அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலோ டாதலும் வழக்கிய லீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செய்யுட் [கே.

ஏ-னின். மரபு வழுவற்கவெனக் காத்தலும் மரபு வழுவமைப்பு முணர்-ற்று.

இ-ள். மேற்கூறிய அடை சினை முதல்களை அடுத்து வருங்கால் ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலும் ஒன்றையொன்று விசேடித்து வருதலும் இரண்டடை முதலை விசேடித்து வருதலும் வழக்குநடையாம்; இரண்டடை சினையை விசேடித்து வருதலும் இவ்வரம்பிறந்து வருதலுஞ் செய்யுணடையாம். எ-று.

ஈரடை முதலோடாதலும் என்றமையான், முறையென்றது ஒன்றையொன்று விசேடித்து வருவதென்பதூஉம், அங்ஙனம் வரவே அடைபல சினைபல வாராது ஒவ்வொன்று வருமென்பதூஉம், பெற்றாம்.



வ-று வேற்கை முருகன், நீலப்பூ நெரிஞ்சல், கார்த்திகைப் பூங்கொடி, பழக்குலைவாழை, செங்காலுரை, முழங்கு திரைக் கடல். எ-ம். மனைச்சிறுகிணறு, சிறுகருங்காக்கை. எ-ம். வழக்கின் கண் வந்தன. 'சிறுபைந்தூவியிற் செயிரறச்செய்த' 'கருநெடுங் கண்டருங் காமநோயே' எ-ம். 'பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை' எ-ம். செய்யுட்கண் வந்தன. பிறவுமன்ன. இவற்றுள், அடைசினை முதன்முறை யடைதலொன்றும் வழுவற்க வெனக் காத்தலும், ஏனைய மூன்றும் அவ்வாறு நில்லாமையின் வழுவமைதியுமா மென்க.

'கவிசெந் தாழைக் குவிபுறத் திருந்த—செவிசெஞ் சேவலும் பொருவலும் வெருவா—வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி' என வருவன, கொம்பு கூர்மாடு, மடல்விரி தாழை என்றாற்போல வருதலின், 'உயர்திணை தொடர்ந்த பொருண்முதலாறும்' என்னுஞ் சூத்திரத்துள் அஃறிணையோடு சார்த்தின் அஃறிணை முடிபினவாமென அமைத்ததன்பாற் படுமென்க. (52)

## மரபு வழுவமைதி.

404\. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.

ஏ-னின். மரபு வழுவமைப்புணர்-ற்று.

இ-ள். இயற்கைப்பொருள் செயற்கைப் பொருளென இருவகைப்படும் பொருள்களுள் இயற்கைப் பொருளை இத்தன்மைத்தென்று கூறுக. எ-று.

இயற்கையென்பது அவிகாரம். செயற்கை யென்பது விகாரம்.

வ-று. மெய்யுள்ளது, பொய்யில்லது, நிலம்வலிது, நீர்தண்ணிது, தீவெய்து, மயிர் கரியது, பயிர் பசியது என வரும்.

நிலநீர் முதலிய பூதங்கள், மாயையின் விகாரமென்பதை நோக்கிற் செயற்கைப் பொருளாயினும், பூதத்தின் விகாரங்களை நோக்கின் இயற்கைப் பொருளாமென்க.

இயற்கைப்பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின் இது வழுவமைதியாயிற்று. இது கருதாது இவ்வாறு கூறுதன் மரபென்பாருமுளர். அது நிற்க.

வளியுளரும் தன்மைத்து உயிருணரும் தன்மைத்து என்னாது வளியுளரும் உயிருணரும் எனவும் உதாரணங் காட்டுவர். வளியின் கண்ணும் உயிரின்கண்ணும் உளர்தலு முணர்தலுமாகிய செய னிகழ்ந்த துணையானே அவற்றிற்கு அவை செயற்கையாமன்றி இயற்கையாகாமையானும், அவ்வாறு கூறுதற்கோர் விதியின்மை யானும் அவை பொருந்தாவென்க. (53)

### மரபு வழுவாமற் காத்தலும் வழுவமைதியும்.

405. காரண முதலா வாக்கம் பெற்றுங்
காரண மின்றி யாக்கம் பெற்றும்
ஆக்க மின்றிக் காரண மடுத்தும்
இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள்.

**எ-னின்.** மரபு வழுவற்கவெனக் காத்தலும் மரபுவழு வமைப்புமுணர்-ற்று.

**இ-ள்.** முதறுணை நிமித்தங்களாற் செய்யும் பொருளாகிய செயற்கைப் பொருளைக் கூறுங்கால், காரணச்சொன் முன்வர ஆக்கச்சொற்பின் வரப்பெற்றும், காரணச்சொற் றெக்கு நிற்ப ஆக்கச்சொல் வரப்பெற்றும், ஆக்கச்சொற் றெக்கு நிற்பக் காரணச்சொல் வரப்பெற்றும், இவ்விரு வகைச் சொல்லுந் தொக்கு நிற்கவும் நடக்கும். எ - று.

காரணச்சொல்லும் ஆக்கச்சொல்லும் யாண்டு வரினும், அந் நிலைக்களத்துத் தந்து பொருளுரைக்கப்படுதலிற் காரணமுதலா வென்றார்.

வ-று. கடுவுங்கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின, எருப்பெய்திளங்களைகட்டு நீர்கால் யாத்தமையாற் பயிர் நல்லவாயின. எ-ம். மயிர் நல்லவாயின, பயிர் நல்லவாயின, எ-ம். கடுவுங் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல, எருப் பெய்திளங்களை கட்டு நீர்கால் யாத்தமையாற் பயிர் நல்ல. எ-ம். மயிர் நல்ல, பயிர் நல்ல. எ-ம். வரும். 'பல்லார்தோ டோய்ந்து வருதலாற் பாய்புன—னல்வயலூரனின் ரூர்புலால்-புல்லெருக்க—மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற்—காதற்றாய் நாறு மெமக்கு.' எனப் பரத்தையிற் பிரிந்த தலைவனைப் புலந்தும் அவன்செய்த தீங்கினைத் தன்னினிய முகத்தாற் றணிக்கும் புதல்வனை உவந்தும் ஒன்றொன்றாகாதனவற்றை ஆயினபோற் கூறும்வழி ஆக்கச்சொற்றொக வருதலும் அதன்பாற் படுத்துக. பிறவுமன்ன.

காரணமுதலாவாக்கம் பெறுதலொன்றும் வழுவற்கவெனக் காத்தலும் ஏனைய மூன்றும் வழுவமைதியுமாமென்க. (54)

### விடை மரபு வழுவாமற் காத்தல்.

406. தம்பா லில்ல தில்லெனி னினனாய்
உள்ளது கூறி மாற்றியு முள்ளது
சுட்டியு முரைப்பர் சொற்சுருங் குதற்கே.

**எ-னின்.** மரபு வழுவற்கவெனக் காத்தலுணர்-ற்று.

**இ-ள்.** ஒருவன் வினவியது தம்பக்கல் இல்லையாயின் அதனை இல்லையென்னலுறின் அவன் வினவியதற்கு இனமாய தம்பக்கலுள்ளதனைக்கூறி அக்கூற்றானே அதனை இல்லையென்றும் உள்ளதாயின் இத்துணையுண்டென்றுங் கூறுவர் புலவர், வினவுதலுஞ் செப்புதலுமாகிய சொற்கள் சுருங்குதற்பொருட்டு. எ - று.

குன்றக்கூறன் முதலிய குற்றங்களைக்கிச் சுருங்கச்சொல்லன் முதலிய அழகோடு கூறுதல் வழக்கிற்கும் வேண்டுமென்பார் சொற்சுருங்குதற்கே யென்றார்.

வ-று. பயறுண்டோவணிகீரே என்றார்க்கு அஃதின்றென் பார் உழுந்துண்டு உழுந்துந்துவரையு முண்டென்க. இவ்வின மொழிகள் பயறில்லை யென்னும் இறை பயந்து நிற்றலின் இனனா யுள்ளது கூறி மாற்றியுமென்றார். அஃதுண்டென்பார் இத்துணை

யுண்டென்க. நூறுவிற்கும் பட்டாடையுண்டோ என்றார்க்கு அஃதின்றென்பார் ஐம்பது விற்குங் கோசிகமுண்டென்க. அஃதுண்டென்பார் எண்பது விற்பதுண்டென்க. பிறவுமன்ன.

இவ்வாறன்றி உழுந்தல்லதில்லை இத்துணைப்பயறுளவென உதாரணங் காட்டுவாருமுளர். அவை சொற்சுருங்குதற்கே யென்பதனோடு மாறுபட்டு மிகைபடக் கூறலென்னுங் குற்றமாமென்க (55)

## இரக்குஞ் சொற்கள்.

407. ஈதா கொடுவெனு மூன்று முறையே
இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை.

**எ - னின்.** இதுவுமது.

**இ - ள்.** ஈயென்பது இழிந்தோன் உயர்ந்தோன் மாட்டிரக்குஞ் சொல்லாம்; தாவென்பது ஒப்போனொப்போன் மாட்டிரக்குஞ் சொல்லாம்; கொடுவென்பது உயர்ந்தோன் இழிந்தோன் மாட்டிரக்குஞ் சொல்லாம். எ - று.

வ - று. தந்தையீ, தோழ தா, மைந்த கொடு என வரும். பிறவழிவரும் ஒப்புயர்வு தாழ்வினும் இவ்வாறே யொட்டுக. வழங்கு வீசு நல்கு என்றற்றொடக்கத்திரப்புரைகள் போலாது ஈவோர்க்கும் ஏற்போர்க்கும் ஒப்புயர்வு தாழ்வுகளை ஈ தா கொடுவென்ற துணையானே உணர்த்தி நிற்றலின் இவற்றை இனைத்தென்றறிபொருளாகக் கூறினார். அருள் அளியென்னும் இரப்புரைகள் ஈவோர்க்கு உயர்வும் ஏற்போர்க்கு இழிவுமுணர்த்தினவாலோவெனின்:—அவை கருணைக்குரிய சொற்குறிப்பினான் இரத்தற் பொருளையுணர்த்தி நின்றனவன்றி இரப்புரையல்லவென்க.

இம்மரபு மயங்கி வருவனவுளவேற் 'புதியன புகுதலும் வழுவல' என்றதன்பாற்படுத்துக. (56)



## மரபு வழுவமைதி.

408. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே.

**எ - னின்.** மரபுவழுவமைப்புணர்-ற்று.

**இ - ள்.** வெளிப்படையானன்றிக் குறிப்பாற் பொருளுணரப்படுஞ் சொற்களுஞ் சிலவுளவாம் எ - று.

அவையாவன ஒன்றொழி பொதுச்சொன் முதற் சொல்லுவான் குறிப்பீறாக விதந்தன முதலியவாம்.

செவியெல்லாஞ் சாலச் செம்பொனணியுஞ் செல்வத்தினர் என்பார் செஞ்செவியர் என்றும், குற்றமற்ற மரபினரென்பார் வெள்ளொக்கலர் என்றும், பெருவாழ்க்கையினர் என்பார் குழை கொண்டு கோழியெறியுமவர் வாழ்க்கை என்றுங் கூறுஞ் சொல்லுவான் குறிப்பொன்றுமே உதாரணங் காட்டுவாருமுளர். அங்ஙனமாயின் ஏனைய குறிப்பிற் பொருடரு மொழியல்லவாமென்க.

கேட்போர் இடர்ப்படாது வெளிப்படையிற் கூறுதன் மரபாதலின் இது வழுவமைதியாயிற்று. (57)

409. கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே.

**எ - னின்.** இதுவுமது.

**இ - ள்.** கேளாதனவற்றைக் கேட்குவன போலவுஞ் சொல்லாதனவற்றைச் சொல்லுவன போலவும் நடவாதனவற்றை நடப்பன போலவும் இத்தொழில்களல்லன பிற செய்யாதனவற்றைச் செய்வனபோலவும் அஃறிணையிடத்துஞ் சொல்லப்படும். எ - று.

முன்னையபோல விதவாது இறுதிக்கண் இயற்றுநவெனப் பொதுப்படக் கூறினமையின் இத்தொழில்கள்ல்லன பிறவென்னுஞ் சொல் எஞ்சி நின்றன.

வ - று. 'நன்னீரை வாழியனிச்சமே' 'இரவெலா நின்றுயா லீர்ங்கதிர்த் திங்காள்' எ-ம். 'பகைமையுங் கேண்மையுங் கண்ணு ரைக்கும்' 'மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலுந்—தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்.' எ-ம். இவ்வழி அவ்வூர்க்குப் போம், இவ்வரசனாணை யெங்குஞ் செல்லும். எ-ம். 'தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்-றன்னெஞ்சே தன்னைச் சுடும்.' 'வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன மடமை கூர்ந்து—தண்கய நீருட்கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக்—கண்ட னங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப்—பண்டைய மல லம் வேண்டா படுக்கவென் றூடிற் றன்றே.' 'கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி—பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூவிப்-பெரு வரைமேற்—றேன் றேவர்க் கீயு மலைநாட வாரலோ—வான்றேவர் கொட்கும் வழி.' எ-ம். முறையே காண்க.

அஃறிணை மருங்கினுமென்ற உம்மையான் உயர்திணை மருங்கினும் இவ்வாறு சொல்லப்படுதல் புலம்பன் முதலியவற்றுட் காண்க. (58)

410. உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

எ - னின். இதுவுமது.

இ - ள். உருவகத்தின்கண்ணும் உவமைக்கண்ணும் இருதிணை தம்முண் மயங்குதலுஞ் சினை முதல் தம்முண் மயங்குதலும் இவ்வியலுட் சொல்லாதொழிந்தனவும் போற் றிக் கொள்க. எ - று.

வ - று. 'மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை—யன்ன நடையினார்க் காரமுதந்-துன்னும்—பரிசிலர்க்கு வானம் பனி மலர்ப்பூம் பைந்தா—ரரிசினவேற் றானையெங் கோ.' என்பன உயர்திணை யஃறிணையோடு மயங்கின 'தாழிருந் தடக்கையு மருப்புந்தம்பியர்—தோழர்தன் றாள்களாச் சொரியு மும்மத—மாழ் கடற் சுற்றமா வழன் றுசீவக—வேழுயர் போதக மினத்தொடேற் றதே. என்பன உயர்திணை அஃறிணையோடும் முதல்சினையோடும் மயங்கின. முகமதியென்பது சினைமுதலோடு மயங்கிற்று. 'அகழ் கிடங்கந்துகி லார்ந்த பாம்புரி— புகழ்தரு மேகலை ஞாயில் பூண் முலை—திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகஞ்—சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே.' இஃது அஃறிணை உயர்திணை யோடு மயங்கிற்று. இவை உருவகம். 'கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாண்—மங்கலங் கூற மலிவெய்திக்-கங்கையாள்—பூம்புன லாகந் தழீஇயினான் போரடுதோள்—வேம்பார் தெரிய லெம் வேந்து.' 'இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி—னிலமென்னு நல்லா ணகும்.' 'வருந்தி யீன்றாண் மறந்தொழிந்தாள் வளர்த்தாள் சொற்கேட்டில் கடிந்தாண்—முருந்தின் காறுங் கூழையை முனி வார் நின்னையேன் முனிவார்—பொருந்திற் றன்றா லிதுவென்றாய் பொன் றுமளித்தி யுயிரென்றாய்—திருந்து சோலைக் கருங்குயிலே சிலம்ப விருந்து கூவுதியால்.' என்றற்றொடக்கத்தனவும் அன்ன. 'மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்' என்பது உயர் திணையோடு அஃறிணை மயங்கிற்று. 'கல்விசேர் மாந்தரி னிறைஞ் சிக் காய்த்தவே.' என்பது அஃறிணையோடு உயர்திணை மயங்கிற்று. கயற்கண் என்பது சினை முதலோடு மயங்கிற்று. தளிர்மேனி யென்பது முதல் சினையோடு மயங்கிற்று. பிறவுமன்ன.

'தருமன் றண்ணளி யாற்றனதீகையால்—வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே—யருமை யாலழ கிற்கணை யைந்துடைத்—திரும கன்றிரு மாநில மன்னனே.' 'இந்திர குமரன்போல விறை மக னிருந்து காண்க' என்றற்றொடக்கத்தனவாய் மயங்காது வரு தன் மரபாமாதலின் இது வழுவமைதியாயிற்று.

இனிப் பிறவுமென்றதனால், உருவகவுவமைக்கண் இவன் பாரதி, இவன் பாரதியனையான் எனப் பான் மயங்கக் கூறுதலும், கயலினது பிறழ்ச்சி போலுங் கண்ணினது பிறழ்ச்சி என்பார் கயற்கண் என்று சொல்லின் முடிவினப்பொருண் முடியாது எஞ் சக் கூறுதலும், பிறவற்றுள்ளும் இவ்வாறெஞ்சக் கூறுதலும், செங்கோல் கொடுங்கோல் வீரக்கழல் சினவேல் என ஒருபொருட் டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துக் கூறுதலும், ஈந் தான் என்பார் அருளினான் என ஒருவினையை மற்றொரு வினை யாற் கூறுதலும், 'அடிவண்ண மல்லா லலங்குதார்க் கோதை—

முடிவண்ணங் கண்டறியா வேந்து.' 'துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே' என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும், இவை போல்வன பிறவும் வழுவமைதியாகக் கொள்க. (59)

---

## பொருள்கோள்.

### பெயரும் தொகையும்.

411. யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
டாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே.

**எ - னின்.** நால்வகைச் சொற்களானுஞ் செய்யுட் கொள்ளும் பொருள்கோளின் பெயருந் தொகையுமுணர்-ற்று.

**இ - ள்.** யாற்றுநீர்ப்பொருள்கோளும் மொழிமாற்றுப் பொருள்கோளும் நிரனிறைப் பொருள்கோளும் விற்பூட்டுப் பொருள்கோளும் தாப்பிசைப் பொருள்கோளும் அளைமறி பாப்புப் பொருள்கோளும் கொண்டுகூட்டுப் பொருள் கோளும் அடிமறிமாற்றுப் பொருள்கோளும் எனப் பொருள் கோள் எட்டாம். எ - று.

இவற்றுட்டாப்பிசை யென்பதற்கு ஊசல்போல் இடைநின்று இருமருங்குஞ் செல்லும் சொல்லென்பது பொருள். தாம்பென் பது ஊசல். அஃதளைமறிபாம்பென்பது பாப்பென நின்றாற்போல வலிந்து நின்றது. ஏனையவுங் காரணக்குறியாதல் காண்க. (60)

### யாற்றுநீர்ப் பொருள்கோள்.

412. மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொ
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே. [ருள்

**எ - னின்.** நிறுத்தமுறையானே யாற்றுநீர்ப் பொருள்கோளா மாறுணர்-ற்று.

**இ - ள்.** மொழிமாற்று முதலியபோற் பிறழ்ந்துசெல வேண்டாது யாற்றுப் புனலொழுக்குப்போல் நெறிப்பட்டு



அடிதோறும் வான்பொருள் அற்றற்றொழுகும் அப்பொருள் கோள் யாற்றுநீர்ப் பொருள்கோளாம். எ - று.

இடையறுதொழுகும் யாற்றுநீரொழுக்கு உவமையாதலின் அடிதொறும் வான்பொருளற்றற்றொழுகுதலாவது, மொழிமாற்று முதலியபோற் பிறழ்ந்து செல்லுஞ் செலவற்று ஆங்காங்கமைந் தொழுகுதலாமன்றி, அடிதோறும் பொருண் முடிதலன்றாமென்க. அங்ஙனமாயின் ஆங்காங்கெனப் பொதுப்படக்கூறாது அடிதொறு மென்றதென்னையெனின்: அவ்வாறே கூறுவார் ஓரிலக்கணமேல் வைத்துக் கூறினாரென்க.

வ - று. 'சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன்—மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்—செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்—கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த் தவே.' என வரும். இப்பாட்டினுட் சொல்லென்னும் எழுவாயினை முதலெடுத்து அதன்றொழிலாகிய வினையெச்சங்கள் ஒன்றனை யொன்று கொள்ள இடையே முறைநிறீஇக் காய்த்தவென்னும் பயனிலையை இறுதிக்கட்டந்து முடித்தமையின் இப்பொருளொழு குதல் யாற்றுநீரொழுக்குப்போறல் காண்க.

இதற்கு இவ்வாறன்றி ஏனையடிகளை நோக்காது அடிதோறும் பொருண்முடிந்து வருவது யாற்றுநீர்ப் பொருள்கோள் எனப் பொருளுரைத்து 'அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்—விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ்—சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்—கொலைப்பாலுங் குற்றமே யாம்.' என உதாரணங் காட்டுவாருமுளர். யாற்றுநீரொழுக்குக்கு இடையறுதலின்மையானும், அற்றறேல் அதனை ஒழுக்கென்றல் கூடாமையானும், அஃதுவமையன்றாம். ஒவ்வோரடியொழுகு தற்கு உவமையாயிற்றெனின், பாட்டு முழுவதும் இடையறுதொழு கிப் பயின்று வரும் பொருள்கோண் மொழிமாற்று முதலியவற் றுள் அடங்காமையிற் குன்றக்கூறலாம். இங்ஙனமாதலின் அது பொருளன்றாம். அவர் காட்டிய உதாரணம் அடிமறிமாற்றின்பாற் படுமென்க. அப்பொருள்கோளின் விகற்பம் அச்சூத்திரத்துட் டோன்றக் கூறுதும்.

இதனை வான்பொருளென்றார் இதுநெறிப்பட்டு வருதலானும், பயின்று வருதலானும், மொழிமாற்று முதலிய வந்த செய்யுட் கண்ணும் விராய் வருதலானுமென்க. (61)

## மொழிமாற்றுப் பொருள்.

413. ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கன் மொழிமாற்றே.

எ - னின். மொழிமாற்றுப் பொருள்கோளாமாறுணர்-ற்று.

இ - ள். இரண்டு மொழியும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையுமாய் வரக் கூறுவார் அந்நான்கனுள் ஏற்ற பயனிலைகட்கு இயையு மொழிகளைத் தனித்தனி கூட்டிக் கூறுது ஏலாத பயனிலைகட்கு இயையாத மொழிகளைத் தனித் தனி கூட்டி ஓரடியுள்ளே கூறும் பொருள் கோள் மொழி மாற்றுப் பொருள்கோளாம். எ - று.

ஒன்றற்கொன்று பொருந்தியதென்பார் ஏற்றபொருளுக் கியையுமொழியென்றார்.

மொழிமாற்றென்பது தனக்குள்ளதைக் கொடுத்துப் பிறர்க் குள்ளதை வாங்கும் பண்டமாற்றுப்போறலின் இரண்டுமொழி யும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையும் வந்தல்லது மொழி மாற்றுதல் கூடாமையின் அத்தொகை தந்து கூறினும்.

வ - று. 'சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய—யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப—கானக நாடன் சுனை.' என வரும். இதனுள் ஆழவென்னும் பயனிலைக்கு இயைந்த அம்மியென்னு மொழியினை மிதப்பவென்னும் பயனிலைக்கும், மிதப்பவென்னும் பயனிலைக்கு இயைந்த சுரையென்னு மொழியினை ஆழவென்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறும், நீத்தென்னும் பயனிலைக் கியைந்த முயலென்னுமொழியினை நிலையென்னும் பயனிலைக்கும், நிலையென்னும் பயனிலைக்கியைந்த யானையென்னுமொழியினை நீத் தென்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறுங் காண்க.



'ஆலத்துமேல் குவளை குளத்துள—வாலி னெடிய குரங்கு' என ஈரடி முதலியவற்றுட் கூறிற் சேய்மைக்கண்ணவாய் மொழி மாற்றென்பது தோன்றாமையின் அஃதிலக்கணமன்றென விலக்கி அண்மைக்கட் கூறுவதே மொழிமாற்றென்பார் ஓரடியுளென்றார். ஆலத்துமேலவென்பது ஓரடியுள் வாராமையிற் கொண்டுகூட் டென்பாருமுளர். அது மொழிமாற்றிற்குங் கொண்டுகூட்டிற்கும் வேற்றுமையுணரார் கூற்றாமென்க. அவர் இச்சூத்திரத்திற்கு மொழிமாற்றோடு பொருந்தாது கொண்டுகூட்டொடு பொருந்தப் பொருள் கூறிச் சுரையாழ என்னுமுதாரணங் காட்டுவர். (62)

## நிரனிறைப் பொருள்கோள்.

414. பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளை
வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும் [யும்
நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே.

எ - னின். நிரனிறைப் பொருள்கோளாமாறுணர்-ற்று.

இ - ள். பெயரும் வினையுமாகிய சொற்களையும் அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும் வேறு வேறு நிரையாக நிறுத்தி முறையாயேனும் எதிராயேனும் இதற்கிது பயனிலையென்பது படக் கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப் பொருள் கோளாம். எ - று.

வ-று. 'கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி—மதிபவள முத்தமுகம் வாய்முறுவல்—பிடிபிணை மஞ்ஞை நடை நோக்குச் சாயல்—வடிவினளே வஞ்சி மகள்.' இது பெயர்ச் சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறை நிரனிறை. 'காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப—போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய - நீதியான்—மண்ணமிர்த மங்கையர் தோண் மாற்றாரை யேற்றார்க்கு—நண்ணிய வாய பொருள்.' இது வினைப்பயனிலைகளும் பெயர்ச்சொற்களுமாய் நின்ற முறை நிர னிறை. 'களிறுங் கந்தும்போல நளிகடற்—கூம்புங்கலனுந் தோன் றுந்—தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே.' இது பெயர்ச்

சொற்களும் பெயர்ப் பயனிலைகளுமாய்நின்ற எதிர்நிரனிறை. 'ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்—பாடகமு மூரகமும் பஞ்சரமா-நீடியமா—னின்றா னிருந்தான் கிடந்தானிதுவன்றோ—மன்றார் மதிற்கச்சி மாண்பு' இது பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை. பிறவுமன்ன.

மேலைச்சூத்திரத்துண் மொழியென்றும் இச்சூத்திரத்துட் சொல்லென்றுங் கூறிய நிறுத்த சொல்லும் அதுகொள்ளும் பயனிலையெனினும் பொருளெனினுமொக்குங் குறித்து வரு கிளவியுமன்றி அல்வழிவேற்றுமை யுருபுகளும் பிறசொற்களும் உடன்வருமாலோவெனின்—சாத்தன் வந்தான் என்றால் அவனுடையணி முதலியனவும் உடன் வருதல் கூறாதேயமைதல் போலுமென்க.

'சொற்றொறு மிற்றிதன் பெற்றி' என்பதனானே 'காமவிதி கண்முக மென்மருங்குற் செய்யவாய்—தோமிறு கடினி சொல்லமிர்தந்-தேமலர்க்—காந்தள் குரும்பை கனக மடவாள்கை—யேந் இளங் கொங்கை யெழில்.' என வரும் எழுத்து நிரனிறையும் 'வெண்பா முதலாக வேதிய ராதியா—மண்பால் வகுத்த வருணமா-மொண்பா—வினங்கட்கு மிவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூன்—மனந்திட்பக் கற்றோர் மகிழ்ந்து.' எனத் தொகுத்துக்கூறு நிரனிறை முதலியவுங் கொள்க.

'அம்ம் பவள்வரி நெடுங்கண்ணாய் வஞ்சிக்—கொம்ம் பவள் கொடி மருங்குல் கோங்கி—னரும்ம் பவண்முலை யொக்குமே யொக்குங்—கரும்ம் பவள்வாயிற் சொல்.' என்னும் யாற்றுநீர்ப் பொருள்கோளைமயக்க நிரனிறையென்பாருமுளர். இது சொல்லையும் பொருளையுந் தனித்தனி நிறீஇக் கூறியதன்றி நிரனிறையாக நிறீஇக் கூறாமையின் நிரனிறையன் றென்பார் நெறியேயென்றார்.

### பூட்டுவிற் பொருள் கோள்.

415. எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்
பொருணோக் குடையது பூட்டுவில் லாகும்.

எ - னின். பூட்டுவிற் பொருள்கோளாமாறுணர்-ற்று.



இ - ள். செய்யுட்கண் முதலினும் ஈற்றினுநிற்கும் மொழிகள் தம்முட் பொருணோக்கமுடைய பொருள்கோள் பூட்டுவிற் பொருள்கோளாம். எ - று.

செய்யுட்கெல்லா முதலினுமீற்றினுமென்னாமையின் அதனகத்து எங்ஙனம் இவ்வாறு வரினுமாமென்க.

வ - று. 'திறந்திடுமின் நீயவை பிற்காண்டு மாத—ரிறந்து படிற் பெரிதா மேத-முறந்தயர்கோன்—றண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்—கண்ணாரக் காணக் கதவு.', என வரும். பிறவுமன்ன. (64)

### தாப்பிசைப் பொருள்கோள்.

416. இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்
நடந்து பொருளை நண்ணுத றாப்பிசை.

எ - னின். தாப்பிசைப் பொருள்கோளாமாறுணர்-ற்று.

இ - ள். இடை நிற்கு மொழி ஒழிந்த முதலினும் ஈற்றினுஞ் சென்று பொருளைக் கூடும் பொருள்கோள் தாப்பிசைப் பொருள்கோளாம். எ - று.

வ - று. 'உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண—வண்ணாத்தல் செய்யா தளறு.' என வரும். (65)

### அனைமறி பாப்புப் பொருள்கோள்.

417. செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோ ளனைமறி பாப்பே.

எ - னின். அனைமறிபாப்புப் பொருள்கோளாமாறுணர்-ற்று.

இ - ள். செய்யுட்கண் ஈற்றினின்ற சொல் இடையினும் முதலினுஞ் சென்ற பொருள்கோள் அனைமறிபாப்புப் பொருள்கோளாம். எ - று.

வ - று. ‘தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன் றித் தளர்வார்தாமுஞ்—சூழ்ந்த வினையாக்கை சுடவிழிந்து நாற் கதியிற் சுழல்வார் தாமு—மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினை யென்றே முனிவார் தாமும்—வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதாரே.’ எனவரும். இருமருங்கினையும் இறுதி யென அமையுமாதலின் வாழ்ந்தபொழுதினே வானெய்து நெறி முன்னி முயலாதாரே யென்னுஞ் சொற்களை அம்மருங்கு வைத் துச் செய்யுளாக்கினும் இப்பொருள் கோளாமென்க. (66)

### கொண்டு கூட்டுப் பொருள்கோள்.

418. யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே.

எ - னின். கொண்டுகூட்டுப் பொருள்கோளாமாறுணர்-ற்று.

**இ - ள்.** செய்யுளடி பலவினும் இயல்பாகிய யாற்றுநீர்ப் பொருளுக்கேலாது கோத்துக்கிடந்த மொழிகளை எடுத்து அப்பொருளுக் கேற்றவிடத்துக் கூட்டும் பொருள்கோள் கொண்டு கூட்டுப் பொருள்கோளாம். எ - று.

இயல்பாகிய யாற்றுநீர்ப்பொருள் கோளிற் பிறழ்ந்து வருவன வற்றை மொழிமாற்று முதலியவாகப் பகுத்தமையின் அப்பொரு ளுக்கேற்ற விடத்தென்றும்.

வ - று. ‘தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந் தல்—வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி—யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே—வங்கத்துச் சென்றார் வரின்.’ என வரும். இதனுள் வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலை யுடையாண்மாமேனிமேற் றெங்கங்காய்போலத் திரண்டுருண்ட கோழி வெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணி வாமெனக் கொண்டு கூட்டுக.

உருவகவுவமையிற் றிணைசினைமுதல்கள் என்பதனை முதல் சினையென முறைநிரீஇப் பொருள்கொள்வதுமது. (67)



### அடிமறிமாற்றுப் பொருள்கோள்.

419. ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியு மாறா வடியவு மடிமறி.

எ - னின். அடிமறிமாற்றுப் பொருள்கோளாமாறுணர்-ற்று.

**இ - ள்.** பொருளுக்கேற்குமிடத்து எடுத்து நீங்காது கூட்டும் அடியினையுடையவும் யாதானுமோரடியை யெடுத்து அச்செய்யுட்கண் முதலிடை யீறுகளின் யாதானுமோரிடத் துக் கூட்டினும் பொருளோடு ஓசை மாட்சியும் ஓசையொழி யப் பொருண்மாட்சியும் வேறுபடாத அடியினையுடையவு மாகிய பொருள்கோள் அடிமறிமாற்றுப் பொருள்கோளாம். எ - று.

மாட்சி நெறிப்பட்டொழுகுதல்.

ஏற்புழியெடுத்துக் கூட்டுதல் இருவகையடிமறிமாற்றிற்கும் பொருந்துமாயினும் அவ்வடிகண் மாற்றுதற்கமைந்து நீங்கும் இவ் வடிகணீங்காவென்பார் உடனென்றும், ஓசையொழியப் பொருண் மாட்சிமாத்திரையும் மாறாவடியவுமென்பார் பொருளிசைமாட்சியு மென உம்மை தந்துங் கூறினார்.

வ - று. ‘நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்—கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு—மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்—விடுக்கும் வினையுலந்தக் கால்.’ என் பதனுட் கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டும் விடுக் கும் வினையுலந்தக்கா லிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம், இஃதறியார் நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார் என அடிகளை யேற்புழியெடுத்துக் கூட்டுக. ‘மாறாக் காதலர் மலைமறந் தனரே—யாறாக் கட்பனி வரலா னாவே—வேறா மென்றோள் வளை நெகி ழும்மே—கூறாய் தோழியான் வாழு மாறே’ என்பதனுள்

யாதானுமோரடியை யெடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டி உச்சரித்துப் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க. 'அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்—விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ்—சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்—கொலைப்பாலுங் குற்றமே யாம்.' என்பதனுள் ஈற்றடியொழிந்த மூன்றடியுள் யாதானுமொன்றை யெடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டி உச்சரித்துப் பொருளுமோசையும் வேறுபடாமையும், ஈற்றடியையெடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டி உச்சரித்து ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையுங் காண்க.

செய்யுளடி பலவினையுந் தொகுத்துக் கூறாது மூன்றும் ஒன்றுவாகப் பிரித்ததென்னையெனின்:—எண்வகைப்பட்ட பொருள்கோளும் அவற்றின் விகற்பங்களுமாய பொருள்கோள்களுள் ஒன்றொரு செய்யுண் முழுவதூஉம் அமைந்து கிடக்கவேண்டுமென்னும் யாப்புறவின்றி ஒன்றும் பலவும் அமைந்து கிடத்தலினென்க. அவ்வாறமைந்து கிடத்தல் அவ்வப்பொருள்கோட்குக் காட்டிய செய்யுட்கண்ணும் பிற செய்யுட்கண்ணுங் கண்டுகொள்க. அடிமறித்தலன்றி மாற்றுதல் ஏற்புழியெடுத்துடன் கூட்டுறுமடியவும் என்றதற்கின்றும் அங்ஙனமாக அதனையும் அடிமறிமாற்றென்றதென்னையெனின்:—மறித்தற்குரிய கொண்டுகூட்டோடும் மறித்தற்கும் மாற்றுதற்குமுரிய அடிமறி மாற்றோடுஞ் சார அதனை முதற்கட்கூறி, அடியாக மறித்தலுடைமையின் அடிமறிமாற்றின் பாற்படுத்துச், சிலவுறுப்புக் குறைந்தாரையும் மக்களென்றாற் போல, அதற்கும் அடிமறிமாற்றெனப் பெயர் தந்து கூறினாரென்க. செய்யுட்குரிய பொருள்கோளை ஈண்டுக் கூறிய தென்னையெனின்:—செய்யுட்குத் தொடர் என்னுங் காரணக்குறி போந்தது மொழிதொடர்ந்ததாலன்றே அங்ஙனமாதலின் இதுவுந் தொடர்மொழி யிலக்கணமேயாமென்க. (68)

பொதுவியல் முற்றிற்று.

---

# 4. இடையியல்.

420. வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள விசைநிறை யசைநிலை
குறிப்பெனெண் பகுதியிற் றனித்தியலின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும் வந்தொன்றுவ திடைச்
[சொல்.

எ - னின். 'இடையுரியடுத்து நான்குமாம்' என நிறுத்தமுறையானே இடைச்சொலிலக்கணம் இவ்வியலாலுணர்த்துவான்றொடங்கி அவை இத்துணைய இவ்வியல்பினவென அவற்றின் பொதுவிலக்கணமுணர்-ற்று.

இ - ள். எழுவாயுருபு முதலிய எட்டு வேற்றுமையுருபுகளுட் பெயரும் பெயராது விகாரமுமாகிய எழுவாயும் விளியுமொழித்து ஒழிந்த ஐம்முதலிய ஆறுருபுகளும், பகுதி விகுதி இடைநிலை என்னுந் தெரிநிலையுங் குறிப்புமாகிய வினையுருபுகளுண் முதனிலைத் தனிவினைப்பெயரும் பொருளாதியறுவகைப் பெயருமாகிய பகுதியொழித்து ஒழிந்த விகுதி முதலிய வினையுருபுகளும், அன் ஆன் முதலிய சாரியையுருபுகளும், போலப் புரைய முதலிய உவமவுருபுகளும், பிறவாறு தத்தமக்குரிய பொருளையுணர்த்தி வருவனவும், வேறுபொருளின்றிச் செய்யுளிசை நிறைத்தலே பொருளாக வருவனவும், அசைத்தலே பொருளாக நிற்பனவும், வெளிப்படையின் வரும் இவை போலாது குறிப்பின் வருவனவும் என்னும் எட்டு வகையினையுடையவாய்த் தனித்து நடத்தலின்றிப் பெயரினகத்தும் வினையினகத்தும் அவற்றின் புறமாகிய பின்னுமுன்னும் இவ்விடங்களாறனுள் ஓரிடத்தொன்றேனும்

பலவேனும் வந்து அப்பெயர் வினைகட்கு அகத்துறுப்பாயும், புறத்துறுப்பாயும் ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது இடைச்சொல்லாம். எ - று.

தெரிநிலைவினையிடைநிலைபோல ஏனையிடைநிலை சாரியைகட்கு வேறு பொருளின்றேனும், பெயர் வினைகட்கு இன்றியமையாது வருதலே பெரும்பாலவாதலின் அவற்றின் பொருளே பொருளென்பது கருதி, இசைநிறையசைநிலைகளைச்சாரவையாது முதற்கண் வைத்தாரென்க.

பெயரினும் வினையினுமென்ற உம்மையைப் பின்முன்னென்பனவற்றோடுங் கூட்டுக.

இச்சொற்கண், முதற்கூறிய பெயர்ச்சொல் வினைச்சொற்களுமாகாது அவற்றின் வேறுமாகாது இடைநிகரனவாய் நிற்றலின் இடைச்சொல்லெனக் காரணக்குறி பெற்றன. இது பாலைத்திணை நடுவுநிலைத் திணையெனப் பெயர் பெற்றது போலுமென்க.

அற்றேல், பாலைத்திணை நடுவுநிலைத் திணையென்றாயவாறென்னை யெனின்:—ஆசிரியர் தொல்காப்பியர் "நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு—முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே." எனக்கூறியவழி அங்ஙனம் நடுவுநிலைத் திணையென்னுஞ் சொல்லே தன் காரணம் இனிது விளக்கி நிற்றலான், அது நடுவுநிற்றல் காரணத்தாற் பெற்ற பெயரென்பது பெற்றாம். இன்னும் அவ்வாசிரியர் ஏனை நாற்றிணையும் முறையானே கூறி இறுதிக்கணோதுதலான் இஃதவற்றின் வேறென்பது விளங்குதலானும் எஞ்ச நின்றது பாலையேயாகலானும் "நடுவணைந்திணை நடுவணதொழியப்—படுதிரை வையம் பாத்திய பண்பே." என நிலம் பகுத்தோதுங்கால் நடுவணதெனக் குறியிட்டமையானும் அங்ஙனம் பகுக்கப்படு நிலங்களுமாகாது அவற்றின் வேறுமாகாது தனக்குரிய நிலம் நடுநிகர்த்ததாய் நிற்றல்பற்றி நடுவுநிலைத்திணையெனக் குறியீடு பெற்றதெனக் கொள்க. இங்ஙனம் இதன்றிறம் விரிக்கிற் பெருகும். அது நிற்க.



இனி இடைநிகரனவாய் நிற்றலின் இடைச்சொல்லெனக் காரணக்குறி போந்ததூஉமன்றித் தனித்து நடத்தலின்றிப் பெயர் வினைகளிடமாக நடத்தலின் இடைச்சொல்லெனக் காரணக்குறி போந்ததெனினும் அமையும். அது முதனூலின் வழியாக நடக்கு நூலை அங்ஙனங் கூறாது வழிநூலென்றாற்போலப் பெயர்வினைகளிடமாக நடக்குஞ் சொல்லை அங்ஙனங் கூறாது இடைச்சொல்லெனப்பட்டது. அங்ஙனமாயின் இடமென இயற்சொல்லாற் கூறாது இடையெனத் திரிசொல்லாற் கூறியதென்னையெனின்:—இயற்சொல்லாற் கூறின் இடப்பொருளை யுணர்த்துஞ் சொல்லெனப் பொருள்படுமாதலின் அதனோடிதற்குவேற்றுமை தோன்றற்கென்க. எண்வகையுட் டோன்றொழிந்தன வருஞ் சூத்திரங்களானுணர்க.

வ - று. நம்பியை, நம்பியால், நம்பிக்கு என்புழிப் பெயரின் புறத்துறுப்பாய் ஐயுருபு முதலிய இடைச்சொல்லொன்று வந்தது. தச்சன், தச்சிச்சி, முடியினன் என்புழிப் பெயரினகத்துறுப்பாய் விகுதி யிடைநிலை சாரியை யிடைச்சொற்கள் பலவந்தன. வினைக்குறிப்பினகத்துறுப்பாய்ப் பல வருவனவுமன்ன. நடந்தான், நடந்தனன் என்புழித் தெரிநிலை வினையினகத்துறுப்பாய் விகுதி யிடைநிலை சாரியை யிடைச்சொற்கள் பலவந்தன. அவன், எவன், ஏனோன், ஏனையோன். எ-ம். போல, புரைய. எ-ம். சாத்தனென்பான், சாத்தனாயினான். எ-ம். இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயராயும் வினையாயும் வினையிலக்கணையாயும் நிற்றலின் இவற்றின் பகுதி விகுதி முதலியவுமன்ன. அதுமன்; அதுமற்றம்ம. எ-ம். கொன்னூர், 'ஓஒவுவமனுறழ்வின்றி.' எ-ம். பெயரின் புறத்துறுப்பாய்ப் பின்னுமுன்னும் ஒன்றும் பலவும் வந்தன. வருகதில், வருகதில்லம்ம. எ-ம். ஓஒ தந்தார் 'ஏயேயம்பன் மொழிந்தனள் யாயே.' எ-ம். தெரிநிலைவினையின் புறத்துறுப்பாய்ப் பின்னு முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. பிறவுமன்ன. இவற்றுட் சில ஒரோவழி விகாரப்பட்டு மன் கொன் எனற்பாலன மன்னை கொன்னையென வருவனவுமுள; அவையெல்லாம் 'புதியன புகுதலும் வழுவல' என்பதன்பாற்படுத்துக. (1)

## இடைச்சொற் பொருள்கள்.

421. தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப்
பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை
பிரிப்புக்கழிவாக்கமின் னனவிடைப்பொருள்.

**எ - னின்.** மேல் '*தத்தம்பொருள*' என்றார் அப்பொருளாவன இவையென்பதுணர்-ற்று.

**இ - ள்.** தெரிநிலை முதலாக விதந்த பதினான்கும் அவைபோல்வன பிறவும், மேல் '*தத்தம்பொருள*' என்ற இடைச்சொற் பொருள்களாம். எ - று.

*இன்னவென்றதனாற் சிலவருமாறு: அக்கொற்றன், எக்கொற்றன் என்பன சுட்டுப்பொருளும் வினாப்பொருளுந்தந்தன. நக்கீரர், நப்பாலத்தனார் என்புழி நகரவிடைச்சொற் சிறப்புப்பொருடந்தது. 'அஆ—விழந்தானென்றெண்ணப்படும்' 'ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோடு' 'அந்தோவிசையைபட்டனள்' 'அரக்காம்பனாறும்வா யம்மருங்குற்கன்னோ—பரற்கான மாற்றின கொல்லோ' என்புழி அஆ, ஆ, அந்தோ, அன்னோ என்னும் இடைச்சொற்கள் இரங்குதற்பொருடந்தன. இவற்றிற்கு அதிசயப் பொருளுமுள. 'அறிதோ றறியாமை கண்டற்றால்' 'செறிதொறிது செல்வத் தியற்கையே' என்புழித் தோறு தொறுவென்னும் இடைச்சொற்கள் இடப்பன்மைப் பொருடந்தன. இனிச்செய்வான், இனியெம் மெல்லை என்புழி இனி யென்னுமிடைச்சொற் காலப்பொருளும் இடப்பொருளும் முறையே தந்தது. பிறவும் இவ்வாறு தனித்து நடக்கும் பெயர் வினையாகாது வருவனவெல்லாங் கொள்க.* (2)

## ஏகார இடைச்சொல்.

422. பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே.

**எ - னின்.** வேற்றுமையுருபு முதலிய நான்கும் மேலே சொல்லப்பட்டமையின் அவற்றையொழித்து ஏனையவற்றையுணர்த்துவான்றொடங்கி அவற்றுள் ஏகாரவிடைச் சொல்லிலக்கணமுணர்-ற்று.



**இ - ள்.** தெரிநிலை முதலிய பதினான்கும் அவைபோல்வன பிறவுமாகிய பொருள்களுள்ளும் இசைநிறைத்தல் அசைத்தல் குறிப்பென்னு மூன்று பொருள்களுள்ளும் பிரிநிலை முதலிய ஆறு பொருளையுந் தரும் ஏகாரவிடைச்சொல். எ - று.

*வ - று. அவனே கொண்டான் என்பது ஒரு குழுவினின்றும் ஒருவனைப் பிரித்து நிற்றலிற் பிரிநிலை. இவ்வேகாரம் அவனோ கொண்டான் என்னும் பொருள்பட வினாவி நிற்பின் வினா. நிலனே நீரே தீயே வளியே என்பது நிலனு நீருந் தீயும் வளியுமென்னும் பொருள்பட எண்ணி நிற்றலின் எண். 'கடல்போற் றோன்றலர் காடிறந்தோரே' என்பது சொல்லிறுதிக்கண் அசைத்தற் பொருடருதலின் ஈற்றசை. இவ்வேகார வசைநிலை முதற்கண்வாராதென்பார் ஈற்றசையென்றார். அவனே கொண்டான் என்பது துணிதற் பொருடரிற் றேற்றம். இத்தேற்றப்பொருள் பிரிநிலைக்கண்ணேயுளதாதலின் இப்பொருளை வேறெடுத்துக் கூறுதல் ஏனையபோற் சிறப்புடைத்தன்றென்பார் இதனைப் பொருட்சிறப்பில்லா ஈற்றசைக்கும் இசைநிறைக்கு மிடையே கூறினார். 'ஏயே யிவளொருத்தி பேடியோவென்றார்' என்பது இசைநிறைத்தற் பொருடருதலின் இசைநிறை. அவனே கொண்டான் என்பது ஒரோவழி அவன் கொள்கிலனென எதிர்மறைப் பொருடரின் அது செம்பொருளன்றி வலிந்து கொளப்படுதலிற் 'புதியன புகுதலும் வழுவல' என்பதன் பாற்படுத்துக.* (3)

## ஓகார இடைச்சொல்.

423. ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே.

**எ - னின்.** ஓகாரவிடைச் சொல்லிலக்கணமுணர்-ற்று.

**இ - ள்.** ஒழியிசை முதலிய எட்டுப்பொருளையுந் தரும் ஓகார விடைச்சொல். எ - று.

வ-று. கொளலோ கொண்டான் என்பது கொண்டுய்யப் போயினானல்லன் என்றற்றொடக்கத்து ஒழிந்த சொற்களைத் தருதலின் ஒழியிசை. குற்றியோ மகனோ என்பது வினா. சிறப்பு உயர்வு சிறப்பு இழிவுசிறப்பென இருவகைத்து. ஓஒ பெரியன் என்பது உயர்வு சிறப்பு. ஓஒ கொடியன் என்பது இழிவு சிறப்பு. அவனோ கொண்டான் என்பது கொண்டிலனென்னும் பொருடந்தவழி எதிர்மறை. அலியை நோக்கி ஆணோவதுவுமன்று பெண்ணோவதுவு மன்றென்பது அத்தன்மையின்மை தெரிந்தவழி நிற்றலிற் றெரிநிலை. உறுதியுணராது கெட்டாரை ஓஒதமக்கோருறுதியுணராரோ என்பது கழிவிரக்கப் பொருடருதலிற் கழிவு. 'காணிய வம்மினோ கங்குலது நிலையே.' என்பது அசைநிலை. அவனோ கொண்டான் என்பது பலருணின்றும் ஒருவனைப் பிரித்தமை கருதியவழிப் பிரிநிலை. இப்பொருள் எதிர்மறைக் கண்ணே உளதாதலின் அசைநிலையின் பின் வைத்தார். (4)

## என என்று இடைச்சொற்கள்.

424. வினைபெயர்குறிப்பிசை யெண்பண்பா றினும்
எனவெனு மொழிவரு மென்று மற்றே.

**எ-னின்.** எனவெனவும் என்றெனவும் வரும் இடைச்சொல் லிலக்கணமுணர்-ற்று.

**இ-ள்.** வினைப்பொருண் முதலிய ஆறு பொருளினும் எனவென்னு மிடைச்சொல் வரும்; என்றென்னும் இடைச்சொல்லும் அவ்வாறு வரும். எ-று.

வ-று. கொள்ளெனக் கொண்டான், மைந்தன் பிறந்தானெனத் தந்தையுவந்தான் என்பது வினை. ஊரெனப்படுவதுறையூர் 'அழுக்காறென வொருபாவி' என்பது பெயர். விண்ணென விசைத்தது 'பொள்ளென வாங்கே புறம்வேரார்' என்பது குறிப்பு. ஒல்லெனவொலித்தது. 'நிலையருங் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்தது' என்பது இசை. நிலனென நீரெனத் தீயென வளியென வரும் பூதநான்கு முருவம் என்பது எண். வெள்ளென விளர்த்தது மெல்லென நடந்தது என்பது பண்பு. இங்ஙனம்



எண்ணுப் பொருட்குக் காட்டிய பெயர்கள் தனித்து நில்லாது எண்ணி அளவைப் பண்புப் பொருளுணர்த்தலின் அப்பொருண் முதற்கண் நிறீஇய பெயர்ப்பொருளன்றென்க. என்றென்பதனையுங் கொள்ளென்று கொண்டானென முறையே இயையுமாறொட்டுக. சுட்டுப் பெயர் வினாப்பெயர்கட்குத் தமக்கென ஒரு பொருளின்றிச் சுட்டவும் வினவவும்படும் பொருளாதி ஆறுபெயர்ப் பொருளே பொருளாக வருதல்போல இவ்விரண்டிடைச்சொற்குந் தமக்கென ஒரு பொருளின்றி வினைமுதலியவாய் இங்ஙனம் விதந்தவற்றின் பொருளே பொருளாக வருமென்பார் ஆறு பொருளையுந் தருமென்னாது ஆறினும் வருமென்றார். (5)

## உம்மை இடைச்சொல்.

425. எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை
தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே.

**எ-னின்.** உம்மையிடைச் சொல்லிலக்கணமுணர்-ற்று.

**இ-ள்.** எதிர்மறை முதலிய எட்டுப்பொருளையுந் தரும் உம்மையிடைச்சொல். எ-று.

வ-று. கொற்றன் வருதற்குமுரியன் என்பது எதிர்மறை. குறவருமருளுங்குன்று, இவ்வூர்ப்பூசையும் புலாறின்னாது என்பது உயர்வு சிறப்பு. பார்ப்பானுங்கள்ளுண்டான், புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை என்பது இழிவு சிறப்பு. பூசையும் புலாறின்னாது என்பதனை இழிவுசிறப்பென்பாருமுளர். அங்ஙனமாயின் ஒரு பொருளினது உயர்வைச் சிறப்பித்தல் இழிவைச் சிறப்பித்தலெனப் பொருள்படாது உயர்ந்த பொருளான் மற்றொன்றைச் சிறப்பித்தலெனப் பொருள்படும். அவ்வாறு பொருள்படின் ஓகாரப் பொருளாய் வரும் உயர்வு சிறப்பிற்கும் இழிவு சிறப்பிற்கும் ஆகாமையின் அது பொருந்தாதென்க. இனி இவ்வும்மைப் பொருளைக் குன்று முதலியவற்றிற் கொள்ளாது குறவர் முதலியவற்றிற் கொண்டு பூசையுமென்பதனை இழிவு சிறப்பும்மையெனக் கோடலுமொன்று. இங்ஙனம் இழிவு சிறப்பென்பதற்கு இழிவினுட் சிறந்த இழிவெனப் பொருள் கூறுக. உயர்வுசிறப்பும் அது பூசைக்குப்

புலாறின்னுதல் இழிபுந் தின்னுமை சிறப்புமாகப் பொருள்கொளிற் குறவர்க்கு மருளுதல் சிறப்பாக வேண்டுமாதலின் அது பொருந்தாதென்க. பத்தாயினுமெட்டாயினுங் கொடு என்பது ஐயம். சாத்தனும் வந்தான் என்பது கொற்றன் வந்ததன்றியெனப் பொருள்படின் இறந்தது தழீஇயவெச்சவும்மை. கொற்றனும் வருவானெனப் பொருள்படின் எதிர்துதழீஇய வெச்சவும்மை. தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், எல்லாரும் வந்தார் என்பது முற்றும்மை. சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனும் வந்தார் என்பது எண்ணும்மை. ஆணுமன்று பெண்ணுமன்று என்பது தெரிநிலையும்மை. தெரிநிலை யோகாரம்போற் பொருளுரைத்துக் கொள்க. நெடியனுமாயினான், பாலுமாயிற்று என்புழி அவனே வலியனுமாயினான் அதுவே மருந்துமாயிற்று எனப் பொருள்படின் ஆக்கவும்மை. (6)

முற்றும்மைக்குச் சிறப்புவிதி.

426. முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.

எ - னின். முற்றும்மைக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்-ற்று.

இ - ள். முற்றும்மை ஒரோவிடங்களின் எச்சவும்மையுமாம். எ - று.

வ - று. ஆறுந் தருவது வினையே என்புழி ஐந்துந் தருவது வினையேயென்றும், எல்லாரும் இது செய்யார் என்புழிச் சிலர் இது செய்வாரென்றும், முற்றும்மைப்பொருளும் எச்சவும்மைப் பொருளும் ஒருங்கு தருதல் காண்க. இங்ஙனந் தருதலின் எச்சமுமென இறந்ததுதழீஇய வெச்சவும்மையாற் கூறினார். (7)

எச்சவும்மைக்கு ஆவதோர் விதி.

427. செவ்வெண் ணீற்றதா மெச்ச வும்மை.

எ - னின். எச்சவும்மைக்காவதோர் விதியுணர்-ற்று.

இ - ள். எச்சவும்மை செவ்வெண்ணின்கண் வருமாயின் ஈற்றின்கண் வரும். எ - று.



வ - று. 'செய்பவன் கருவி நிலஞ்செயல் காலஞ்—செய்பொருளுந்தருந் திறத்தது வினையே' என்புழி இவற்றுட் சிலவுந் தருந் திறத்தது வினையே எனவும் கல்வி செல்வமொழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாருமுளர் என்புழி இவற்றுட் சில பெறுவாருமுளர் எனவும் பொருள்படுதல் காண்க. (8)

சில எண்ணிடைச்சொற்களுக்கி இலக்கணம்.

428. பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனா
வெண்ணான்குந் தொகைபெறு மும்மையென் றென
வோடிந்நான் கெண்ணுமஃ தின்றியு மியலும்.

எ - னின். முன்னர் எடுத்து விதந்தும் விதவாதும் வருஞ் சிலவெண்ணிடைச் சொற்கட்கு ஆவதோரிலக்கணமுணர்-ற்று.

இ - ள். பெயர்களினிடையே எண்ணிடைச் சொற்றொக்கு நிற்ப வருஞ் செவ்வெண்ணும் பெயரோடு தொகாது வரும் ஏகாரவெண்ணும், என்றாவெண்ணும் எனாவெண்ணுமாகிய நான்குந் தொகை பெற்று நடக்கும்; உம்மை எண்ணும் என்றெண்ணும் எனவெண்ணும் ஒடுவெண்ணுமாகிய இந்நான்கெண்ணுந் தொகை பெற்றும் பெறாதும் நடக்கும். எ - று.

பெயரெண்ணென்னாது செவ்வெண்ணென்றதனால், அஃதெண்ணிடைச்சொற்றொக்க தொகைநிலையென்பதூஉம், அங்ஙனமாதலின் அதனையும் ஏகார முதலிய எண்ணிடைச் சொற்களோடு உடன் கூறப்பட்டதென்பதூஉம், பெற்றாம்.

வ - று. சாத்தன் கொற்றன் றேவன் பூதனால்வரும் வந்தார், சாத்தனே கொற்றனே தேவனே பூதனே நால்வரும் வந்தார், சாத்தனென்றா கொற்றனென்றா தேவனென்றா பூதனென்றா நால்வரும் வந்தார், சாத்தனெனாக் கொற்றனெனாத் தேவனெனாப் பூதனெனா நால்வரும் வந்தார் இவை தொகைபெற்றே வந்தன.

பெயர்ச்செவ்வெண் தொகைபெறுதற்கு இச்சூத்திரத்தைக் காட்டினும் அமையும். இவை வழக்கிடத்து ஒரோவழித் தொகை பெறாதுவரின் இசையெச்சமாகவும், செய்யுட்கட்டொகைபெறாது வரிற்றொகுக்கும்வழித் தொகுத்தலாய் அமையின் அவ்விகாரமாகவும், அன்றேல் இசையெச்சமாகவும் கொள்க. சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனு நால்வரும் வந்தார், சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று நால்வருளர், சாத்தனெனக் கொற்றனெனத் தேவனெனப் பூதனென நால்வருளர், சாத்தனொடு கொற்றனொடு தேவனொடு பூதனொடு நால்வரிவன் மைந்தர். எ-ம். சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனும் வந்தார், நிலனென்று நீரென்று தீயென்று காற்றென் றளவறுகாய மென்றாகிய வுலகம், நிலனென நீரெனத் தீயெனக் காற்றென வளவறுகாயமென வாகியவுலகம், நிலனொடு நீரோடு தீயோடு காற்றோ டளவறுகாயமோடாகிய பூதம். எ-ம். இவை தொகை பெற்றும் பெறாதும் வந்தன. (9)

### சில எண்ணிடைச் சொற்களுக்குச் சிறப்புவிதி.

429. என்று மெனவு மொடுவு மொரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்.

எ-னின். எண்ணிடைச்சொல்லுட் சிலவற்றிற்கு எய்தியதன் மேற் சிறப்புவிதியுணர்-ற்று.

இ-ள். இம் மூன்றெண்ணும் எண்ணும் பொருடோறும் நிற்றலேயன்றி ஓரிடத்து நின்றும் பிரிந்து எண்ணும் பொருடோறும் பொருந்தும். எ-று.

வ-று. 'வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்கால்—தீயெச்சம் போலத் தெறும்.' பகைபாவ மச்சம்பழியென நான்கு—மிகவாவா மில்லிறப்பான்கண்.' 'பொருள் கருவி காலம் வினையிடனொடைந்து—மிருடீர வெண்ணிச் செயல்.' என வரும்.

எண்ணும் பொருடோறுந் தனித்தனி நிற்றலினும் ஒரோவழி நின்று பிரிதல் இம்மூன்றெண்ணிற்கும் அமைந்து கிடந்தனவாதலின் ஈண்டுங் கூறப்பட்டன: எனவே ஏனையெண்கட்கு எண்ணும்



பொருடோறு நிற்குநிலையே சிறந்தனவென்பதூஉம் ஒரோவழி நின்று பிரிதல் வலிந்து கொளற்பாலன வென்பதூஉம் அவை ஈண்டமையாது தீவகமென்னும் அணியிலக்கணத்தின் பாற்படுமென்பதூஉம் பெற்றாம். (10)

### எண்ணிடைச் சொற்கள் வினையொடு வருதல்.

430. வினையொடு வரினு மெண்ணினை யேற்பன.

எ-னின். மேற்பெயரோடு வந்த எண்ணிடைச் சொற்கள் வினையோடு வருமாறுணர்-ற்று.

இ-ள். எண்ணிடைச்சொற்கள் வினையோடு வரினும் மேற்பெயரோடு வந்தாற்போலும் ஏற்பன. எ-று.

ஏற்பனவெனவே வினையோடேலாவெண் வருதலுந் தொகை பெறுதலு மில்லையென்க.

வ-று. 'மண்டில மழுங்க மலைநிறங் கிளர—வண்டின மலர் பாந் தூத மிசையே—கண்டற் கானங் குருகின மொலிப்ப' என்பது செவ்வெண். கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தான் என்பது உம்மையெண், உண்ணவென் றுடுக்கவென்று பூசவென்று முடிக்கவென்று வந்தான் என்பது என்றெண். உண்ணவென வுடுக்கவெனப் பூசவென முடிக்கவென வந்தான் என்பது எனவெண். உண்ணவுடுக்கப் பூச முடிக்கவென்று வந்தான், உண்ண வுடுக்கப் பூசமுடிக்கவென வந்தான். 'நன்னிதி பெறுக நாடொறும் வாழ்கவென்—றுன்னுமிவ் வேட்கை யொழிந்தன ரிலரே' என்பன என்றும் எனவும் ஒரோவழி நின்றும் பிரிந்தன. பிறவற்றுள்ளும் ஏற்பன வந்தவழிக் காண்க.

சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான் இருவரும் வந்தமையாற் கலியாணம் பொலிந்தது என வினைச்செவ்வெண் தொகை பெற்றதென்பாருமுளர். தொகைச்சொற் பெயராதலின் அது வகைப்பெயர்களோடு பொருந்தி இருபெயரொட்டாமன்றி வினையொடு பொருந்தாமையானும், இங்ஙனம் இருவரென்னுந் தொகை சாத்தன் கொற்றனாகிய இருவரெனப் பெயர்த்தொகையாதலானும், அது பொருந்தாதென்க. (11)

### தில் இடைச்சொல்.

**431.** விழைவே கால மொழியிசை தில்லே.

**எ-னின்.** தில்லென்னும் இடைச்சொல்லிலக்கணமுணர்-ற்று.

**இ-ள்.** இம்மூன்று பொருளையுந் தருந் தில்லென்னும் இடைச்சொல். எ-று.

வ-று. 'வார்ந்தி லங்குவை யெயிற்றுச் சின்மொழி யரிவை யைப் பெறுகதில்லம்ம யானே' என்பது பெறுதல் வேட்கையை யுணர்த்தலின் விழைவு. 'பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே' என்பது பெற்றகாலத்தறிக எனக் காலத்தையுணர்த்தலிற் காலம். 'வருகதில் லம்மவெஞ் சேரி சேர' என்பது வந்தால் ஒன்று செய் வல் என்னுஞ் சொல்லொழிந்து நிற்றலின் ஒழியிசை. (12)

### மன் இடைச்சொல்.

**432.** மன்னே யசைநிலை யொழியிசை யாக்கங்
கழிவு மிகுதி நிலைபே றாகும்.

**எ-னின்.** மன்னென்னும் இடைச்சொல்லிலக்கணமுணர்-ற்று.

**இ-ள்.** இவ்வாறு பொருளையுந் தரும் மன்னென்னும் இடைச்சொல். எ-று.

வ-று. 'அதுமற் கொண்கன் றேரே' என்பது அசைநிலை. 'கூரியதோர்வாண்மன்' என்புழி அதனாற் கருந்தாதறத் துணிந் தது என்னுஞ் சொல்லொழிய நின்றமையின் ஒழியிசை. நெடியன் மன் என்புழி அவனே வலியனுமாயினான் எனப் பொருடருதலின் ஆக்கம். 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே' என்புழி இப் பொழுது அவனிறத்தலின் எமக்கீதல் கழிந்தது எனப் பொரு டருதலிற் கழிதல். 'எந்தை யெமக்கருளுமன்' என்புழி மிகுதியு மருளுமெனப் பொருடருதலின் மிகுதி. 'மன்னா வுலகத்து மன் னியது புரியுமே' என்புழி இவ்விடைச்சொல்லடியாகப் பிறந்த வினையுண் மன்னென்பது நிலையினையுணர்த்தினமையின் நிலை பேறு. (13)



### மற்று இடைச் சொல்.

**433.** வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே.

**எ-னின்.** மற்றென்னும் இடைச்சொல்லிலக்கணமுணர்-ற்று.

**இ-ள்.** இம்மூன்று பொருளையுந் தரும் மற்றென்னும் இடைச்சொல். எ-று.

வ-று. 'மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது' என்பது விரைந்தறிவாம் என்னும் வினையை யொழித்து விரையாதறி வாம் என்னும் வினையைத் தந்து நின்றமையின் வினைமாற்று. 'மற்றடிகள் கண்டருளிச் செய்ய மலரடிக்கீழ்' என்பது அசைநிலை. 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று—சூழினுந் தான்முந் துறும்.' என்பது ஊழல்லதொன்று என்னும் பொருடந்தமையிற் பிறிது. (14)

**434.** மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.

**எ-னின்.** மேலதற்கோர் புறனடையுணர்-ற்று.

**இ-ள்.** மேற்கூறிய மற்றென்னும் இடைச்சொற் பொருண் மூன்றனுள், மற்றையதென்னும் பொருளாகிய வினை மாற்றும் பிறிதும் அங்ஙனங் கருதியதற்கினமாகிய வினைமாற் றும் இனமாகிய பிறிதுமாமன்றி வேறு வினைமாற்றும் வேறு பிறிதுமல்லவாம். எ-று.

மேற்காட்டிய உதாரணத்துள் 'நல்வினையை விரைந்தறிவா மெனக் கருதியதற்கு விரையாதறிவாமெனவும், ஊழொன்றெனக் கருதியதற்கு ஊழல்லதொன்றெனவும், இனம் வந்தவாறு காண்க.

வேறு பிறிதாவதென்னையெனின்:—இரண்டு மணியுள்வழி ஒன்று கண்டான் மற்றொன்று காணவேண்டுமென்றானாகின் மற் றொன்றென்பதற்கு இனமாகியதோர் மணியெனப் பொருள் கொள்ளாது ஆடையணியெனப் பொருள்கோடலென்க. வினை மாற்றும் இவ்வாறே காண்க. மேலைச்சூத்திரத்துள் வினைமாற்

றெனவும் பிறிதெனவும் பொதுப்படக் கூறினமையின் இச்சூத்திரத்தாற் புறனடை கொடுத்துக் காத்தாரென்க.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி, மற்றையதென்பதனை ஓரிடைச்சொல்லாக வைத்து அச்சொல் அங்ஙனங் கருதிய பொருட்கினமாகிய பொருளைத் தருமெனப் பொருள் கூறுவாருமுளர். மற்றையதென்பது இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரும் வினைக்குறிப்புமாமாதலானும், விகுதி கூறினரேனும் பகுதிப்பட்ட மற்றையென்னும் ஐகாரவீற்றிடைச் சொற்கு இப்பொருள் கூறினரெனின் மன் மன்னை கொன் கொன்னையென நின்றாற்போல மற்று மற்றையென இறுதி விகாரமாய் நின்றதன்றி இதற்கென வேறு பொருளின்மையானும், அதனொடுதற்கு வேற்றுமை இஃதினத்தையே தருதலெனப் பொருள் கொளின் மற்றென்பது இனத்தையும் இனமல்லதையுந் தருமெனப் பொருள்படுமாதலானும், எல்லாவற்றானும் இனமாயுள்ளதே வினைமாற்றுப் பிறிதுமாய் வருமன்றி இனமல்லது ஒருவாற்றானும் வாராமையானும், அடி பொருந்தாதென்க. (15)

## கொல் இடைச் சொல்.

435. கொல்லே யைய யசைநிலைக் கூற்றே.

எ - னின். கொல்லென்னும் இடைச்சொல்லிலக்கண முணர்-ற்று.

இ - ள். கொல்லென்பது இவ்விரண்டு பொருளையுந் தருஞ் சொல்லாம். எ - று.

வ - று. இவ்வுருக் குற்றிகொன் மகன்கொல் என்பது குற்றியோ மகனோவென்னும் பொருள்படவருதலின் ஐயம். 'பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்—வருவர்கொல் வயங்கிழாய்' என்பது அசைநிலை. (16)

## ஒடு தெய்ய இடைச்சொல்.

436. ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.



எ - னின். ஒடுவெனவுந் தெய்யவெனவும் வரும் இடைச்சொல்லிலக்கணமுணர்-ற்று.

இ - ள். இவ்விரண்டும் இசைநிறத்தற் பொருளைத் தருஞ் சொற்களாம். எ - று.

வ - று. 'முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்—விதைக்குறு வட்டிற் போதொடு பொதுள.' எ-ம். 'சொல்லேன் றெய்ய நின்னொடு பெயர்த்தே.' எ-ம். வரும். (17)

## அந்தில் ஆங்கு இடைச்சொல்.

437. அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே.

எ - னின். அந்திலெனவும் ஆங்கெனவும் வரும் இடைச்சொல்லிலக்கணமுணர்-ற்று.

இ - ள். இவ்விரண்டிடைச் சொல்லும் அசை நிலைப் பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும். எ - று.

வ - று. 'அந்திற் கழலினன் கச்சினன்' என்பது அசைநிலை. 'வருமே—சேயிழை யந்திற் கொழுநற் காணிய.' என்பது அவ்விடத்தென்னும் பொருடருதலின் இடம். 'ஆங்கத்திறனல்ல யாங்கழற' என்பது அசைநிலை, இதனுள் ஆங்கென்னும் அசைநிலை ஆங்கவென இறுதி விகாரமாய் நின்றது. 'ஆங்காங்காயினுமாக' என்பது இடம். (18)

## அம்ம இடைச்சொல்.

438. அம்ம வுரையசை கேண்மினென் றாகும்.

எ-னின். அம்மவென்னும் இடைச்சொல் விலக்கணமுணர்-ற்று.

இ - ள். அம்மவென்பது உரையசைப் பொருளதாயும் ஒன்று சொல்வன் கேண்மினென்னும் ஏவற் பொருளதாயும் வரும். எ - று.

வ - று. 'அதுமற்றம்ம' என்பது உரையசை. இது செய்யுட்கண் வரினும் அச்செய்யுளின் பொருட்டன்றித் தானடைந்த சொல்லின்பொருட்டு வருதலின் உரையசையாயிற்று. 'அம்ம வாழி தோழி' என்பது ஒன்று சொல்வன் கேளென்னும் எவற் பொருடந்தது. (19)

## மா இடைச்சொல்.

439. மாவென் கிளவி வியங்கோ ளசைச் சொல்.

எ - னின். மாவென்னும் இடைச்சொல் விலக்கணமுணர்-ற்று.

இ - ள். மாவென்னுஞ் சொல் வியங்கோளின்கண் வரும் அசைச் சொல்லாம். எ - று.

வ - று. 'மாயக் கடவுட் குயர்கமா வலனே' 'உப்பின்று—புற்கை யுண்கமா கொற்கை யோனே' என வரும். (20)

## முன்னிலை அசைகள்.

440. மியாயிக மோமதி யத்தை யித்தை
வாழிய மாளவீ யாழமுன் னிலையசை.

எ - னின். மியா முதலிய இடைச்சொற்களி னிலக்கண முணர்-ற்று.

இ - ள். இங்ஙனங் கூறிய பத்திடைச்சொற்களும் முன்னிலைக்கண் வரும் அசைநிலைகளாம். எ - று.

வ - று. 'சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்று—மலையகலான் வாடி வரும்.' எ-ம். 'தண்டுறையூர க்காணிக வெனவே.' எ-ம். 'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ.' எ-ம். 'சென்மதி பெரும.' எ-ம். 'மெல்லியற் குறுமக ளுள்ளிச்செல் வத்தை.' எ-ம். 'வேய்ஈரல் விடரக நீயொன்று பாடித்தை.' எ-ம் 'காணிய வாவாழியமலைச் சாரல்.' எ-ம். 'சிறிது—தவிர்ந்தீக மாள



நின் பரிசிலருய்ம்மார்.' எ-ம். 'சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே.' எ-ம். நீயே—செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழ.' எ-ம். முறையே காண்க. (21)

## எல்லா இடத்தும் வரும் அசைச்சொற்கள்.

441. யாகா பிறபிறக் கரோபோ மாதிகுஞ்
சின்குரை யோரும் போது மிருந்திட்
டன்றுந் தாந்தான் கின்றுநின் றசைமொழி.

எ-னின். யா முதலிய இடைச்சொற்களினிலக்கணமுணர்-ற்று.

இ - ள். இவ்விருபதிடைச்சொல்லும் முன்னையபோலாது எல்லாவிடத்திலும் எல்லாச் சொல்லினும் வரும் அசைச்சொல்லாம். எ - று.

விதவாமையின் எல்லாவிடத்தினும் எல்லாச் சொல்லினும் வருமென்பது பெற்றும்.

வ - று. 'வாழ்கநின் கழலடி மைந்த வென்னவே—தோழியா வாகதம் போத வீங்கிதென்' எ-ம். 'அறநிழலெனக் கொண்டாய் நின்குடை யக்குடைப் புறநிழற்பட் டாளோ விவளிவட் காண்டிகா.' எ-ம். 'மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோ—ராயனை யல்ல பிற.' எ-ம். 'பிறக்கிதனுட் செல்லான் பெருந்தவம் பட்டான்.' எ-ம். 'நோதக விருங்குயிலா லுமரோ.' எ-ம். 'எரியி னன்ன செந்தலை யன்றில்—பிரியின் வாழா தென்போ.' எ-ம். 'விளிந்தன்று மாதோ தெளிந்தசெங் கண்ணே.' எ-ம். 'காண்டிகு மல்லமோ கொண்க.' எ-ம். 'தீங்கா கியவா லென்றிசின்.' எ-ம். 'அது பெறலருங் குரைத்தே.' எ-ம். 'அஞ்சுவ தோரு மறனே.' எ-ம். 'வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்.' எ-ம். 'ஓராற்றா லென்கண் ணிமைபொருந்த வந்திலையே—கூரார்வேன் மாறனென் கைப்பற்ற - வோரா—னனவென் றெழுந்திருந்தே னல்வினை யொன் றில்லேன்—கனவு மிழந்தொழிந்த வாறு.' எ-ம். நெஞ்சம் பிளந்திட்டு.' எ-ம். 'தேவாதி தேவனவன் சேவடிசேர்து மன்றே.'

எ-ம். 'பணியுமா மென்றும் பெருமை சிறுமை—யணியுமாந் தன்னை வியந்து.' எ-ம். நீர்தாம். எ-ம். நீதான். எ-ம். 'யான்பிற னளியன் வாழ்வா னசைப்பட் டிருக்கின்றேன்.' [என்புழி ஆசைப் பட்டேன் என்பது பொருளாதலிற் கின்றென்பது நிகழ்கால விடைநிலையன்று.] எ-ம். 'அழலடைந்த மன்றத் தாரந்தையராய் நின்றார்—நிழலடைந்தே னின்னையென் றேத்த.' எ-ம். முறையே காண்க. பிறவுமன்ன. (22)

**இடையியல் முற்றிற்று.**

---

# 5. உரியியல்.

## உரிச்சொல்லின் பொதுவிலக்கணம்.

442. பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி
ஒருகுணம் பலகுணந் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல்.

**எ - னின்.** நிறுத்தமுறையானே உரிச்சொல்லிலக்கணம் இவ் வியலாலுணர்த்துவான் றொடங்கி அவற்றின் பொதுவிலக்கண முணர்-ற்று.

**இ - ள்.** பண்புகள் குணப்பண்புந் தொழிற்பண்புமாகிய இரண்டனுள் அடங்குமாயினும் இசை குறிப்புப் பண்பெனப் பல வேறுவகைப்படுதலின் பல வேறுவகைப்பட்ட பண்பு களையும் உணர்த்தும் பெயராகி அங்ஙனமுணர்த்துழி ஒரு சொல் ஒரு குணத்தையுணர்த்துவனவும் பல குணத்தை யுணர்த்துவனவுமாய் வினைப் பெயர்வினைகளை விட்டு நீங்கா வாய்ச் செய்யுட்குரியனவாய்ப் பொருட்குரிமை பூண்டு வருவன உரிச்சொல்லாம். எ - று.

இவ்வாறு வருதன் மேற்காட்டு முதாரணங்களுட் காண்க.

இவையும் பண்புப் பெயராயினும் வினைப் பெயர்வினைகளை விட்டு நீங்காமையின் வேறோதப்பட்டனவென்பதூஉம், செய்யுட் குரியனவாய்ப் பொருட்குரிமை பூண்டனவாதலின் இவற்றிற்கு உரிச்சொல்லெனக் காரணக்குறி போந்ததென்பதூஉம், இவற்றி னிலக்கணங் கூறிய முகத்தானுணர்த்தியவாறு காண்க.

இசை - ஓசை. குறிப்பு - மனத்தாற் குறித்துணரப்படுவது. பண்பு-பொறியா லுணரப்படுங் குணம். இவற்றை அடக்கி நின்ற குணமுந் தொழிலும் பொருளெனவும் படுமாதலின் இவற்றை யுணர்த்தும் உரிச்சொல்லும் பெயர்ச்சொல்லெனப் படுமாதலிற் பல்வகைப் பண்பும் பகர் பெயராகியென்றார். (1)

### பண்பு இன்னதென்பது.

**443.** உயிருயி ரல்லதாம் பொருட்குணம் பண்பே.

**எ-னின்.** மேற் பண்பென்றார் அஃதிஃதெனவுணர்-ற்று.

**இ-ள்.** உயிராகிய பொருளும் உயிரல்லாத பொருளு மென இருவகையுளடங்கும் உலகத்துப் பொருள்களின் குணங்கள் பண்பாம். எ-று.

கடவுட்பொருளை யொழித்தார் அதற்கோர் குணமின்மை யானும் உண்டேற் சுட்டப்பட்டு உலகப்பொருளாமாதலானு மென்க. (2)

### உயிர்ப் பொருள்.

**444.** மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின்
ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமே லுணர்
ஓர றி வாதியா வுயிரைந் தாகும். [தலின்

**எ-னின்.** மேல் உயிராகிய பொருளென்றார் அவை இவை யெனத் தொகுத்துணர்-ற்று.

**இ-ள்.** இங்ஙன மெய்முதலாகக் கூறிய ஐம்பொறிக ளானும் பரிசம் இரதங் கந்தம் உருவஞ் சத்தமென்னும் ஐம் புலனையு முணருங்கான் மெய்யாற் பரிசத்தை யுணரு முணர்ச்சியொன்று முதலாகக் கீழ்ப்போன உணர்ச்சியுங் கொண்டு மேல் வரும் புலன்களை ஒன்றேடொன்ருக உணர் தலின் ஓரறிவுயிர் முதலாக ஐந்தாம் அவ்வுயிர். எ-று. (3)

### ஓரறிவுயிர்.

**445.** புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர்.

**எ-னின்.** மேற் கூறிய வுயிரைந்தனுள் ஓரறிவுயிரிவையெண வுணர்-ற்று.



**இ-ள்.** புல்லும் மரமுமுதலியன மெய்யாற் பரிசித் துப் பரிசத்தையறியும் ஓரறிவுயிர்களாம். எ-று. (4)

### ஈரறிவுயிர்.

**446.** முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர்.

**எ-னின்.** ஈரறிவுயிரிவையெனவுணர்-ற்று.

**இ-ள்.** இப்பியுஞ் சங்கு முதலியன கீழ்ப்போன மெய்யறிவேயன்றி நாவாலிரதத்தை அறியும் அறிவோடு ஈரறிவுயிர்களாம். எ-று. (5)

### மூவறிவுயிர்.

**447.** சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்.

**எ-னின்.** மூவறிவுயிரிவையெனவுணர்-ற்று.

**இ-ள்.** கறையானும் எறும்பும் முதலியன கீழ்ப் போன இரண்டறிவுகளேயன்றி மூக்காற் கந்தத்தையும் அறியுமறிவினேடு மூவறிவுயிர்களாம். எ-று.

மேலொடுவை ஈண்டும் வருவித்துக்கொள்க. (6)

### நாலறிவுயிர்.

**448.** தும்பிவண் டாதிகண் ணறிவினு லறிவுயிர்.

**எ-னின்.** நாலறிவுயிரிவையெனவுணர்-ற்று.

**இ-ள்.** தும்பியும் வண்டும் முதலியன கீழ்ப்போன மூன்றறிவேயன்றிக் கண்ணால் உருவத்தையறியும் அறிவி னேடு நாலறிவுயிர்களாம். எ-று. (7)

### ஐயறிவுயிர்.

**449.** வானவர் மக்க ணரகர் விலங்குபுள்
ஆதிசெவி யறிவோ டையறி வுயிரே.

**எ-னின்.** ஐயறிவுயிரிவையெனவுணர்-ற்று.

**இ - ள்.** வானவரும் மக்களும் நரகரும் விலங்கும் புள்ளு முதலியன கீழ்ப்போன நாலறிவேயன்றிச் செவியாற் சத்தத்தையறியும் அறிவினேடு ஐயறிவுயிர்களாம். எ - று.

சித்துப்பொருள் சடப்பொருளென்பார் உயிருயிரல்லதாம் பொருளெனக் கூறியவாறும், சித்தாகிய உயிரறிவு சடமாகிய உடலோடுகூடிய வழியன்றி நிகழாமையானும் அந்நிகழ்ச்சி கண்டல்லது உயிருண்டென்பதூஉம் அதற்கோரறிவுண்டென்பதூஉந் தோன்றாமையானும் உயிரைப் பிரித்தோதாது உடலொடு கூட்டிப் புன்மர முதலவென முறையே கூறியவாறும், அவ்வுயிரறிவு உடலோடு கூடி நிகழ்வழி ஐம்பொறியானும் ஐந்தாய் நிகழ்தலின் ஐயறிவெனக் கூறியவாறும், இவ்வைம்பொறியும் எல்லாவுடற்கண்ணும் ஒருங்கு நில்லாது இங்ஙனங் கூறிய முறையே நின்று அறிவை நிகழ்த்தலின் உயிர்கள் பலவாயினும் அறியும் வகையான் உயிரைந்தெனக் கூறியவாறுங் காண்க. ஆசிரியர் தொல்காப்பியர் “மைக்க டாமே யாறறி வுயிரே” எனக் கூறியிருக்க முக்கண் முதலியோரை ஐயறிவுயிரெனக் கூறன் மாறுகொளக் கூறலாம் பிறவெனின்:—மக்கண் முதலியோர் மனவறிவோ டாறறிவுயிரென்பது நோக்கியன்றே முன்னர் ‘மக்கடேவர் நரக ருயர்திணை’ எனக்கூறிப் போந்ததூஉ மாதலின் இங்ஙனம் ஐம்புலன் மாத்திரையே நுகருமறிவுடைய மக்கண் முதலியோரை விலங்கு முதலியவற்றோ டெண்ணி ஐயறிவுயிரெனக் கூறினரென வுய்த்துணர்ந்து கொள்க. (8)

## உயிரல் பொருள்.

450 உணர்வியலாமுயி ரொன்று மொழித்த
உடன்முத லனைத்து முயிரல் பொருளே.

எ - னின். உயிரல்பொருளாவன இவையெனவுணர்-ற்று.

இ - ள். அறிவு மயமாம் உயிரொன்றுமேயன்றி அவ்வுடம்பு முதலிய உலகத்துப்பொருள்களெல்லாம் உயிரல்லாத பொருள்களாம். எ - று.

முன்னர் உயிர்மாத்திரையே கூறுவார் உடம்பொடு கூட்டிக் கூறினரன்றி உடம்பையுமுளப்படுத்தி உயிர்ப்பொருளென்றாரல்லரென்பது இதனானுணர்க. (9)



## புறனடை.

451. ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றி
வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர். [னும்

எ - னின். மேலதற்கோர் புறனடையுணர்-ற்று.

**இ - ள்.** பசுவுடம்பெடுத்துழித் தன் கன்றினுக் கிரங்கி நன்கிழைத்த உயிர் அவ்வுடம்பு நீங்கிப் புலியுடம்பெடுத்துழி இரங்காது அக்கன்றினுக்கே தீங்கிழைக்குமாதலின் எவ்வுயிரெவ்வுடம்பெடுத்ததோ அவ்வுடம்பின்மயமாய் நிற்கும் ஒற்றுமைநயங் கருதியவழி ஒன்றுபோற் றோன்றுமாயினும் உயிர் சித்தாயும் உடம்பு சடமாயும் நிற்கும் வேற்றுமை நயமாகிய உண்மை கருதியவழி அவ்விரண்டுந் தம்முள் வேறுமாதலின் உயிரோடு கூடிநின்ற காலத்தும் அவ்வுடம்பினை உயிரல் பொருளென்றும். எ - று. (10).

## உயிர்ப் பொருள்களின் குணப்பண்பு.

452. அறிவரு ளாசை யச்ச மானம்
நிறைபொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல்
துன்ப மின்ப மிளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமதம்
மறவி யினைய வுடல்கொ ளுயிர்க்குணம்.

எ - னின். உயிரின் குணமென்றார் அவை இவையெனவுணர்-ற்று.

இ-ள். அறிவு முதலிய முப்பத்திரண்டும் இவை போல்வன பிறவும் உடலோடு கூடிய உயிர்க்குணங்களாம். எ-று.

உடலோடு கூடாவழி உயிர்க்குணங்க டோன்றாவென்பார் உடல்கொளுயிர்க்குண மென்றார். பின் வருவதுமது. (11)

453. துய்த்த றுஞ்ச றொழுத லணிதல்
உய்த்த லாதி யுடலுயிர்த் தொழிற்குணம்.

எ-னின். உயிரின் றொழிற்குணமுணர்-ற்று.

இ-ள். ஐம்புலனையு நுகர்தன் முதலிய இவ்வைந்தும் இவை போல்வன பிறவும் உடலோடு கூடிய உயிரின் றொழிற் குணங்களாம் எ-று. (12)

### உயிரல் பொருள்களின் குணப்பண்பு.

454. பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்
அறுசுவை யூறெட் டுயிரல் பொருட்குணம்.

எ-னின். உயிரல்லாத பொருள்களின் குணமுணர்-ற்று.

இ-ள். வட்டம் இருகோணம் முக்கோணம் சதுர முதலிய பலவகை வடிவும், நற்கந்தந் துர்க்கந்தமென்னு மிரு நாற்றமும், வெண்மை செம்மை கருமை பொன்மை பசுமை யென்னுமைந்து வண்ணமும், கைப்புப் புளிப்புத் துவர்ப்பு உவர்ப்புக் கார்ப்பு இனிப்பென்னு மாறிரதமும், வெம்மை தண்மை மென்மை வன்மை நொய்மை சீர்மை இழுமெனல் சருச்சரையென்னு மெட்டூறும், உயிரல்லாத பொருள்களின் குணங்களாம். எ-று. (13)

### இருபொருள்களுக்கும் பொதுவான தொழிற்பண்பு.

455. தோன்றன் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்க லடைத னடுங்க லிசைத்தல்
ஈத லின்னன விருபொருட் டொழிற்குணம்.



எ-னின். உயிரல்பொருட்கேயுரிய தொழிற்குணம் அருகிக் கிடத்தலின் அதனையொழித்து அவ்விருபொருட்கும் பொதுவான தொழிற்குணமுணர்-ற்று.

இ-ள். தோன்றன் முதலிய ஒன்பதும் இவைபோல்வன பிறவும் உயிர்ப்பொருள் உயிரல்பொருளென்னும் இரண்டற்கும் பொதுவான தொழிற்குணங்களாம். எ-று.

வ-று. உயிர் தோன்றி மறைந்தது, உடறோன்றி மறைந்தது, நெருப்புத் தோன்றிமறைந்தது என இத்தொடக்கத்தன வெல்லாம் இருபொருட்கும் பொதுவாகிய தொழிற்குணமாதல் காண்க. (14)

### ஒருகுணம் தழுவிய உரிச்சொல்.

456. சால வுறுதவ நனிகூர் கழிமிகல்.

எ-னின். 'பல்வகைப்பண்பு' என்றார் அவை இவையென இதுகாறு முணர்த்தி அப்பண்புகளுள் ஒருகுணம் பலகுணந் தழுவி வருமென்னும் உரிச்சொற்கள் இவையென வுணர்த்து வான்றொடங்கி அவற்றுள் ஒருகுணந் தழுவிய உரிச்சொல்லுட் சிலவுணர்-ற்று.

இ-ள். சாலவென்பது முதற் கழியென்பதீறாகக் கூறிய ஆறுரிச் சொல்லும் மிகுதியாகிய ஒரு குணத்தை யுணர்த்துஞ் சொற்களாம். எ-று.

வ-று. 'பருவந்து சாலப் பலகொலென் றெண்ணி' 'உறு வளி தூக்கு முயர்சினை மாவின்' 'நனியே தையே நயனில் கூற்றம்' 'பொறையில்லா நோய்கூரப் புல்லென் றிசினே' 'காமங் கழி ஞேட்டம்' என முறையே காண்க. இவற்றுட் சாலவென்பது சாலென்னும் உரிப்பெயரடியாகப் பிறந்த வினையெச்சக் குறிப்பு. சாலப்பலவாமென ஆமென்னும் வினைப்பயனிலை தொக்குநின்றது.

இப்பண்படிகளை நோக்கிப் 'பல்வகைப் பண்பும் பகர்பெயராகி' என்றார்.

சாலெனப் பண்படியாகச் சூத்திரஞ் செய்யாது சாலவெனவினையெச்சக்குறிப்பாகச் சூத்திரஞ்செய்தல் அவ்வுரிப்பெயரடியாக வினை விகற்பங்களெல்லாம் பிறக்குமென்பது தோன்ற உடம்பொடு புணர்த்தலாமென்க. அவையெல்லாம் வந்தவழிக் காண்க.

### பல குணந்தழுவிய உரிச்சொல்.

457. கடியென் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்க மச்சஞ் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை யார்த்தல்
வரைவே மன்றல் கரிப்பி னாகும்.

எ - னின். பலகுணந் தழுவிய உரிச்சொல்லுளொன் றுணர்-ற்று.

இ - ள். கடியென்னு முரிச்சொல் காப்பு முதலிய பதின்மூன்று குணத்தையுமுணர்த்தும். எ - று.

வ - று. 'ஒண்சுடர் நல்லிருங் கடிநீலி' என்பது காப்பு. 'கடி நுனைப் பகழி' எ-து. கூர்மை. 'கடிமாலைசூடி' எ-து. நாற்றம். கண்ணாடியன்ன கடிமார்மன்' எ-து. விளக்கம். 'கடியர மகளிர்க்கே கைவிளக்காகி' என்பது அச்சம். 'கடிமாமிசைப்புத்துக் கம்புளேச டன்ன மார்க்கும்' எ-து. சிறப்பு. 'எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்' எ-து. விரைவு. 'கடியுண் கடவுட்கிட்ட செழுங்குரல்' எ-து. மிகுதி. இது புதிதுண் கடவுளென்றுமாம். 'கடிமுரசு' எ-து. ஆர்த்தல். 'கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி' எ-து. வரைவு. 'கடிவினை முடுகினி' எ-து. மன்றல். 'கடிமிளகு தின்ற கல்லாமந்தி' எ-து. கரிப்பு. (16)

### ஒரு குணந்தழுவிய உரிச்சொல்.

458. மாற்ற நுவற்சிசெப் புரைகரை நொடியிசை
கூற்றுப் புகறன் மொழிகிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே.

எ - னின். இதுவும் ஒருகுணந் தழுவிய உரிச்சொல்லுட் சில வுணர்-ற்று. 'சாலவுறுதவ' என்பதனைச் சார வையாது ஈண்டுக் கூறினார், இவை ஒலிப்பண்பை யுணர்த்தி வினைப் பெயர் வினைகளை ஒருவாது நடத்தலின் அத்துணைச் சிறப்பினவன்றி ஒரோவழி ஒருவியுநடக்குமென்பது தோன்றற்கென்க.

இ - ள். மாற்ற முதல் இயம்பலீறாகக் கூறிய பதினாறுஞ் சொல்லென்னும் ஓர் குணத்தையுணர்த்தும் உரிச்சொற்களாம். எ - று.

வ - று. 'கோவலர்வாய் மாற்ற முணர்ந்து' 'இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல' 'தெருண்டாரவை செப்பலுற்றேன்' 'உரைப்பா ருரைப்பவை யெல்லாம்' 'அறங்கரை நாவி னான்மறை முற்றிய' 'அஞ்சொற் பெரும்பணைத்தோ ளாயிழையா டானொடியும்' 'நசையுநர்க் கடையா நன்பெருவாயி—லிசையெனப் புக்கு' 'உற்றது நாங்கள் கூற உணர்ந்தனை' 'புகன்ற வன்றியும் பூமிகவருமே' 'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ' 'கிளக்கும் பாணா கேளினி' 'மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்' 'அறிவன தடி தொழு தறைகுவ னெண்ணே' 'ஒருவன் செய்ந்நன்றி கொன்றார்க்—குய்தியில்லென வறம்பா டின்றே' 'வார்த்தை பகர்குற்றேன்' 'இடிபோல வியம்பி னானே' என முறையே காண்க. (17)

459. முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை
இரக்கழுங் கியம்ப விமிழ்குளி றதிர்குரை
கனைசிலை சும்மை கௌவை கம்பலை
அரவ மார்ப்போ டின்னன வோசை.

எ - னின். இதுவுமது.

இ - ள். முழக்கு முதலிய இருபத்திரண்டும் இவைபோல்வன பிறவும் ஓசையென்னும் ஒருகுணத்தை யுணர்த்து முரிச்சொற்களாம். எ - று.

வ - று. 'முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇ' 'குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை' 'ஒல்லென வொலிக்கு மொலிபுனை

லூரற்கு' 'கலிகெழுமூதூர்' 'பறையிசை யருவி' 'தோறுவைத்தல் 'பிளிறுவார் முரசம்' 'இரைக்குமஞ்சிறைப் பறவைகள்' 'இரங்கு முரசினம்' 'இரும்பிழிமாரி யழுங்கினமூதூர்' 'காலைமுரசம தியம்ப' 'இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடைக்கை' 'குளிறு முரசங் குணில்பாய' 'களிறு களித்ததிருங் கார்' 'குரைபுனற் கன்னி' 'கனை கடற் சேர்ப்ப' 'சிலைத்தார் முரசங் கறங்க' 'தள்ளாத சும்மைமிகு தக்கிண நாடு நண்ணி' 'கௌவைநீர்வேலி' 'வினைக்கம் பலைமனைச்சிலம்பவும்' 'அறைகட லரவத்தானை' 'ஆர்த்த பல்லியக் குழாம்' என முறையே காண்க. (18)

## புறனடை.

460. இன்ன தின்னுழி யின்னண மியலும்
என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே.

எ - னின். இவ்வியலுக்கோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். பெயர்வினை இடை உரியென்னு நால்வகைச் சொல்லுள் இன்னசொற் றன்மைமுன்னிலை படர்க்கையென்னும் மூன்றிடத்துள்ளும் வழக்குச் செய்யுளென்னு மிரண்டிடத்துள்ளும் இவ்விடத்திவ் விலக்கணத்ததாய் நடக்குமென்று சொல்லக்கடவதாகிய இந்நூலுள் அவ்விலக்கணங் காட்டுதற்கு வேண்டிய மாத்திரையே கூறுவதன்றி உரிச்சொலாகிய குணப்பெயரையும் ஏனைக் குணிப்பெயரையும் நிகண்டினுட் கூறினாற்போல விரித்துக் கூறக்கடவமல்லம்; விரிக்கின் மற்றொன்று விரித்தலென்னுங் குற்றம் வருமாதலின் அவற்றினைக் கண்டறிய வேண்டினார் இவ்விலக்கணமறிதற்கு முன்னரே பிங்கலர் முதலாகிய ஏனைப் புலவராற் கூறப்பட்ட பிங்கலந் திவாகரஞ் சூடாமணி முதலிய நூல்களுள் வகுக்கும் உரிச்சொற்றொகுதியில் விரும்பிக் கொள்க. எ - று



இவ்விலக்கணமறிதற்கு முன்னரே நிகண்டறிகவென்றும், அறியுமுறை அதுவாதலான்.

இவ்வியலுட் 'சால' வென்பது முதல் 'ஆர்ப்' பென்பதீறாக நாற்பத்தைந் துரிச்சொல் எடுத்துச் சுருங்கச் சொல்லுதல், சொல்லியலுணர்த்து நூலுட் சொற்றொகுதிகளை விரிக்கின் மற்றொன்று விரித்தலாமெனவுணரார் குன்றக் கூறலாமென்பராதலின், அஃது பரிகரித்தற்கு இச்சூத்திரத்தாற் புறனடை கூறினார். இங்ஙனங் கூறவே, பெயரியலுட் பெயர்த்தொகுதியினையும் வினையியலுள் வினைத்தொகுதி யினையும் இடையியலுள் இடைத்தொகுதியினையும் விரியாது அவ்விலக்கணங் காட்டுதற்கு வேண்டிய மாத்திரையே கூறுதற்கும் இதுவே புறனடையாமென்க. பெயரியலென்பது பெயரிலக்கணம். பெயர்த்தொகுதியென்பது பெயர்க்கூட்டம், ஏனையவுமன்ன. கூட்டமெனினும் நிகண்டெனினும் ஒக்கும்.

இலக்கணங் கூறு நூலுள் நிகண்டினையும் உடன் கூறாது அதனை வேறோர் நூலாகக் கூறுதல் தமிழுள்ளேயன்றி ஆரியமுதலியவற்றுள்ளுங் காண்க. (19)

461. சொற்றொறு மிற்றிதன் பெற்றியென் றனைத்
முற்ற மொழிகுறின் முடிவில வாதலிற் [து
சொற்றவற் றியலான் மற்றைய பிறவுந்
தெற்றென வுணர்த றெள்ளியோர் திறனே.

எ - னின். இவ்வதிகாரத்திற்கோர் புறனடையுணர்-ற்று.

இ - ள். சொற்றொறும் இத்தன்மைத்து இதனிலக்கணமென்று முற்ற மொழியப்புகின் வரம்பிலவாமாதலின், எடுத்துக் கூறிய சொற்களின் இலக்கணங்களைக்கொண்டு சொல்லாதனவற்றினிலக்கணங்களையும் ஒப்புமை கருதி இதுவும் அதுவென முற்ற விளங்கவுணர்தல் நூலோதித் தெளிதற்குரிய மாணாக்கர் திறனும். எ - று.

இவற்றிற்கு உதாரணம் முன்னரே வந்துழி வந்துழிக் காட்டினும் ஆங்காங்குணர்க. (20)

### நூலிற்குப் புறனடை.

462. பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே.

எ - னின். இந்நூலிற்கோர் புறனடையுணர்-ற்று.

இ - ள் முற்காலத்துள்ள இலக்கணங்களுட் சில பிற்காலத்திறத்தலும் முற்காலத்தில்லன சில பிற்காலத்திலக்கணமாய் வருதலுங் குற்றமல்லவாங் காலவேற்றுமை அதுவாகலான். எ - று.

இவற்றிற்கும் உதாரணம் முன்னர் வந்துழி வந்துழிக் காட்டினும் ஆங்காங்குணர்க.

உரியியன் முற்றிற்று.

சொல்லதிகார முற்றுப்பெற்றது.

---

நன்னூல்விருத்தியுரை முற்றுப்பெற்றது.

# நன்னூற்சூத்திரவகராதி.

சூத்திரவகராதி முற்றிற்று.

